# பெரிய புராண வசன காவியம்

பெரிய புராண வசன காவியம்



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்

சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண். 303

திருத்தொண்டர் வரலாறு அல்லது

# பெரியபுராண வசன காவியம்

யாழ்ப்பாண நல்லூர்
**வித்துவான் ஆறுமுக நாவலர்**
இயற்றியது

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்
இலக்கியச் செம்மல்
நல்லாசிரியர்
புலவர் **சி. இளங்கோவன்**
முன்னாள் உதவி இயக்குநர்
பதிப்புத்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.




**தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்**
**சரசுவதி மகால் நூலகம்**
**தஞ்சாவூர்**

**2008** விலை ரூ. **170 - 00**

பெரிய-மு-1

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | பெரியபுராண வசன காவியம் |
| பதிப்பாசிரியர் | : | புலவர் சி. இளங்கோவன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண். | : | 303 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | மூன்றாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர், 2008 |
| தாள் | : | 14. 2 கி. கி. சேஷசாயி |
| நூல் அளவு | : | 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : | 528 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | ராப்பர் |
| பொருள் | : | சமய இலக்கியம் |
| விலை | : | ரூ. 170 - 00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் பயன்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக்கருவூலமாகவும் பன்மொழி நூற்களஞ்சிய மாகவும் பன்மொழி ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது.

இந்நூலகத்தைத் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும், பிறநாட்டினரும் பயன்படுத்தி வருகின்றனர். தமிழகத்தில் உள்ளோர் முன்னிலும் கூடுதலான அளவில் தற்போது இந்நூலகத்தைப் பார்வையிட்டும் பயன்படுத்தியும் வரும் மேம்பாடும் நிகழ்ந்து வருகிறது.

நமது நூலகத்தில் சற்றேறக்குறைய ஐம்பதாயிரம் பன்மொழிச் சுவடிகள் பாங்குறக் காக்கப்பட்டு வருகின்றன. இச்சுவடிகளிலிருந்து இதுவரை 505 நூல்கள் வெளியிடப் பட்டுள்ளன. இப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

யாழ்ப்பாணத்திலுள்ள நல்லூர் சைவத்திரு "ஆறுமுக நாவலர்" இயற்றிய "பெரியபுராண வசன காவியம் அல்லது திருத்தொண்டர் சரித்திரம்" எனும் இந்நூல் 1990ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. தற்போது மூன்றாம் பதிப்பாக மலர்கிறது. இந்நூலை சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் நல்லாசிரியர் புலவர் சி. இளங்கோவன் அவர்கள் நூலில் பொதிந்துள்ள பொருட்சிறப்பை ஓர்ந்து, உணர்ந்து, ஆய்ந்து, அறிந்து செம்மையாகப் பதிப்பித்து உள்ளார்கள்.

முதலில், தேவார முதலிகள் மூவரில் ஒருவராம் முத்தமிழ் விரகர் சுந்தரர் திருத்தொண்டத் தொகையைப் பாடியருளினார். அதை அடியொற்றி நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியைக் கலித்துறையில் பாடினார். இவ்விரண்டையும் முதல் நூல்களாகக் கொண்டு சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணம் எனும் பெரியபுராணத்தைப்பாடி சைவ

உலகிற்கு தனிப்பெரும் இலக்கியக்கொடையாகத் தந்தருளினார். இப்புராணத்தில் சிவனடியார்க்கும் மற்றவர்களுக்கும் திருவமுதூட்டும் விருந்தோம்பல் எனும் செம்மை அறம் பேசப்படுகிறது. அன்பும் அறனும் உடைய வாழ்க்கைத் துணைநலம் சொல்லப்படுகிறது. உழவாரப்பணி போன்ற பொதுப்பணி சிறப்பிக்கப்படுகிறது. காரைக்காலம்மையார் போன்றோர் கொண்ட மறுவில் கற்பு பேசப்படுகிறது. இவ்வாறு என்றுமுள தென்தமிழில் சைவக்கோட்பாடுகளின் உயர்வை சாற்றுவது பெரிய புராணமாகும்.

இப்பெரியபுராண வசன காவியத்தில் நம்பியாண்டார் நம்பி வரலாறு, புராண வரலாறு, சிவாலய முனிவர் வரலாறு, நாயனார் வரலாற்றுச் சுருக்கம், குருலிங்க சங்கமம், திருத்தொண்டர் மரபு, தேவாரம் கண்ட திருத்தலங்கள், திருக்கைலாயச் சிறப்பு, திருவாரூர்ச் சிறப்பு, தேவாசிரிய மண்டபச் சிறப்பு, அறுபத்து மூன்று தனியடியார்கள், ஒன்பது தொகையடியார்கள் ஆகியவர்தம் வரலாறு, மாணிக்கவாசகர் வரலாறு போன்றவை ஏட்டுப் பிரதியில் உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும் இந்நூல் கணினி அச்சில் வெளிவர கணினி பிரிவில் பணியாற்றியவர்களுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும் எனது பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழ் ஆர்வலர்கள் மற்றும் இறையன்பர்கள் அனைவரும் இப்புத்தகத்தை படித்து இன்புற வேண்டுமென விழைகிறேன்.

**எம். எஸ். சண்முகம், இ. ஆ. ப.,**
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,
**சரசுவதி மகால் நூலகம்.**

**தஞ்சாவூர்,**
**12-9-2008.**

# பதிப்பாசிரியனுரை

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கிய காலம் ஒன்றிருந்தது. சைவத் தமிழ்த் தலைவர்களாகிய அப்பரும், சுந்தரரும் அருள் ஞானசம்பந்தரும் மெய்ப்பொருளாம் சிவப்புகழை மேதினியெங்கும் பரவிடச் செய்த காலம் அது.

அக்காலத்தே எழுந்த சைவ சமயத்தின் மெய்க்காவல் நூலே பெரியபுராணம் - திருத்தொண்டர் புராணம் எனின் அது மிகையாகாது. ஆசிரியன் அருளால் இறைவன் அடிசார்ந்தாரும் அருள் அடையாளத் (சிவலிங்கம்)தால் பரமன் அடிநீழல் அமர்ந்தாரும் அடியார் அருளால் சிவனார்தம் அருட்கழல் அடைந்தாரும் ஆகிய தனியடியார் அறுபத்துமூவரும் தொகையடியார் ஒன்பதின்மரும் ஆகிய எழுபத்திரண்டு நாயன்மார்களும் வாழ்ந்த அறநெறி பிறழா அருள்நெறி வாழ்வின் செம்மையை என்றுமுளதென்றமிழில் எண்வகைச் சுவைத்தேனினும் இயைந்த பக்திச்சுவைத்தேன் சொட்டச்சொட்ட எடுத்துரைப்பது பெரியபுராணம்.

களப்பிரர்கள் நம்நாட்டிலே புகுந்து நம்மை அடக்கி ஆண்ட காலத்தைத் தமிழகத்தின் இருண்ட காலம் எனக் கூறுவர் வரலாற்றாசிரியர்கள். அக்காலத்தே சமணமும், பௌத்தமும் வளர்ந்தன, வளர்க்கப்பட்டன.

இசைத்தமிழா? நாடகத்தமிழா? அவை சிற்றின்பத்தை ஊட்டும், வீடுபேறு என்னும் பேரின்பத்தை ஓட்டும், பழிகூட்டும், பாவம் நாட்டும் எனக்கூறிச் சமணமும் பௌத்தமும் இசைத்தமிழையும் நாடகத்தமிழையும் இருக்க இடமின்றி விரட்டியடிக்கத் தொடங்கின.

கையினாலுரை காலம் இரிந்த பின் பைய நாவை அசைத்த பழந்தமிழ் - அக்காலத்திலிருந்தே இயலாக - இசையாக - நாடகமாக - மூன்றும் முதிர்ந்த முத்தமிழாக வளமும் நலமும் பெற்றிருந்த நிலைமையை மாற்றி இயலொன்றே தமிழ் என எண்ணும் காலத்தை உருவாக்கின. சமணர்கள், இலக்கண, இலக்கியங்களை இயற்றமிழாக வளர்த்தனர்.

காரிருளால் கதிரவன்தான் மறைவதுண்டோ? இருள்போக்கி ஒளிகூட்டும் உதயசூரியர்களாக- இசைத்தமிழைப் போற்றும் ஈசனடியார்களாக- சைவத்தையும் தமிழையும் தழைத்தினிதோங்கச் செய்த சால்புடைய சமயத் தலைவர்களாகத் தோன்றியவர்களே தேவாரத் திருமுறை கண்ட தேவர் மூவராவர்.

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தரும் ஆளுடைய நம்பியராம் அழகு தமிழ்ச் சுந்தரமும் பாவுக்கோர் வேந்தராம் நாவுக்கரையரும் வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுகமெங்கும் பவப்பிணியறுத்துச் சிவப்பதம் காணப் பண்ணிசைத்துப் பதிகம் பாடி இசைத்தமிழை வளர்த்தனர் இறை புகழைப் பாடினர்.

சைவமும் வளர்ந்தது, தமிழும் தழைத்தது, தேவாரம் பாடிய மூவரும் சைவம் வளர்ந்தால் தமிழ் வளரும் என்பதை நிலைநாட்டினர். செம்மைநெறி கண்டு தேவாரம் பாடிய மூவரோடும் சைவம் தழைக்கவும் சிவத்தொண்டு செழிக்கவுமாக வாழ்ந்து காட்டிய திருத்தொண்டர்களாம் தனியடியார்கள் அறுபத்துமூவர், அவர்களோடு தொகையடியார் ஒன்பதின்மர் - சிவநெறியைப் பரப்பிய திருவருட்செல்வர்கள் ஆவர்.

சமணத்தைவென்று சைவநெறி குன்றாப் புகழ் எய்த திருத்தொண்டர் தம் வரலாற்றைச் சுந்தரர் திருத்தொண்டத் தொகையாகப் பாடியருளினார். திருத்தொண்டத் தொகையை

முதல் நூலாகக் கொண்டு நம்பியாண்டார் நம்பி கலித்துறையிலே திருத்தொண்டர் திருவந்தாதி பாடினார்.

திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி ஆகிய இவ்விரண்டையும் முதல் நூல்களாகக் கொண்டு அருண்மொழித் தேவராம் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணத்தைப் பாடியருளினார்கள்.

தனித்தனி முக்கனி பிழிந்து வடித்தொன்றாய்க்கூட்டிச் சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்து இனித்த நறுந்தேன் பெய்து இளஞ்சூட்டில் இறக்கி எடுத்து சுவைக்கட்டியாக அருண்மொழித்தேவர் தந்தருளிய திருத்தொண்டர் புராணத்தை, வசனகாவியமாக வடித்து வழங்கியவர் யாழ்ப்பாண நல்லூர் ஆறுமுக நாவலராவார்.

கலையிலாக் கல்வியெனும் அவற்றை நாளும் கற்றலும் கற்றனவற்றைப் பிறர்க்கு முறைப்பட சொற்றலும் அறிந்து தெளிந்தனவற்றை நூலாக்கித் தருதலும் ஆகிய தமிழ்ப் பணியை அல்லும் பகலும் அயராது ஆற்றிவரும் அறுபத்தேழு அகவை நிறைந்த, சொற்றமிழிலும் நற்றமிழிலும் வித்தகர் நாவலர் சி. அரசப்பனார் அவர்களின் அரவணைப்போடு தஞ்சை சரசுவதி மகால் நூலகம் சென்றபோது ஓலைச்சுவடியிலிருந்து எடுத்து ஏட்டில் எழுதப்பட்டிருந்த பெரியபுராண வசன காவியத்தைக் கண்டு, படித்துப் பார்த்து அதன் நலத்தை எண்ணி, நாம் பதிப்பாசிரியராக இருந்து அதற்கு அச்சுநூல் வடிவம் தந்தாலென்ன என்று ஏற்பட்ட உள்ளுணர்வினால், எனது எண்ணத்தை நூலக இயக்குநர் பன்மொழிப்புலவர் பேராசிரியர் மு. சதாசிவம் அவர்களிடம் தெரிவித்தபோது அவர்கள் தம் பெருந்தன்மையும் பேரருள் நோக்கும் கொண்டு எனக்கு அப்பணியை அளித்து மகிழ்ந்தார்கள்.

பெரியபுராண ஏட்டினைக் கையிலே ஏற்றவுடன் ஒரு சமயத்திற்கே உரிய நூலாகப் பெரியபுராணம் ஏற்றுப்

போற்றப்படினும் போற்றத்தக்க அதன் பொது நிலைத் தத்துவங்களை எண்ணிப் பார்த்தேன்.

நால்வகைச் சாதியை இந்நாட்டிலே நாட்டி, அதன் பால் வகையொழுக மக்களைப் பக்குவப்படுத்தும் ஒரு கூட்டம், நாடெங்கும் சிதறிக் கிடப்பினும் அதனையும் மீறி அந்தணர் குலத்துச் சுந்தரமூர்த்தியார் பரவையாரையும் சங்கிலியாரையும் துணைவியராக ஏற்றுக் கலப்பு மணத்திற்குக் கால்கோள் ஊன்றிய காட்சியை மறக்க முடியுமா?

ஆசாரம் கூறி அடுத்த சாதியார் எம்மதத்தில் நுழைதலாகுமோ? எனப் பேசி மகிழ்வாரிடையே ஈனப் பிறவியரேனும் அவன் ஈசனடியாராயின் அவரை ஏற்றுத் தம் இல்லத்தை திருவமுதூட்டிய பாங்கினைப் பாராட்டாமல் இருக்க முடியுமா?

பிறப்பாலே புலையரேனும் எம்பெருமான் அடியாராகும் சிறப்பாலே உயர்ந்தார் எனப் பேசும் தத்துவத்தை ஏற்காமல் இருத்தல் இயலுமோ?

எம்மரபினராயினும் எக்குலத்தாராயினும் எச்சாதியினராயினும் சிவத்தொண்டு செய்வாராயின் சிவனடி பெறலாமென்னும் மெய்யுணர்வை - மேலான உணர்வை நாம் ஏற்காமல் இருத்தல் இயலுமா?

செந்தமிழ் நாட்டிடையேவுள்ள திருத்தலங்களின் பெயர்களையெல்லாம் பைந்தமிழிலே அமைந்திருந்த பான்மையை நினைவூட்டும் அந்தப் பக்குவம் ஏற்கத் தக்கதல்லவா?

மக்கள் வாழ்வில் அறிவும் உணர்வும் ஒன்றுடன் ஒன்று போட்டியிடும் நிலைமை உருவாதலைக் காண்கிறோம். செயலை விரைந்து செய்து முடிப்பது, நன்மை தீமைகளைக் கண்டுணராது செயல்படுவது உணர்வு.

தீதும் நன்றும் ஆய்ந்து தெள்ளிய ஒரு முடிவை ஏற்றுச் செயல்படுவது அறிவு. அதனாலேயே வள்ளுவப் பெருந்தகை அறிவுடைமை என ஓர் அதிகாரமே வகுத்தார்.

கண்ணால் கண்டு கற்றலே கல்வி, அது கல்விச் செல்வமாயிற்று, செவியாற் கேட்டு அறிதலே கேள்வி, அது கேள்விச் செல்வமாயிற்று.

கற்றும் கேட்டும் நற்றிற நெறியை ஆய்ந்து தெளிந்து அகம் ஏற்கச் செய்வதே அறிவு. அதனாலே கல்வி, கேள்வி எனக் கூறிய தமிழ்மறை தகுந்த திருவள்ளுவர், அறிவை மட்டும் அறிவுடைமை என வழங்கினாரோ? ஆம் எனக் கூறுதல் பொருத்தமே.

திருத்தொண்டர் புராணம், சிவநெறியேற்று அடியார்களுக்குத் தொண்டு செய்யும் நாயன்மார்களின் உணர்வுக் காவியமே எனக் கூறின் மிகையாகாது.

தம் கண்களையே தோண்டியெடுத்து இறைவனுக்கு அளிக்கும் கண்ணப்ப நாயனார், தன் பிள்ளையையே கறியாக்கி உணவு படைக்கும் சிறுத்தொண்ட நாயனார், வழிபாட்டுக்கு உரிய மலரை மோந்தமைக்காக மூக்கை அரியும் ஒரு தொண்டர், தாலியை விற்றுக் குங்கிலியம் பெறும் அடியார், தமிழ் நெறிக்கு மாறாக வாழ்ந்து வந்த இயற்பகை நாயனார் போன்றவர்களின் வரலாறுகள் இவ்வுண்மையை மெய்ப்பிக்கின்றன.

தமிழர் தம் பண்பாட்டில் விருந்தோம்பல் முதன்மை பெறுவதை நாம் அறிவோம். விருந்தோம்பலை ஓர் அதிகாரமாக்கிக் காட்டும் வள்ளுவமே அதற்குச் சான்றாகும். இல்லாமையும், இயலாமையும் இருந்த நிலையிலும் இளையான்குடி மாற நாயனாரும் அவர்தம் துணைவியாரும் விருந்தோம்பிய முறை இந்நாட்டுத் தமிழ் மக்களின் விருந்தோம்பற் சிறப்பை எடுத்து விளக்குவதாகும்.

தத்தமக்குரிய இல்லறக் கடமைகளை ஏற்றுவக்கும் இயல்போடு யாதேனும் ஒரு பொதுப்பணியையும் நாயன்மார் அனைவரும் ஏற்றுள்ள திறம் பாராட்டுக்குரியதாகும்.

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே, எனப் புறநானூற்றுப் புலவன் பாடினான். திருவமுதூட்டும் செம்மையான அறம் திருத்தொண்டர் புராணம் முழுவதும் பேசப்படுவதை ஒரு பெருமையாக்க கொள்ளலாம்.

உள்ளத்தாலே கோயில் கட்டிய பூசலாருக்கு இறைவன் அருள் புரிந்த திறம், எதைக் காட்டுகிறது? ஆண்டவன் நம்மிடம் எதிர்பார்ப்பது, பொன் அன்று, பொருள் அன்று, அன்பு ஒன்றையே என்பதை புரிய வைக்க வில்லையா?

கொண்டவன் செய்யும் அறப்பணிக்கு அவர்தம் பெண்டிரும் உற்ற துணையாகி வாழ்ந்த வரலாறல்லவா பெரியபுராணம்?

நலத்தகு நெறி போற்றி நன்மார்க்கம் காண்பதிலே பெண்டிரும் பங்கேற்ற பெரும்புகழை விரிப்பதன்றோ பெரியபுராணம்.

ஆகவே வரலாற்றுச் செய்திகளை வகைப்படுத்தி அறிய உதவும் வரலாற்றுக் காவியம் பெரியபுராணம் எனக் கூறின் நம் வாய் மணக்க, நூலும் மணக்கிறதே.

பக்திச் சுவை நனி சொட்டச்சொட்ட பாடிய கவிவலவர் அருண்மொழித் தேவராம் சேக்கிழார் செய்யுட்களெல்லாம் தெய்வத்தமிழ் மணப்பதை ஏற்றுப் போற்றத்தானே வேண்டும்.

இலக்கியத்தையும் இலக்கணத்தையும் வளர்த்த சமணமும் பௌத்தமும் வேண்டாமென ஒதுக்கிய இசைத்தமிழில் பண் பாடிய இசைப் பெருந்தகையாளர்களாம் மூவர் வரலாறுகூறும் இன்னிசைக் காவியமாம் பெரியபுராணம், நம் மனத்தில் என்றும் நிலைபெறுவது இயற்கைதானே!

கற்பகத்தின் பூங்கொம்போ
காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர்
விரைபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ
அறியேனென் றதிசயித்தார்.

என்பது போன்ற கவிதைச் சுவை மணக்கும் திருத்தொண்டர் புராணம் நம் மனத்தை விட்டு அகலத்தக்கதோ?

சிவப்புகழ் மணக்கத் தெய்வத் திருத்தொண்டு செய்த மங்கையர்க்கரசியார்தம் மாண்புகழை விளக்குவது பெரிய புராணமன்றோ?

கற்புக்கரசியாய் விளங்கிக் கவிதை மணக்க இறை புகழ் பாடிய காரைக்காலம்மையாரின் புகழ் கூறும் காவியமன்றோ திருத்ததொண்டர் புராணம்! பெண்ணிற்பெருந்தக்க யாவுள என்னும் வள்ளுவர் வாய்மொழியை ஏற்றுப் பெண்ணின் பெருமையைப் பேசுவதன்றோ பெரியபுராணம்?

ஆகவேதான் பெரியபுராண வசன காவியத்தைப் பதிப்பிக்கும் பொறுப்பை ஏற்பதிலே பெருமகிழ்ச்சி கொண்டு ஏற்றேன்.

கையெழுத்து ஏட்டில் 1038 பக்கங்கள் அமைந்த பெரிய புராண வசன காவியத்தைப் பக்கம் பக்கமாய்ப் புரட்டினேன். பக்கம் பக்கமாக எழுத்து விடாமல் படிக்கத் தொடங்கினேன்.

**ஆறுமுக நாவலர் இயற்றிய பெரியபுராண வசன காவியம் அல்லது திருத்தொண்டர் சரித்திரம்**

இவை யாழ்ப்பாணத்திலுள்ள நல்லூரிலுள்ள சைவத்திரு ஆறுமுக நாவலர் இயற்றியது. விநாயகர் வணக்கம். வெண்பா என்று தொடங்கியது.

## தொடர்ந்து திருத்தொண்டர் ஸ்துதி

இவை "பர்வத சஞ்சீவியையர் இயற்றியது" என ஐந்து திருவிருத்தங்களும் நாயன்மார் வரலாற்றின் இறுதியில் மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம் - இது பர்வதசஞ்சீவியையர் இயற்றியது எனவும் இருபகுதிகள் காணப்பெற்றன.

ஆகவே, இவை இரண்டைத்தவிர பிறவெல்லாம் சைவத்திரு ஆறுமுக நாவலரவர்களால் இயற்றப் பெற்றது என்பதை அறிய முடிந்தது.

நூலினுள்ளே சங்கிரகம் (சுருக்கம்) சமஸ்தரும் (அனைவரும்) புஷ்பம் (மலர்) சந்தோஷம் (மகிழ்ச்சி) ஜலம் (நீர்) போன்று எடுத்தாளப் பெற்றுள்ள வடமொழிச் சொற்கள் ஏராளம்! ஏராளம்!

அவை போன்றே பார்ப்பனர் அகத்தில் மட்டும் வழக்கத்திலுள்ள அவாள் (அவர்கள்) அவாளுடைய (அவர்களுடைய) என்பன போன்ற வழக்குமொழி மருவிய சொற்களும் வரை கடந்து கையாளப்பட்டுள்ளன.

நம் நாட்டகத்தே ஆட்சி மொழியாக ஆங்கிலம் அமைந்தவுடன் அதைக் கலந்து தமிழோடு உரையாடுவதையும் இந்திய ஆட்சிமொழியாக இந்தி வந்தவுடன் அம்மொழியோடு தமிழைக் கலந்து பேசுவதையும் நாகரிகமாக ஏற்ற நம் தமிழ் மக்கள், வடமொழியைத் தமிழோடு கலந்து பேசுவதையும் மேலான நாகரிமென்று கருதினர் போலும்.

போலி நாகரிகத்தின் வயப்பட்டுழலும் தமிழ் மக்களை விழித்தெழச் செய்யும் தனித்தமிழ் இயக்கங்கள் நம் நாட்டில் தோன்றி வேரூன்றித் தழைக்கும் காலம் இது.

பள்ளி, கல்லூரி மாணவர்களும் இன்று பிறமொழிக் கலப்பற்ற தமிழ்மொழியையே விரும்பிக் கற்கும் காலம் இது. பாடநூல்களும் தனித்தமிழ் நடையையே விரும்பி ஏற்ற காலம் இது.

ஆகவே, அந்நாளில் வழக்கில் இருந்த வடமொழிச் சொற்களை இன்றைய மாணவர்கள் அறியார். ஆகவே சமஸ்கிருத சொற்களுக்குப் பொருத்தமான தமிழ்ச் சொற்களை எடுத்தாள முயற்சி செய்து இறுதியில் வடசொல் தமிழ் அகர வரிசையைச் சேர்க்கலானேன். எடுத்துக் காட்டாக ஒன்றைச் சொல்லலாம்! சொல்லின் செல்வராகிய சுந்தரர், தில்லைவாழ் அந்தணர், என்றே பாடியுள்ளார். திருவள்ளுவரும் அந்தணர் என்போர் அறவோர் என்றே கூறுகின்றார். ஆகவே சிறப்பு நோக்கிப் பிராமணர் என வருமிடங்களில் அந்தணர் என மாற்றப் பட்டுள்ளது.

புலவர்கள் ஓலைச்சுவடிகளில் நூலினை எழுதி வைக்க பிற்காலத்தே அந்நூலினைக் கற்றார் மீண்டும் புதிதாக ஓலைச் சுவடியில் எழுதுங்கால் இருமுறைகளைப் பின்பற்றியிருக்கலாம்.

ஓலைச்சுவடியைத் தானே பார்த்து எழுதுதலும் பிறர் படித்துச் சொல்லக் கேட்டு எழுதுதலும் அவையெனலாம். அவ்வாறு எழுதுங்கால், ஏற்பட்ட பிழைகள் இந்நூலில் மலிந்து கிடந்தன.

செய்வினை, செயப்பாட்டு வினை வேறுபாடின்றி எழுதப் பெற்ற வாக்கியப் பிழைகள், ஒருமை பன்மை மயக்கம், திணை மயக்கம் போன்ற சொற்றொடர்ப் பிழைகள் மலிந்து கிடந்தன. ஒற்றெழுத்துகள் மிகுமிடத்தில் மிகாமலும் மிகாவிடத்தில் மிக்கும் எழுதப்பட்டுள்ள இடங்கள் ஏராளம். அவற்றைச் செப்பம் செய்யலானேன்.

செய்யுளாயினும் உரைநடையாயினும் ஒரே முறையில் வரிசையாக எழுதப்பட்டிருந்தனவே தவிர சீர்பிரித்தும் எழுதப்படவில்லை. பத்தி பிரித்தும் காட்டப்படவில்லை, சிறு தலைப்புகள் குறிக்கப்படவும் இல்லை. ஆகவே, உரிய இடங்களில் சிறு சிறு தலைப்புகள் இட்டுக்காட்டிப் பத்தி பிரித்துத் தொடர்களை முறையாகப் பிரித்து எழுதலானேன்.

அரண்மனை வாழ்நர்களே கேட்டுக் களித்த இசைக்கலையை ஆலயத்திற்குக் கொண்டு வந்து பொதுமக்களும் கேட்டு மகிழச் செய்தவர்கள் நாவுக்கரசரும் நற்றமிழ்ச் சம்பந்தரும் பாவியல் மன்னராம் சுந்தரமூர்த்தியும் தேனினும் சுவைக்கும் திருவாசகம் தந்த மாணிக்கவாசகருமாவர் என்பதை நாமறிவோம்.

இந்த இடத்தில் வரலாற்று ஆய்வாளர்களுக்காக ஒரு செய்தியை தெரிவிக்கும் கடமை எனக்குண்டு.

**வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை**
**நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே**
**தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து**
**ஊன்கலந்தென் உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.**

என வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகளால் பாராட்டப் பெற்றவர் மாணிக்கவாசகர். பாராட்டப் பெற்றது திருவாசகம், இறையன்பில் நெஞ்சகத்தை நெக்குருகச் செய்யும் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் பாடிய பேரருளாளர் மாணிக்கவாசகர்.

அறுபத்து மூன்று தனியடியார்களுக்கும் ஒன்பது தொகையடியார்களுக்கும் அடியேன்! அடியேன்! என்று திருத்தொண்டத்தொகை பாடிய சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகப் பெருமானைப் பாடாதது ஏன்? கேள்விக்குறியாகவே உள்ளது.

ஒருகால் மாணிக்கவாசகர், சுந்தரமூர்த்தியார் காலத்துக்குப் பின் தோன்றி வாழ்தவரோ? என்னும் ஐயமும் எழுதல் இயல்பே. ஆகவே, இந்த ஆய்வினை வரலாற்றுப் பேரறிஞர்களிடம் ஒப்படைத்தலே நன்று என விடுப்போம்.

ஆயினும், சைவத்திரு ஆறுமுக நாவலரவர்கள் எழுதிய பெரியபுராண வசனகாவியத்தை மீண்டும் ஓலைச்சுவடியில் எழுதிய பர்வதசஞ்சீவி ஐயரவர்கள், மாணிக்கவாசகர் சரித்திரம் என்று தலைப்பிட்டு, வான் கலந்த மாணிக்கவாசகர் தம்

வரலாற்றை எழுதிச் சேர்த்துள்ளார்கள். அதுவும் பெருமைப்படத் தக்கதே எனக் கருதிப் பிற்சேர்க்கையாக அதனையும் சேர்த்துள்ளேன்.

இந்நூலில் நம்பியாண்டார் நம்பி வரலாறு, புராண வரலாறு, சிவாலய முனிவர் வரலாறு, நாயனார் வரலாற்றுச் சுருக்கம், குருலிங்க சங்கமம், திருத்தொண்டர் மரபு, தேவாரம் கண்ட திருத்தலங்கள், திருக்கைலாயச் சிறப்பு, திருவாரூர்ச் சிறப்பு, தேவாசிரிய மண்டபச் சிறப்பு, அறுபத்து மூன்று தனியடியார்கள், ஒன்பது தொகையடியார்கள் ஆகியவர்தம் வரலாறு, மாணிக்கவாசகர் வரலாறு போன்றவை ஏட்டுப் பிரதியில் உள்ளவாறே பதிப்பிக்கப்படுகின்றன.

நாடு, இனம், மொழி நலத்திற்காம் ஆக்கமுறு பணியில் என்னை ஊக்கி, வாழ்க்கையில் நான் நிலை குலைந்தபோதெல்லாம் என்னை நிலைநிறுத்தி ஆண்டருளும் தமிழினக் காவலராக - தமிழகக் கல்வி அமைச்சராக - தஞ்சை சரசுவதி மகால் நூலக ஆட்சிக் குழுத்தலைவராக விளங்கும் **மாண்புமிகு பேராசிரியர் டாக்டர் க. அன்பழகனார்,** அவர்களுக்கு என் பணிவார்ந்த வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்வதிலே பேரின்பம் கொள்ளுகின்றேன்.

இந்நூலுக்கு முன்னுரை தந்தும் முகமலர்ந்து இன்னுரை கூறியும் பதிப்பிக்கும் பொறுப்பினை விருப்புடன் அளித்த சரசுவதி மகால் நூலகர் இயக்குநர் பன்மொழிப் புலவர் **பேராசிரியர் மு. சதாசிவம்** அவர்கள் என்றும் என் உளம் விட்டகலா நிலையினராவர்.

உடனிருந்து உற்றுழியுதவி உறுபொருளைத் தந்து மூத்தவராய் எனக்கு உற்ற நாவலர் சி. அரசப்பனார் அவர்களுக்கும் குறித்த நாட்களில் தமக்கே உரித்தான செம்மையும் சீர்மையும் பொருந்த அச்சிடும் பொறுப்பை ஏற்றுச் செப்பமுற நூலாக்கித் தந்த புதுக்கோட்டை சர்மா

சானிடோரிய அச்சக உரிமையேற்றுள்ள உடன்பிறப்பாளர் களுக்கும் காவியத்தை ஏற்ற ஓவியத்தை வரைந்தளித்த திருமதி கேசவன் அவர்களுக்கும் பிழை திருத்தம் செய்வதற்கென உற்றுழி உடனிருந்து உதவிய எனது துணைவியார் திருமதி புலவர் சுந்தரமணியம்மையாருக்கும் அன்புக்குரிய இளவல் மா. பாலகிருட்டிணன், எம்.ஏ., அவர்களுக்கும் ஏட்டுப்படியை ஓலைச்சுவடியோடு ஒப்பிட்டுப்பார்க்க உடனிருந்து உதவியருளிய சரசுவதி மகால் நூலக வெளியீட்டு மேலாளரும் மற்றும் நூலகரும் அன்புக்குரிய நண்பருமாகிய திருமிகு பஞ்சநாதன், எம்.ஏ., அவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலினை தமிழக இளைஞர்களும் கற்று ஏற்பன கொள்வாராக.

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு,**

இது வள்ளுவர் காட்டிய வழி.

**தன் கடன் அடியேனையும் தாங்குதல்**
**என் கடன் பணி செய்து கிடப்பதே.**

தஞ்சை
22-09-90

அன்பார்ந்த
புலவர் சி. **இளங்கோவன்**



## விநாயகர் வணக்கம்

### வெண்பா

ஒருகொம் பிரண்டுசெவி மூன்றுமத நால்வாய்
பொருசெங்கை யைந்துடைய புத்தேன் - வருகங்கை
ஆறுதரித் தோன்மைந்த னானைமுகத் தோனைநினைந்
தேழ்பிறப் புந்தீர வெட்டு.

## சமய குரவர் நால்வர் வாழ்நாள்

### வெண்பா

அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீகம் - இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

## சமய குரவர் வீடுபேறு பெற்றநாள்

### விருத்தம்

சித்திரைச் சதயம் அப்பர்
சிறந்த வைகாசி மூலம்
அத்தரைப் பணிசம் பந்தர்
ஆனிமா மகத்தி லந்த

முத்தமிழ் வாத வூரர்
முதியநல் லாடி தன்னில்
சுத்தமாஞ் சுவாதி தன்னில்
சுந்தரர் கைலை சேர்ந்தார்.

**சிவானந்த மாலை**

**திருவெண்பா**

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்
சிற்கோல வாதவூர் தேசிகனும் - முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
யெந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.



# 1. நம்பியாண்டார் நம்பி வரலாறு

**தேவாரம் எங்கே?**

புண்ணிய பூமியாகிய பரத கண்டத்திலுள்ள பல நாடுகளுள் அகத்திய மகாமுனிவருக்குத் தமிழறி வுறுத்திய பரமாசார்யாராகிய சுப்பிரமணியருக்கு இருப்பிட மாகிய வடக்கிலுள்ள திருவேங்கடமும் கிழக்கு, தெற்கு, மேற்கில் கடலும் எல்லையாகவுடைய தமிழ் நாட்டில் சிறந்து விளங்கா நின்ற முத்திதரும் திருத்தலமாகிய திருவாரூரிலே கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் குரு லிங்க சங்கம பத்தியாலும் சிறப்புற்றோங்கிய அபயகுலசேகரசோழ மன்னரானவர் பரம கருணாநிதியாகிய தியாகேசருடைய திருவருளினாலே வைதிக மார்க்கமும் சைவ மார்க்கமும் தழைத்தோங்க அரசாட்சி செய்யும் நாளிலே தன்னிடத்தில் எழுந்தருளி வரப்பட்ட சிவனடியார்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் என்கிற சமய குரவர்கள் அருளிச் செய்த தேவாரப் பதிகங்களுள் ஒவ்வொன்று ஓதக் கேட்டுக் கைகள் இரண்டும் சிரசின் மேல் குவித்து ஆனந்தஅருவி சொரிய மெய்ம்மயிர் சிலிர்ப்ப நெஞ்சம் நெக்குருக ஆனந்தப் பரவசமாய் அந்தத் தேவாரத் திருப்பதிகம் முழுவதையும் கேட்டு அறிய வேண்டும் என்று நினைத்து தேவாரத் திருமறையை எங்கும் தேட, அஃது அகப்படாமையால் மனத்தில் மிகவும் துயரம் கொண்டிருந்தார். (அது நிற்க)

**நம்பி பிறந்தார்**

திருநாரையூர் என்கிற திருப்பதியில் எழுந்தருளி யிருக்கின்ற பொல்லாப் பிள்ளையாருக்குப் பூசை செய்கின்ற ஆதி சைவருக்குச் சைவ சமயம் அபிவிருத்தியாகும் பொருட்டு ஒரு நன்மகனார் திரு அவதாரம் செய்தார்.

## திருவமுது செய்தருளும்!

அவருக்கு உரிய பருவத்தில் உபநயனம் செய்யப்பெற்று வேதம் முதலிய சாத்திரங்களை ஓதும் நாளிலே, தகப்பனார் ஓர் ஊருக்குப் போய்விட அவருடைய ஆணைப்படிக்குப் பொல்லாப் பிள்ளையாருக்குப் பூசை செய்து நைவேத்தியத்தை அவர் முன் வைத்து எம் பெருமானே! திருவமுது செய்தருளும் என்று பிரார்த்தித்தார்.

பொல்லாப் பிள்ளையார் திருவமுது செய்யாதிருப்பதைக் கண்டு, அந்தப் பிள்ளை மனம் வெம்பி, "எம்பெருமானே! நான் யாதாயினும் தவறு செய்ததுண்டோ? அடியேன் வைத்த நைவேத்தியத்தைத் திருவமுது செய்யாதிருந்தது என்ன?" என்று சொல்லிக்கொண்டு தன்தலையைக் கல்லுமேல் மோத ஆரம்பித்தார். உடனே பிள்ளையார் நம்பீ! பொறு என்று தடுத்து, அந்த நைவேத்தியம் முழுவதையும் திருவமுது செய்தருளினார்.

நம்பியாண்டார் நம்பி, அதைக் கண்டு மனம் மகிழ்ந்து, எம்பெருமானே! இனி அடியேன் பள்ளிக்கூடத்துக்குப் போனால் ஆசிரியர் அடிப்பார், ஆதலால் வேதம் முதலிய கலைகள் எல்லாவற்றையும் தேவரீர் எனக்கு ஓதுவித்தல் வேண்டும் என்று பிரார்த்தித்தார்.

## இரட்டை மணிமாலை

பொல்லாப் பிள்ளையார் திருவுளமிசைந்து ஓதுவிக்க, நம்பியாண்டார் நம்பி மனம் மகிழ்ந்து நாடோறும் ஓதுவாராகிஅப்பிள்ளையார் மேலே திருவீரட்டை மணிமாலை பாடியருளினார்.

இந்தச் சமாசாரம் முழுவதையும் அபயகுலசேகர சோழமன்னரானவர் கேள்வியுற்று, மனம் மகிழ்ந்து பொல்லாப் பிள்ளையாருக்கு நிவேதிக்கும் பொருட்டுப் பழவர்க்கங்கள், தேன், அவல் எள்ளுருண்டை முதலியவைகளெல்லாம் எடுப்பித்துக்கொண்டு நால்வகைச் சேனைகளும் சூழச்சென்று திருநாரையூரை அடைந்து நம்பியாண்டார் நம்பியுடைய திருவடிகளை வணங்கி, சுவாமி! இவைகள் எல்லாவற்றையும் பொல்லாப் பிள்ளையாருக்கு இப்பொழுது நிவேதித்தல் வேண்டும் என்று பிரார்த்தித்தார்.

**திருவமுதுண்டார்!**

நம்பியாண்டார் நம்பி, பொல்லாப் பிள்ளையாரை வணங்கி அவைகள் எல்லாவற்றையும் நாற்சுத்தி செய்து படைக்க, பொல்லாப் பிள்ளையார் தம் துதிக்கையை நீட்டி, அவை எல்லாவற்றையும் திருவமுது செய்தருளினார். அதுகண்ட சோழமன்னன் மனம் மகிழ்ந்து நம்பியாண்டார் நம்பியை வணங்கி "சுவாமி, சமயகுரவர் மூவரும் அருளிச்செய்த தமிழ் வேதமாகிய தேவாரத் திருமுறையும் திருத்தொண்டர்களுடைய சரித்திரமும் பூவுலகத்தில் விளங்கல் வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தார்.

அது கேட்டதும் நம்பியாண்டார் நம்பி திருவுளம் மகிழ்ந்து திருக்கோயிலினுள்ளே புகுந்து பொல்லாப் பிள்ளையாரை வணங்கி, "எம் பெருமானே! தேவாரத் திருமுறைகள் இருக்குமிடத்தையும் அடியேனுக்கு அருளிச்செய்தல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

**இங்கே இருக்கின்றன**

பொல்லாப் பிள்ளையார், "நம்பி! சிதம்பரத்திலே கனகசபைக்குப் புறக்கடையின் பக்கத்திலே சமயகுரவர்கள் மூவருடைய கைகளின் அடையாளத்தையுடைய

அறையினுள்ளே தேவாரத் திருமுறைகள் இருக்கின்றன." என்று அருளிச் செய்து பின்பு திருத்தொண்டர்களுடைய சரித்திரத்தையும் திருவாய் மலர்ந்தருளினார்.

நம்பியாண்டார் நம்பி, சோழமன்னனிடத்துக்கு வந்து அவைகளைத் தெரிவித்தார். சோழமன்னர் அந்த நம்பியாண்டார் நம்பியொடு சிதம்பரத்தை அடைந்து சிவகங்கையிலே நீராடி சந்தியா வந்தனமும் பூசையும் முடித்துக் கொண்டு கனகசபையை அடைந்து சபாநாயகரைத் தரிசித்து வணங்கினார். நம்பியாண்டார் நம்பி சபாநாயகர் மீது கோயிற்றிருப்பண்ணியார் விருத்தம் பாடியருளினார்.

பின்பு சோழமன்னர், தில்லை வாழ் அந்தணர்களை நோக்கி, "கனகசபைக்கு மேற்றிசையிலுள்ள அறையிலே தேவாரத் திருமுறைகள் இருக்கின்றன" என்று அருளிச்செய்தார். தில்லைவாழ் அந்தணர்கள் "மன்னவரே! திருமுறைகளை வைத்தருளிய சைவத்திருநெறித் தலைவர்கள் மூவரும் எழுந்தருளி வந்தால் அறை திறக்கும்" என்றார்கள்.

**சமய குரவர் வந்தனர்**

சோழ மன்னர் நடேசருக்குச் சிறப்பான பூசை செய்வித்து, சமயகுரவர் மூவரைத் திருவீதியிலே திருவுலா வருவித்துக் கனகசபையை வலம் செய்வித்துத் திருமுறைகள் இருக்கும் அறையின் எதிரே கொணர்வித்து நிறுத்திக்கொண்டு தில்லைவாழ் அந்தணர்களை நோக்கி, "சமய குரவர்கள் மூவரும் எழுந்தருளி வந்து விட்டார்கள். இனி அறை திறக்கலாமே" என்றார். தில்லைவாழ் அந்தணர்கள் சோழ மன்னருடைய புத்தியை வியந்து அறையைத் திறக்க அனுமதி செய்தார்கள்.

சோழ மன்னர், சமய குரவர் மூவருடைய கையடையாளமுள்ள திருக்கதவைத் திறந்து திருமுறைகளை வன்மீகம் மூடியிருக்கக் கண்டு மனம் நொந்து அவைகளைப் புறத்திலே கொணர்வித்து மேலே படிந்திருந்த மண்ணைத் தள்ளிவிட்டு செல்லு நனையும்படி எண்ணெயைச் சொரிந்து திருவேடுகள் எல்லாவற்றையும் எடுத்துப் பார்க்க அளவில்லாத திருவேடுகள் பழுதாகக் கண்டு கண்ணீர் வாரச் சோகித்து நின்றார்.

**ஆண்டவன் அருள்வாக்கு!**

அப்போது எல்லாருங் கேட்கச் சிவபெருமானது திருவருளினாலே, "தேவாரப் பதிகங்களிலே இக்காலத்துக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் வைத்துவிட்டு மற்றவற்றைச் செல்லு மண் மூடச் செய்தோம் " என்று ஓர் அசரீரி வாக்கு ஆகாயத்திலே தோன்றிற்று.

அது கேட்டதும் சோழமன்னன் மனக்கவலை தீர்ந்து திருவருளை வியந்து ஆடிப்பாடி நம்பியாண்டார் நம்பியை வணங்கி, "சுவாமி தேவாரம் முதலிய அருட்பாக்க ளெல்லாவற்றையும் திருமுறைகளாக வகுத்தருளும்" என்று பிரார்த்தித்தார்.

**திருமுறை வகுத்தல்**

நம்பியாண்டார் நம்பி அதற்கு உடன்பட்டு திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களை மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசு நாயனார் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களை மூன்று திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்தி நாயனார் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களை ஒரு திருமுறையாகவும் வகுத்தருளினார்.

இப்படித் தேவாரத்தை ஏழு திருமுறைகளாக வகுத்தருளியபின் மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம், திருக்கோவையார் என்னும் இரண்டையும் எட்டாம் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், நம்பிக்காடவ நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் நாயன்மார் ஒன்பதின்மர் அருளிச்செய்த திருவிசைப்பா பதிகங்கள் இருபத்தெட்டும், அவர்களுள்ளே சேந்தனார் அருளிச்செய்த திருப்பல்லாண்டுப்பதிகம் ஒன்றுமாகிய இருபத்தொன்பது திருப்பதிகங்களையும் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூல நாயனார் அருளிச் செய்த திருமந்திரத்தைப் பத்தாம் திருமுறையாகவும், திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரம் முதலிய திவ்விய பிரபந்தங்களைப் பதினோராந் திருமுறையாகவும் வகுத்தருளினார்.

**கலித்துறை திருவந்தாதி**

இங்ஙனம் திருமுறை வகுப்பு முற்றிய பின்னர் நம்பியாண்டார் நம்பி, தமக்குப் பொல்லாப் பிள்ளையார் உபதேசித்தருளியபடியே திருத்தொண்டத் தொகையை முதனூலாகக் கொண்டு அறுபத்து மூன்று தனியடியாரும் ஒன்பது திருக்கூட்டத்தாருமாகிய திருத்தொண்டர்களுடைய திருத்தொண்டையும் அதனால் அவர்கள் பெற்ற பேற்றையும் கலித்துறைத் திருவந்தாதியாக அருளிச் செய்தார்.

**பதினோராந் திருமுறை**

பின்பு திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் மீது திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னும் ஆறு பிரபந்தங்களும் திருநாவுக்கரசு

நாயனார் மீது திருவேகாதசமாலையும் பாடியருளினார். தாம் அருளிச் செய்த பத்து திவ்விய பிரபந்தங்களையும் சோழமன்னருடை வேண்டுகோளின்படி பதினோராந் திருமுறையிலே சேர்த்தருளினார்.

**பண்ணடைவு செய்தார்கள்**

அதன்பின் நம்பியாண்டார் நம்பியும் சோழ மன்னரும் தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு பெறாமையினாலே தில்லை வாழந்தணர்கள், மாகேச்சுவரன் முதலானோரோடும் திருவெருக்கத்தம் புலியூரடைந்து திருக்கோயிலை வலஞ்செய்து சிவபெருமானை வணங்கி, "எம்பெருமானே! தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவை அருளிச் செய்ய வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள்.

அப்பொழுது, எல்லாருக்கும் கேட்கும் படிக்கு ஆகாயத்திலே,"அன்பர்களே! திருநீலகண்டப் பெரும்பாணன் மரபிலே பிறந்த ஒரு பெண்ணுக்குப் பண்களை அருளிச் செய்தோம்" என்று ஓர் அசரீரி வாக்குத் தோன்றிற்று.

உடனே நம்பியாண்டார் நம்பியும் சோழ மன்னரும் அவளை அழைத்து அவளிடத்தில் பண்களைக் கேட்டு மனம் மகிழ்ந்தார்கள்.

அதன்பின் "அன்பர்களே! இவளைக் கனகசபைக்கு முன் கொண்டு போய் தேவாரப் பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுக்கக் கடவீர்!" என்று ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. அதைக்கேட்ட அளவில் நம்பியாண்டார் நம்பியும் சோழ மன்னரும் அவ்வாறே அவளை அழைத்துக் கொண்டு சிதம்பரத்தை அடைந்து கனகசபைக்கு முன் சென்று தேவாரத்திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுத்த பின்பு சபாநாயகரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு திருநாரையூருக்கும் சோழமன்னர் திருவாரூருக்குமாகப் போய் விட்டார்கள்.

பின் நம்பியாண்டார் நம்பி, சிவானுபூதிப் பெருஞ் செல்வராய்ச் சிலகாலம் இருந்து சிவபதம் அடைந்தார்.

**செப்பேடு செய்யப்பட்டது**

அபயகுலசேகரசோழ மன்னரானவர், பதினொரு திருமுறைகளையும் செப்பேடு செய்து தியாகேசர் சன்னிதியில் ஏற்றுவித்து சைவத் திருநெறி தழைக்கும்படி வெகுகாலம் அரசியற்றிக் கொண்டிருந்து சிவபதம் அடைந்தார்.

நம்பியாண்டார் நம்பியினாலும் அபயகுலசேகர சோழமன்னராலும் சைவத் திருநெறி தமிழ்த்திருமுறை பதினொன்றும் தமிழ் நாடெங்கும் பரந்து சைவ சமயம் தழைத்தோங்கிற்று.

**நமசிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!**

**இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!**

## 2. சேக்கிழார் வரலாறு

**சேக்கிழார் பிறந்தார்!**

ஆதி காலத்திலே நந்திமலையில் வசிட்டர் ஆசிரமத்திலுள்ள காமதேனு பொழிந்த பால் பெருகியதாலுண்டான பாலாறு என்று பெயர்பெற்ற புண்ணிய நதியானது இடைவிடாது ஒழுகுதலால் மிக்க வளம் சுரந்தளிக்க செழுமையுள்ளதாகிய நீர்வளமும் நிலவளமும் பயிர்வளமும் உள்ளதாய்க் காஞ்சிபுரம் முதலாந பாடல்பெற்ற சிவத்தலங்களும் விட்டுணுதலங்களும் உள்ளதான தொண்டை நாட்டு உட்பிரிவாகிய இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்றாகிய புலியூர்க்கோட்டத்தைச் சேர்ந்த குன்றைவள நாட்டில் குன்றத்தூரில் வாழுகின்ற வேளாளர் செய்த தவப் பயனாய் சேக்கிழார் மரபில் சைவ சமயம் விளங்கும்படி சிவபுண்ணியமே திருவுருக் கொண்டதுபோல பாலறாவாயர் என்னும் தம்பியாருடன் திருவவதாரம் செய்தார்.

அவருக்கு அருண்மொழித் தேவரென்னும் பிள்ளைத் திருநாமம் புனைந்து கல்வியறிவு முதிர்ந்து சைவ சமயத்துக்குரிய தீட்சைகளும் சிவ பக்தியில் அதிகரித்து சத்காலக்ஷேபம் செய்து கொண்டிருக்கையில் இதை அனபாய சோழமன்னன் அறிந்து வரவழைத்து மந்திரித்தனம் கொடுத்து உத்தம சோழ பல்லவராயன் என்னும் பட்டப் பெயரும் கொடுத்தான்.

**அனபாயன் சிந்தாமணி கேட்டான்**

அவர் அதை பெற்றுக்கொண்டு இம, சேது பரியந்தம் நீதி தவறாமல் செங்கோல் செலுத்துகையில் அந்த சோழ தேசத்திலிருக்கின்ற திருநாகேசுவரம் என்னும் பாடல் பெற்ற சிவத்தலத்தில் தாம் வைத்திருக்கப்பட்ட அன்பின் மிகுதியால் தம் பதியாகிய குன்றத்தூரில் மடவளாகம் ஒன்று

ஏற்படுத்திஆலயப்பிரதிட்டை செய்து சோழ நாட்டில் இருக்கப்பட்ட திருநாகேசுவரம் போல நாமதேயம் வைத்து கும்பாபிடேகம் செய்து நித்திய, நைமித்திக, காரியம் என்கிற மூன்று வித பூசையும் சிறப்பாக நடத்திவரும் நாளில், அனபாய சோழ மன்னன் சமண சமயப் பற்றுள்ளவனா யிருந்தும் சமண சமய மன்னவனாகிய சீவக மன்னனுடைய சரிதம் என்று ஏற்பட்டிருக்கிற சிந்தாமணி என்கிற இலக்கியத்தை நாள் தோறும் படனம் செய்து கொண்டிருக்கின்றமையால் "சிவ சிவா இவர்கள் யாதொரு பயனும் அடையாமல் வீண் நாள் கழிக்கிறார்களே" யென்று மனவிரக்கமுற்று அரசனைப் பார்த்து "இம்மை மறுமைப் பயனைத் தரத்தக்கதாகிய நம்முடைய சைவசமய கதையிருக்க, கரும்பு தின்னாமல் வேம்பு தின்பது போல் பயன் அற்ற அரசன் கதையைக் கேட்பது என்ன? " வென, அரசன் "பயனற்ற கதை இதுவானால் இம்மை மறுமைக்கு உறுதி பயக்கத்தக்க சிவகதை எது? அதைக் கற்ற வல்லவர் எவர்? சிந்தாமணி போன்று மத்தியத்தில் வந்த கதையோ? அல்லாமல் புராதனமோ? முன்னூலுண்டோ? அது சொன்னவர், கேட்டவர் யாவர்? தவக்கதையோ? தவம் பண்ணிப் பேறு பெற்ற ஒப்பற்ற கதையோ? விவரமாகச் சொல்ல வேண்டும்" என்றான்.

சேக்கிழார், "அது பரமசிவத்தின் அடியார்களாகிய திருத்தொண்டர்களுடைய சரித்திரம். சாமான்னியர்களான மற்றொருவரால் சொல்லப்பட்டதன்று. பரமசிவன் தடுத்தாட்கொண்ட வன்றொண்டரென்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவாரூரில் அவர் அருள் கூர்ந்து 'தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்' என்று நம்முடைய தொண்டர்களைப் பாடித் துதிசெய்யென்று முதலெடுத்துக் கொடுத்து அவர்களுடைய பெருமைப் பாட்டினையும் சரித்திரங்களையும் தெரிவித்தருள, அதுவே முதலடியாக

அமைத்துத் திருப்பாடலாகச் செய்த திருத்தொண்டத் தொகைக்குப் பொல்லாப் பிள்ளையார் பொருளுரைக்க திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டர் களுடைய பெருமைப்பாடு தோன்றக் கலித்துறை யந்தாதியாகச் செய்தார்" என்றார்.

**திருத்தொண்டர் வரலாறு**

அதைத் திருமுறைகண்ட இராசராச தேவர், சிவாயலத்தேவர் முதலான பெரியோர்களும் மற்றுமுள்ள யாவரும் பாராட்டிக்கொண்டு இருந்தார்களென்று திருத்தொண்டர்களுடைய ஊர், பேர், மரபு, தொண்டு யாவும் விவரமாகச் சொல்ல அரசன் கேட்டு ஆனந்தமடைந்து சேக்கிழார் சுவாமிகளைப் பார்த்து, "இவ்விதமாகவே திருத்தொண்டர் பெருமை விளங்கும்படிப் பெருங்காவியமாகச் சீக்கிரத்தில் செய்து கொடுத்தருள வேண்டும்" என்று மிகுந்த பொருளும் கொடுத்து அனுப்பிவைக்க அருண் மொழித்தேவரான சேக்கிழார் சிதம்பரத்தை அடைந்து சிவகங்கையில் நீராடல் செய்து திருநீறு தரித்துப் பரிசுத்தத்துடனே சித்சபைக்கு எதிரில் சாஷ்டாங்கமாகப் பணிந்து, "ஐயனே! தேவரீருடைய திருத்தொண்டர் பெருமையைப் பெருங்காவியமாகப் பாடும்படி அடியெடுத்துக் கொடுத்தருள வேண்டும்" என்று விண்ணப்பம் செய்ய, நடேசமூர்த்தி அருள் மிகுந்து, "உலகெலா முணர்ந் தோதற்கரியவன்" என்று மூவாயிரம் தில்லை வாழ் அந்தணருக்கும் எழுநூறு திருமடத்து முதலிகளுக்கும் நாற்பத்தெட்டாயிரம் மாகேசுவரருக்கும் திருக்கோவிலில் திருத்தொண்டு செய்கிற சிவனடியார் ஏழாயிரத்துத் தொளாயிரம் பேருக்கும் கேட்கும் படிக்குச் சேக்கிழாருக்கு முதலடி எடுத்துக் கொடுத்த அசரீரி வாக்கு அடியார்களுக்கும் தில்லை வாழ் அந்தணர் முதலானோர்க்கும் கேட்ட போதும் யாவரும் ஆனந்தப் பரவச மடைந்தார்கள்!.

**பெரிய புராணம் பாடுதல்**

சேக்கிழார் அதைக் கேட்டுக் களிகூர்ந்து வணங்கித் திரு நெறித்தலைவரையும் தோத்திரம் செய்து திருநீறு, உருத்திராட்சம் முதலான சிவசாதனம் தரித்துக்கொண்டு ஆயிரக்கால் மண்டபத்தில் வீற்றிருந்து உலகெலாமுணர்ந் தோதற்கரியவன் என்னும் திருப்பாட்டு முதல் வெள்ளையானைச் சருக்கம் ஈறாக புராணம் செய்து நிறைவேற்றினார்.

இவ்வாறு புராணம் நிறைவேற்றிய செய்தியை, அனபாய சோழ மன்னன் தூதரர்களாலறிந்து மிகமகிழ்ந்து தில்லையிற் சென்று வணங்கவேண்டும் என்று விருப்பம் கொண்டு சதுரங்க சேனைகளோடு யானை மேலேறிப் போய் சிதம்பரத்தைச் சமீபிக்க, அங்கிருந்த தில்லை வாழந்தணர்களும் மடாதிபதிகளும் மற்றுமுள்ள பெரியோர்களும் சேக்கிழாரும் கூடி மன்னரை எதிர்கொண்டு கண்டு ஆசிர்வாதம் செய்தார்கள்.

**சேக்கிழார் தோற்றம்**

அப்போது முண்டிதமான திருமுடியும் குண்டல மசையும் திருச்செவிகளும் உருத்திராட்ச கெபுடும் கரமாலையும் விளங்கும்படி சேக்கிழார் சுவாமிகள் கொண்டிருந்த சிவ வேடத்தைச் சோழ மன்னன் கண்டு மகிழ்ந்து தன்னையுமறியாமல் இரண்டு கைகளையும் அஞ்சலியாகச் சிரசின் மீது வைத்துக்கொண்டு சேக்கிழார் சுவாமிகள் திருவடியை வணங்கிச் சபாநாயகரைத் தரிசிக்க நினைத்து சர்வத்ராளோடும் சிதம்பரத்தை அடைந்து ஆலயத்தை வலம் செய்து சுவாமியைச் சாஷ்டாங்கமாகப் பணிந்து, துதிக்க, சுவாமியானவர் "அரசனே! நம்முடைய

அன்பனாகிய சேக்கிழான் அடியார்களுடைய பெருமையைப் புராணமாகச் செய்யும் பொருட்டு நம்முடைய வாக்கினால் உலகெலாமென அடியெடுத்துக் கொடுத்து அவர்களுடைய தொண்டையும் தெரிவித்தோம். அதைக் கொண்டு நிறைவேற்றினான். அதனை நீ விரைவில் கேட்கக் கடவை" என்று அந்த சிதாகாசமாகிய ஞான வெளியில் அசரீரி வாக்குத் திருச்சிலம்பொலியுடன் உண்டாக அதுவே யாவர்களுடைய செவியிலும் புகுந்தது.

சோழமன்னன் அதைக் கேட்டு மனமகிழ்ந்து தேசங்களிலுள்ள அரசர்களும் மடாதிபதிகளும் சிவன் அடியார்களும் மற்றுமுள்ளவர்களையும் வரும்படி ஓலை எழுதியனுப்பி வரவழைத்துச் சேக்கிழார் சுவாமிகளைப் பார்த்து "நடேச மூர்த்தியின் கிருபையால் தேவரீர் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணத்தைத் தேவரீர் வாசித்து அதனுடைய பொருளை விளங்க அருளிச் செய்ய வேண்டும்" என்று அரசன் முதல் யாவரும் கேட்டுக்கொள்ள அவர் சம்மதித்தார்.

**அரங்கேற்றம்**

அதற்குமேல் கனகசபையினிடத்தின் எதிரே மெழுகிக் கோலமிட்டு அறுகால் பீடம் வைத்து அதன் மேல் பட்டாடை மடித்து வைத்து மலர் பரப்பி தூபதீபம் கொடுத்து அதன்மேல் அந்தணர்கள் திருத்தொண்டர் புராணத்தை வைக்க, சேக்கிழார் சுவாமிகள் அரசர் முதலானவர்களை நோக்கி "சித்திரைமாதம் திருவாதிரை நட்சத்திரமான இன்றைய தினம் முதல் திருத்தொண்டர் புராணத்தைப் பிரசங்கம் செய்து வைத்துக்கொண்டு வந்து மேல் வருடம் சித்திரை மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நிறைவு செய்கிறோம்" என்று சொல்லி உத்தேசித்து நாள்தோறும் பிரசங்கம் நடத்திக்கொண்டுவர அரசர் முதலான யாவரும் அன்புடன் இருந்து கேட்டு ஆனந்தப் பரவசம் அடைந்தார்கள்.

அதன்பின்பு திருமுறையைப் பசும்பட்டுக் கவளிகை சாத்திப் பொன்தகட்டில் வைத்து பட்டத்து யானையை அலங்கரித்து இந்தத் தட்டை வைத்து சேக்கிழாரை ஏற்றுவித்து சோழமன்னன் தான் சேக்கிழாருக்குப் பின்புறமிருந்து இரண்டு கைகளாலும் சாமரை வீசி ஊர்வலம் செய்வித்து சித்சபைக்கு முன் வந்து திருமுறையை எழுந்தருளப் பண்ணி சன்னதியில் வைத்து அரசர் முதலான பலரும் நடேச மூர்த்தியையும் சேக்கிழாரையும் சேவித்துக் கொண்டார்கள்.

அதன்பின் சோழமன்னன் தனக்கு மந்திரி வேண்டும் என்று நினைத்துச் சேக்கிழார் தம்பியான பாலறாவாயர் எங்கிருக்கிறார் என்று கேட்க, அவர் குன்றத்தூரில் தன் பேரால் பாலறாவாயன் கேணி என்று ஒரு தாடக பிரதிட்டையும் திருநாகேசுவரம் என்னும் சிவாலயத் திருப்பணியும் செய்து கொண்டிருக்கிறார் என்று கூட இருந்தவர்கள் சொல்லக் கேட்டு அவரை அழைப்பித்து மந்திரி பட்டமும் தொண்டைமான் என்னும் பட்டப் பெயரும் கொடுத்துத் தம்மிடத்தில் வைத்துக்கொண்டு அரசாளும் நாளில், தொண்டை மண்டலத்தில் கருப்புக் காலம் சம்பவிக்க அந்த நாட்டில் உள்ளவர்கள் எல்லாரும் தம்மை வந்து அடைய அவர்களுக்கு யாதொரு குறைவும் இல்லாமல் ஆதரித்தமையால் தொண்டை மண்டலங்காத்த பெருமான் என்று புகழ் பெற்று விளங்கினார். சேக்கிழார் சுவாமிகள் துறவாச்சிரமத்திலிருந்து நடேச மூர்த்தியினுடைய திருவடி நிழலை அடைந்தார்.



# 3. சிவாலய முனிவர்

**தேவாரத் திருப்பதிகத் தொகை**

இப்போதுள்ளவை:

| | |
|---|---|
| திருஞானசம்பந்தர் | *384* |
| திருநாவுக்கரசர் | *312* |
| சுந்தரமூர்த்தி | *100* |
| ஆக .... | *796* |

**அடங்கன் முறை**

இந்தத் தேவாரத் திருப்பதிகம் எழுநூற்றுத் தொண்ணூற்றாறும் அடங்கிய புத்தகம் அடங்கன் முறை எனப்படும். கல்வியறிவு, ஒழுக்கங்களால் சிறப்புற்று விளங்கிய சிவாலய முனிவர், அந்த அடங்கன் முறையை மிகவும் அன்போடு நித்தியம் பாராயணம் செய்ய ஆசை கொண்டார்.

**அகத்தியரிடம் செல்க!**

அஃது ஒரே நாளில் முழுவதும் பாராயணம் செய்து முடியாது என்று வருத்தமுற்றுச் சிதம்பரத்தை அடைந்து சபாநாயகரை வணங்கித் தம் கருத்து முற்றும் பொருட்டு நெடுங்காலம் அருந்தவம் செய்தார். அப்பொழுது சபாநாயகருடைய திருவருளினாலே, "சிவாலய முனிவனே! நீ பொதிய மலையில் இருக்கின்ற அகத்திய முனிவனிடத்திலே போனால் உன் கருத்து நிறைவேறும்" என்று ஓர் அசரீரி வாக்குத் தோன்றிற்று.

சிவாலய முனிவர் அதைக்கேட்டு மனமகிழ்ந்து சபாநாயகரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு சென்று பொதிய மாமலையை அடைந்து அகத்திய முனிவரைத் தியானித்து மூன்றாண்டு காலம் அருந்தவம் செய்தார்.

**அகத்தியர் காட்சி தந்தார்**

அப்போது அகத்திய மாமுனிவர் தோன்றி அடங்கன் முறை முழுவதையும் அவருக்கு உபதேசித்து அதிலிருந்து இருபத்தைந்து திருப்பதிகத்தை எடுத்துச் சேர்த்து, இதை நாடோறும் பாராயணம் செய்பவர்கள் அடங்கன் முறை முழுவதையும் பாராயணம் செய்தவர்களாவர் என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

சிவாலய முனிவர் அப்படியே அந்த இருபத்தைந்து திருப்பதிகங்களையும் நெடுங்காலம் பாராயணம் செய்து சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றார்.

*மந்திரமாவது நீறு*
*வானவர் மேலது நீறு*
*சுந்தரமாவது நீறு*
*துதிக்கப்படுவது நீறு*



## தோற்றுவாய்

## 4. நாயன்மார் வரலாற்றுச் சுருக்கம்

### 1. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

சுந்தரர், அந்தணர். இவர் முன்னே கைலாயத்தில் சிவனடியாராக இருந்த ஆலால சுந்தரர். இவர் விருத்த பிராமண வடிவம் கொண்ட ஈசுவரன் காட்டிய அடிமை முறியோலையைக் கிழித்து, ஈசுவரிக்குத் தோழியான தாசி வயிற்றில் பிறந்த பரவையார் இடத்திலும் செட்டிப்பெண் வயிற்றில் பிறந்த சங்கிலியிடத்திலும் பரமசிவனைத் தூதுபோகச் செய்து அவரைச் சம்மதிப்படுத்தித் திருமணம் செய்து கொண்டிருந்து பின் சிவத்தலங்கள் தோறும் போய்ச் சுவாமியைத் தரிசனம் செய்து முடிவில் சிவன் உத்தரவால் சேரமானுடன் கைலாயத்தில் போய் முன்போல் கணநாதராகி விட்டார்.

### 2. தில்லை வாழந்தணர்

இவர்கள் சிதம்பரத்து அந்தணர்கள். சுவாமிக்குச் சமமானவர்களாயிருப்பதால் மிகவும் பெருமை பெற்றவர்கள்.

### 3. திருநீலகண்டர்

இவர் குயவர். இவர் சிவன் கொடுத்த ஓடு இல்லாததினால் சத்தியம் பண்ணுவதற்குத் தன் மனைவி கையைப் பிடித்துக் குளத்தில் முழுகி சிவனால் இளமை அடைந்து முடிவில் சிவலோகம் அடைந்தார்.

### 4. இயற்பகை நாயனார்

இயற்பகை நாயனார் வணிகர். இவர் அந்தணர் வேடம் கொண்டுவந்த சிவனுக்குத் தன்மனைவியைக் கொடுத்து முடிவில் சிவபதம் அடைந்தார்.

### 5. இளையான்குடி மாற நாயனார்

இவர் வேளாளர். இவர் சிவனடியார் வேடம் கொண்ட சுவாமிக்கு கழனியில் விதைத்த நெல்லை வாரிக்கொண்டு வந்து சமைத்து சிவனை அறிந்து முடிவில் சிவபதம் அடைந்தார்.

### 6. மெய்ப்பொருள் நாயனார்

இவர் அரசர். இவர் தன் கழுத்தை அரிந்த சிவவேடம் கொண்ட அரசருக்குத் துன்பம் நேராதவாறு ஆள் துணை கூட்டியனுப்பி சிவபதம் அடைந்தார்.

### 7. விறன்மிண்ட நாயனார்

இவர் வேளாளர். சுந்தரர் ஒருநாள் அடியாரைத் துதிக்காமல் கோயிலுக்குப் போனதைக்கண்டு சுந்தரரையும் சிவனையும் புறகு என்றதால் கைலாயத்தில் கணநாதரானார்.

### 8. அமர்நீதி நாயனார்

இவர் வணிகர். இவர் சிவன் கொடுத்த கோவணத்துக்குப் பதிலாகத் தன் துணிமூட்டை, நூல் பொதி, தனம், தன் மனைவி, தன் பிள்ளை, தான் இவைகளை நிறுத்த தராசுடன் கைலாயம் போனார்.

**9. எறிபத்த நாயனார்**

இவர், கோயில் பூசைக்குச் சிவகாமியாண்டார் கொண்டு வந்த பூப்பெட்டியை அரசரின் யானை பிடுங்கி இரைத்ததால் அதைக் கொன்று தன் கழுத்தையும் அரிய முனைந்தவர்.

**10. ஏனாதி நாயனார்**

இவர் சான்றார் வகுப்பினர். வாள் வித்தை கற்பித்துத் தனம் சம்பாதித்துச் சிவனடியாருக்கு அமுதிட்டவர். இவர் திருநீறணிந்த பகைவனால் அறுப்புண்டு சிவபதம் அடைந்தார்.

**11. கண்ணப்ப நாயனார்**

இவர் காளத்தி மன்னரின் பிள்ளை. இவர் சுவாமியின் மேல் உள்ள பக்தியால் தன் கண்ணை அவருக்குப் பிடுங்கி வைத்து வீடுபேறு அடைந்தார்.

**12. குங்கிலியக் கலய நாயனார்**

இவர் அந்தணர். இவர் தம் வீட்டிலுள்ளார் பட்டினியாய் இருப்பதைப் பற்றிக் கவலைப்படாமல் சுவாமிக்குப் பக்தியால் தாலி கொடுத்துக் குங்கிலியம் வாங்கினதால் சகல சம்பத்தும் அடைந்து திருப்பனந்தாளில் சாய்ந்த இலிங்கத்தைத் தானே நிமிர்த்து கடைசியில் வீடுபேறு அடைந்தார்.

**13. மானக் கஞ்சாற நாயனார்**

இவர் வேளாளர். தன் மகள் தலைமயிரை அரிந்து தவவேடம் கொண்ட சுவாமிக்குக் கொடுத்து முடிவில் வீடுபேறடைந்தார்.

**14. அரிவாட்டாய நாயனார்**

இவர் வேளாளர். இவர் செந்நெல் அரிசி, கீரை மாவடு ஆகியவற்றைக் கூடையிலெடுத்துக் கொண்டு கோயிலுக்குப் போகும்போது தவறிவிழ, அவை அங்கிருந்த மண் வெடிப்பில் விழுந்ததற்காக தன் கழுத்தை அரிவாளினால் அரிய சுவாமி வந்து கையைப் பிடித்துத் தரிசனம் கொடுக்க முடிவில் சிவனருளால் கைலாயம் அடைந்தார்.

**15. ஆனாய நாயனார்**

இவர் இடையர். திரு ஐந்தெழுத்தினைப் புல்லாங்குழலில் புகட்டி ஊதுவதைக் கைலாயத்திலிருந்த சிவன் கேட்டு உவந்து இவரைக் கைலாயத்துக்கு இட்டுக்கொண்டு சென்றார்.

**16. மூர்த்தி நாயனார்**

இவர் வணிகர். இவருக்கு மதுரையில் சந்தனக் கட்டைக்குத் தட்டுப்பாடு வர பக்தியால் தன்கையைத் தேய்த்ததால் அரசாட்சியில் முடிவும் சிவபதமும் பெற்றார்.

**17. முருக நாயனார்**

இவர் அந்தணர். பக்தியால் இறைவனுக்கு மலர் மாலை சூட்டிக் கொடுத்தும் திரு ஐந்தெழுத்தை ஓதியும் சிவபதம் அடைந்தார்.

**18. உருத்திர பசுபதி நாயனார்**

இவர் அந்தணர். இவர் சுவாமி மேல் பக்தியால் நித்தியம் மூன்று காலமும் கழுத்தளவு நீரிலிருந்து தலைமேல்

கை கூப்பிக் கும்பிட்டு உருத்திரம் சொல்லி நீராடி முடிவில் சிவபதம் அடைந்தார்.

**19. திருநாளைப்போவார்**

இவர் தாழ்த்தப்பட்ட குடியினர். இவர் சிவபக்தியால் சிதம்பரம் போய் சுவாமி உத்தரவின்படி தீயில் மூழ்கிப் பரிசுத்தராகிச் சபாநாயகர் திருவடியை அடைந்தார்.

**20. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்**

இவர் காஞ்சிபுரத்து வண்ணார். இவர் சிவனடியார் வேடம் கொண்ட சுவாமி கொடுத்த கௌபீனத்தைச் சலவை செய்துகொடுக்க மழையால் விக்கினம் வந்ததால் தன் தலையைக் கல்லுமேல் மோதி சிவபதம் அடைந்தார்.

**21. சண்டேசுவர நாயனார்**

இவர் அந்தணர். இவர் தான் செய்த சிவபூஜைக்குக் கெடுதல் செய்த தன் தகப்பன் காலை வெட்டினதால் சிவபதம் அடைந்தார்.

**22. திருநாவுக்கரசு சுவாமிகள்**

இவர் வேளாளர். சமண மதத்திலிருந்த இவர் சூலை நோயால் சிவ மதத்தை அடைந்து சமணர் செய்த சுண்ணாம்புக் காளவாய், நஞ்சு, யானை, கடல் ஆகியவற்றால் வந்த துன்பங்களைச் சிவபக்தியால் வென்று, அப்பூதி நாயனார் பிள்ளைக்கு உயிர்கொடுத்து சிவத்தலங்களையெல்லாம் தரிசனம் செய்து இறுதியில் வீடுபேறு அடைந்தார்.

**23. குலச்சிறை நாயனார்**

இவர் மதுரை பாண்டிய மன்னனின் அமைச்சர். இவர் திருஞான சம்பந்த சுவாமிகளின் மேல் பக்தியாகவும் அவருக்குச் சகாயமாகவும் இருந்து சமணரைக் கழுவிலேற்றிக் கடைசியில் கைலாயமடைந்தார்.

**24. பெருமிழலைக் குறும்ப நாயனார்**

இவர் சுந்தரமூர்த்தி மேல் பக்தியாகி, அவர் கைலாயம் போன செய்தி கேட்டு, அஷ்டாங்க யோகத்தினாலே உயிரை விட்டுக் கைலாயம் அடைந்தார்.

**25. காரைக்காலம்மையார்**

இவர் செட்டிகுலம், இவர் தன் கணவன் கொடுத்த மாம்பழத்திற்குப் பதிலாக சிவன் அருளால் பெற்றுத் தன் கணவனுக்குக் கொடுத்துக் கயிலாயம் முதலான சிவத்தலங்களை வணங்கிப் பதிகம் பாடிச் சிவபதம் அடைந்தார்.

**26. அப்பூதி நாயனார்**

இவர் அந்தணர். இவர் திருநாவுக்கரசு சுவாமி மேல் வைத்த அன்பினால் தன்னுடைய மடம், தண்ணீர்ப் பந்தல், குளம், பிள்ளைகள் அனைத்துக்கும் அந்த திருநாவுக்கரசு சுவாமிகள் பேரைச் சூட்டியதால் அவர் வர அவருக்குத் திருவமுது செய்ய நினைத்த போது பாம்பு கடித்த தன் பிள்ளை அவரால் உயிர் வரப் பெற்றுக் கடைசியில் சிவபதம் அடைந்தார்.

### 27. திருநீலநக்க நாயனார்

இவர் அந்தணர். இவர் தம் மனைவி சிவலிங்கத்தின் மேல் விழுந்த சிலந்திப் பூச்சியை வாயினால் ஊதினதால் அவளை நீக்கிப் பின் சிவனருளால் அவளைச் சேர்ந்து திருஞானசம்பந்தரைத் துதித்துச் சிவபதம் அடைந்தார்.

### 28. நமிநந்தியடிகள் நாயனார்

இவர் அந்தணர். இவர் சமணர் பழிப்பாய் சொல்லியபடி சிவனுக்கு தண்ணீர் விட்டு விளக்கேற்றிச் சிவத் தொண்டு செய்து சிவபதம் அடைந்தார்.

### 29. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள்

இவர் அந்தணர். இவர் பார்வதியின் முலைப் பாலுண்டு சிவத்தலங்கள் தோறும் போய்ச் சிவனைத் துதித்துப் பதிகங்கள் பாடிக்கொண்டு போகும்போது சிவன் கொடுத்த முத்துப் பல்லக்கும் முத்துச் சின்னமும் பொன்தாளமும் பெற்று, மழவன் மகளுக்கு வந்த குமரகண்டவலியைத் தீர்த்து, பொற்கிழி பெற்று வணிகனைக் கடித்த பாம்பின் நஞ்சினைப் போக்கி வேதாரணியத்தில் அடைத்த கதவைத் திறந்ததை அடைப்பித்து சமண மதத்தைச் சார்ந்த பாண்டியன் கூனை நிமிர்த்தி சமணர் வாதத்தால் ஏடு எழுதி நெருப்பிலும் வையையாற்றிலும் போட்டு எடுத்து சமணரைக் கழுவில் ஏற்றி ஆண் பனையைக் காய்க்கச் செய்து பின்பு திருமணம் செய்து கொண்டு சுற்றம் சூழ திருப்பெருமணநல்லூர் (ஆச்சாள்புரம்) கோயிலில் கர்ப்பூர தீபத்தில் ஐக்கியமானார்.

### 30. ஏயர்கோன் கலிக்காம நாயனார்

இவர் சைவ மதத்தை அடைந்து சிவன் மேலும் சுந்தரர் மேலும் கொண்ட கோபத்தினால் தனக்குச் சிவன் கொடுத்த

சூலை நோயைத் தீர்க்கும்படிச் சுந்தரர் வருவதைக் கேட்டு, கத்தியால் தன் வயிற்றைக் கிழித்துக்கொண்டு, பின்பு எதிரே வந்த சுந்தரரால் உயிர் பெற்றெழுந்து அவரை வணங்கிய பின்பு சில நாளிருந்து கடைசியில் கைலாயமடைந்தார்.

### 31. திருமூல நாயனார்.

இவர் இடையர். இறந்த உடம்பில் அந்த வழி வந்த நந்திகேசுவரர் சீடர் நுழைந்து மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து சைவாகமம், மருத்துவம் மாந்த்ரீகம் ஆகிய சாத்திரங்களைச் செய்து கடைசியில் சிவபதம் பெற்றார்.

### 32. தண்டியடிகள் நாயனார்

இவர் குருடர். திருவைந்தெழுத்தை ஓதி சிறு குளத்தைப் பெரிய குளமாய்க் கல்லும் போது சமணர்களை வாதத்தினால் வென்று சிவனருளால் கண் பெற்றுக் கடைசியில் சிவபதம் பெற்றார்.

### 33. மூர்க்க நாயனார்

இவர் சைவ வேளாளர். இவர் சொக்கட்டான் ஆடிப் பொருள் சம்பாதித்துச் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்துக் கடைசியில் சிவபதம் அடைந்தார்.

### 34. சோமாசி மாற நாயனார்

இவர் அந்தணர். சிவனுக்கு விருப்பமான வேள்வி செய்து சுந்தரமூர்த்தியை அன்பால் துதித்துக் கடைசியில் சிவபதம் அடைந்தார்.

### 35. சாக்கிய நாயனார்

இவர் சமணர். இவர் காஞ்சிபுரத்தை அடைந்து சிவனை அன்பினால் செங்கல்லால் அடித்துச் சிவபதம் அடைந்தார்.

**36. சிறப்புலி நாயனார்**

இவர் அந்தணர். இவர் பரமசிவனைக் குறித்து வேள்வி செய்து சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்தல் முதலான சிவபுண்ணியங்களைச் செய்திருந்து கடைசியில் சிவபதம் அடைந்தார்.

**37. சிறுத்தொண்ட நாயனார்**

இவர் காடவர் கோனுக்கு அமைச்சர். இவர் திருச்செங்காட்டாங்குடியை அடைந்து அன்ன தானம் செய்திருக்கும் போது கால பைரவ வடிவம் கொண்ட சிவனுக்குத் தன் பிள்ளையை அரிந்து சமைத்து உணவிட்டுக் கயிலாயம் அடைந்தார்.

**38. கழறிற்றறிவார் நாயனார்**

இவர் சேர நாட்டு மன்னர். சேரமான் பெருமாள் நாயனார் எனப்படுவார். இவர் மதுரை சொக்க நாயகர் பாதச்சிலம்போசையைத் தன் பூசை காலத்தில் கேட்டுப் பின்பு உணவு உண்பவர். அந்தச் சொக்க நாயகர் அனுப்பிய பாணபத்திரருக்குத் திரவியம் கொடுத்துச் சுந்தரமூர்த்தியுடனே கைலாயம் அடைந்தார்.

**39. கணநாத நாயனார்**

இவர் அந்தணர். இவர் தன் வீட்டிற்கு வந்த சிவனடியார்களால் சிவத்தொண்டு செய்திருந்து கடைசியில் கைலாயத்தில் சிவ கணங்களுக்கு நாதரானார்.

**40. கூற்றுவ நாயனார்.**

அரசர், தரித்திரர். இவர் நலம் பெற்று அன்னிய அரசர் பலரை வென்று தான் முடி சூடும்படிக்குத் தில்லைவாழ் அந்தணரை வேண்ட அவர்கள் சம்மதப்படாததினால் சபாநாயகரை வணங்கி அவர் பாதத்தை முடியாகச் சூட்ட ஆட்சி செய்திருந்து கடைசியில் சிவபதம் அடைந்தார்.

**41. பொய்யடிமை இல்லாத புலவர்**

இவர்கள் தமிழ்ச்சங்கப் புலவர்கள். சிவபக்தர்கள். இவர்கள் இலக்கண நூலின்படி ஆசு முதலான நான்கு வகைக் கவிகளில் சிவனைப்பாடி சிவபதம் அடைந்தார்கள்.

**42. புகழ்ச்சோழ நாயனார்**

இவர் சோழ மன்னர். இவர் தன் சேனைகள் போய் சண்டை செய்து கொண்டு வந்த தலைகளிலிருந்த சிவனடியார் தலையை வேள்வியில் போட்டுத் தானும் அதில் நுழைந்து சிவபதம் அடைந்தார்.

**43. நரசிங்க முனையரைய நாயனார்**

இவர் திருவாதிரை நாள்தோறும் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்து ஒவ்வொருவருக்கும் நூறு பொன் கொடுப்பவர். அவர் அந்தப்படி செய்துவரும் நாளில் ஒரு திருவாதிரையில் தன் மனிதர்களால் பழித்த துட்ட வேடம் கொண்ட ஒரு சிவபக்தரை மிகவும் வணங்கி திருவமுதும் இருநூறு பொன்னும் கொடுத்துச் சிவபதம் அடைந்தார்.

**44. அதிபத்த நாயனார்**

இவர் பரதவர் சாதியினர். நாளும் ஒரு மீனைச் சிவனுக்கென்று கடலில் விடுபவர். சுவாமியின் அருளினால் நாளும் ஒவ்வொரு மீனே அகப்படும். ஒரு நாள் அகப்பட்ட இரத்தினமயமான

**46. கலிய நாயனார்**

இவர் வாணியர். கோயிலிலே சுவாமிக்கு வைக்கிற விளக்குகளுக்கு எண்ணெய் இல்லாததினாலே தன் இரத்தத்தை விடுவதற்காகத் தன் கழுத்தை அரிந்ததால் கைலாசபதியைத் தரிசித்து முடிவில் சிவபதம் அடைந்தார்.

**47. சத்தி நாயனார்**

இவர் வேளாளர். சிவபெருமானை இழிவுபடப் பேசுபவரின் நாவினை அறுத்தலால் சிவபதம் அடைந்தார்.

**48. ஐயடிகள் காடவர்கோனாயனார்**

காஞ்சிபுரத்து மன்னர். திருப்பணி வேலை செய்து சுவாமி மேல் நாள்தோறும் ஒரு வெண்பாப் பாடியிருந்து கடைசியில் சிவபதம் அடைந்தார்.

**49. கணம் புல்ல நாயனார்**

இவர் புல் விற்றுக் கோயிலுக்கு விளக்கு வைப்பவர். ஒரு நாள் கோவிலில் தான் வைத்த விளக்குக்கு நெய் இல்லாததினாலே அந்த புல்லைப் போட்டும் போதாமல் தன் சடைமுடியைக் கொளுத்திச் சிவபதம் அடைந்தவர்.

**50. காரி நாயனார்**

இவர் தமிழ்ப்புலவர். பிரசங்கம் செய்து வரப்பட்ட திரவியத்தைச் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்து கடைசியில் கைலாயம் அடைந்தார்.

**51. நின்றசீர் நெடுமாற நாயனார்**

மதுரைகூன் பாண்டியன். இவர் தாம் நடுவில் அடைந்த சமண மதத்தை விட்டுச் சம்பந்தரால் சிவமதம் அடைந்து அவரால் கூனும் காய்ச்சலும் நீங்கி அரசு செய்திருந்து கடைசியில் கைலாயமடைந்தார்.

**52. வாயிலார் நாயனார்**

இவர் ஊமை. கோயிலில் இருந்து சிவனை மனத்தினால் பூசை செய்து கடைசியில் சிவபதம் அடைந்தார்.

**53. முனையடுவார் நாயனார்**

இவர் வேளாளர். சண்டையில் தோற்றவர் பக்கம் வெற்றி தேடிக்கொடுத்துக் கூலி வாங்கிச் சிவனடியாருக்குத் திருவமுது செய்வித்துக் கடைசியில் சிவபதம் அடைந்தார்.

**54, கழற்சிங்க நாயனார்**

காடவர் குலத்து மன்னர். இவர் மனைவியுடன் கோயிலுக்குப் போகும்போது வழியில் கிடந்த பூவை எடுத்து மோந்த தன் மனைவி கையயை வெட்டினதால் சிவபதம் அடைந்தார்.

**55. இடங்கழி நாயனார்**

இவர் வேளாளர். இவரால் செய்யப்பட்ட சிவனடியார் திருவமுதுக்கு நெல் இல்லாமையால் இரவில் அரசர் தம் நெற்குதிரில் இறங்கித் திருடினவர்.

**56. செருத்துணை நாயனார்**

வேளாளர். இவர் மனைவியுடன் கோயிலுக்குப் போகும்போது வழியில் கிடந்த பூவை எடுத்து மோந்த தன் பெண்சாதி மூக்கை அறுத்தவர்.

**57. புகழ்த்துணை நாயனார்**

கோயில் அர்ச்சகர். இவர் நள்ளிரவில் சிவனைப் பூசிக்கும்போது பசியால் தவறிவிழ அன்று முதல் நாள்தோறும் ஈசுவரன் ஒரு பொற்காசைப் பீடத்தில் வைக்க அதை எடுத்து சீவனம் செய்திருந்து கடைசியில் கைலாயமடைந்தார்.

**58. கோட்புலி நாயனார்**

வேளாளர். இவர் சிவனடியாருக்காக வைத்திருந்த நெல்லை எடுத்து உணவாக்கி உண்ட தன் சுற்றத்தாரை வெட்டிக் கொன்று கடைசியில் சிவபதம் அடைந்தார்.

**59. பத்தராய்ப் பணிவார்**

சிவனடியார்கள், எந்தச் சாதியாயிருந்தாலும் பேதம் எண்ணாமல் அவர்களைச் சேருதல் முதலான செய்கையை உடையவர்கள்.

**60. பரமனையே பாடுவார்**

கிரந்தத்திலும் தமிழிலும் புலமை பெற்றுச் சிவனைப் பாடி மனம் உருகுவார்.

**61. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்**

வேதாந்த வழிப்படிக்குத் தம்முள்ளே இருக்கின்ற பிரமத்தைத் தரிசித்தவர்கள்.

**62. திருவாரூர்ப் பிறந்தார்**

திருவாரூரில் பிறந்த சகல சாதியாரும் சிவபதம் அடைவார்கள்.

**63. முப்பொழுதும் திருமேனி தீண்டுவார்**

சிவாகம விதிப்படிக்கு நாள்தோறும் முக்காலமும் சிவனை பூசிப்பார்கள்.

**64. முழுநீறு பூசிய முனிவர்**

கல்பம் முதலான நான்கினால் உற்பத்தியான திருநீற்றைக் குருமுதலான நன்கு இடத்திலும் பூசாமல் மற்ற இடங்களில் அன்போடுபூசிக்கொண்டிருப்பவர்கள்.

**65. அப்பாலும் அடி சார்ந்தார்**

சுந்தரர் சொல்லிய சிவனடியார்கள் போக வேறே சிவபதம் அடைந்தவர்கள். (முக்காலத்திலும் சிவனடியைச் சேர்ந்தார், சேருகின்றவர், சேருபவர்)

**66. பூசலார் நாயனார்**

இவர் அந்தணர். சிவாலயம் கட்டுவதற்குத் திரவியம் அகப்படாததினால் மனத்தினாலேயே கோயில் கட்டிச் சிவனைப் பூசித்திருந்து கடைசியில் கைலாயம் அடைந்தவர்.

**67. மங்கையர்க்கரசியார்**

இவர் மதுரை கூன் பாண்டியன் மனைவியார். இவர் சிவன் பக்தியில் மிகுந்து சம்பந்தர் அருள் பெற்றுத் தன் கணவனுடன் கைலாயம் அடைந்தவர்.

**68. நேச நாயனார்**

சாலிய சாதியினர். இவர் தாம் நெய்த கோவணமும் ஆடையும் சிவனடியார்களுக்குக் கொடுத்திருந்து கடைசியில் கைலாயம் அடைந்தார்.

**69. கோச்செங்கட் சோழ நாயனார்**

சோழ மன்னர். இவர் தம் முற்பிறவி சிலந்திப்பூச்சி. இவர் சிவத்திருப்பணியும் அந்தணர்களுக்கு மாளிகையும் செய்வித்துக் கடைசியில் சிவபதம் அடைந்தவர்.

**70. திருநீலகண்ட யாழ்ப்பாணர்**

இவர் சம்பந்தருடன் கூட இருந்து, அவர் செய்த திருப்பதிகங்களைத் தன் யாழிலிட்டு வாசித்து இறையை வணங்கிச் சிவபதம் அடைந்தவர்.

## 71. சடைய நாயனார்

இவர் அந்தணர். இவர் சுந்தரரைப் பெற்றதால் பெருமை அடைந்தவர்.

## 72. இசைஞானியார்

இவர்முன் சொன்ன சடையனார் மனைவி. இவர் சுந்தரரைப் பெற்றதால் பெருமை அடைந்தார்.

**தென்னாடுடைய சிவனே போற்றி**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி.**



## 5. குருலிங்கசங்கமம்

**குரு - ஆசான், லிங்கம் - சிவலிங்கம், ஜங்கமம் - அடியார்.**

**1. குரு**

சிவஞான சாத்திரமாகிய சைவ சித்தாந்த சாத்திரங்களை ஓதி அதன்பொருளைச் சிந்தித்து அறிந்து தெளிந்து உயிரிலே சிவாசயன மூர்த்த முதலியின் நியசித்து அபிடேகம்பட்டவரே சத்குரு ஆவர்.

**2. லிங்கம்**

சிவ ஞானிகளின் பாவனை யுற்றதே சிவலிங்கம்

**3. ஜங்கமம்**

லோகாதி பிரபஞ்சத்தை விடுத்துச் சிவசம்மந்த முற்றவரே சங்கமர்.

**க. ஆசான் அருளால் இறைவனடி சேர்ந்தார்**

1. அப்பூதியடிகள்
2. கணநாத நாயனார்
3. குலச்சிறை நாயனார்
4. சுந்தரமூர்த்தி நாயனார்
5. சோமாசி மாற நாயனார்
6. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்
7. திருநாவுக்கரசு நாயனார்

8. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

10. நெடுமாற நாயனார்

11. பெருமிழலைக் குறும்ப நாயனார்

12. மங்கையர்க்கரசியார்

**உ. சிவலிங்கத்தால் சிவனடி சேர்ந்தார்**

1. அதிபத்த நாயனார்
2. அரிவாள் தாய நாயனார்
3. ஆனாய நாயனார்
4. உருத்திர பசுபதி நாயனார்
5. எறிபத்த நாயனார்
6. ஏயர்கோன் கலிக்காம நாயனார்
7. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்
8. கணம்புல்ல நாயனார்
9. கண்ணப்ப நாயனார்
10. கலிய நாயனார்
11. கழற்சிங்க நாயனார்
12. காரி நாயனார்
13. குங்கிலியக் கலய நாயனார்
14. கூற்றுவ நாயனார்
15. கோச்செங்கட் சோழ நாயனார்
16. கோட் புலி நாயனார்
17. சண்டேசுர நாயனார்
18. சாக்கிய நாயனார்
19. சிறப்புலி நாயனார்
20. செருத்துணை நாயனார்
21. சேரமான் பெருமாள் நாயனார்
22. தண்டியடிகள் நாயனார்
23. திருநாளைப் போவார் நாயனார்
24. திருநீல நக்க நாயனார்
25. நமிநந்தியடிகள் நாயனார்

26.புகழ்த்துணை நாயனார்

27. பூசலார் நாயனார்

28. முருக நாயனார்

29. மூர்த்தி நாயனார்

30. வாயிலார் நாயனார்

**ங. அடியார் அருளால் சிவனடி சேர்ந்தார்**

1. அமர்நீதி நாயனார்
2. இடங்கழி நாயனார்
3. இயற்பகை நாயனார்
4. இளையான் குடிமாற நாயனார்
5. ஏனாதி நாயனார்
6. கலிக்கம்ப நாயனார்
7. காரைக்காலம்மையார்
8. சத்தி நாயனார்
9. சிறுத்தொண்ட நாயனார்
10. திருக் குறிப்புத் தொண்ட நாயனார்
11. திருநீலகண்ட நாயனார்
12. நரசிங்கமுனையரைய நாயனார்
13. நேச நாயனார்
14. புகழ்ச் சோழ நாயனார்
15. மானக் கஞ்சாற நாயனார்
16. முனையடுவார் நாயனார்
17. மூர்க்க நாயனார்
18. மெய்ப்பொருள் நாயனார்
19. விறன்மிண்ட நாயனார்



## 6. திருத்தொண்டர் மரபு

மாமறையோர் பன்னிருவர் சிவமறையோர் நால்வர்
மருத்துவரி லையொருவர் மன்னவரி லறுவர்
கோமுறைசேர் குறுநிலமன் னவரைவர் வணிகர்
குலத்தைவர் வேளாளர்ப் பதின்மூவர் குயவர்
தாமறு வேடுவ பாணர் கடையரொடு செக்கார்
சான்றார்வண் ணார்பரதர் சாலியர் தாமொருவர்
ஆமிருவ ரிடையரிரு மூவர்மர பறியார்
ஆகவறு பத்துமூன் றானபெரி யோரே.

**மாமறையோர் பன்னிருவர்**

1. குங்கிலியக் கலய நாயனார்
2. முருக நாயனார்
3. உருத்திர பசுபதி நாயனார்
4. சண்டேசுவர நாயனார்
5. அப்பூதியடிகள் நாயனார்
6. திருநீல நக்க நாயனார்
7. நமி நந்தியடிகள் நாயனார்
8. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்
9. சோமாசி மாற நாயனார்
10. சிறப்புலி நாயனார்
11. கணநாத நாயனார்
12. பூசலார் நாயனார்

ஆக ... 12

**சிவமறையோர் நால்வர் (ஆதி சைவர்)**

1. சுந்தரமூர்த்தி நாயனார்
2. புகழ்த்துணை நாயனார்

3. சடைய நாயனார்

4. இசை ஞானியார்

ஆக ... 4

**மருத்துவரிலே ஒருவர் (மாமாத்திரர்)**

1. சிறுத்தொண்ட நாயனார்

ஆக... 1

**மன்னவரில் அறுவர்**

1. சேரமான் பெருமான் நாயனார்

2. புகழ்ச் சோழ நாயனார்

3. நெடுமாற நாயனார்

4. இடங்கழி நாயனார்

5. மங்கையர்க்கரசியார்

6. கோச்செங்கட் சோழ நாயனார்

ஆக... 6

**கோமுறைசேர் குறுநில மன்னர் ஐவர்**

1. மெய்ப்பொருள் நாயனார்

2. கூற்றுவ நாயனார்

3. நரசிங்க முனையரைய நாயனார்

4. ஐயடிகள் காடவர் கோனாயனார்

5. கழற்சிங்க நாயனார்

ஆக... 5

**வணிகர் குலத்து ஐவர்**

1. இயற்பகை நாயனார்

2.அமர் நீதி நாயனார்

3. மூர்த்தி நாயனார்

4. காரைக்காலம்மையார்

5. கலிக்கம்ப நாயனார்

ஆக ... 5

**வேளாளர் பதின்மூவர்**

1. இளையான்குடி மாற நாயனார்
2. விறன் மிண்ட நாயனார்
3. மானக் கஞ்சார நாயனார்
4. அரிவாள் தாயநாயனார்
5. திருநாவுக்கரசு நாயனார்
6. ஏயர்கோன் கலிக்காம நாயனார்
7. மூர்க்க நாயனார்
8. சாக்கிய நாயனார்
9. சத்தி நாயனார்
10. வாயிலார் நாயனார்
11. முனையாடுவார் நாயனார்
12. செருத்துணை நாயனார்
13. கோட்புலி நாயனார்

ஆக .. 13

**இடையர் இருவர்**

1. ஆனாய நாயனார்
2. திருமூல நாயனார்

ஆக .. 2

| | |
|---|---|
| குயவர் : | திருநீலகண்ட நாயனார் |
| பாணர்: | திருநீலகண்ட யாழ்ப்பாணர் |
| பரதவர்: | அதிபத்த நாயனார் |
| வேடர்: | கண்ணப்ப நாயனார் |
| சான்றார்: | ஏனாதி நாயனார் |

சாலியர்: நேச நாயனார்

செக்கார்: கலிய நாயனார்

ஏகாலியர்: திருக் குறிப்புத் தொண்ட நாயனார்

புலையர்: திருநாளைப்போவார் நாயனார்

ஆக... 9

**மரபு அறியா இரு மூவர்**

1. எறிபத்த நாயனார்
2. கணம் புல்ல நாயனார்
3. காரி நாயனார்
4. குலச்சிறை நாயனார்
5. தண்டியடிகள் நாயனார்
6. பெருமிழலைக் குறும்ப நாயனார்

ஆக.. 6

நாயன்மார் - 63

இவர்கள் அறுபத்து மூவரும் தனிய'டியார்களாவர்.

**தொகையடியார் ஒன்பதின்மர்**

1. தில்லை வாழந்தணர்
2. பொய்யடிமையில்லாத புலவர்
3. பத்தராய்ப் பணிவார்
4. பரமனையே பாடுவார்
5. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்
6. திருவாரூர்ப் பிறந்தார்
7. முப்பொழுதும் திருமேனி தீண்டுவார்
8. முழுநீறு பூசிய முனிவர்
9. அப்பாலு மடி சார்ந்தார்



## 7. தேவாரம் கண்ட சிவத் திருத்தலங்கள்

### சோழநாட்டில் காவேரிக்கு வடகரையில்

1 சிதம்பரம்
2 திருவேட்களம்
3 நெல்வாயில்
4 கழிப்பாலை
5 பெருமணம்
6 மரேந்திரப்பள்ளி
7 திருமுல்லைவாயில்
8 கலிக்காமூர்
9 சாய்க்காடு
10 பல்லவனீச்சுரம்
11 திருவெண்காடு
12 திருக்காட்டுப்பள்ளி
13 குருகாவூர்
14 சீர்காழி
15 கோலக்கா
16 புள்ளிருக்கு வேளூர்
17 கண்ணார் கோவில்
18 கடைமுடி
19 திருநின்றியூர்
20 திருப்புன்கூர்
21 நீடூர்
22 அன்னியூர்
23 வேள்விக்குடி
24 எதிர்கொள்பாடி
25 மணஞ்சேரி
26 திருக்குறுக்கை
27 கருப்பறியலூர்
28 குரக்குக்கா
29 வாளொளிபுத்தூர்
30 மண்ணிப்படிக்கரை
31 ஓமாம் புலியூர்
32 கானாட்டு முள்ளூர்
33 திருநாரையூர்
34 கடம்பூர்
35 பந்தணைநல்லூர்
36 கஞ்சனூர்
37 கோடிகாமங்கலக்குடி
38 திருப்பனந்தாள்
39 ஆப்பாடி
40 திருச்சேய்ஞலூர்
41 தேவன்குடி
42 வியலூர்
43 கொட்டையூர்
44 இன்னம்பர்
45 புறம்பயம்
46 விசயமங்கை
47 வைகாவூர்
48 வடகுரங்காடுதுறை
49 திருப்பழனம்
50 திருவையாறு
51 நெய்த்தானம்
52 பெரும்புலியூர்
53 திருமழபாடி
54 திருப்பழூவூர்
55 திருக்கானூர்
56 அன்பிலாலந்துறை
57 மாந்துறை
58 பாற்றுரை
59 திருவானைக்கா
60 திருப்பைஞ்ஞீலி
61 பாச்சிலாச்சிரமம்
62 ஈங்கோய் மலை

**சோழநாட்டில் காவேரிக்குத் தென்கரையில்**

1 வாட்போக்கி
2 கடம்பந்துறை
3 பராய்த்துறை
4 கற்குடி
5 முற்கீச்சரம்
6 திருச்சிராப்பள்ளி
7 எறும்பியூர்
8 நெடுங்களம்
9 மேலைக்காட்டுப்பள்ளி
10 ஆலம்பொழில்
11 பூந்துருத்தி
12 கண்டியூர்
13 சோற்றுத்துறை
14 வேதிகுடி
15 தென்குடித்திட்டை
16 புள்ளமங்கை
17 சக்கராப்பள்ளி
18 கருகாவூர்
19 பாலைத்துறை
20 நல்லூர்
21 ஆவூர்
22 பசுபதீச்சுரம்
23 சத்திமுற்றம்
24 பட்டீச்சுரம்
25 பழையாறை
26 வடதளி
27 வலஞ்சுழி
28 கும்பகோணம்
29 குடந்தைக் கீழ்க்கோட்டம்
30 குடந்தைக் காரோணம்ா
31 திருநாகீச்சுரம்
32 திருவிடைமருதூர்
33 தென்குரங்காடுதுறை
34 நீலக்குடி
35 வைகன் மாடக்கோயில்
36 நல்லம்
37 கோழம்பம்
38 திருவாவடுதுறை
39 துருத்தி
40 திருவழுந்தூர்
41 மயிலாடுதுறை
42 விளநகர்
43 பறியலூர்
44 செம்பொன்பள்ளி
45 நனிபள்ளி
46 வலம்புரம்
47 தலைச்செங்காடு
48 ஆக்கூர்
49 தான்தோன்றிமாடம்
50 திருக்கடவூர்
51 திருக்கடவூர் மயானம்
52 வேட்டக்குடி
53 தெளிச்சேரி
54 தருமபுரம்
55 திருநள்ளாறு
56 கோட்டாறு
57 அம்பர்ப்பெருந்திருக்கோயில்
58 அம்பர் மாகாளம்
59 மீயச் சூரிளங்கோயில்
60 திலதைப்பதி
61 பாம்புரம்
62 சிறுகுடி
63 திருவீழிமிழலை
64 வள்ளியூர்

65 கருவிலி
66 பேணுபெருந்துறை
67 நறையூர்
68 சித்தீச்சுரம்
69 அரிசிற்கரைப்புத்தூர்
70 சிவபுரம்
71 கலயநல்லூர்
72 கருக்குடி
73 வாஞ்சியம்
74 நன்னிலத்துப் பெருங்கோயில்
75 தெண்டீச்சுரம்
76 பனையூர்
77 திருப்புகலூர்
78 விற்குடி
79 வர்த்தமானீச்சுரம்
80 இராமனதீச்சுரம்
81. பயற்றூர்
82 செங்காட்டங்குடி
83 மருகல்
84 சாத்தமங்கை
85 நாகைக் காரோணம்
86 சீக்கல்
87 கீழ்வேளூர்
88 தேவூர்
89 பள்ளியின் முக்கூடல்
90 திருவாரூர் மூலட்டானம்
91 திருவாரூரறநெறி
92 திருவாரூர்ப் பரவையுண்மண்டளி
93 விளமர்
94 கரவீரம்
95 பெருவேளூர்
96 தலையாலங்காடு
97 குடவாயில்
98 சேறை
99 நாலூர் மயானம்
100 கடுவாய்க்கரைப்புத்தூர்
101 இரும்பூளை
102 அரதைப் பெரும்பாழி
103 அவளிவணல்லூர்
104 பருதிநியமம்
105 வெண்ணி
106 பூவனூர்
107 பாதாளீச்சுரம்
108 திருக்களர்
109 சிற்றேமம்
110 உசாத்தானம்
111 இடும்பாவனம்
112 கடிக்குளம்
113 தண்டலை நீணெறி
114 கோட்டூர்
115 வெண்டுறை
116 கொள்ளம்பூதூர்
117 பேரெயில்
118 கொள்ளிக்காடு
119 தெங்கூர்
120 நெல்லிக்கா
121 நாட்டியத்தான் குடி
122 காறாயில்
123 கன்றாப்பூர்
124 வலிவலம்
125 கச்சினம்
126 கோளிலி
127 வாய்மூர்
128 வேதாரண்ணியம்
129 அகத்தியான்பள்ளி
130 கோடிக் குழகர்

**ஈழநாட்டில்**

1 திருக்கோணமலை

2 திருக்கேதீசுரம்

**பாண்டிய நாட்டில்**

1 மதுரை

2 ஆப்பனூர்

3 திருப்பரங்குன்று

4 திருவேடகம்

5 கொடுங்குன்றம்

6 புத்தூர்

7 புனவாயில்

8 இராமேச்சுரம்

9 ஆடானை

10 கானப்பேர்

11 பூவணம்

12 திருச்சுழியல்

13 திருக்குற்றாலம்

14 திருநெல்வேலி

**மலைநாட்டில்**

1 திருவஞ்சைக்களம்

**கொங்கு நாட்டில்**

1 அவிநாசி

2 முருகன் பூண்டி

3 திருநணா

4 கொடிமாடச் செங்குன்றூர்

5 வெஞ்சமாக்கூடல்

6 பாண்டிக்கொடுமுடி

7 கருவூர்

**நடுநாட்டில்**

1 அரத்துறை

2 தூங்கானை மாடம்

3 கூடலையாற்றூர்

4 எருக்கத்தம் புலியூர்

5 தினை நகர்

6 சோபுரம்

7 திருவதிகை
8 திருநாவலூர்
9 முதுகுன்றம்
10 நெல்வெண்ணெய்
11 கோவலூர்
12 அறையணி நல்லூர்
13 இடையாறு
14 திருவெண்ணெய்நல்லூர்
15 துறையூர்
16 வடுகூர்
17 திருமாணிக்குழி
18 பாதிரிப் புலியூர்
19 முண்டீச்சுரம்
20 புறவார் பனங்காட்டூர்
21 ஆமாத்தூர்
22 திருவண்ணாமலை

**தொண்டை நாட்டில்**

1 கச்சியேகம்பம்
2 கச்சிமேற்றளி
3 கச்சியோண காந்தன்றளி
4 கச்சியனேகதங்கா வதம்
5 கச்சிநெறிக் காரைக்காடு
6 குரங்கணி முட்டம்
7 மாகறல்
8 ஓத்தூர்
9 வன்பார்த்தான் பனங்காட்டூர்
10 வல்லம்
11 திருமால் பேறு
12 ஊறல்
13 இலம்பையங்
14 விற்கோலம்
15 திருவாலங்காடு
16. பாசூர்
17 வெண்பாக்கம்
18 கள்ளில்
19 திருக்காளத்தி
20 திருவொற்றியூர்
21 வலிதாயம்
22 இடைச்சரம்
23 வேற்காடு
24 மயிலாப்பூர்
25 வான்மியூர்
26 கச்சூராலக்கோயில்
27 இடைச்சரம்
28 திருக்கழுக்குன்றம்
29 அச்சிறுபாக்கம்
30 திருவக்கரை
31 அரசிலி
32 இடும்பை மாகாளம்

**துளுவ நாட்டில்**

*1* கோகரணம்

**வடநாட்டில்**

*1* திருப்பர்வதம்

*2* இந்திர நீலபர்வதம்

*3* அநேக தங்காவதம்

*4* திருக்கேதாரம்

*5* நொடித்தான் மலை



# காண்டம் ஒன்று

*திருமலைச் சருக்கம்*

*தில்லைவாழ் அந்தணர் சருக்கம்*

*இலைமலிந்த சருக்கம்*

*மும்மையால் உலாகண்ட சருக்கம்*

*திருநின்ற சருக்கம்*

# திருமலைச் சருக்கம்

*திருக்கைலாயச்சிறப்பு*

**கவி**

உகலெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம் .

**வெள்ளிமலை**

பொன்போன்ற வெள்ளிய திருநீறு தரித்த பரமசிவன் திருவோலக்கமாக எழுந்தருளியிருக்கின்ற வெள்ளி மலையானது இமயமலையின் பக்கத்தில் இருக்கின்றது. இது களங்கமற்ற பெரியோர்கள் மனம் போலவும் படிகம் போலவும் மூவுலகங்களும் செய்த புண்ணியங்களே திரண்டு ஒருருவாக பிரகாசிப்பது போலவும் இருக்கின்றது.

**நான்கு வேதங்களும்**

அதில் ரிக், யசூர், சாமம், அதர்வணம் என்கிற நான்கு வேதங்களும் ஓதுகின்ற ஓசையும் வித்தியாதரர்கள் வீணை ஓசையும் யானைகளுடைய முழக்கமும் தேவதுந்துபி முழக்கமும் இடைவிடாமல் முழங்குகின்றது.

இஃது அல்லாமலும் தேவர்கள் சிரமாலைகளும் பற்பல முனிவர்கள் அஞ்சலி செய்து அருச்சித்த மலர்மாலைகளும் அந்த மலைப் ப்க்கங்களெல்லாம் நெருங்கி மயங்குகின்றன.

*திருக்கோயில்*

**வசன காவியம்**

அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், காந்தருவர், கின்னரர், நிருதர், கிம்புருடர், யட்சர், வித்தியாதரர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாசவாசிகள், போக பூமியர் என்கிற பதினெண் கணங்களும் துதிக்கின்ற பேரொலி முழக்கம் நிறைந்துள்ளதாகிய அந்தக் கைலாய மலையின் உச்சியில் கோடானுகோடி சூரியப் பிரகாசம் போலும் விளங்குகின்ற நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட திருக்கோவிலுக்கு முதல் கோபுர வாசல் காவல் தலைவர் அதிகார நந்திதேவர்.

**நந்திதேவர்**

அவர் உலக கருத்தாவாகிய பரமசிவனுடைய திருப்பணிக்கு அதிகாரத்தலைவர். அவர் உடைவாளும் திருப்பிரம்பும் பெற்று கைலாச பர்வதத்தைக் காக்கின்றவர். அவர் தேவர் முதலான அனைவருக்கும் மேலானவர். அவர் பரமசிவனிடத்தில் அதிக பக்தியும் அன்பும் உள்ளவர்.

**உபமன்ய மகாமுனிவர்**

இவரால் இரவும் பகலும் இடைவிடாமல் காக்கப்பட்ட வெள்ளியங்கிரியாகிய கைலாயத்தினுடைய அடிவாரத்தில் எந்தச் சமயங்களிலும் சைவசமயமே மெய்ச்சமயமென்றும் எந்தக் கடவுளினும் பரமசிவனே மெய்க்கடவுளென்றும் உறுதியிட்டு அறிந்தவராகிய உபமன்ய மகாமுனிவர் இருக்கிறார். அவர் கிருட்டிணனுடைய தலையில் தன் திருவடியைச் சூட்டினவர். பிறப்பு, இறப்பு இல்லாதவர். பரமசிவன் அருளால் திருப்பாற்கடலை உண்டவர். கடவுளின் இடத்தில் இடைவிடாமல் மிகுந்த அன்புள்ளவர்.

**முனிவர் சொன்ன வரலாறு**

இவ்விதமாகிய உபமன்ய மகாமுனிவர் ஒருநாள் அடியார்களும் முனிவர்களும் பெரியோர்களும் தன்னைச் சூழ்ந்திருக்கிற சமயத்தில் தனக்கெதிராக ஆயிரம் சூரிய கிரணங்கள் ஒரு காலத்தில் ஒன்றாகத்திரண்டு பிரகாசிப்பது போல ஒரு பிரகாசம் உண்டாக, அவ்விடத்தில் சூழ்ந்திருந்தவர்கள் எல்லாரும் அதைக்கண்டுஉபமன்ய மகா முனிவரைப் பார்த்து "இஃது என்ன ஆச்சரியம்? இப்படிப்பட்ட பிரகாசம் தோன்றுவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்கள்.

அப்போது உபமன்ய மகாமுனிவர் சிவனைத் தியானித்துத் தெளிந்து தெற்குத் திசையில் திருநாவலூரில் அவதரித்த சுந்தரமூர்த்தியானவர் சிவனுடைய ஆணையால் வருகிறாரென்று தன்னுடைய இரண்டு கையையும் சிரசின்மேல் குவித்து அந்தத் திசையை நோக்கி வணங்கி ஆனந்தக் கண்ணீருடன் போயினர்.

அப்போது மற்றவர்கள் சந்தேகித்து, அந்தச் சந்தேகம் நிவர்த்தியாகும் பொருட்டு "எங்களாண்டவராகிய முனிவரே! சிவனுடைய திருவடிகளையல்லாமல் வேறொரு தெய்வத்தின் பாதங்களையும் மனத்தினால் நினைக்காத தேவரீர், இன்று வணங்குவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்க, உபமன்யர் சொல்லுகிறார், "கேளுங்கள் பெரியோர்களே! பரமசிவன் தன் சுயஉருவத்தைக் கண்ணாடியில் பார்க்கும்போது கோடி சூரிய பிரகாசம் போல பிறந்தவர், அவருக்குப் பேர் சுந்தரர்.

அவர் தன்கையில் ஆலகால நஞ்சினை அடக்கிக் கொடுத்ததால் பின்பு அவருக்கு ஆலால சுந்தரர் என்று பெயராயிற்று. அவர் கைலாயத்தில் பரமசிவன் தரிக்கப்பட்ட திருமாலையும் திருவெண்ணீற்றையும் எடுத்து வருகின்ற

ஆலால சுந்தரர் ஆவார். அவர் முன் காலத்திலே ஒரு நாள் பரமசிவனுக்கு மலர்கள் எடுக்கும் பொருட்டு நந்தவனத்திற்குப் போயினர். அவர் போகிறதற்கு முன்னமே பார்வதி தேவியாருக்கு மலர்கள் எடுக்கும் பொருட்டு அவர் தோழிமார்களாகிய அநிந்ததை கமலினி என்கிற இரண்டு பெண்களும் அந்த நந்தவனத்திற்கு வந்து மலர் பறித்துக் கொண்டு இருந்தார்கள்.

அப்போது ஆலால சுந்தரர் இது கடவுளினுடைய அருளென்று எண்ணி அந்த இரண்டு பெண்களையும் கண்டு இச்சை கொண்டார். அந்தப் பெண்கள் இரண்டு பேரும் அந்த ஆலாலசுந்தரரைக் கண்டு இச்சித்தார்கள்.

பின்பு ஆலாலசுந்தரர் பரமசிவனுக்குத் தகுந்த மலர்கள் எடுத்துக்கொண்டு, சுவாமி இடத்துக்குப் போனார். அந்த பெண்களும் பார்வதிக்குத் தகுந்த மலர்கள் எடுத்துக்கொண்டு அம்மனிடத்தில் போனார்கள்.

பரமசிவனானவர் இதனை அறிந்து ஆலாலசுந்தரரைப் பார்த்து, பெண்களின் மேல் இச்சை வைத்தபடியால் நீ தெற்கு தேசத்தில் போய்ப் பிறவியெடுத்து அந்தப் பெண்களுடனே ஆசை தீரும்படிக் கலந்து அனுபவிக்கக் கடவாய் என்று கட்டளையிட ஆலாலசுந்தரர் இரண்டு கைகளையும் சிரசின்மேல் குவித்து மனம் கலங்கி என்னுடைய அபாக்கியத்தால் தேவரீர் திருவடிகளை விட்டு நீங்கும்படியான அடியேன், விதிவிலக்குகளை அறியாதவன், ஆகையால் எளியேனைத் தடுத்தாட் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ள, சுவாமி, அப்படியே தடுத்தாட்கொள்வோம் என்று திருவாய் மலர்ந்தார்.

**தென்னாட்டின் பெருமை**

பின்பு ஆலாலசுந்தரரும் அநிந்திதையும் கமிலினியும் தென்திசையில் அவதாரம் செய்து இன்பத்தை அனுபவித்தார்கள். அவர்களில் ஆலாலசுந்தரர் வருகிறார்"

என்று அவருடைய செய்திகளையெல்லாம் வரிசையாக உபமன்ய மகாமுனிவர் மற்ற முனிவர்களுக்குச் சொல்ல அந்த முனிவர்கள் அதைக் கேட்டு, பாசபந்தங்களில் அகப்பட்டுத் தடுமாறுகின்ற மனிதர்கள் பிறப்பதற்கு இடமான தென்திசையானது மற்ற திசைகளைப் பார்க்கிலும் சிறந்ததற்கு அது செய்த புண்ணியம் யாது? என்று கேட்க உபமன்ய மகா முனிவர் சொல்லுகிறார். "என்பிதாவாகிய வியாக்கிரம பாதரால் பூசை செய்த சிதம்பரமும் பூமிதேவிக்கு இருதயமாகிய திருவாரூரும் கம்பா நதி சூழ்ந்த காஞ்சிபுரமும் சிவன் எழுந்தருளிய திருவையாறும் கடல்கோள் காலத்திலும் மூழ்காத தோணிபுரம் என்கிற சீர்காழியும் மற்றும் பலதிவ்விய ஸ்தலங்களும் அந்தத் தென்திசையினிடத்தினிலே இருக்கின்றன" என்றார்.

இவ்விதமான தலங்களின் பெருமையையும் இந்தத் திருத்தலங்களிலே சிலபணிவிடைகள் செய்து பேறுபெற்ற சிவனடியார்கள் பெருமையையும் உபமன்ய மகாமுனிவர் திருவாய் மலர்ந்தருளினார்.

இந்தப் பிரகாரம் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருவுளம் மகிழ்ந்து அருளிய திருத்தொண்டத் தொகைப்படி சேக்கிழார் அருளிச் செய்த பெரிய புராணத்தை வாக்கியமாகச் சொல்லுகிறோம்.



# திருமலைச் சருக்கம்

*திருவாரூர்ச்சிறப்பு*

எவற்றிற்கும் முதல்வனாகிய பெரிய தவத்தையுடைய அகத்திய முனிவனுடைய கமண்டலத்திலிருந்து வெளிப்பட்ட பூமிதேவியின் மார்பில் தரித்த முத்துமாலையை ஒத்த காவிரி ஆற்றினால் சூழப்பெற்ற பலவளங்களும் நிறைந்துள்ள சோழ நாட்டின் மத்தியில், மிகுந்த பழைமையானதும் இலட்சுமியார் பூசிக்கப்பட்ட அக்கினியையும், கங்கையையும் சந்திரனையும் தரித்த சிவந்த சடையையுடைய பரமசிவன் வசிக்கின்றதாயும் தலைநகரில் ஒன்றானதுமாகிய திருவாரூர் என்னும் நகரத்திலே அநபாய சோழ வம்சத்தில் பிறந்த மநுச்சக்ரவர்த்தியானவர் (மநு நீதிகண்ட சோழர்) மநுமுறை தப்பாமல் செங்கோல் செலுத்தி அசையாமணிகட்டி ஆறில் ஒரு கடமை வாங்கி அரசாளும் காலத்தில் பரமசிவனுடைய திருவருளால் தம்முடைய மனைவியார் திருவயிற்றில் சிம்மக்குட்டிக்குச் சமானமாகிய பலத்தையுடைய வீதிவிடங்கன் என்னும் ஒரு பிள்ளை பிறந்தது.

**வீதிவிடங்கன்**

அநேக தவங்கள் செய்து அருமையாகப் பெற்ற அந்தப் பிள்ளையானது நாள்தோறும் பரமசிவத்தைப் பூசை செய்கிற முயற்சியிலிருந்து, அவர் அருளினாலே வடமொழி முதலிய மொழிகளையெல்லாம் திருத்தமாகவே ஓதி யானையேற்றம், குதிரையேற்றம், தநுர்வேதம் முதலிய எல்லாவற்றையும் கற்றுச் சாமர்த்தியனாகி, தன்னை அருமையாகப் பெற்ற

தகப்பன் மனம் மகிழ்ந்து அன்பு கொள்ளும்படிக்கு மேலான நல்ல குணங்களால் நிறையப் பெற்று இளவரசாக வாழ்கின்ற நாளில், ஒருநாள் வெண்கொற்றக் குடையினையுடைய அரசனது அழகு மிகுந்த அரண்மனையிலிருந்து ஆகாசத்தை அளாவிய மாடமாளிகைகள் நெருங்கிய வீதியில் அனேக அரசகுமாரர்கள் தன்னைச் சூழ மணம் நிறைந்த மலர்மாலைகள் தொங்கா நின்று குங்குமம் அணிந்த தோள்களையுடைய அரசகுமாரன் மிகுந்த சேனைகள் தன்னைச் சூழ இரதத்தின் மேலேறி, முன்னே வந்தியரும் சூதரும் மாகதரும் தன் வீரம் முதலியவற்றைப் புகழ்ந்து போக ஒரு பக்கத்திலே பேரிகை வாத்தியங்களும் ஒரு பக்கத்திலே சங்க வாத்தியங்களும் முழங்கச் செல்லும் போது ஒப்பற்ற பெரிய தர்மதேவதையானது தயையில்லாமல் நால்வகை சேனைகளையுடைய சோழ மாமன்னனது அச்சமற்ற மனதினுண்மையைச் சோதிக்க வந்தது போல் அங்கு செல்லும் மனிதர்கள் தன்னுடைய வரவைக் காணாத விதம் ஒரு பசுவின் இளங்கன்றானது துள்ளிக்கொண்டு அந்தத்தெருவில் வந்து அரசகுமாரன் தேர்க்காலில் அகப்பட்டு இறந்தது.

**தாய்ப்பசு கதறியது**

தாய்ப் பசுவானது அதைக் கண்டு மனம் வருத்தமடைந்து துள்ளித் துடித்துக் கதறிக் கீழே விழுந்தது. அரசகுமாரன் அதைக்கண்டு ஐயோ! அபாயம் வந்ததே! என்று சொல் தடுமாறி அந்தத் துயரத்தினால் வருத்தப்பட்டு அறிவு அழிந்து விட்டதே! இதற்கு என்ன செய்வேன்? என்று தேரிலிருந்து இறங்கிக் கீழே விழுந்து அலறுகின்ற பசுவைப் பார்த்து உயிர் பதைத்துச் சோர்ந்து பூமியிலிருந்த கன்றைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு அழுது, நிலை பெற்ற இந்த உலகத்தைக் காக்கின்ற மநுவென்கிற என் அரசனுக்கு உலகத்தில் இந்தப் பழிவந்து சம்பவிக்க நான் பிறந்தேனல்லவா? என்று சொல்லி இதனால் வந்த பாவத்தை அந்தணர்களிடத்தில் போய் அவர்களால் செய்யத் தகுந்த வேள்விகளால் நீக்கிக் கொள்வது

தர்மமேயானால் என் தகப்பன் அறிவதற்கு முன்னமே செய்வேன்? என்று அந்தணர் முன்பாகச் சென்றான்.

**ஆராய்ச்சி மணியை அடித்தது**

அப்பொழுது பசுவானது மிகவும் தளர்ந்து பெருமூச்சு விட்டு மநுசக்கரவர்த்தி அரண்மனை வாயிற்படியில் கட்டிய ஆராய்ச்சி மணியினிடத்தில் போய் அதைக் கொம்பினாலடித்தது. அந்தப் பேரொலியானது மநுச் சோழனுடைய காதில் கேட்ட மாத்திரத்தில் அவர், தன் பிள்ளையின் பிராணனைக் கொண்டு போக வரப்பட்ட எமன் வாகனத்தில் கட்டிய மணியின் ஓசையோ? என்று சொல்லி என்றைக்குங் கேளாத மணியோசை இன்றைக்குக் கேட்டது என்ன? வென்று மநுச்சக்கரவர்த்தியானவர் சிம்மாசனத்தை விட்டு இறங்கி ஆராய்ச்சி மணி கட்டியிருக்கிற வாயிற்படியில் வந்தார்.

**பிராயச்சித்தம் உண்டு**

காவலாளர் எதிராக வந்து, “ஆண்டவரே! ஒரு பசு வந்து மணியைக் கொம்பினால் ஆட்டிற்று” என்றார்கள். மநுச்சக்கரவர்த்தியானவர், அவர்கள் சொல்லைக் கேட்டு, வருத்தம் அடைந்து பசுவைப் பார்த்து, உங்களுடைய கவனக்குறைவினாலே இதற்குத் துன்பம் உண்டாயிற்று என்று கோபிக்க, ஒரு பழமையான அமைச்சர் எதிராக வந்து, “சுவாமி! வீதி விடங்கன் தேரில் ஏறிப்போகும் போது இந்தப் பசுவின் கன்று தேர்ச்சக்கரத்தில் அகப்பட்டு இறந்தது” என்று சொல்ல மன்னவரானவர் அதைக்கேட்டு மிகவும் மனம் கலங்கி விசனம் அடைந்தார். அந்தப்படி விசனப்பட்ட மநுச் சோழருடைய துக்கத்தைக் கண்டு அமைச்சர்கள் வணங்கி, ஆண்டவரே! விசனப்படாதீர்! அந்தப் பாவம் தீரும்படிக்குப் பிராயச்சித்தம் உண்டு. அதைச் செய்யும்” என்றார்கள்.

**அது நீதியன்று**

அப்போது சோழ மன்னன், “அமைச்சர்களே! நீங்கள் சொல்வது நியாயமன்று, பசு அடைந்த துன்பத்திற்குப்

பிராயச்சித்தம் மருந்தாகுமா? பழிக்குப் பழி என் பிள்ளையைக் கொடுப்பதே நியாயம்" என்று மனுச்சோழன் குமாரனைத் தம்மிடத்திற்கு வரவழைத்து ஓர் அமைச்சரைப் பார்த்து, "இந்தப் பிள்ளையைக் கொண்டுபோய் பசுவின் கன்று இறந்த இடத்தில் கிடத்தித் தேரை அவன் மார்பிலே நடத்தும்", என்று ஆணையிட அமைச்சரும் விடைபெற்றுச் சென்று தான் அந்தப்படி செய்ய மனம் வராமல் தன் பிராணனை விட்டு விட்டார்.

**தேரைச் செலுத்தினான்**

மனுச்சோழர் மந்திரி இறந்த செய்தியைக் கேட்டு பிள்ளையைத் தாமே அழைத்துக்கொண்டு பசுவின் கன்று இறந்த இடத்தில் போய், தன்குலத்திற்கு ஒரு பிள்ளைதான் இருக்கிறதே என்று எண்ணாமல், அற வழியிலே நடப்பது தகுதியென்று தன் குமாரனைக் கீழே கிடத்தித் தேர்ச் சக்கரமானது பிள்ளை மார்பில் அழுந்தும்படித் தன் தேரை நடத்தினார்.

**மாண்டவர் மீண்டனர்**

அச்செய்தியைக் கண்டு உலகத்தில் உள்ளவர் அனைவரும் கண்ணீர் விட்டு அழுதார்கள். தேவர்கள் மலர்மாரி பொழிந்தார்கள்.

அப்போது பரமசிவனும் பார்வதியும் காளைவாகனம் ஏறி வந்து எதிர் நின்று காட்சி கொடுத்து அருள் புரிந்தார்கள். அப்பொழுது, இறந்த பசுவின் கன்றும், வீதிவிடங்கனாகிய அரசகுமாரனும் அமைச்சரும் சிவனுடைய திருவருளினாலே உயிர் பெற்று எழுந்தார்கள்.

மனுச்சோழரானவர் மகனை எடுத்து மார்போடு அணைத்து மனம் மகிழ்ச்சி அடைந்தார். பார்வதியும் பரமசிவனும் மறைந்தருளினார்கள்.



## திருமலைச் சருக்கம்

*தேவாசிரிய மண்டபச் சிறப்பு*

**திருப்பாற்கடலோ?**

பூத கணங்களுக்குத் தலைவராயும் புற்றைத் தனக்கிடமாகக் கொண்டவருமாகிய எவற்றுக்கும் முதலாயுள்ள கடவுள் வாழாநின்ற அழகிய ஆலயத்துள் பிரகாசம் பொருந்திய மதிலையுடைய திருவாயிலின் முன்பு பிரம்மா, இந்திரன், விட்டுணு முதலாகிய தேவர்கள் இடைவிடாமல் நிறைந்திருக்கின்ற தேவாசிரிய மண்டபமானது, அடைந்தவருடைய துன்பத்தை நீக்கா நின்ற அடியவர்களுடைய திருமேனியிற் பூசிய திருநீற்றினாலும் அவருடைய நிறைந்த பரிசுத்தத்தினாலும் திருஐந்தெழுத்தின் ஓசை பிரகாசிப்பதனாலும் பரவிய திருப்பாற்கடலுக்கு ஒப்பாயிருக்கின்றது.

**அடியார் பெருமை**

அதனிடத்தில் பரமசிவன் முன்னர்த் தானே விரும்பி அடிமை கொண்ட அடியார்களும் தங்கள் கரங்களினாலே திருத்தொண்டு செய்யப்பட்ட முறைமையுடையவர்களும் குற்றமற்ற திருமேனியில் பூசிய திருநீறுபோல் உள்ளம் பரிசுத்தமானவர்களும் பஞ்சபூதங்களும் நிலைகெட்டுக் கலங்கினாலும் உமாதேவியை இடது பாங்கிலுடைய பரமசிவனுடைய திருவடியை மறவாதவர்களும் செல்வமும் வறுமையும் இல்லாத பெருஞ்செல்வத்தை உடையவர்களும்

ஓடும் பொன்னும் ஒன்றாக நினைப்பவர்களும் அன்போடு பரமசிவனை வணங்குவது தவிர வீட்டினையும் விரும்பாத மனவலியால் விளங்குகின்றவர்களும் முத்து மாலை முதலிய ஆரங்களும் கண்டிகைகளும் ஆடைகளும் பயன்படாததை அறிந்து பரமசிவனுடைய பணி விடையல்லாமல் வேறு ஒன்றின் மீதும் இச்சை வையாதவர்களும் ஆகிய இந்த அடியார்கள் நெருங்கியிருக்கின்ற மண்டபத்திலுள்ள அடியார்களுடைய பெருமையை என்னால் சொல்லும் தகைமையுடையதன்று

**சுந்தரர் வழியில் சொல்லுவேன்**

ஆயினும் ஆலாலசுந்தரர் சொல்லிய திருத்தொண்டத் தொகையில் உள்ளபடி சொல்லுகின்றேன்.



# திருமலைச் சருக்கம்

*1. சுந்தரமூர்த்தி நாயனார்*

**கவி**

தண்கயிலை யதுநீங்கி நாவலூர் வாழ்
　　சைவனார் சடையனார் தநய னாராய்
மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி
　　மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து
நண்பினுட னருள்புரிய வாரூர் மேவி
　　நலங்கிளரும் பரவைதோ ணயந்து வைகி
திண்குலவு விறன்மிண்டர் திறங்கண் டேத்தும்
　　திருத்தொண்டத் தொகையருளாற் செப்பினாரே!

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
　　திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து
தப்பின்முது குன்றர் தரும் பொருளாற் றிட்டுத்
　　தடத்தெடுத்துச் சங்கிலிதாள் சார்ந்து நாதன்
ஒப்பிறனித் தூதுவந்தா றூடு கீறி
　　உறுமுதலை சிறுமதலை உமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற் சேர
　　வேந்தருடன் வடகயிலை மேவி னாரே.

**கதை**

**காதல் மலர்ந்தது!**

திருக்கைலாய கிரியிலே அகண்ட பரிபூரண சச்சிதானந்த வடிவராயும் உமாதேவி சமேதராயும் வீற்றிருக்கின்ற

பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்யப்பட்ட அடியார் கூட்டத்திலே ஆலாலசுந்தரர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஆதி காலத்திலே ஒரு நாள் பரமசிவனுக்குத் தரிக்கும் பொருட்டு மலர்களைக் கொய்வதற்காக நந்தவனத்துக்குப் போனார். போனபோது பார்வதி தேவியாருக்குத் தரிக்கும் பொருட்டு அந்த நந்தவனத்திலே மலர் கொய்து கொண்டு நின்ற அவருடைய தோழிகளாகிய அனிந்திதை கமலினி என்னும் பெயர்களையுடைய இரண்டு பெண்களைக் கண்டு அவர்கள் மேல் ஆசை வைத்தார். அவர்களும் ஆலால சுந்தரரைக் கண்டு ஆசை கொண்டார்கள்.

**இறைவன் இட்ட சாபம்!**

பின்பு ஆலாலசுந்தரர் தம்மனத்தை ஒரு விதம் திருப்பி மலர்களைக் கொய்து கொண்டு சுவாமி சந்நிதானத்துக்கு வந்தார். பார்வதி தேவியின் தோழிகளும் மலர் கொய்துகொண்டு திரும்பி விட்டார்கள்.

பின்பு சிவபெருமானானவர் இவைகளையெல்லாம் ஞானத்தினாலறிந்து ஆலாலசுந்தரரைப் பார்த்து நீ பெண்கள் மேல் இச்சை கொண்டபடியால் தென்னாட்டிலே மானிட தேகம் எடுத்துப் பிறந்து அந்தப் பெண்களோடு புணர்ந்து இன்பம் அனுபவிக்கக் கடவது என்று திருவாய் மலர்ந்தருளினார்.

**தடுத்தாட்கொள்வீர்!**

ஆலாலசுந்தரர் அதைக்கேட்டு மனங்கலங்கி சந்நிதானத்திலே தரையில் வீழ்ந்து வணக்கம் பண்ணி எழுந்து நின்று கூப்பிய கையினராகி "சுவாமி! தேவரீருடைய அருமைத் திருவடிகளைப் பிரிதற்கு ஏதுவாகிய கொடும் பாவத்தைச் செய்தவனாகிய சிறியேன் மயக்கம் பொருந்திய மனிதப் பிறப்பை எடுத்துச் செய்ய வேண்டியது இன்னது என்றும் நீக்க வேண்டியது இன்னது என்றும் அறியாமல்

பிரபஞ்ச வாழ்க்கையில் மயங்கும்போது, தேவரீர் வெளிப்பட்டு வந்து அடியேனைத் தடுத்து ஆட்கொண்டு அருள வேண்டும் என்று பிரார்த்திக்க பரமசிவனும் அதற்கு இசைந்தருளினார்.

**நம்பியாரூரர் பிறந்தார்**

பின்பு ஆலாலசுந்தரர் புண்ணிய பூமியாகிய பரத கண்டத்திலே தென்னாட்டைச் சேர்ந்த திருமுனைப்பாடி நாட்டிலே திருநாவலூரிலே ஆதி சைவரென்னும் அந்தணர் குலத்திலே சடையனார் என்கிற சிவாச்சாரியாருக்கும் அவர் மனைவியாராகிய இசைஞானியாருக்கும் திருமகனாய் ஆதிமக்களெல்லாம் சைவ சமயமே மெய்ச்சமயமென்று உணர்ந்து அதனை அனுசரித்துப் பிழைக்கும் பொருட்டுப் பிறந்தருளினார். அவருக்கு நம்பியாரூரர் என்று நாமகரணம் செய்தார்கள்.

**மன்னரும் விரும்பி ஏற்றார்**

அந்தப் பிள்ளை ஒரு நாள் வீதியிலே சிறுதேர் உருட்டி விளையாடும் போது அந்தத் திருமுனைப்பாடி நாட்டுக்கு அரசராகிய நரசிங்கமுனையர் என்பவர் அந்தப் பிள்ளையைக் கண்டு அவர்மேல் ஆசைமிகுந்து அவருடைய தகப்பனாராகிய சடையனாரிடத்துக்குப் போய் இந்தப் பிள்ளையை எனக்குத் தாரும் என்று கேட்டுப் பெற்றுக்கொண்டு போய் அவரை அபிமான புத்திரராய் பாவித்து வளர்த்தார்.

அந்தப் பிள்ளை அரசரால் வளர்க்கப்பட்டாலும் தன்னுடைய அந்தணர் மரபுக்குரிய நடத்தையையே உடையவராகி வளர்ந்து உபநயனம் செய்யப்பெற்று வேதங்களை அத்யயனஞ் செய்து சகல சாத்திரங்களிலும் மகாபாண்டித்தியமுடையவராகி திருமணம் செய்வதற்குரிய பருவத்தை அடைந்தார்.

அது கண்டு தந்தையாராகிய சடையனார், ஆதிசைவர் குலத்திலே தம்முடைய கொள்வகைக்கு ஏற்ற பந்துவாய் புத்தூரில் இருக்கின்ற சடங்கவி சிவாச்சாரியாரிடத்திலே அவருடைய திருமகளாருக்கும் தம்முடைய திருமகனாருக்கும் திருமணம் பேசிவரும் பொருட்டுச் சில பெரியவர்களை அனுப்பினார்.

**திருமண ஏற்பாடு**

அவர்கள் சடங்கவி சிவாச்சாரியாரிடத்திலே போய்ப் பேசி அவர் உடன்பட்டது கண்டு சடையனாரிடத்திற்கு வந்து தெரிவித்தார்கள். அப்போது சடையனார் மகிழ்ச்சி கொண்டு திருமணத்திற்கு நன்னாள் குறித்துத் தம்முடை ஞாதிகள், சிநேகிதர்கள் யாவருக்கும் திருமண ஓலை அனுப்பி அவர்களை அழைப்பித்தார்கள். பின்பு சுந்தரமூர்த்தி நாயனார் திருமண தினத்துக்கு முதல் தினத்திலே சமாவர்த்தனம் பண்ணி ரட்சா பந்தனம் செய்து மற்றாநாள் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு மணக்கோலம் கொண்டு குதிரைமேல் ஏறி மகா அலங்காரத்தோடு புத்தூரிலே சடங்கவி சிவாச்சாரியார் வீட்டிலே திருமணப் பந்தலுக்கு முன் சென்று குதிரையினின்றும் இறங்கி உள்ளேபோய் ஆசனத்தில் இருந்தார்.

**தடுத்தாட்கொள்ள வந்தார்**

அப்போது பமசிவனானவர், தாம் கைலாயத்திலே சுந்தரமூர்த்திக்கு வாக்குத் தத்தம் பண்ணிய பிரகாரம் அவரைப் பிரபஞ்ச வாழ்க்கையிலே மயங்கவிடாமல் தடுத்தாட்கொண்டு அருளும் பொருட்டு ஒருவிருத்தப் பிராமண வடிவம் கொண்டு அவ்விடத்திலே எழுந்தருளி வந்து நின்று, இவ்விடத்தில் இருக்கின்ற யாவர்களும் நான் சொல்லும் இவ்வார்த்தையைக் கேளுங்கள் என்று சொன்னார்.

அப்படிச் சொல்லிய அந்த அய்யரை, சுந்தரமூர்த்தியும் அங்கிருந்த அந்தணர்களும் பார்த்து, "இவ்விடத்திலே நீர் சொல்ல விரும்பியதைச் சொல்லும்!" என்றார்கள். அதைக் கேட்ட அய்யர் சுந்தரமூர்த்தியைப் பார்த்து, "எனக்கும் உனக்கும் ஒரு வழக்கு இருக்கின்றது, அதை முடித்துக்கொண்டு உன்னுடைய திருமணத்தை நடத்து" என்று அருளிச் செய்தார்.

**ஒரு வழக்கு உளது**

சுந்தரமூர்த்தி, "எனக்கும் உமக்கும் ஒரு வழக்கு இருந்தால் அதை முடித்தல்லாமல் நான் திருமணம் செய்யேன், நீர் அவ்வழக்கு இன்னதென்று தெரியும்படிச் சொல்லும்" என்று கேட்க, அந்த அய்யர் அந்தணர்களைப் பார்த்து, "இந்தச் சுந்தரன் எனக்கு அடியவன்", என்று சொன்னார்.

சுந்தரர், "இந்த அய்யர் சொன்ன வார்த்தை நன்றாயிருக்கின்றது" என்று இகழ்ச்சியாகச் சொல்லிச் சிரிக்க அந்தணர் வடிவம் கொண்ட கடவுள் அவருக்குச் சமீபத்திலே போய், "அக்காலத்திலே உன்னுடைய பாட்டன் எனக்கு எழுதிக்கொடுத்த அடிமை ஓலை இதுவே, அப்படி இருக்க இந்தக் காரியத்தைக் குறித்து நீ பரிகாசம் பண்ணியது என்ன" என்றார்.

உடனே சுந்தரமூர்த்தி, அய்யரைப் பார்த்து, "அந்தணருக்கு அந்தணர் அடிமையாகிறது என்று இன்றைக்கு நீயே சொல்லக் கேட்டோம். நீ பித்தனோ?" என்று சொல்ல அய்யர், "நான் பித்தன் ஆனாலும் ஆகுக! பேயன் ஆனாலும் ஆகுக! நீ இப்போது எத்தனை பழிப்பான சொற்களைச் சொன்னாலும் அவைகளினால் நான் கொஞ்சமும் வெட்கம் அடையமாட்டேன். நீ என்னைச் சிறிதும் அறியவில்லை. இப்படி நின்று விளையாட்டுச் சொற்களைச் சொல்லவேண்டாம். அடிமைத் தொழில் செய்ய வா! என்றார்.

அப்போது நம்பியாரூரரான சுந்தரமூர்த்தி, இவர் அடிமை ஓலை ஒன்று உண்டென்றாரே அதன் உண்மையை அறிய வேண்டும் என்று நினைத்து, "அய்யரே! உம்முடைய ஓலையைக் காட்டும்" என்று சொல்ல, அய்யர், "நீ இந்த ஓலையைப் பார்த்து நிச்சயிக்கத் தக்கவனோ? நான் இந்தச் சபையாருக்கு இந்த ஓலையைக் காட்டி மெய்யென்று அங்கீகாரம் செய்வித்த பின் எனக்கு ஊழியம் செய்தற்கு மாத்திரம் தக்கவன்" என்றார்.

**சுந்தரமூர்த்தி கோபம் கொண்டார்**

அது கேட்ட சுந்தரமூர்த்தியார் கோபங்கொண்டு அவர் கையில்இருந்த ஓலையைப் பறிக்கும்படி அவருக்கு எதிரே சீக்கிரமாய்ப் போனார். அவர் அதையறிந்து ஓட, தானும் பின்னே ஓடி அவரைப் பிடித்து ஓலையைப் பிடுங்கி, "அந்தணர்கள் அடிமையாக ஊழியம் செய்தல் என்ன முறை?" என்று சொல்லி அதைக் கிழிக்க, சுந்தரமூர்த்தியைப் பிடித்துக்கொண்டு, "இது முறையா?" என்று சத்தமிட, சமீபத்தில் நின்றவர்கள் அவ்விருவரையும் விலக்கி "உலகத்தில் ஒரு காலமும் நடந்திருக்காத ஏற்பாட்டைக் கொண்டு வழக்காடுகின்ற அந்தணரே! நீர் எங்கே இருக்கிறவர் சொல்லும்" என்றார்கள்.

**நான் திருவெண்ணெய் நல்லூரர்**

அதற்கு அய்யர், "நான் இந்தத் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்றவன். அஃதிருக்கட்டும், இந்த சுந்தரன் தரும வழிக்கு விரோதமாக பலாத்காரம் பண்ணி என் கையிலிருந்த ஓலையைப் பிடுங்கிக் கிழித்ததினாலே, தான் எனக்கு அடியவன் என்பதை உறுதிப்படுத்தினான்", என்றார்.

அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார், "நீர் திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்றவராகில் இந்த வழக்கை அங்கேதானே பேசித் தீர்ப்பு செய்யவாரும்" என்று சொல்ல,அய்யர் அதைக் கேட்டு, "திருவெண்ணெய்

நல்லூரில் இருக்கின்ற அந்தணர்களுக்கு முன்னே ஆதியில் எழுதப்பட்ட மூல ஓலையைக் காட்டி, நீ எனக்கு அடிமை என்பதை சாதிப்பேன்" என்று சொல்லித் தண்டையூன்றிக்கொண்டு முன்னே நடந்தார்.

**முறைப்பாடு**

எல்லாரும் திருவெண்ணெய் நல்லூரையடைந்து அங்கே இருக்கின்ற அந்தணர்களுடையஅவையிலே போய், ஐயர் அவர்களைப் பார்த்து "அறிவால் அமைந்த பெரியோர்களே திருநாவலூரிலிருக்கின்ற இந்தச் சுந்தரனானவன் எனக்கு அடிமை என்று நான் காண்பித்த ஓலையைக் கிழித்துவிட்டு உங்களிடத்துக்கு வந்திருக்கின்றான்", என்று சொல்லி முறைப்பாடு செய்தார்.

**அடிமை ஓலை**

அதைக் கேட்ட அந்தணர்கள் அவரைப்பார்த்து, அந்தணர்கள் அடிமையாகிறது. இந்த உலகத்தில் இதுவரையிலும் இல்லை. அய்யரே! நீர் என்ன தப்புவார்த்தை சொன்னீர்!" என்று சொல்ல, அய்யர் "நான் பொய் வழக்குக் கொண்டு வரவில்லை, மெய் வழக்கே கொண்டு வந்தேன். இவன் பிடுங்கிக் கிழித்தவோலை இவன் பாட்டன், தானும் தன் மரபினரும் எனக்கு அடிமை என்று எழுதிக் கொடுத்த அடிமை ஓலை" என்றார்.

உடனே அந்தணர்கள் சுந்தரமூர்த்தியைப் பார்த்து, "இவர் உம்முடைய பாட்டன் அடிமை செய்தற்கு எழுதிக்கொடுத்த ஓலையைக் காட்டினால் நீர் அதைப் பிடுங்கி கிழித்துவிட்டபடியால் உம்முடைய பக்கம் செயம் பெறுமோ? இவர் தம்முடைய வழக்கை யாவரும் அங்கீகரிக்கும்படிச் சொன்னார். இனி உம்முடைய எண்ணம் என்ன?" என்றார்கள்.

**உறுதிப்படுத்துவீர்!**

அதற்குச் சுந்தரமூர்த்தி "வேதாகமம் முதலான அனைத்துச் சாத்திரங்களையும் உணர்ந்த மகான்களே! நான் ஆதிசைவன் என்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். அப்படியிருக்க இந்த அந்தணர், தமக்கு என்னை அடிமை என்று சாதிப்பதை மனத்தினால் அறியக்கூடாத ஒரு மாயை என்று நினைக்க வேண்டும். இதைக் குறித்து நான் என்ன சொல்வேன்? இதை என்னால் அறியக் கூடாது" என்று சொல்ல அந்தணர்கள் அதைக் கேட்டு அந்த அய்யரைப் பார்த்து "நீர் இவரை உம்முடைய அடிமை என்று சொல்லுகிற விவகாரத்தை எங்களுக்கு முன் உறுதிப்படுத்த வேண்டும். ஒரு விவகாரத்தை உண்மை என்று உறுதிப்படுத்துவதற்கு அனுபவம், எழுத்தோலை, சாட்சி என்கிற மூன்றும் வேண்டும். ஆகையால் இந்தச் சுந்தரர் உமக்கு அடிமை என்பதற்கு அம்மூன்றில் ஒன்றானாவது காட்டும்" என்றார்கள்.

**பித்தனுக்கு அடிமை**

அப்போது அய்யர், "இவன் கிழித்த ஓலை மூலவோலையைப் பார்த்து எழுதியவோலை. மூலவோலை என்னிடத்தில் இருக்கிறது" என்றார். உடனே அந்தணர்கள் "அதை எங்களுக்குக் காட்டும்!" என்று சொல்ல அய்யர், "இந்த சுந்தரன் அதையும் பறித்துக் கிழிக்காதபடி செய்வீர்களாயின் அதைக் காட்டுவேன்" என்றார்.

அதற்கு அந்தணர்கள், நாங்கள் கிழிக்கவிடோம்! என்று சொல்ல, அய்யர் மூலவோலையைக் கையில் எடுத்தார். அப்போது சபையோருடைய கட்டளையினால் ஒரு கரணன் அவரைக் கும்பிட்டு அந்த ஓலையை வாங்கி சுருளாயிருக்கின்ற மடிப்பை நீக்கி விரித்துச் சபையார் கேட்கும்படி "திருநாவலூரிலிருக்கின்ற ஆதிசைவனான ஆரூரன் என்கின்ற நான் திருவெண்ணெய் நல்லூரிலிருக்கின்ற பித்தனுக்கு நானும் என் சந்ததியாரும் வழித்தொண்டு செய்வதற்கு உள்ளும் புறமும் ஒப்ப எழுதிய ஓலை. இப்படிக்கு ஆரூரன்" என்று வாசித்தான்.

பின்பு, அந்த ஓலையிலே சாட்சிகளாகக் கையெழுத்து இட்டவர்கள் அவற்றைத் தங்கள் கையெழுத்து என்றே ஒத்துக்கொண்டார்கள். அதைக் கண்ட அந்தணர்கள் சுந்தரமூர்த்தியைப் பார்த்து "இஃது உம்முடைய பாட்டனாருடைய எழுத்தோ? பாரும்!" என்று சொல்ல அய்யர் அவர்களைப் பார்த்து, "இந்தச் சிறுவன் அடிமை ஓலையில் எழுதப்பட்டிருக்கின்ற தன் பாட்டன் கையெழுத்தைக் கண்டறிய சக்தியுள்ளவனோ? இவன் பாட்டன் எழுதிய வேறு கைச்சாத்து உண்டாயிருந்தால் வருவித்து இதனுடன் ஒத்துப்பார்த்து உங்கள் மனத்திலே தோன்றிய தீர்ப்பைச் சொல்லுங்கள் என்றார்.

**விதி முறையை ஏற்பேன்!**

அதைக் கேட்ட அந்தணர்கள், சந்தேகம் தெளியும்படி சுந்தரமூர்த்தி சமூகத்திலே அவர் பாட்டனார் எழுதிய ஒரு கைச்சாத்தினைக் கொண்டு வரச்செய்து அதன் எழுத்தையும் அடிமை ஓலையின் எழுத்தையும் ஒத்துப் பார்த்து, "இவ்விரண்டும் ஒத்திருக்கின்றதால், இனி நீர் தப்ப வழியில்லை, நீர் இந்த அந்தணருக்குத் தோற்றுப் போனீர், ஆதலால் அவர் விருப்பப்படி அவருக்கு ஏவல் செய்வதே கடன்" என்று சொல்ல சுந்தரமூர்த்தி "விதிமுறை இதுவேயானால் நான் இதற்கு உடன்படாதிருப்பது கூடுமோ?" என்று சொல்லி நின்றார்.

**இதுவே என் வீடு**

அப்போது அந்த அந்தணர்கள் அந்த அய்யரைப் பார்த்து, "நீர் காட்டிய அடிமை ஓலையிலே எங்கள் ஊரே உம்முடைய ஊராக எழுதப்பட்டிக்கிறபடியால் உமக்கு இவ்வூரிலே தலைமுறையாக இருக்கின்ற வீடும், நிலையுள்ள சொத்தும் காட்டும்" என்று சொல்ல, அய்யர் "விருத்தர்களில் ஒருவரும் என்னுடைய வீடு முதலியவற்றை அறியாமலிருப்பீரானால்

காட்டுகிறேன் வாருங்கள்" என்று சொல்லி, சுந்தரமூர்த்தியையும் அந்தணர்களையும் அழைத்துக்கொண்டு அவ்வூரிலிருக்கின்ற "திருவருள்துறை" என்னும் தம் சிவாலயத்துள்ளே போனார்.

**தடுத்தாட்கொண்டோம்**

பின்னர் சபையார் அவரைக் காணாமல் திகைத்து நின்றார்கள். அப்பொழுது சுந்தரமூர்த்தியானவர், "என்னை அடிமை கொண்ட அய்யர், எங்கள் கடவுளாகிய பரமசிவன் வீற்றிருக்கின்ற கோயிலுள்ளே புகுந்தது என்ன ஆச்சரியம்!" என்று நினைத்து அத்தியந்த ஆசையோடும் அவரைத் தொடர்ந்து போய் கூப்பிட பரமசிவனானவர் பார்வதி சமேதராய்க் காளை வாகனத்தின் மேலேறி வெளிப்பட்டு வந்து சுந்தரமூர்த்தியைப் பார்த்துச் சொல்லுவார், "முன்னே நீ நமக்குத் தொண்டனாய் இருந்தாய்! நீ பெண்கள் மேல் இச்சை வைத்ததினால் நம்முடைய ஆணையினாலே பூமியில் பிறந்தாய்! இப்பொழுது துன்பத்தைத் தருகின்ற சம்சார பந்தமானது உன்னைத் தொடராதபடி நாமே வலியவந்து உன்னைத் தடுத்து ஆட்கொண்டோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இந்தப் பிரகாரம் எழுந்த ஒலியைக் கேட்டுச் சுந்தரமூர்த்தியானவர் தாயின் குரலைக் கேட்ட பசுவின் கன்றுபோல அலறி சரீர முழுவதும் உரோம புளகங்கொள்ள இரண்டு கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பொழிய அடியற்ற மரம் போல நிலத்திலே வீழ்ந்து வணங்கி எழுந்துநின்று இரண்டு கைகளையும் சிரசின்மேல் குவித்து "கனகசபையிலே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்கிற ஐந்தொழிலாகிய திருநடனத்தைச் செய்தருளுகின்ற சுவாமி! தேவரீர் ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை வலியவந்து தடுத்தாட்கொண்ட காருண்ணிய மகிமை என் மேலிருந்தது என்னென்று சொல்லுவேன்!" என்றார்.

**பித்தா பிறை சூடி!**

அப்போது பரமசிவனானவர் சுந்தரமூர்த்தியைப் பார்த்து, "நீ என்னோடு வன்சொற்களைச் சொல்லி 'வன்றொண்டன்' என்ற பெயரைப் பெற்றாய். நமக்கு நீ அன்போடு செய்யத் தகுந்த அர்ச்சனையாவது பாடலாகும். ஆதலால், நம்மேலே தமிழ்ப் பாட்டுக்களைப்பாடு" என்று அருளிச்செய்ய, சுந்தரமூர்த்தி கூப்பிய கையினராகி, "அடியேன் உலக வாழ்க்கையில் மயங்காமல் பிழைக்கும்படி பழைய அறிவைக் கொடுத்து அருளிய கடவுளே! அடியேன் தேவரீருடைய ஆனந்த குணங்களில் எதை அறிவேன்? என்ன சொல்லிப் பாடுவேன் என்றார். அதற்குக் கடவுள், "நீ முன்னே என்னைப் பித்தன் என்று சொன்னாய்! ஆகையால் என் பெயர் பித்தன் என்றே பாடு" என்று சொல்லியருள சுந்தரமூர்த்தியானவர் தம்மை ஆண்டருளிய பரமசிவன்மேல் "பித்தா பிறைசூடி" என்ற வாக்கியத்தை முதலில் வைத்துத் திருப்பதிகம் பாடினார்.

பின்பு கடவுளானவர் சுந்தரமூர்த்தியை நோக்கி, "தொண்டனே! நீ இன்னும் நம்முடைய புகழைக் குறித்து பல வகையாகப் பாடு!" என்று அருளிச் செய்து மறைந்தருளினார்.

பின்பு சுந்தரமூர்த்திக்குக் கேட்ட பெண்ணானவள் திருமணம் தவிர்த்ததினாலே சுந்தரமூர்த்தி நாயனாரையே தியானம் செய்து கொண்டிருந்து சிலகாலம் பொறுத்துச் சிவலோக பதவி அடைந்தார்.

பின்பு சுந்தரமூர்த்தி நாயனார் திருநாவலூர், திருத்துறையூர் முதலான சிவத்தலங்களையடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடி, சிதம்பரத்தில் வீற்றிருக்கின்ற சபாநாயகரைத் தரிசிக்க விரும்பி பெண்ணை நதியைக் கடந்து கதிர் விழுங்காலத்திலே திருவதிகை என்னும் தலத்தின் எல்லையிலே போய் "திருநாவுக்கரசு நாயனார்

உழவாரத்தினாலே பரமசிவனுக்குக் கைத்தொண்டு செய்த இந்தத் தலத்திலே கால்மிதிக்க அஞ்சுகிறேன்" என்று சொல்லி அதற்கு உள்ளே போகாமல் சமீபத்திலிருந்த சித்தவட மடத்திற்குப்போய் திருவதிகை வீரட்டானத்தில் வீற்றிருக்கும் கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டு நித்திரை செய்தார்.

**ஆண்டவன் திருவடி**

நித்திரைசெய்யும் போது, வீரட்டானேசுவரர், ஒரு முதிய அந்தணராகி அந்த மடத்தினுள்ளே புகுந்து சுந்தரமூர்த்தி நாயனாருடைய சிரசின்மேலே பாதங்களைவைத்து நித்திரை செய்பவர் போலக் காட்டியருளினார். அப்பொழுது சுந்தரமூர்த்தி விழித்து "அய்யரே! உம்முடைய பாதத்தை ஏன் என் சிரசின் மேல் வைத்தீர்!" என்று கேட்க, அய்யர் "என்னுடைய கிழமைத்தனத்தாலே நீர் தலை வைத்திருக்கிற திசையை அறியாமல் அப்படிச் செய்து விட்டேன்" என்றார்.

சுந்தரமூர்த்தி நாயனார் அதற்கு ஒத்துக்கொண்டு தம்முடைய சிரசை வேறொரு திக்கில் வைத்துக்கொண்டு நித்திரை செய்தார். சுவாமி அவ்விடத்திலும் போய் சுந்தரமூர்த்தியுடைய சிரசின்மேல், பின்பும் தம்முடைய பாதத்தை நீட்ட சுந்தரமூர்த்தி, "இங்கே என்னைப் பலமுறை மிதித்த நீர் யாவீர்" என்று கேட்டார். உடனே "நீ என்னை அறியாயோ?" என்று சொல்லி மறைந்தருளினார்.

அதுகண்டு சுந்தரமூர்த்தி தம்மை மிதித்தவர் கடவுளென்று அறிந்து "நான் இறுமாப்படைந்து ஆண்டவர் என்று அறியாமல் என்ன செய்தேன்" என்று சொல்லி வீரட்டானேசுவரர் மேல் திருப்பதிகம் பாடினார்.

பின்பு திருவதிகைக்குத் தென்புறத்திலிருக்கிற திருக்கெடில நதியிலே நீராடல் செய்து அந்த நதியின்

தென்கரையில் இருக்கிற திருமாணிக்குழியைச் சென்று வணங்கி, திருத்தினை நகரத்திற்குப் போய்த் திருப்பதிகம் பாடியருளினார்.

**தில்லைக் கூத்தன் திருக்காட்சி**

அதன் பின்பு சிதம்பரத்தின் எல்லையை அடைந்து அவ்வெல்லையை வணங்கி ஊரினுள்ளே போய் தூல இலிங்கமாகிய கோபுரத்தைக் கண்டு நிலத்திலே விழுந்து வணங்கி எழுந்து கோயிலினுள்ளே போய்க் கனகசபையிலே ஆனந்தத் தாண்டவம் செய்கின்ற சபாநாயகரைத் தரிசித்து அக்கினியில் பட்ட மெழுகு போலக் கசிந்து உருகி ஆனந்தக் கண்ணீர் சொரிய விழுந்து வணக்கம் செய்து எழுந்து நின்று அளவில்லாத பேரின்ப சாகரத்திலே அழுந்தி இரண்டு கைகளையும் சிரசின்மேல் குவித்து திருப்பதிகம் பாடித் துதித்தார்.

**காழி சம்பந்தர்**

அதன்பின் சபாநாயகருடைய திருவருளினால் "நீ திருவாரூரிலே நம்மிடத்திற்கு வா" என்று ஆகாயத்தில் அசரீரி வாக்கு உண்டாயிற்று. அதைக் கேட்டு அந்தக் கட்டளையைச் சிரசின்மேல் ஏற்றுக் கனகசபையை வலம் வந்து வணங்கிச் சென்று கோபுரத்தைக் கடந்து புறத்திலே நின்று அக்கோபுரத்தை வணங்கி திருவீதியைத் தொழுது தெற்கு வாயிலைக் கடந்து அப்புறம் சென்று அந்தத் தலத்தின் எல்லையை வணங்கிக் கொள்ளிட நதியைத் தாண்டிச் சீர்காழிக்குச் சமீபித்து, அந்தச் சீர்காழி, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரஞ் செய்தருளிய தலமாதலால் அதனுள்ளே மிதிக்கலாகாதென்று நினைந்து அதன் புற எல்லையை வணங்கி வலம்வரும் போது பரமன் காட்சி கொடுத்தருள அது கண்டு திருப்பதிகம் பாடினார்.

**திருவாரூரில்**

பின்பு திருக்கோலக்காவுக்கும் திருப்புன்கூருக்கும் போய்ப் பதிகம் பாடி, காவேரி நதியின் கரையை அடைந்து அதில் நீராடி, மாயூரத்துக்கும் அம்பர் மாகாளத்துக்கும் திருப்புகலூருக்கும் போய், பின் திருவாரூரைச் சமீபித்து வன்மீகநாதருடைய கட்டளையினாலே அங்கிருந்து மகா அலங்காரத்தோடே வந்து தம்மை எதிர்கொண்ட பக்தர்களுடன் ஊரினுள்ளே போய் கோயிலில் பிரவேசித்து திருமாளிகை வாயிலை அடைந்து வன்மீகநாதரை வணங்கிப் பதிகம் பாடினார்.

அப்பொழுது சுந்தரமூர்த்திக்குக் கேட்கும்படி வன்மீகநாதருடைய திருவருளினாலே " உமக்கு நாம் தோழன் ஆனோம்!. முன்னே நாம் ஆட்கொண்ட திருமணக் காலத்திலே நீ கொண்ட மணக்கோலத்தை எப்பொழுதும் கொண்டு பூமியின் மேல் விளையாடுவாய்!" என்று ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. அதைக்கேட்ட சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமி சன்னிதானத்தில் சென்று வணங்கித் துதித்து வெளியே போனார்.

அன்று முதல் கொண்டு அடியார்களெல்லாரும் சுந்தரமூர்த்தியைத் தம்பிரான் தோழர் என்று சொல்லிக் கொண்டார்கள்.

**கண்டதும் காதல்**

சுந்தரமூர்த்தி மகா அலங்காரம் பொருந்திய கோலத்தை உடையவராய் வன்மீகநாதரைத் தினந்தோறும் போய்த் தரிசித்து வந்தார். இதற்கு முன்னே கைலாயகிரியிலிருந்த பார்வதி தேவியாருடைய தோழிகள் இருவரில் ஒருவராகிய கமலினி என்பவர் அந்தத் திருவாரூரிலே உருத்திர கணிகையர்

குலத்திலே பிறந்து பரவையார் என்னும் பெயரைப் பெற்று பெதும்பைப் பருவம் அடைந்திருந்தார். அவரும் தினந்தோறும் தோழிமாரோடு கோயிலுக்குப் போய் சுவாமி தரிசனம் பண்ணி வருவார்.

அந்தப் பரவையார், ஒருநாள் சுவாமி தரிசனம் பண்ணப்போகும் போது அப்படியே சுவாமி தரிசனம் பண்ணும் பொருட்டு, கூட்டத்தோடு சென்ற சுந்தரமூர்த்தி நாயனார் திருவருள் கூட்ட அந்தப் பரவையாரைக் கண்டு ஆசைகொண்டு நின்றார். பரவையாரும் சுந்தரமூர்த்தியைக் கண்டு ஆசை கொண்டு, சுவாமி தரிசனம் பண்ண வேண்டும் என்னும் விருப்பத்தினால் கோயிலினுள் சென்றார்.

**இவர் யார்?**

சுந்தரமூர்த்தி நாயனார் அதுகண்டு "என் மனத்தைக் கவர்ந்து சென்ற பேரழகுள்ள பெண் யார்?" என்று விசாரிக்க அங்கு நின்றவர்கள் "இவர் உருத்திர கணிகையரில் ஒருவர், இவர் பெயர் பரவையார்" என்றார்கள்.

அதைக் கேட்ட சுந்தரமூர்த்தி நாயனார் கோயிலினுள்ளே போனார். அதற்கு முன் பரவையார், வலம் வந்து சுவாமியை வணங்கித்துதித்துக் கொண்டு சன்னதியிலிருந்து புறப்பட்டார். சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமி சன்னிதானத்தில் சென்று பரவையார் மேல் வைத்த பேராசையால் அவரைச் சேரவேண்டி சுவாமியினுடைய திருவடிகளை வணங்கிக்கொண்டு புறப்பட்டு பரவையாரைத் தேடி ஆயிரக் கால் மண்டபத்தை அடைந்து வன்மீகநாதர் பரவையாரை எனக்குக் கொடுத்தருளுவார் என்று நினைத்துக் கொண்டு அங்கிருக்க சூரியன் மறைந்தான்.

அது நிற்க முன்னே சுவாமி தரிசனம் செய்து கொண்டு புறப்பட்ட பரவையார் சுந்தரமூர்த்தியிடத்தில் சென்ற தன் மனத்தை ஒருவகையாகத் திருப்பி அதிக மயக்கத்தோடு தன் வீட்டை அடைந்து மலர்ப் படுக்கையிலிருந்து தன் அருகிலிருந்த தோழியரை நோக்கி, "நாம் சுவாமி தரிசனம் செய்யப் போனபோது வழியில் எதிராக வந்தவர் யார்?" என்று கேட்க அவர் "அயனும் அரியும் தேடியறிய முடியாத சமனாதீதராகிய கடவுளே வலிய வந்து ஆட்கொள்ளப் பெற்ற ஆதி சைவராகிய சுந்தரமூர்த்தி" என்றார்.

**திருமணம் கூடிற்று**

அது கேட்ட பரவையார் நமது ஆண்டவர்க்கு உரிய அடியவரோ? என்று சொல்லிச் சுந்தரமூர்த்தி மேல் முன் வைத்த ஆசை மேன்மேலும் அதிகரிக்க படுக்கையின்மேல் விழுந்து புலம்பினார்.

அப்பொழுது கடவுளானவர் பரவையாரைச் சுந்தரமூர்த்திக்குத் திருமணம் செய்து கொடுக்கும்படி அடியார்களுக்குக் கட்டளையிட்டு, சுந்தரமூர்த்தியிடத்தில் சென்று "உனக்குப் பரவையைத் திருமணம் செய்து தரும்படி நம்முடைய அடியார்களுக்குக் கட்டளையிட்டோம்," என்று அருளிச் செய்து பரவையாரிடத்திலும் போய், "உனக்கும் சுந்தரமூர்த்திக்கும் திருமணம் நடக்கும்" என்றும் சொல்லியருளினார்.

மற்றாநாள் உதய காலத்திலே சிவபக்தர்கள் எல்லாரும் கூடி வந்து சுந்தரமூர்த்தி நாயனாருக்குப் பரவையாரை விதிப்படி திருமணம் செய்து கொடுத்தார்கள். சுந்தரமூர்த்தி நாயனார் பரவையாரோடு கூடி வாழ்ந்திருக்கும் காலத்தில் ஒரு நாள் கோயிலை அடைந்த போது தேவாசிரிய மண்டபத்திலே சிவன் அடியார்கள் கூடியிருந்ததைக் கண்டு அவர்கள் மேலே பத்தி மிகுந்து இவர்களுக்கு நான் அடியனாகும் நாள் எந்த நாள் என்று நினைத்துக் கொண்டு சுவாமி தரிசனம் செய்வதற்குக் கோயிலினுள்ளே போனார்.

அப்பொழுது அடியாருக்கு அடியானாக வேண்டும் என்று அவர் விரும்பிய வரத்தைக் கொடுக்கும் பொருட்டு சுவாமி அவருக்குக் காட்சி கொடுத்தருளி, "நீ நம்முடைய அடியார்களை வணங்கி அவர்கள் மேலே பதிகம் பாடு", என்று அருளிச் செய்ய, சுந்தரமூர்த்தி நாயனார் வணங்கி நின்று, "சுவாமி அடியார்களுடைய வரலாறு இன்னதென்றும் அவர்களுடைய தன்மை இப்படிப்பட்டதென்றும் அறியாத நான் எப்படிப் பாடுவேன்? அவர்களைக் குறித்துப் பாடும் சக்தியை எல்லா வல்லமையும் உடைய தேவரீரே அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும்" என்று தொழுதார்.

சுவாமி அதற்கு இசைந்து, அடியார்களுடைய வழித்தொண்டு அவருக்குத் தெரியும்படிச் செய்து "தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கு மடியேன்", என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினார். அது கண்டு சுந்தரமூர்த்தி நாயனார் புறப்பட்டுத் தேவாசிரிய மண்டபத்தை அடைந்து அடியார் திருக்கூட்டத்தைப் பலமுறை வணங்கி அந்த அடியார்கள் யாவருக்கும் வெவ்வேறாக அடியேன், அடியேன் என்று திருத்தொண்டத்தொகை என்னும் திருப்பதிகம் பாடி அவர்களை வணங்கினார்.

## சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய
## திருத்தொண்டத்தொகை

(பண்: கொல்லிக் கௌவாணம்)

திருச்சிற்றம்பலம்

தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்குமடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத இயற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்

வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டார்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

இலைமலிந்த வேனம்பி எறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கல்யன்றன் அடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபாடநிற்க
வெகுண்டெழுந்த தாதை தாள்மழுவினா லெறிந்த
அம்மையா னடித்தண்டி பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்
ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் திருமூல னடியார்க்கு மடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூத்தன் களந்தைக்கோ னடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக் கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்

துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேனம்பி முனைய டுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

கடல்சூழ்ந்த வுலகெல்லாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண் மேலரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தை சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிசார்ந்தா ரடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே.

**குண்டையூர்க் கிழவேளாளர்**

சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூரிலே தினந்தோறும் திரிகாலத்திலும் அன்பினோடு சுவாமி தரிசனம் செய்துகொண்டு பரவையாரோடு வாழ்ந்திருக்குங் காலத்திலே குண்டையூரிலிருக்கின்ற ஒரு கிழ வேளாளர் அவருடைய மகிமையைக் கண்டு கேள்வியுற்று அவருடைய திருவடிகளையடைந்து அன்பினோடு வழிபடுவாராயினார்.

அவர் சுந்தரமூர்த்தி நாயனார் பொருட்டு பரவையாருடைய வீட்டுக்கு நெல்லு முதலான உணவுப்பொருட்களை நெடுங்காலம் தவறாமல் நாள்தோறும் அனுப்பி வந்தார். அப்படி அனுப்பி வருங்காலத்திலே மழை இல்லாமையால் வளஞ்சுருங்க குண்டையூர்க் கிழவர் ஒரு நாள் நெல் போதாமையைக் கண்டு வருத்தமுற்று "இன்றைக்கு அனுப்புவதற்கு நெல் போதாதே ஐயோ இதற்கு நான் என்ன செய்வேன்?" என்று நினைந்து பெருங்கவலை கொண்டு உணவு உண்ணாமல் அன்றிரவு நித்திரை செய்தார்.

அப்பொழுது பரமசிவனானவர் அவருக்குக் கனவிலே தோன்றி "சுந்தரனுக்கு அனுப்பும்படி உனக்கு நெல் தந்தோம்!" என்று சொல்லியருளி பின்பு குபேரனுக்குக் கட்டளையிட அந்தக் குண்டையூர் முழுவதிலும் நெல் மலையானது. ஆகாயம் மறையும்படி நிறைந்து ஓங்கியது.

அன்றிரவு விடியும்போது குண்டையூர்க் கிழவர் விழித்தெழுந்து அந்த நெல்மலையைக் கண்டு அதிசயித்துப் பரமசிவனுடைய திருவருளைத் துதித்து, "சுந்தரமூர்த்தி நாயனாருக்கு அனுப்பும்படி பரமசிவன் கொடுத்து அருளிய இந்த நெல்லை எவர் எடுக்கவல்லவர்கள்?" என்றெண்ணி, இந்தச் சாமாசாரத்தை அவருக்குச் சொல்லும்படி திருவாரூருக்குப் போக, இவ்விடத்தில் நடந்த சமாசாரத்தைப் பரமசிவனால் அறிந்து சுந்தரமூர்த்தி நாயனாரும் எதிரே வந்தார்.

**நெல்மலை தந்தார்**

அதுகண்ட குண்டையூர்கிழவர் அந்தநாயனாருடைய பாதத்தில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று சொல்லுவார், "சுவாமி! நெடுங்காலமாக அடியேன் தேவரீருக்குச் செய்துவந்த திருத்தொண்டுக்கு இப்போது முட்டு வந்தது. அது கண்டு கடவுளே நெல்மலையைத் தந்தருளினார். அந்த நெல்மலை மனிதரால் எடுக்கப்படுவதன்று. இனி இது என்னால் செய்யப்படும்படியான தொண்டன்று", என்று சொல்ல சுந்தரமூர்த்தி நாயனார் அதைக்கேட்டு அவரோடு கூடிக்கொண்டு குண்டையூருக்குப்போய் ஆகாயத்தை அளாவிய அந்த நெல்மலையைக் கண்டு அதிசயித்து திருவருளை வியந்து சமீபத்திலுள்ள கோளிலி என்னும் தலத்தில் இருக்கின்ற சிவாலயத்தை அடைந்து அந்த நெல்மலையைப் பரவையார் வீட்டுக்குக் கொண்டு போவதற்கு ஆள் அனுப்பும்பொருட்டு திருப்பதிகம் பாடினார்.

அப்போது பரமசிவனுடையதிருவருளினாலே "இன்று இரவு நம்முடைய பூதங்கள் பரவை வீட்டிலும் திருவாரூரிலும் முழுதும் நிறையும்படி நெல்மலையைக் கொண்டு வந்து வைக்கும்," என்று ஆகாயத்திலிருந்து ஓர் அசரீரி வாக்கு உண்டாயிற்று.

சுந்தரமூர்த்தி நாயனார் அதைக்கேட்டு திருவாரூருக்குத் திரும்பிப்போய் கோயிலை அடைந்து வன்மீகநாதரைத் தரிசனம் செய்துகொண்டு பரவையார்வீட்டிலே சேர்ந்து அவர் மகிழும்படி நடந்த சமாசாரத்தைச் சொல்லி அங்கிருந்தார்.

அதன்பின் சிவபெருமானார் கட்டளைப்படி பூதங்கள் குண்டையூரிலே இருந்த நெல்மணியை எடுத்துக்கொண்டு போய், பரவையர்வீட்டை நிறைத்து திருவாரூர் முழுவதிலும் நெல்மலையாக்கின.

அன்றிரவு கழிந்த பின் பரவையார் "அவ்வூர் மக்கள் அனைவரும் தங்கள் தங்கள் வீட்டின் எல்லையிலிருக்கிற

நெல்லை எடுத்துக்கொள்ளலாம்," என்று சொல்லி பறையறைவித்தார். சில நாள் சென்ற பின்பு நாட்டியத்தான் குடியில் வசிக்கின்ற கோட்புலிநாயனார் சுந்தரமூர்த்தி இடத்திலே சென்று அவரை வணங்கி தம்முடைய ஊருக்கு எழுந்தருளி வரும்படி அவரைப் பிரார்த்திக்க, அவர் அதற்கு இசைந்தது கண்டு தமது ஊருக்குத் திரும்பி விட்டார்.

**மகளிர் இருவர்**

அதன்பின் சுந்தரமூர்த்தி நாயனார் வன்மீகநாதரை வணங்கி அனுமதி பெற்றுக்கொண்டு நாட்டியத்தான் குடியை அடைந்த போது, அங்கிருந்த கோட்புலி நாயனார் எதிர்கொண்டு வணங்கித் தம்முடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய் ஆசனத்தில் இருத்தி விதிப்படி அருச்சனை செய்து திருவமுது செய்வித்து அவரை வணங்கிப் போற்றி, சிங்கடியார், வனப்பகையார் என்கிற தனது இரண்டு புத்திரிகளைக்கொண்டு வந்து அவரை வணங்கச் செய்து தாமும் வணங்கி, சுவாமி அடியேன் பெற்ற இந்தப் பெண்கள் இருவரையும் அடிமையாகக் கொண்டருளவேண்டும், என்று பிரார்த்திக்க, சுந்தரமூர்த்தி நாயனார் இப்பெண்கள் இருவரும் எனக்குப் புத்திரிகள், என்று சொல்லி அவர்களைத் தம்முடைய தொடையின் மேல் உட்கார வைத்து மனக்கசிவுடனே அணைத்து உச்சி மோந்து அவர்கள் விரும்பியவைகளைக் கொடுத்தருளிய பரமசிவன் வீற்றிருக்கின்ற ஆலயத்தை அடைந்து அவரை வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

**சிங்கடியப்பர்**

அந்தப் பதிகத்தின் திருக்காப்பிலே கோட்புலி நாயனாரைச் சிறப்பித்து, சிங்கடியாருக்குப் பிதாவாகத் தம்மை நினைத்தபடியினாலே தம்மைச் சிங்கடியப்பர் என்று வைத்தருளினார்.

**செங்கல் செம்பொன்னாயிற்று**

பின்பு அவ்விடத்திலிருந்து எழுந்தருளி திருவலி வலத்துக்குப் போய்ப் பதிகம் பாடினார். பின்பு திருவாரூரை அடைந்து பரவையார் வீட்டிலிருந்தார். அப்படியிருக்கும் போது பங்குனி உத்திரநாள் சமீபிக்கவும் பரவையார் திருவிழாச் செலவுக்குக் கொடுப்பதற்குப் பொன் கொண்டு வரும்பொருட்டு திருப்புகலூரை அடைந்து கோயிலில் சென்று சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடிச் சமீபத்திலிருக்கின்ற ஒரு மடத்திலே போய் திருப்பணிக்காச் சுடப்பட்ட பல செங்கற்களை எடுத்து உயரம் செய்து அதைத் தலையணையாகக் கொண்டு மேலாடையை விரித்துப் போட்டு அதின் மேல் நித்திரை செய்தார். பின் விழித்தெழுந்த போது அந்தச் செங்கற்களெல்லாம் பொன் கல்லாயிருக்கக் கண்டு திருவருளைத் துதித்துக் கோயிலினுள்ளே போய் திருப்பதிகம் பாடியருளினார்.

**தலங்கள் தோறும் சென்றார்**

பின்பு அந்தப்பொன் கும்பலை எடுத்துக்கொண்டு திருப்பனையூருக்குப் போய் திருப்பதிகம் பாடி அங்கே இருக்கும் நாளில் அடியார்களோடு பின்பும் அக்கடவுளை வணங்கி அவருடைய அருள் பெற்றுப் புறப்பட்டு காவேரியின் தென் கரையில் இருக்கின்ற பல சிவத்தலங்களை வணங்கி திருவிடைமருதூரை அடைந்து மருத மரத்தின் நீழலிருக்கின்ற மருதப்பரை வணங்கித் திருப்பதிகம் பாடி அவர் அருள் பெற்று அடியார்களோடு அந்த நகரை விட்டுப் புறப்பட்டு திருநாகேசுவரத்தை அடைந்து கோயிலை வலம் வந்து பரமசிவனை வணங்கித் திருப்பதிகம் பாடி அங்கிருந்து புறப்பட்டுச் சிவபுரத்துத் தேவர் பிரான் கழலை வணங்கி இன்னும் பல சிவத்தலங்களையும் வணங்கித் திருகலயநல்லூரை அடைந்து திருப்பதிகம் பாடி வணங்கிப் பின்பு திருக்குடமூக்கு, திருவலஞ்சுழி, திருநல்லூர், சோற்றுத்துறை, கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி இந்தத் தலங்களையும் இன்னும் இவைகளின் சமீபத்திலுள்ள

தலங்களையும் போய் அடைந்து கடவுளை வணங்கித் திருப்பதிகம் பாடிப் பின்பு பரமசிவத்தைத் தரிசித்து அன்று இரவு அவ்விடத்தில் நித்திரை செய்தார்.

நித்திரை செய்யும் போது சுவாமி அவருக்குக் கனவிலே தோன்றி, "மழபாடி வருவதற்கு மறந்தாயோ?", என்று சொல்ல, சுந்தரமூர்த்தி விழித்தெழுந்து மழபாடிக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடியருளினார்.

**பிரானார் இல்லையோ?**

பின்பு சிலநாள் அங்கிருந்து காவேரி நதிகயின் இரண்டு பக்கத்திலுள்ள தலங்களை வணங்கி மேற்கு திக்குக்கு யாத்திரை செய்ய நினைத்து திருவானைக்காவுக்குப் போய் தரிசித்துப் பதிகம்பாடி பின்பு திருப்பாச்சிலாசிரமத்தை அடைந்து கோபுரத்தைக் கண்டு வணங்கி, ஆலயத்தை வலம் வந்து சன்னிதானத்துள் சென்று திருமுன் கீழ் வீழ்ந்து வணங்கிப் பொன்னைக் குறித்துத் துதிக்க அவர் தராமையால் மனம் புழுங்கிப் பிரானார் இல்லையென்று திருப்பதிகம் பாடினார்.

கடவுள் அதைக் கேட்டுப் பொன் கும்பல் கொடுக்க சுந்தரமூர்த்தி பெற்றுக் கொண்டு சிலநாள் அங்கிருந்து பின்பு புறப்பட்டு மார்க்கங்களின் இரண்டு பக்கங்களிலுள்ள தலங்களை வணங்கி திருப்பைஞ்ஞீலி, திருஈங்கோய் என்னும் தலத்தை அடைந்து கோயிலைப் பிரதட்சணம் செய்து கடவுளை வணங்கி பின்பு,கொங்க தேசத்தை அடைந்து அவ்விடத்திலிருக்கிற தென்பாண்டிக் கொடுமுடி, அவிநாசி, வெஞ்சமாக்கூடல், திருக்கற்குடி, திருவாரை மேற்றளி, திருவின்னம்பர் என்கிற தலங்களையும் அடைந்து ஆலயத்தைப் பிரதட்சணம் செய்து கடவுளை வணங்கித் திருப்பதிகம்பாடி தரிசனம் செய்துகொண்டு அப்பால் போகும்போது திருக்கூடலையாற்றூர் சமீபத்திலிருந்தும் அதற்குப் போகாமல் திருமுதுகுன்றைப் போக பரமசிவன் அதையறிந்து ஓர் அந்தணர் வடிவம் கொண்டு சுந்தரமூர்த்தி முன் நின்றார்.

**இறைவன் வழிகாட்டினார்**

அவரைச் சுந்தரமூர்த்தி நாயனார் பார்த்து, "ஐயரே! திருமுதுகு குன்றுக்குப் போகும் வழி எது சொல்லும்?" என்று கேட்க, ஐயர், "இது கூடலையாற்றூருக்குப் போகிற வழி" என்று சொல்லி வழிகாட்டிக்கொண்டு முன்னே சென்றார்.

சுந்தரமூர்த்தி நாயனார் அவரைத் தொடர்ந்து சென்று பின் அவரைக் காணாமல் திருப்பதிகம் பாடி பின்பு கூடலையாற்றூரை அடைந்து திருப்பதிகம் பாடிப் பின்பு திருமுதுகுன்றம் என்கிற விருத்தாசலத்தை அடைந்து திருப்பதிகம் பாடி பின்னும் பழமலை நாதரைத் தனக்குப் பொருள் வேண்டி வந்ததை மனத்துள் கொண்டு குறிப்போடு வணங்கித் தொழுது, பாட சுவாமி பன்னீராயிரம் பொன் கொடுத்தருள சுந்தரமூர்த்தி நாயனார் வணங்கி நின்று, "சுவாமி! தேவரீர் தந்தருளிய இந்தப் பொன்னெல்லாம் திருவாரூரிலே உள்ளவர்கள் அதிசயிக்கும்படி ஆங்கே வரச் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

**நதியிலே இட்டுக் குளத்திலே எடுத்தார்!**

அப்போது சுவாமியினுடைய திருவருளினாலே, "சுந்தரனே! இந்தப் பொன்னெல்லாம் மணிமுத்தா நதியிலே இட்டுத் திருவாரூர்க் குளத்திலே போய் எடுத்துக்கொள் என்று ஓர் அசரீரி வாக்கு எழுந்தது.

சுந்தரர் அதைக்கேட்டு மச்சம் வெட்டி வைத்துக்கொண்டு பொன்னை எல்லாம் மணிமுத்தா நதியிலே போட்டுவிட்டு, "அன்று என்னை வலிந்தாட் கொண்ட திருவருளை அறிவேன்!" என்று சொல்லி சிதம்பரத்துக்குப் போக நினைத்து வழிக்கொண்டு மத்தியிலே திருக்கடம்பூரை வணங்கிச் சிதம்பரத்தை அடைந்து சபாநாயகரை வணங்கித்

திருப்பதிகம் பாடியருளி அங்கு நின்று புறப்பட்டு, கருப்பறியலூர், மண்ணி, வளம்படி, வாழ்கொளிப்புத்தூர், கானாட்டு முள்ளூர், எதிர்கொள்பாடி, வேள்விக்குடி இந்தத் திருத்தலங்களையும் இந்த வழிகளில் உள்ள பல தலங்களையும் அடைந்து கடவுளை வணங்கித் திருப்பதிகம் பாடிய பின்பு திருவாரூரை அடைந்து சுவாமியைத் தரிசனம் செய்துகொண்டு பரவையாரோடு கூடியிருக்கும் நாளிலே ஒரு நாள் பரவையாரைப் பார்த்து, "எனக்குத் திருமுதுகுன்றர் கொடுத்தருளிய பொன்னை மணிமுத்தா நதியிலே புகவிட்டு வந்தேன். இப்போது இந்தத் தலத்திலே இருக்கின்ற கோயிலுக்கு மேற்குத் திக்கிலே இருக்கின்ற குளத்திலே போய் அவருடைய அருளினாலே எடுத்துக்கொண்டு வருவோம் வா!" என்றார்.

**இஃது என்ன அதிசயம்?**

பரவையார் அதுகேட்டு, "இது என்ன அதிசயம்?" என்று சொல்லிச் சிரிக்க, சுந்தரமூர்த்தி நாயனார், "பெண்ணே! நம்முடைய கடவுளுடைய திருவருளினாலே பொன்னை எல்லாம் குளத்திலிருந்து எடுத்து உனக்குத் தருவேன்! இது சத்தியம்" என்று சொல்லி பரவையாருடன் கோயிலில் பிரவேசித்து வன்மீகிநாதரை வணங்கக் கோயிலைப் பிரதட்சணம் செய்து மேற்குத் திக்கிலிருக்கிற திருக்குளத்தை அடைந்து அதன் வடகீழ்க்கரையிலே போய் பரவையாரை நிறுத்தி, சுவாமியை வணங்கிக் குளத்திலே இறங்கித் தடவினார்.

அப்போழுது பரமசிவன் சுந்தரமூர்த்தியைக் கொண்டு திருப்பதிகம் பாடுவிக்க வேண்டும் என்கிற ஆசையினாலே பொன்னை அந்தக் குளத்திலே வருவியாதிருக்க, பரவையார் அதைப்பார்த்து, "ஆற்றிலே போட்டுக் குளத்திலே தேடுகிறீரே" என்றார்.

சுந்தரமூர்த்தி நாயனார் அதைக்கேட்டு "சுவாமி, தேவரீர் முன் அருளிச் செய்தபடியே பரவையார் நகைக்காதபடி

பொன்னைத் தாரும்!" என்று திருமுதுகுன்றர் மேல் திருப்பதிகம் பாடினார். அதைக் கேட்டுப் பரமசிவன் பொன்னைத் தந்தருள சுந்தரமூர்த்தி நாயனார் அதை எடுத்துக்கொண்டு கரையிலேறி அந்தப் பொன்னையும் முன் மச்சம் ஒடித்து வைத்திருந்த பொன்னையும் வெவ்வேறாய் உரைத்துப்பார்க்க குளத்திலெடுத்த பொன் உரை தாழ்ந்தது. அதைப் பார்த்துக் கடவுளைப் பாடித்துதிக்க கடவுளானவர் "உரை தாழாது" என்று அருள் செய்தார்.

சுந்தரமூர்த்தி நாயனார் மனம் மகிழ்ந்து அந்தப்பொன் கும்பலை மாட்டின் மேலேற்றிப் பரவையாரோடு வீட்டுக்கு அனுப்பி, தான் கோயிலிலே போய்ச் சுவாமியை வணங்கி வீட்டுக்குப் போய் பரவையாருடன் இன்பம் அடைந்து வாழ்ந்தார்.

அந்நாளிலே திருவாரூரர் மேல் பதிகம்பாடித் துதித்துப் பின்பு சிலநாள் பொறுத்து, சிவத்தல யாத்திரை செய்ய விரும்பி, திருவாரூரிலிருந்து புறப்பட்டு திருநள்ளாறு, திருக் கடவூர், வீரட்டானம், வலமபுறம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருநனிப் பள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திருநின்றியூர், திருநீடூர், திருப்புன்கூர், திருக்கோலக்கா இந்தத் தலங்களில் சென்று கடவுளைத் துதித்துத் திருப்பதிகம் பாடி பின்பு சீர்காழியின் எல்லையை வலங்கொண்டு வணங்கி திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய திருவடிகளைத் துதித்துக் குருகாவூருக்குப் போகும்படி வழிக்கொண்டார்.

**பொதி சோறு அளித்தல்**

வழியிலே, சுவாமி, அவர் பசியினாலும் தாகத்தினாலும் வருந்துதலையறிந்து தண்ணீரும் பொதி சோறும் கொண்டு வந்து வெய்யில் வெப்பத்தை தணிக்கும் பொருட்டு ஒரு பக்கத்திலே ஒரு பந்தலை உண்டாக்கி அங்கே அந்தண வேடங்கொண்டுசுந்தரமூர்த்தியை எதிர்பார்த்துக்கொண்டு இருந்தார்.

அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டர்களுடன் அவ்விடத்தில் வந்து, அந்தப் பந்தலின் கீழே போய் அந்த அந்தணர் சமீபத்திலே திரு ஐந்தெழுத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார். அந்தணர் அவரைப் பார்த்து, நீர் மிகப் பசி கொண்டிருக்கின்றீர், இந்தப் பொதி சோற்றையுண்டு இந்தத் தண்ணீரைக் குடித்து இளைப்பாறும். என்று சொல்லியருள சுந்தரமூர்த்தி நாயனார் அதற்கு இசைந்து அந்தப் பொதி சோற்றை வாங்கித் திருத்தொண்டருடன் அமுது செய்து அளவில்லாத அடியார்கள் அனைவரையும் அமுது செய்யப் பண்ணினார்.

அப்படி அமுது செய்தும் அந்தப் பொதிசோறு குறையாதிருந்தது. சுந்தரமூர்த்தி நாயனார் திருவமுது செய்தபின் நீர் அருந்தி அந்த அய்யரைப் புகழ்ந்து அவர் சமீபத்தில் அடியார்களோடு நித்திரை செய்ய அய்யர் பந்தலுடனே மறைந்தருளினார்.

சுந்தரமூர்த்தி விழித்து எழுந்து அய்யரைக் காணாமையால் அதிசயங் கொண்டு திருப்பதிகம் பாடிப் பின்பு குருகாவூர், திருக்கழிப்பாலை, சிதம்பரம், திருத்தினை, திருநாவலூர், திருவெண்ணெய்நல்லூர் இவைகளை அடைந்து கடவுளைத் தரிசித்துத் திருப்பதிகம் பாடி, பின்பு தொண்டை மண்டலத்திலிருக்கிற தலங்களுக்கு யாத்திரை செய்ய விரும்பி அவ்விடத்திலிருந்து புறப்பட்டு திருக்கழுக்குன்றம் போய் திருப்பதிகம் பாடித்துதித்து, பின்பு திருக்கச்சூரிலே கோயிலினுள்ளே போய்ச் சுவாமியை வணங்கிக் கொண்டு புறத்திலே வந்து அமுது செய்யும் பொழுதாகியும் பாகம் பண்ணிக் கொடுக்கின்ற அடியார்கள் வாராமையால் மிகுந்த பசிவருத்தத்தினாலே மதில் புறத்தில் இருந்தார்.

அப்பொழுது பரமசிவனானவர் ஓர் அந்தணர் வடிவம் கொண்டு ஒரு வெற்றோட்டைக் கையேந்தி அங்கே வந்து அவருடைய முகத்தைப் பார்த்து, நீர் பசியினால் மிகவருந்தி இளைப்புற்றிருக்கின்றீர்! நான் இப்போது உமக்கு அன்னம் யாசகம் பண்ணிக்கொண்டு வருகிறேன். நீர் அப்புறம் போகாமல் கொஞ்ச நேரம் இங்கே இரும் என்று சொல்லி அந்தத் திருக்கச்சூரிலிருக்கின்ற அந்தணர் தெருக்களிலே போய் அன்னமும் கறியும் யாசகம் பண்ணிக்கொண்டு சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்திற் சென்று பசிதீர இதை உண்ணும் என்று சொல்லிக் கொடுக்க நாயனார் அந்த அய்யருடைய அன்பைப் புகழ்ந்து மிகுந்த மகிழ்ச்சியோடு அஞ்சலி செய்து வாங்கித் தம்மோடு வந்த தொண்டர்களுடனே அமுது செய்தார்.

**ஏமக்காகப் பிச்சை எற்றீரோ?**

உடனே அந்த அய்யர் மறைந்தருளினார். அது கண்டு சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர் பரமசிவனே என்று தெரிந்து "இந்தப் பெரும்பகலிலே திருவடி வருந்த திருமேனி கொண்டு அடியேன் பொருட்டு எழுந்தருளி வந்த பெருங்கருணை இருந்தபடி என்னே!" என்று மனம் கசிந்துருகி உரோமாஞ்சிதம் கொள்ள கண்களினின்றும் ஆனந்த அருவி சொரிய திருப்பதிகம் பாடியருளி சுவாமியை வணங்கிக் கொண்டு அதைவிட்டு நீங்கிக் காஞ்சிபுரத்தின் சமீபத்தில் போகும்போது அந்தக் காஞ்சிபுரத்தில் இருக்கின்ற பக்தர்கள் இவர் மகிமையையும் இவர் வருதலையும் கேள்விப்பட்டு எதிர்கொண்டு வந்து இவரை வணங்கினார்கள்.

சுந்தரமூர்த்தியும் அவர்களை வணங்கி அவர்களோடு அந்நகரத்தில் போய்த் திருவேகாம்பரத்தை அடைந்து ஏகாம்பரநாத சுவாமியைத் தரிசித்துப் பரவசமாகி அடியற்ற மரம் போல விழுந்து எழுந்து விம்மி ஆனந்தக் கண்ணீர் சொரிய வணங்கியவராகி மெய்யன்பினோடு திருப்பதிகம்

பாடிப்பின்பு அக்காஞ்சிபுரத்திலே திருத்தொண்டர்களோடு சில நாள் வசித்து அங்கிருக்கின்ற காமக்கோட்டத்தில் சென்று காமாட்சியம்மையை வணங்கி பின்பு திருமேற்றளி யென்னும் தலத்தைத் தரிசித்து பின்பு ஓணகாந்தன்தளி என்னும் தலத்தை அடைந்து சிவனை வணங்கிப் பொன் தரும்படித் திருப்பதிகம் பாடி பொன்னை பெற்றுக்கொண்டு அதன் பின்பு அனேகதங்காபதம், திருப்பனங்காட்டூர், திருமால் பேறு, திருவல்லம், திருக்காளத்தி, சிரீ சைலம் திருக்கேதாரம் இவைகளை அடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடிப் பின் அவ்விடம் விட்டு நீங்கிக் கடற்கரையிலிருக்கின்ற திருவொற்றியூரில் போய்த் திருப்பதிகம் பாடி முக்காலமும் சுவாமியைத் தரிசனம் செய்துகொண்டு அங்கேயிருந்தார்.

**சங்கிலியார்**

அப்படி இருக்கின்ற காலத்திலே இதற்கு முன் கைலாயகிரியிலே சுந்தரமூர்த்தி சுவாமிகளின் மேல் ஆசை வைத்த ஈசுவரியின் தோழிகளிருவரில் அனிந்திதையார் என்பவர் ஞாயிறு என்னும் ஊரிலே இருக்கிற வேளாளரிலே சிறந்து ஓங்கிய ஞாயிறு கிழவர் என்பவருக்குப் புத்திரியாராய்த் திருவவதாரம் செய்து சங்கிலியார் என்னும் பெயரைப் பெற்று உமாதேவியாருடைய திருவடிகளில் மிகுந்த பக்தி உடையவராய் இருந்தார்.

அவர் பெதும்பைப் பருவம் அடைந்தது கண்டு அவர் தகப்பனார்தம்முடைய மனைவியாரை நோக்கி, "நம்முடைய மகள் நம்முடைய வமிசத்திலுள்ள பெண்கள் எல்லாரினும் அதிக சௌந்தரியமும் நல்ல குணமும் உடையவளாக இருக்கின்றாள். அவளுக்குத் திருமணம் செய்து கொடுக்குங் காலமாயிற்று, இதற்கு என்ன செய்வோம்?" என்று சொல்ல மனைவியார் "அவளுடைய சௌந்தரியத்துக்குங் குணத்துக்கும் இசைய ஒரு கணவனைத் தெரிந்து திருமணம் செய்து கொடும்" என்றார்.

**மயங்கினார் சங்கிலியார்**

அதைக் கேட்டுக் கொண்டிருந்த சங்கிலியார் "இவர்கள் பேசும் வார்த்தை எனக்குப் பொருந்தும் வார்த்தையன்று, நானோ நமது கடவுளாகிய பரமசிவனுடைய திருவருளைப் பெற்ற ஒருவர்க்கு மனைவியாதற்கு உரியேன். இப்படியல்லாமல் மற்று எப்படி விளையுமோ? தெரியாது," என்று நினைந்து அச்சங் கொண்டு அறிவு மயங்கி மிகச் சோகித்து நிலத்திலே விழுந்தார்.

சமீபத்தில் நின்று, தாய், தகப்பன் இருவரும் அதைக் கண்டு பதைபதைத்து அவரை எடுத்து ஏங்கிய மனத்தையுடையவராகி இவளுக்கு நிகழ்ந்தது என்னவோ? என்று பயந்து தாங்கிப் பனிநீர் தெளித்துத் தடவி அவருக்குச் சோகம் நீங்கிய பின் அவரைப் பார்த்து, "மகளே! உனக்கு நிகழ்ந்தது என்ன? சொல்!" என்று கேட்க, சங்கிலியார் "இப்பொழுது என்னைக் குறித்து நீங்கள் பேசியது இசையாது நானோ பரமசிவனுடைய திருவருளைப் பெற்ற ஒருவருக்கு மனைவியாவதற்கு உரியேன், நான் இனிமேல் திருவொற்றியூரை அடைந்து சிவனது திருவருளில் செல்லுவேன்" என்றார்.

**பெண் பேச வந்தனர்**

தந்தை தாயார் அதைக்கேட்டு அச்சமும், சோகமும் அதிசயமும் உடையவர்களாகி அந்தச் சங்கிலியார் சொல்லிய வார்த்தையை மறைத்து நடந்தார்கள். அப்படி நடக்குங் காலத்தில் அவர்களுடைய குலத்துக்கு ஒப்பாகிய குலத்தில் உள்ள ஒருவன் நடந்த சங்கதியை அறியாதவனாகி, சங்கிலியார் மேல் விருப்பங்கொண்டு அவருடைய தந்தையாரிடத்திலே திருமணம் பேசும் பொருட்டுச் சிலரை அனுப்பினான்.

அவர்கள் அவனது தகப்பனாரிடத்திலே போய் பேச, அதுகேட்டுத் தந்தையார், நடந்த சங்கதிகளைச் சொல்லுதல் தகுதியன்று, என்று நினைத்து வேறொரு உபாயத்தினால், அவர்களை அனுப்பி விட்டார். அவர்கள் போய்ச் சேர்ந்த உடனே அவர்களை அனுப்பினவன் அவர்களோடு இறந்து போனான்.

**கன்னிமாடத்தில் சங்கிலியார்**

அதைச் சங்கிலியாருடைய தகப்பனார் கேள்விப்பட்டு மனமயங்கி பிழைக்க வேண்டும் என்கின்ற நினைப்பை உடையவர்கள் சங்கிலியார் பட்சத்திலே பேசத்தகாத வார்த்தையைப் பேசினார்கள். இன்பத்தை உலகம் அறியும்படிச் செய்து திருவருளைக் கண்டு அதனை யாவர்க்கும் உள்ளபடிச் சொல்லி மிகவும் பயந்து இனி நாங்கள் இவர் எண்ணத்தின் படியே இவரைச் சிவபுண்ணியம் செய்துகொண்டு இருக்கும் பொருட்டு திருவொற்றியூரிலே கொண்டுபோய் விடவேண்டும் என்று துணிந்து தங்கள் தாயாதிகளோடும் சங்கிலியாரைப் பார்த்து, "நீர் திருவொற்றியூரை அடைந்து கன்னிமாடத்திலிருந்து பரமசிவனுடைய திருவருளை முன்னிட்டுத் தவம் செய்யும்" என்று சொல்லி மிகுந்த செல்வத்தோடும் அவரைத் திருவொற்றியூருக்குக் கொண்டு போய்க் கோயிலிலே பிரவேசித்துக் கன்னிமாடம் செய்வித்து அதிலே அவரை இருக்கச் சொல்லி அவருக்கு வேண்டிய திரவியங்களை வைத்து அவரை வணங்கி நின்று, "நீர் கன்னி மாடத்திலே பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்துகொண்டு இரும்," என்று சொல்லி அவரைப் பிரிதலினாலே இரண்டு கண்களிலிருந்து சோகக்கண்ணீர் சொரிய அனுமதி பெற்றுக்கொண்டு தங்கள் ஊருக்குத் திரும்பி விட்டார்கள்.

சங்கிலியார் அந்தக் கன்னிமாடத்திலேயிருந்து தினந்தோறும் மூன்று காலங்களிலும் கோயிலிலே போய், சுவாமி தரிசனம் செய்து பூக்கட்டு மண்டபத்திலே திரையிட்டு அந்த இடத்தில் போயிருந்து மலர் மாலை கட்டி, சுவாமிக்குச் சாத்தும்படிக் கொடுத்துக் கொண்டு வருவார்.

இப்படி நடக்குங் காலத்திலே ஒரு நாள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கோயிலிலே போய்ச் சுவாமி தரிசனம் செய்து கொண்டு புறப்பட்டு அடியார்கள் செய்கின்ற பலவகைத் திருத்தொண்டைப் பார்ப்பவராகி மலர் மண்டபத்தினுள்ளே போனார்.

போனபோது முன்போலத் திரையை நீக்கிப் பரமசிவனுக்குச் சாத்தும்படி, தாம் கட்டிய பூமாலைகளைக் கொடுத்து விட்டு மின்னலைப் போல மறைந்த சங்கிலியாரை விதி கூட்டக்கண்டு அவர்மேல் ஆசைகொண்டு புறத்திலே போய் "மலர் மண்டபத்தினுள்ளே திரைக்குள்ளே நின்று ஒரு பெண் என் மனதை ஈர்த்துக்கொண்டாள், அவள் யார்?" என்றார்.

சமீபத்தில் நின்றவர்கள், அவர் பரமசிவனுக்கு மிகுந்த பக்தியோடு திருத்தொண்டு செய்கின்ற கன்னிகையாகிய சங்கிலியார் என்றார்கள்.

அதைக் கேட்ட, சுந்தரமூர்த்தி சுவாமிகள், கோயிலினுள்ளே போய் சுவாமியை வணங்கி நின்று சங்கிலியாரைத் தமக்குத் தந்தருளும்படி பிரார்த்தித்துக் கொண்டு கோயிலின் பக்கத்திலே போய் ஓரிடத்திலே இருந்தார். அப்போது சூரியனும் மறைந்தார்.

**கனவிலே இறைவன்**

அப்போது பரமசிவன் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தில் போய் "இவ்வுலகத்திலுள்ளவர்கள் யாவராலும் செய்யக்கூடாத பெருந்தவத்தைச் செய்கின்ற உத்தமியாகிய சங்கிலியை உனக்குத் தருவோம், நீ கொண்ட கவலையை நீக்கு" என்று திருவாய் மலர்ந்தருளி நள்ளிரவுப் போதிலே கன்னி மாடத்திலே நித்திரை செய்கின்ற சங்கிலியாருக்குக் கனவிலே தோன்றினார்.

அப்போது சங்கிலியார் பரவசமாய் விழுந்து வணங்கி எழுந்து நின்று "சுவாமி! அடியேன் பிழைக்கும்படி தேவரீர் அடியேனிடத்திலே எழுந்தருளி வரும் பொருட்டு பூர்வசென்மத்திலே என்ன தவம் செய்தேன்" என்று சொல்ல "சங்கிலியே! நம்மேலே மிகுந்த பக்தியை உடையவனாகியும் நமக்குத் தோழனாகியுமிருக்கின்ற சுந்தரன் தனக்கு மனைவியாக உன்னைத் தரும் பொருட்டு என்னைப் பிரார்த்தித்தான், நீ மகிழ்ச்சியோடும் அதற்கு உடன்படு" என்று சொல்லியருளினார்.

அதற்கு "சுவாமி! அடியேன் தேவரீருடைய ஆணையைத் தலைமேற்கொண்டேன். தேவரீர் சொல்லியருளிய நாயனாருக்கே மனைவியாவேன். ஆனால் அவர் திருவாரூரிலே மிகுந்த மகிழ்ச்சியோடு வசிக்கின்றவர் என்பதைத் தேவரீர் திருவுளங்கொண்டருளும்" என்றார்.

**திருமணத்தூது**

அது கேட்ட கடவுள், "பெண்ணே! அந்த சுந்தரன் உன்னைப் பிரிந்து போக மாட்டேன் என்று சத்தியம் செய்து தருவான்" என்று சொல்லியருளி, சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்திலே போய் "நாம் சங்கிலியாரிடத்திலே போய் உன் எண்ணத்தைத் தெரிவித்தோம், நான் உன்னைப் பிரிந்து போகேன் என்று நீ அவளுக்குச் சத்தியம் செய்து கொடுத்தால் அவள் உடன்படுவாள், இனி நாம் உனக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று அருளிச் செய்ய, சுந்தரமூர்த்தி சுவாமிகள் கடவுளுடைய பிற தலங்களையும் சென்று வணங்க விரும்புகின்ற அடியேனுக்கு இது விலங்காகும், என்று நினைந்து அவரை வணங்கி, "சுவாமி! சஙிகிலிக்கு நான் உன்னைப் பிரியேன் என்று சபதம் செய்து கொடுக்கும் பொருட்டு, அடியேன் அவளோடு தேவரீருடைய ஆலயத்துக்கு வந்தால் அப்பொழுது தேவரீர் அந்த ஆலயத்தை விட்டு திருமகிழின் கீழ் இருந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

அதற்குக் கடவுள் இசைந்தருளி சங்கிலியாரிடத்திலே முன் போல, போய் "பெண்ணே! சுந்தரன் உனக்குச் சத்தியம் செய்து தருதற்கு உடன்பட்டிருக்கின்றான். அவன் நம்முடைய ஆலயத்திலே சத்தியம் செய்து தருவதற்கு வந்தால் நீ அதற்கு உடன்படாமல் மகிழின் கீழே சத்தியம் செய்து தரும்படிக் கேள்!" என்று சொல்லி மறைந்தருளினார்.

சங்கிலியார் விழித்தெழுந்து வியந்து அந்த இரவிலே பரமசிவனுடைய திருவருளை நினைத்து நினைத்து நித்திரை செய்யாதவராகி சமீபத்திலே நித்திரை செய்கின்ற தன்னுடைய தோழிகளை எழுப்பித் தமக்குக் கனவிலே பரமசிவன் அருளிச் செய்த எல்லாவற்றையும் அவர்களுக்குத் தெரிவிக்க அவர்கள் அச்சமும் அதிசயமும் ஆனந்தமும் அடைந்து சங்கிலியாரை வணங்கினார்கள். அப்போது திருப்பள்ளி எழுச்சிக்கு மலர் கட்டுகிற காலம் சமீபிக்க அதைக்கண்டு சங்கிலியார் தோழிகளோடு கோயிலுக்குப் போயினார்.

சுந்தரர் இவருக்குச் சத்தியம் செய்து கொடுக்கும்படி முன் அவ்விடத்திலே போய் இவர் வருதலைப் பார்த்துக் கொண்டிருந்தார். இவர் வந்து சேர்ந்தவுடன் இவர் சமீபத்தில் போய் தமக்குப் பரமசிவன் அருளிச் செய்ததைச் சொன்னார்.

அதற்குச் சங்கிலியார் ஒன்றும் பேசாமல் வெட்கங்கொண்டு தோழிகளோடுங் கோயிலினுள்ளே போக, சுந்தரர்மூர்த்தியும் அவர் பின்னே போய், "பெண்ணே! நான் உன்னைப் பிரந்து போகவில்லை என்று சத்தியம் செய்து தருகிறேன், சந்நிதானத்துக்கு வாரும்" என்று சொல்ல சங்கிலியார் கண்ட கனவைக் கேட்டறிந்த தோழியர்கள், "சுவாமி! இதன் பொருட்டு தேவரீர் சன்னிதானத்திலே சபதம் செய்வது தகாது" என்றார்கள்.

அப்பொழுது சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரமசிவனுடைய செய்கையை அறியாமல், "பெண்களே! நான் வேறே எங்கே சத்தியம் செய்து தர வேண்டும்?" என்று கேட்க, தோழியர்கள் "மகிழின் கீழே சத்தியம் செய்து கொடும்!" என்றார்கள்.

சுந்தரர் அதைக்கேட்டு மனம் மயங்கி, இவர்கள் சொன்னதை மறுத்தால் திருமணம் தவறினும் தவறும், ஆதலால் இதற்கு உடன்பட வேண்டும் என்று துணிந்து, "அப்படிச் செய்யலாம் வாருங்கள்!" என்று சொல்லி அவர்களோடு மகிழின் கீழே போய் சங்கிலியார் காணும்படி அந்த மகிழை மூன்று தரம் வலம் வந்து, "உன்னை நான் பிரியேன்" என்று சத்தியம் செய்து கொடுத்தார்.

சங்கிலியார் அதுகண்டு மனம் கலங்கி, கடவுளுடைய ஆணையினாலே பாவி ஏன் இதைக் கண்டேன் என்று துக்கித்துக்கொண்டு ஒரு பக்கத்திலே மறைந்து நின்றார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சத்தியம் செய்து முடிந்தபின் ஆலயத்தினுள்ளே போய், கடவுளை வணங்கி தோத்திரம் செய்துகொண்டு திரும்பிவிட்டார்.

அதற்குப் பின் சங்கிலியார் மலர் மண்டபத்திலே போய்த் தம்முடைய பணிடை முடித்து, பரமசிவன்தமக்கு அருள் செய்ததை நினைத்து அவரை வணங்கிக் கொண்டு விடியும்பொழுது கன்னி மாடத்துக்குத் திரும்பி விட்டார்.

**சங்கிலியார் திருமணம்**

அந்த இரவில் பரமசிவன் திருவொற்றியூரிலுள்ள தம்முடைய தொண்டர்களுக்குக் கனவில் போய், "நம்முடைய அடியனாகிய சுந்தரனுக்குச் சங்கிலி என்னும் கன்னிகையைத் திருமணம் செய்துகொடுங்கள்" என்று ஆணையிட்டு மறைந்தருளினார்.

அவர்கள் அந்த ஆணையைத் தலைமேற் கொண்டு மற்ற நாளிலே அவ்வூரிலிருக்கின்ற அனைத்து மக்களோடும் கூடி மிகுந்த மகிழ்ச்சியோடும் மகா அலங்காரத்தோடும் சங்கிலியாரைச் சுந்தரமூர்த்திக்கு திருமணம் செய்து கொடுத்தார்கள்.

பின்பு சுந்தரமூர்த்தி சுவாமிகள் அந்த ஊரிலே சங்கிலியாரோடு கூடி வாழ்ந்திருக்குங்காலத்தில், திருவாரூரிலே வீதிவிடங்கப் பெருமாளுடைய வசந்தோற்சவ காலம் சமீபத்தை சுந்தரர் அறிந்து வன்மீகநாதரை இவ்வளவு காலமும் மறந்திருந்தேனே என்று துக்கித்து அவர் மேல் திருப்பதிகம் பாடி, பின்பு ஒரு நாளிலே அவரை மிக நினைந்து திருவாரூருக்குப் போக நினைத்து ஆலயத்தில் புகுந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு திருவொற்றியூரை விட்டு நீங்கினார்.

**கண்பார்வை அற்றேனே!**

நீங்கிய பொழுது சுந்தரமூர்த்தி சுவாமிகள் தான் முன் செய்த சபதம் தவறினதால் அவர்தம் இரண்டு கண்களும் மறைந்தன. அப்பொழுது சுந்தரமூர்த்தியானவர் திகைத்து பெருமூச்சு விட்டு நான் செய்து கொடுத்த சபதம் தவறினதால் எனக்கு நிகழ்ந்தது என்று நினைத்து இந்தக் கொடுந்துயரத்தை நீக்கும் பொருட்டு திருவொற்றியூரிலிருக்கின்ற கடவுளின்மேல் திருப்பதிகம் பாடினார்.

பாடியும் கடவுள் அந்தத் துயரத்தை நீக்கவில்லை. அப்படியிருந்தும் திருவாரூருக்குப் போகவேண்டுமென்ற அதிக விருப்பத்தினாலே சிலர் முன்னே வழிகாட்டிக்கொண்டு போக திருமுல்லைவாயில், திருவெண்பாக்கம், திருவாலங்காடு இவைகளில் போய், நான் கொண்ட கொடிய துயரத்தை நீக்க வேண்டும், என்று பதிகம் பாடித்துதித்து அந்தத் திருவெண்பாக்கத்தில் ஊன்றுகோல் பெற்று அதன் பின்பு திருஊறலில் போய் வணங்கிக் காஞ்சிபுரத்தை அடைந்தார்.

**ஒருகண் பார்வை**

அங்கே காமக்கோட்டத்துக்குச் சென்று காமாட்சியம்மையை வணங்கித் துதித்துக் கொண்டு பின்பு திருவேரகத்தையடைந்து ஏகாம்பரநாத சுவாமியை வணங்கித் துதித்துச் "சிறியேன் செய்த பிழையைப் பொறுத்துச் சிறியேனுக்குத் தேவரீரைத் தரிசிக்கும் பொருட்டுக் கண்ணைத் தந்தருளும்", என்று பிரார்த்தித்தார்.

அப்போது கடவுள் இடது கண்ணை மாத்திரம் கொடுத்து தமது திருக்கோலத்தைக் காட்ட, சுந்தரமூர்த்தி சுவாமிகள் கண்டு பரவசமாகி, விழுந்து வணங்கி எழுந்து நின்று திருப்பதிகம் பாடி, பின்பு அந்தத் தலத்திலே சிலநாளிருந்து பின் திருவாரூர், திருநெல்வாயில், திருவாவடுதுறை இவைகளின்மேல் திருப்பதிகம் பாடித்துதித்து பின்பு திருப்பூந்துருத்தியை அடைந்து சுவாமியை வணங்கி அடியேன் மேலே பொருந்திய நோய் நீங்க அருள் செய்ய வேண்டும்", என்று பிரார்த்தித்தார். அதற்குக் கடவுள் "நீ இந்தக் கோயிலுக்கு வடப்புறத்தில் இருக்கின்ற குளத்திலே நீராடல் பண்ணுவாயானால் இந்நோய் நீங்கிவிடும்", என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அது கேட்டுச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தொழுது புறப்பட்டு அந்தத் தீர்த்தத்தையடைந்து சுவாமியை வணங்கிக் கொண்டு அவருடைய திருவடிகளில் அன்போடு பதிந்த இருதயத்துடனே அந்தத் தீர்த்தத்திலே நீராடினார். உடன் அவருடைய திருமேனி நோய் நீங்கிக் கரையேறி ஆடை தரித்துக் கொண்டு கோயிலிலே போய்ச் சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

**கண்பார்வை பெற்றார்**

பின்பு அதை விட்டு நீங்கி திருவாரூரில் சென்று சாயுங்காலத்திலே தூவாயரை வணங்கும்படி அடியார்களோடு கோயிலில் பிரவேசித்து வணங்கிக் கண்

கொடுக்கும்படி திருப்பதிகம் பாடிய பின்பு வெளியே போய் ஓரிடத்தில் இருந்து பின் அடியார்களோடு மூலத்தானத்திலே திருவொத்தாயாமத்திலே சுவாமி தரிசனம் செய்வதற்கு எழுந்து வழிக்கொண்டு வழியிலே அடியார்கள் தமக்கெதிரே வர அவர்கள் முகத்தைப் பார்த்து ஆசையினாலே ஒரு திருப்பதிகம் பாடி, பின்பு தேவாசிரிய மண்டபத்தின் முன்னே போய் வணங்கிக் கோபுரத்தையும் வணங்கி உள்ளே புகுந்து சுவாமி சன்னிதானத்தில் போய் விழுந்து வணங்கி எழுந்து நின்று சுவாமியைத் தரிசிக்க ஒரு கண் போதாமையால் அதிக துக்கங் கொண்டு" சுவாமி!, அடியேனுக்கு வலது கண்ணையும் கொடுத்து இந்தத் துக்கத்தை நிவர்த்தி செய்ய வேண்டும் என்று பிரார்த்தித்துத் திருப்பதிகம் பாட அப்பொழுது வன்மீக நாதர் திருவுளமிரங்கி அவருக்கு வலது கண்ணையுங் கொடுத்தருளினார்.

உடனே சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவசமாய்ப் பலமுறை விழுந்து எழுந்து மிகுந்த களிப்பினோடு ஆடி, பாடி இன்பசாகரத்தில் அமிழ்ந்து வன்மீக நாதருடைய திருக்கோலத்தை இரண்டு கண்களினாலும் தரிசனம் செய்து வணங்கித் துதித்துக் கொண்டு புறப்பட்டுத் தேவாசிரிய மண்டபத்திலே போயிருந்தார்.

**பரவையார் கோபம்**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் முன் கோயிலுக்குப் போகும்போது அவருடைய தொண்டர்களில் சிலர் பரவையார்வீட்டுக்கு போக நினைத்து, அவள் வீட்டு வாயில் படியில் போய் அந்தப் பரவையார் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூரிலே சங்கிலியாரை திருமணம் செய்த சங்கதியைக் கேள்விப்பட்டு அதிக துக்கமும் கோபமும் கொண்டிருந்ததால் உள்ளே போகாமல் திரும்பித் தேவாசிரிய மண்டபத்திலிருந்த சுந்தரமூர்த்தி சுவாமியை அடைந்து, "சுவாமி! தேவரீர் திருவொற்றியூரிலே சங்கிலியாரைத் திருமணம் செய்த சமாசாரங்கள் மற்றும் கேள்விப்பட்டு

கோபங்கொண்டமையால் நாங்கள் இப்பொழுது அவர் வீட்டுப் பக்கத்தில் போயும் உள்ளே போக விரும்பாமல் திரும்பிவிட்டோம்" என்றார்கள்.

நாயனார் அதைக் கேட்டு மனங்கலங்கி, "இனி இதற்கு என்ன செய்வோம்?" என்று ஆலோசித்து உலகியல் காரியங்களில் வல்லமையுள்ள சில மனிதர்களைப் பரவையார் கொண்ட கோபத்தை நீக்கிக் கொண்டு வரும் பொருட்டு அவரிடத்தில் அனுப்பினார். அவர்கள் பரவையார் முன் சென்று அவருக்குப் பல நியாயங்களை எடுத்துச் சொல்லி சுந்தரமூர்த்தியுடனே முன் போலக் கூடியிருக்க வேண்டும் என்று பிரார்த்தித்தார்கள்.

அதற்குப் பரவையார் சம்மதிக்காமல் கோபம் அதிகரித்து "எனக்குக் குற்றம் செய்த அவர் பக்கமாய்ப் பேசுவீர்களாகில் நான் பிராணத் தியாகம் செய்வேன்" என்றார். அவர்கள் அதைக் கேட்டு மிகவும் பயந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தில் போய் நடந்த சங்கதிகளைச் சொல்ல, நாயனார் அதைக் கேட்டு மிகுந்த துக்க சாகரத்தில் மூழ்கி சமீபத்திலிருந்த எல்லோரும் நித்திரை செய்யும் போது நள்ளிரவுப் போதிலே தனியே வருத்தப்பட்டுப் பரமசிவனுடைய திருவடிகளைத் தியானித்து "ஆத்துமாக்கள் கர்மங்களைத் தொலைக்கும் பொருட்டு அவைகளின் பலங்களைக் கொடுத்தருளுகின்ற கடவுளே! அடியேன் பூர்வத்தில் செய்த கர்மத்தினால் அடியேனுக்குத் தேவரீரால் கூட்டப்பட்ட பரவையினுடைய கோபத்தை தேவரீர் இப்பொழுது எழுந்தருளிவந்து தீர்த்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

அப்பொழுது பரமசிவனானவர் எழுந்தருளிவந்து அவரைப் பார்த்து, "உனக்கு நிகழ்ந்தது என்ன?" என்று கேட்க அவரை வணங்கித் துதித்து சுந்தரர் சொல்லுவார், "சுவாமி! தேவரீருடைய திருவருள் கூட்ட அடியேன் திருவொற்றியூரிலே சங்கிலியைத் திருமணம் செய்த சமாசாரம் முழுவதையும் பறவையானவள் கேள்விப்பட்டு

தன்னிடத்திலே நான் வந்தால் தான் நிச்சயமாய் மரணத்தியாகம் செய்து கொள்ளுகிறதென்று சொல்லிக் கொண்டிருக்கிறாளாம். சிறியேன் தேவரீருக்கு அடியேனும் தேவரீர் சிறியேனுக்குத் தோழனும் ஆண்டவருமாயிருப்பது மெய்யானால் சிறியேன் படும் துன்பத்தைப் பார்த்துத் தேவரீரே! இந்த இரவில் பரவை வீட்டுக்குப் போய் அவளுடைய கோபத்தைத் தீர்த்தருள வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தார்.

**பரவையே! கதவைத்திற!**

சுவாமி அதைக்கேட்டு, "தோழனே! நான் இப்பொழுது உனக்குத் தூதனாகி, பரவைவீட்டுக்குப் போகிறேன், நீ உன் துன்பத்தை நீக்கு!" என்று திருவாய் மலர்ந்தருளி, தேவரும் முனிவரும் பூதங்கள் முதலாகிய அனைவரும் தோத்திரம் செய்துகொண்டு பக்கத்திலே சூழும்படி பரவையார் வீட்டை நோக்கி நடந்து, அந்த வீட்டு வாயிற்படியைஅடைந்து தம் மோடு வந்த கணங்கள் பக்கத்திலே நிற்க தான் தனக்கு அருச்சனை செய்கின்ற ஓர் ஆதிசைவர் வடிவங்கொண்டு உள்ளே தனியே சென்று, கதவு பூட்டியிருப்பதால் அதற்கு முன்னே நின்று "பரவையே! கதவைத்திற!" என்று அழைத்தார்.

நித்திரை இல்லாமல் துக்கத்தோடிருந்த பரவையார் அதைக்கேட்டுத் தம்மையழைத்தவர் சுவாமிக்கு அருச்சனை செய்கின்ற ஆதிசைவரென்று நிச்சயித்து அருச்சனை செய்யப்பட்ட இந்தப் பெரியவர் இந்த நள்ளிரவுப் போதிலே இங்கே வந்தது என்ன காரணமென்று பயந்து அதிசீக்கிரமாய்ப் போய் கதவைத்திறந்து, அவரைக் கண்டு "சுவாமி! தேவரீர் இப்போது இங்கே எழுந்தருளி வந்த காரணம் என்ன?" என்று கேட்டாள்.

**இங்கே ஒரு சார்பு உண்டோ?**

அதற்குச் சுவாமி, "நான் சொல்வதை நீ தள்ளாமல் செய்வதானால் சொல்லுவேன்," என்று சொல்ல, பரவையார்

"நீர் அதைச் சொல்லும், அஃது என்னால் நடத்தும் வேலையானால் செய்வேன்", என்றாள். கடவுள், "சுந்தரமூர்த்தி இங்கே வருவதற்கு நீ சம்மதிக்க வேண்டும்" என்று சொல்ல, பரவையார் "உம்முடைய பெருமை நன்றா யிருக்கிறது. என்னைப் பிரிந்து திருவொற்றியூரிலே போய்ச் சேர்ந்து அங்கே சங்கிலியைத் திருமணம் செய்து கொண்டவர்க்கு இங்கே ஒரு சார்பு உண்டாகுமோ?" என்றார்.

சுவாமி அதைக்கேட்டு, "உனக்குச் சுந்தரமூர்த்தி செய்த குற்றங்களை மனதிலே வைக்காமல் கோபம் நீங்கி அவரை இங்கே வருவிக்கும் பொருட்டு உன்னை நான் வேண்டிக்கொண்டேன். நீ தடுப்பது தகுதியல்ல" என்று அருளிச் செய்ய, பரவையார், "நீர் இந்தக் காரியத்தின் பொருட்டு இந்த வீட்டுக்கு வருவது உம்முடைய பெருமைக்குத் தகுதியல்ல, அவர் இங்கே வருவதற்கு நான் சம்மதிக்க மாட்டேன். நீர் போய்விடும்" என்றார்.

கடவுள் அதைக்கேட்டு உள்ளே சிரிப்புக் கொண்டு தன்னுடைய திருவுருவத்தைப் பரவையாருக்குக் காட்டாமல் சுந்தரமூர்த்தியிடத்தில் சென்றார். இவரைச் சுந்தரமூர்த்தி மகிழ்ச்சியோடு எதிர்கொண்டு வணங்கி அவருடைய திருமுகத்திலே தோன்றிய சிறப்பைக் கண்டு அவருடைய திருவுள்ளக்கருத்தை அறியாமல் தான் நினைத்த கருத்தை முடித்து வந்தனர் என்று துணிந்து, "தேவரீர் அன்றைக்குச் சிறியேனை ஆட்கொண்டதற்கு இசைய இன்றைக்குப் பரவையுடைய கோபம் முழுவதையும் தீர்த்து வந்தருளினீர்!" என்றார்.

கடவுள் அதைக் கேட்டு, "நீ வேண்டிச் சொன்னபடி நாம் பரவை வீட்டுக்குப் போய் அவளிடத்திலே பேசினோம் அவள் சம்மதப்படவில்லை", என்றார். உடனே நாயனார் நடுக்கங்கொண்டு வணங்கி, "தேவரீர் என்னுடைய அடிமைத் தன்மையை வேண்டுவதில்லையாகில் அன்றைக்கு என்னை

வலிய ஆட்கொண்டதேது? நான் படும் துக்கத்தைக் கண்டீர்! இன்றைக்கு நான் அவளிடத்திலே போவதற்கு நீர் அருள் செய்யாவிட்டால் என் உயிர் நீங்கிவிடும்".என்று சொல்லி விழுந்தார்.

கடவுள் அதைக்கண்டு, "நாம் இன்னமும் பரவையிடத்தில் போய் இப்போதே நீ அவளிடத்தில் சேரும்படிச் செய்குவோம், நீ துக்கிக்க வேண்டாம்", என்று அருளிச் செய்து கணங்களோடு மீண்டும் பரவையார் வீட்டை அடைந்தார்.

கடவுள் முன் பரவையார் தம்மிடத்தில் வந்த ஆதிசைவர், பரமசிவன் என்று பல அதிசயத் தோற்றத்தால் அறிந்து பயங்கொண்டு, "ஐயோ! கெட்டேன்! எங்கள் சுவாமி வாக்குக்கு எதிர் வாக்குப் பேசினேனே", என்று புலம்பி நித்திரை செய்யாமல் வழியையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

பரமசிவனானவர் தாம் என்று தெரியும்படித் தேவர் முனிவர் முதலான அனைத்துக் கணங்களும் சூழும்படிப் பரவையார் வீட்டினுள்ளே பிரவேசித்தார். பரவையார் அது கண்டு அதிசீக்கிரமாக எழுந்து போய் கடவுளுடைய திருவடியிலே விழுந்து வணங்க, கடவுள் அவரைப் பார்த்து, "பரவையே! நாம் சுந்தரன் அனுப்ப திரும்பவும் உன்னிடத்திலே வந்தோம், நீ இன்னமும் முன்போல் தடுத்துச் சொல்லாமல் அவன் உன்னிடத்துக்கு வரும்படி நீ சம்மதிக்க வேண்டும்!" என்றார்.

அதற்குப் பரவையார், "தேவரீர்! அந்தணர் வடிவம் கொண்டு முன் இங்கே எழுந்தருளி வந்தீர். பின் உண்மையான இந்தத் திருக்கோலத்தோடு இப்போது எழுந்தருளி வந்துள்ளீர், நான் முற்பிறவியில் செய்த பலனோ!" என்று சொல்லி அதிசயித்து பின்பு, "அயனாலும் அரியாலும் அறியப்படாத தேவரீர் அன்பர் பொருட்டு இரவிலே மாறாமல் அங்கும் இங்கும் திரிந்து எளியவராவீராகில் சிறியேன் இதற்குச் சம்மதிப்படாமல் என்ன செய்வேன்?" என்றார்.

கடவுள் அதைக்கேட்டு, "நல்லது சொன்னாய் என்று திருவாய் மலர்ந்தருளி புறப்பட்டு சுந்தரமூர்த்தியிடத்தில் போனார். சுந்தரமூர்த்தி அவரைக் கண்டு எதிர்கொண்டு வணங்கி, சுவாமி என்ன சொல்வாரோ? என்று அறியாமல் "சுவாமி என்னுடைய உயிரைக் காக்காமல் இடர் செய்கின்ற பரவையிடத்தில் இருந்து என்ன உத்தரம் கொண்டு வந்தீர்?" என்று கேட்க, கடவுள் "உன்மேலே பரவை கொண்ட கோபத்தை நீக்கினோம், நீ இனி அவளிடத்தில் போகலாம்" என்றார்.

**பிரிந்தவர் கூடினர்**

நாயனார் அது கேட்டு மனத்திலே களிப்பு கொண்டு "சுவாமி! போகம், மோட்சம் இரண்டையும் கொடுத்தருளுகின்றவர் தேவரீரே என்பதை யாவருக்கும் தெரிவித்தீர்! இனி எனக்கு இடர் ஏது?" என்று சொல்லித் திருவடியிலே விழுந்தார். உடனே பரமசிவனார் மறைந்தருளினார்.

விழுந்த நாயனார் எழுந்து பரவையார் வீட்டுக்குப் போக அப்போது அவருடைய சுற்றத்தார்களெல்லாம் விழித்து எழுந்து நாயனார் பக்கத்திலே சூழ்ந்துவர தேவர்கள் மலர்மாரி பொழிந்து துதிக்கச் சென்று பரவையார் வீட்டை அடைந்தார். அதற்கு முன் விருப்பத்தோடும் தன்னுடைய வீடு முழுவதிலும் அலங்கரித்து தூபதீபங்களும் நிறைகுடமும் நிறைத்து தோழியர் களோடு வாயிற்படியிலே வந்து வரவு பார்த்து நின்ற பரவையார் அங்கே எழுந்தருளி வந்த நாயனாரைக் கண்டு மிக்க மகிழ்ச்சி கொண்டு அவரை வணங்க அவர் கையினாலே பரவையாரைப் பிடித்துக்கொண்டு உள்ளே போய்ச் சேர்ந்தார். அந்த இரண்டு பேரும் பரமசிவனுடைய திருவருளின் மகிமையைப் புகழ்ந்து கொண்டு முன்போல ஐக்கியமாய்க் கூடியிருந்தார்கள்.

**கலிக்காமர் சினம்!**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தினந்தோறும் சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகங்கள் பாடிக் கொண்டு திருவாரூரில் வசிக்கும் காலத்திலே, தாம் பரமசிவனைத் தூதனுப்பிய சமாசாரத்தைத் திருப்பெருமங்கலத்திலிருந்த ஏயர்கோன் கலிக்காம நாயனார் கேள்வியுற்று அது தகுதியல்ல என்று தன்மேலே கோபங்கொண்டு இருந்ததை அறிந்து அதைக் குறித்துப் பரமசிவனுக்கு விண்ணப்பம் செய்தார்.

பரமசிவன் அந்தக் கலிக்காம நாயனாரைச் சூலை நோயினால் வருத்தப்படச் செய்து அவரிடத்தில் எழுந்தருளி சுந்தரனாலல்லாமல் இந்த நோய் தீராது என்று அருளிச் செய்து அவர் சுந்தரமூர்த்தியைக் கொண்டு அந்த நோயைத் தீர்த்துக் கொள்வதற்கு உடன்படாமையைக் கொண்டு சுந்தரமூர்த்தியிடத்தில் போய் "நம்முடைய ஏவலாலே கலிக்காமனை வருத்துகின்ற சூலை நோயை நீ போய் தீர்ப்பாய்!" என்றார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதைக் கேட்டு மனம் மகிழ்ந்து அவரிடத்திற்குப் போகும்படி புறப்பட்டு சூலை நோயைத் தீர்க்கும்படித் தாம் வரும் சமாசாரத்தை அவருக்குத் தெரிவித்தற்கு ஆள் அனுப்பினார். அந்த ஆளினால் அவர் வரவை அறிந்த கலிக்காம நாயனார் உடைவாளினாலே வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்துபோனார்.

**நானும் இறப்பேன்**

சுந்தரமூர்த்தி நாயனார் அங்கே போனபோது கலிக்காம நாயனார் இறந்து கிடந்ததைக் கண்டு, "நானும் இவர் போல இறந்து போவேன்!" என்று சொல்லி உடைவாளை எடுத்தார். உடனே பரமசிவனுடைய திருவருளால் கலிக்காம நாயனார் உயிர் பெற்று எழுந்து அவர் கையிலிருந்த வாளைப் பிடித்துக்கொள்ள, அவர் விழுந்து வணங்கினார். கலிக்காம நாயனாரும் சுந்தரமூர்த்தி நாயனாரை விழுந்து வணங்கினார்.

அப்பால் இருவரும் எழுந்து ஒருவரை ஒருவர் தழுவி அதிக சிநேகமுள்ளவரானார்கள்.

பின் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கலிக்காம நாயனாருடனே திருப்புன்கூருக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து பதிகம் பாடி சில நாள் சென்ற பின்பு திருவாரூரை அடைந்தார். அவ்விடத்திலே சுவாமி தரிசனம் செய்துகொண்டு கலிக்காம நாயனார் தன்னுடைய ஊருக்குப் போய் விட்டார்.

பின்பு சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிலநாள் அங்கிருந்து பின் திருநாகைக் காரோணத்துக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து பதிகம்பாடி பொன், நவரத்தினங்கள், ஆபரணங்கள், ஆடைகள், குதிரைகள், உடைவாள்கள், இது முதலாகிய பலவும் பெற்று, பிற தலங்களையும் வணங்கிக் கொண்டு பின்பு திருவாரூரில் போயிருந்தார்.

**சேரமான் பெருமாள் வந்தார்**

அப்போது சேர மண்டலத்திலுள்ள கொடுங் கோளூரிலிருந்த சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய பக்தி மகிமையைப் பரமசிவனால் அறிந்து அவரைத் தரிசிக்க விரும்பி திருவாரூரை அடைந்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் மகிழ்ச்சியுடனே அவரை எதிர்கொள்ள அவர் சுந்தரமூர்த்தியை வணங்கினார். உடனே சுந்தரமூர்த்தியும் அவரை வணங்கி ஒருவர்க்கொருவர் தழுவிக்கொண்டு பின்பு சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாரைக் கையிலே பிடித்து அழைத்துக்கொண்டு கோயிலிலே பிரவேசித்து, சுவாமி தரிசனம் செய்துகொண்டு பரவையார் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் அவருக்கும் அவருடன் வந்த அடியார்களுக்கும் விருந்து செய்து சிலநாள் அவரோடு அங்கேயிருந்து பின்பு பாண்டிய நாட்டிலிருக்கிற மதுரை முதலாகிய சிவத்தலங்களுக்கு யாத்திரை செய்ய நினைத்து வன்மீக நாதரை வணங்கிக் கொண்டு திருவாரூரை நீங்கிக் கீழ்வேளூர், நாகைக் காரோணம், திருமறைக்காடு,

அகத்தியான்பள்ளி, திருக்கோடிக் குழகர் என்கிற சிவத்தலங்களை அடைந்து சுவாமியைத் தரிசித்துத் திருப்பதிகம் பாடி பின்பு சோழ நாட்டைக் கடந்து பாண்டிய நாட்டைச் சேர்ந்து திருப்புத்தூரை வணங்கி மதுரைக்கு வந்தபோது தங்களை எதிர்கொண்ட பாண்டிய மன்னனுடனே மதுரைக்குப் போய் அங்கிருந்த சோழ மன்னனுடன் கோயிலுக்குப்போய்ச் சுவாமியை வணங்கிப் பதிகம் பாடி வெளிப்பட்டு பாண்டியனால் செய்து கொடுக்கப்பட்ட இரத்தினமாளிகையிலே சுந்தரமூர்த்தியும் சேரமான் பெருமாள் நாயனாரும் சிலநாள் வசித்து நித்தியம் சுவாமி தரிசனம் செய்து வந்தார்கள்.

பின் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அந்த மூன்று மன்னர்களுடன் மதுரையை நீங்கி திருப்பூவணத்துக்குச் சமீபத்திலே வரும்போது பக்கத்திலே வந்த திருத்தொண்டர்கள் அந்தந்த தலங்களைக் காண்பிக்க அதன்மேல் திருப்பதிகம் பாடிக்கொண்டு திருப்பூவணம், திருக்கோத்திட்டை இந்தத் திருத்தலங்களில் போய், கோயிலில் பிரவேசித்துச் சுவாமி தரிசனம் செய்துகொண்டு திருப்பதிகம் பாடினார்.

அந்த அரசர் மூவரும் கேட்டு மகிழ்ந்து சுந்தரமூர்த்தி சுவாமியை வணங்கி அனுமதி பெற்றுக் கொண்டு பாண்டிய மன்னரும் சோழ மன்னரும் மதுரைக்கு வந்து விட்டார்கள். பின்பு சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாரோடும் அந்தத் திருத்தலத்தை விட்டு திருக்குற்றாலம், குறும்பலா, திருநெல்வேலி இந்தத் திருத்தலங்களில் போய், சுவாமி தரிசனம் செய்து கொண்டு இராமேசுவரத்திற்குப் போய் சுவாமி தரிசனம் செய்துகொண்டு சிலநாள் அங்கேயிருக்கும் போது ஈழ மண்டலத்திலிருக்கிற திருக்கோதீசுவரம் என்னும் திருத்தலத்திலிருக்கிற கடவுளின் மேல் திருப்பதிகம் பாடி வணங்கி பின்பு இராமேஸ்வரத்தை விட்டு திருச்சுழியல் என்னும் திருத்தலத்திற்குப் போய் தரிசனம் செய்து பதிகம் பாடிக்கொண்டு அங்கேயிருக்கும்

போது சுவாமி அவருக்குச் சொப்பனத்திலே பாலிய வயதுள்ள புருடனாக வடிவங்கொண்டு கையிலே பொன் செண்டும் தலைமேல் சுழியமும் வைத்தக்கொண்டு தோன்றி, "நம்முடைய இருப்பிடம் காண்போம்," என்று சொல்லி மறைந்தருளினார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் விழித்து எழுந்து திருவருளை வியந்து தாம் கண்ட சொப்பனத்தைச் சேரமான் பெருமாள் நாயனாருக்குத் தெரிவித்து, திருச்சுழியலை நீங்கிப் பதிகம் பாடிக்கொண்டே திருக்கானப் பேரூருக்குப் போய் சுவாமி தரிசனம் பண்ணி திருப்பதிகம் பாடி பின்பு திருப்புனவாயிலை அடைந்து சுவாமியைத் தரிசித்து திருப்பதிகம் பாடி பின் பாண்டிய நாட்டை விட்டுச் சோழமண்டலத்தை அடைந்து பாதாளீசுவரம் என்னும் திருத்தலத்தை வணங்கி திருப்பதிகம் பாடி அரசரோடும் பரவையார் வீட்டில் போயிருந்தார்.

பின்பு பலநாள் சென்றபின் சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தியை வணங்கித் தம்முடைய ஊருக்கு வரும்படி பிரார்த்திக்க, சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதற்கு இசைந்து சேரமான் பெருமாள் நாயனாரோடு எழுந்து போய் வன்மீக நாதரை வணங்கிக்கொண்டு திருவாரூரை நீங்கி திருக்கண்டியூரை அடைந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு புறப்பட்டார்கள்.

அப்போது வடகரையில் இருக்கின்ற திருவையாறு எதிரே தோன்ற சேரமான் பெருமாள் நாயனார் கண்டு வணங்கி சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பார்த்து, "சுவாமி என் மனம் திருவையாற்றை வணங்க விரும்புகின்றது. நாம் இந்நதியைக் கடந்து போய் வணங்குவோம்" என்றார்.

**வெள்ளம் விலகியது**

சுந்தரர் அதைக் கேட்டு அக்காவேரி நதியில் நீரானது இருகரையையும் அழித்து ஓடங்கள் செல்லாதபடி

பெருகுதலைக் கண்டு திருப்பதிகம் பாடினார். அப்பொழுது கடவுள், கன்று அழைத்தலைக் கேட்டு கூப்பிடுகின்ற பசுவைப்போல் சரம், அசரங்களெல்லாம் கேட்கும்படிக்கு ஓலம் என்று சொல்லியருளினார்.

உடனே காவேரி நதி வெள்ளம் பிரிந்து வழிகாட்டியது. அந்த வழியே அடியார்களோடு சுந்தரமூர்த்தியும் சேரமான் பெருமாள் நாயனாரும் போய் திருவையாற்றை அடைந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு திரும்பி காவேரி நதியில் முன் போன வழியிலேயே வந்து தென்கரையில் ஏறினார்கள்.

உடனே வெள்ளமானது தொடர்ந்து முன்போல ஆயிற்று. இந்த அதிசயத்தைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேரமான் பெருமாள் நாயனாரும் கண்டு திருவருளைத் துதித்துக்கொண்டு மேற்கு திசையை நோக்கி வழிக்கொண்டு கொங்கு நாட்டை அடைந்து அதைக் கடந்து மலை நாட்டில் சென்று கொடுங்கோளூரிலே போனார்கள்.

பின்பு சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளை திருவஞ்சைக் களத்துக்கு அழைத்துக்கொண்டு போனார். அஙகே சுந்தரமூர்த்தி சுவாமிகள், சுவாமி தரிசனம் செய்து பதிகம் பாடிப் புறப்பட்டார். பின் சேரமான் பெருமாள் நாயனார் தன் யானையின் மேலே முன்னே அவரை ஏற்றிப் பின்னே தான் ஏறி வெண்சாமரம் வீச தம்முடைய மாளிகையின் வாயிற்படியிலே புகுந்து இருவரும் யானையை விட்டிறங்கி உள்ளே போய்ச் சுந்தரமூர்த்தி சுவாமியைச் சிங்காசனத்தில் உட்காரச் செய்து அருச்சனை பண்ணி விருந்து செய்து சிலநாள் வைத்திருந்தார்.

அப்படியிருக்கப்பட்ட காலத்திலே ஒரு நாள் சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூரிலிருக்கின்ற வன்மீக நாதருடைய திருவடிகளை நினைத்து அவர் மேல்

திருப்பதிகம் பாடி பின்பு அந்தத் திருவாரூருக்குப் போகும்படி அடியார்களோடு எழுந்து வழிக்கொண்டு சென்றார். செல்லும் பொழுது சேரமான் பெருமாள் நாயனார் பிரியாதவராகி எழுந்து அவரைப்பின் தொடர்ந்து போகாதபடி தடுத்து, அதற்கு அவர் சம்மதிப்படாததைக் கண்டு மந்திரிகளை அழைத்து தம்முடைய நகரத்திலிருக்கின்ற களஞ்சியத்தி லுள்ள பொன்கள், இரத்தினங்கள், ஆபரணங்கள், ஆடைகள், சுகந்தவர்க்கங்கள், இது முதலான திரவியங்களெல்லாம் பல ஆள்களின் மேல் சுமத்தி அனுப்பும்படி ஆணையிட அவர்கள் அப்படியே செய்தார்கள்.

**கொள்ளை போயிற்று**

சேரமான் பெருமாள் நாயனார் அந்தச் சுமையாள்களைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய அடியார் கூட்டத்துக்குமுன் போகும்படி அனுப்பி அவரை விழுந்து வணங்க, அவர் இவரைத் தழுவி உத்தரவு கொடுத்து மலை நாட்டை நீங்கி வெகுதூரம் போய் திருமுருகன் பூண்டி வழியிலே போகும்போது பரமசிவன் தன்னுடைய பூதகணங்களைப் பார்த்து, "நீங்கள் வேடவடிவங்கொண்டு போய் சுந்தரனுடைய பண்டாரங்களைக் கைப்பற்றிக் கொள்ளுங்கள்," என்று ஆணையிட அவை சுந்தரமூர்த்தியினுடைய சுமையாள்கள் வருகிற வழியிலே வேடர்களாகிப் போய் வில்லை வளைத்து நாண் பூட்டி அம்புகளைத் தொடுத்து, "நாங்கள் உங்களைக் கொன்று போடுவோம், நீங்கள் இந்தத் திரவியங்களை எல்லாம் போட்டு விட்டுப் போங்கள் என்று சொல்லி கோபத்தினாலே குத்தி அந்தத் திரவியங்களை எல்லாம் பிடுங்கிக் கொண்டன.

அவர்கள் துன்பத்துடனே ஓடிப்போய் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பக்கத்திலே போய்ச் சேர்ந்தார்கள். அந்த வேடுவர்கள் சிவகட்டளையினாலே சுந்தரமூர்த்தி சுவாமிகள்

பக்கத்திலே போகாமல் நீங்கிவிட சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுருகன் பூண்டியில் போய், கோயிலிலே பிரவேசித்துச் சுவாமியை வணங்கி, "வேடுவர் பறிக்கும் இவ்வூரில் ஏன் இருக்கிறீர்?" என்று திருப்பதிகம் பாடினார்.

உடனே கடவுளுடைய திருவருளினால் அந்த வேடுவர் தாங்கள் பறித்த திரவியங்களை எல்லாம் அந்தக் கோவிலின் வாயிற்படியிலேயே கொண்டு போய் வைத்தார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதைக் கண்டு சுவாமியை வணங்கி அவைகளை எடுத்துக் கொண்டு முன்னே போகும்படி சுமையாள்களைப் போகவிட்டு, அதை நீங்கிக் கொங்க தேசத்தைத் தாண்டிப் போய்த் திருவாரூரை அடைந்து, அங்கே சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தார்.

பின்பு சிலநாள் பொறுத்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாரை நினைத்து அவரிடத்துக்குப் போகும்படி எண்ணி, சோழமண்டலத்தைத் தாண்டி கொங்க தேசத்தை அடைந்து திருப்புக்கொளியூரில் சென்று அங்கே ஒரு வீதியிலே இரண்டு வீடுகளில் ஒன்றிலே மங்கல ஓசையும் மற்றொன்றில் அழுகிற ஓசையும் எழுதலைக் கேட்டு அங்கேயிருந்த அந்தணர்களைப் பார்த்து, "இந்தஇரண்டு ஓசையும் ஒரே காலத்தில் எழும்புகிறது என்ன?" என்றார்.

**மணப்பறையும் பிணப்பறையும்**

அதற்கு அந்தணர்கள் ஐந்து வயதுள்ள இரண்டு பிள்ளைகள் குளித்தார்கள். அவர்களில் ஒருவனை முதலை விழுங்கிற்று. மற்ற ஒருவன் பிழைத்தான். இந்த வீட்டில் சப்தம் பிழைத்தவனுக்கு உபநயனம் செய்யும் சப்தம், அந்த வீட்டில் சப்தம் இறந்தவனைக் குறித்து அழுகிற சப்தம் என்று சொன்னார்கள்.

அதைக்கேட்டு திருவுளம் இரங்கி நின்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பிள்ளையை இழந்த அந்தணனும் அவன் மனைவியும் ஓடிவந்து முகமலர்ச்சியோடு அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர்களுடைய முகத்தைப் பார்த்து "பிள்ளையை இழந்தவர்கள் நீங்களா?" என்று சொல்லியருள, அவர்கள் பின்னும் வணங்கி, "சுவாமி! அது முன்னே நடந்து போயிற்று அது நிற்கட்டும்! தேவரீரை வணங்குவதற்கு வெகுகாலமாக ஆசைப்பட்டிருந்தோம். அந்த ஆசை பழுதாகாமல் தேவரீர் இங்கே எழுந்தருளப் பெற்றோம்!" என்றார்கள்.

அதைக்கேட்ட நாயனார் "அந்த அந்தணனும் அவன் மனைவியும் தங்கள் பிள்ளையை இழநத துன்பத்தை மறந்து நான் வந்ததற்காக மனம் மகிழ்கின்றார்கள். ஆகையால் இவர்கள் பிள்ளையை முதலை வாயிலிருந்து அழைத்துக் கொடுத்து அவிநாசியில் வீற்றிருக்கின்ற நமது கடவுளை வணங்குவேன்!" என்று அருளிச் செய்து, "அந்தப் பிள்ளையை முதலை விழுங்கிய குளம் எங்கே?" என்று கேட்டு அதன் கரையிலே எழுந்தருளி அந்த முதலை தான் விழுங்கிய பிள்ளையைக் கொண்டு வரும் பொருட்டுத் திருப்பதிகம் பாடியருள, எமன் அந்தப் பிள்ளையினுடைய உயிரைக் கொண்டு வந்து அந்த முதலையின் வயிற்றினுள்ளே முந்தின தேகத்தைச் சென்ற ஆண்டுகளின் வளர்ச்சியையும் உடையதாகத் தோற்றுவித்து, அதனுள்ளே போகும்படி விட்டான்.

**முதலையுண்ட பாலன்!**

உடனே முதலை அந்தப் பிள்ளையைக் கரையிலே கொண்டு போய் உமிழ்ந்தது. அப்போது தாயாரானவர் ஓடிப்போய் அந்தப் பிள்ளையை எடுத்துக்கொண்டு வந்து நாயகனோடு சுந்தரமூர்த்தி சுவாமியினுடைய திருவடிகளிலே விழுந்து வணங்கினார்கள்.

இந்த ஆச்சரியத்தைக் கண்ட தேவர்கள் ஆகாயத்தில் நின்று நாயனார் மேல் மலர்மாரி பொழிந்தார்கள். அந்தணர்கள் எல்லோரும் மேலாடைகளை ஆகாயத்திலே வீசி சப்தித்தார்கள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அந்தப் புதல்வனை அழைத்துக்கொண்டு அவினாசி என்னும் திருத்தலத்துக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடித் திரும்பி அந்தப் பிள்ளையின் வீட்டில் போய் அவனுக்கு உபநயனம் செய்வித்துப் பின் கொங்க தேசத்தைக் கடந்து மலையாள நாட்டை அடைந்து தம்மை வந்து எதிர் கொண்டழைத்த சேரமான் பெருமாள் நாயனாரோடும் அவர் வீட்டில் போய் இருந்தார்.

அப்படியிருக்கும் நாளிலே அந்த மலை நாட்டில் இருக்கின்ற சிவத்தலங்களுக்கெல்லாம் போய் சுவாமி தரிசனம் செய்து கொண்டு மகோதைக்குத் திரும்பினார். இப்படிப் பலநாள் சென்றபின் ஒருநாள் சேரமான் பெருமாள் நாயனார் நீராடல் செய்யும் போது சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக் களத்துக்குப் போய் அங்கே இருக்கின்ற சிவாலயத்தை வலம் வந்து உள்ளே போய் சன்னிதானத்திலே விழுந்து வணங்கி எழுந்து நின்று அக்கினியில் பட்ட மெழுகுபோல மனங்கசிந்துருக இரண்டு கண்களில் நின்று ஆனந்த அருவி சொரிய சரீரத்திலே உரோமஞ்சிதம் கொள்ள இரண்டு கைகளும் சிரசின்மேல் ஏறிக்குவிய "அடியேனை இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையிலிருந்து நீக்கித் தேவரீருடைய திருவடியிலே சேர்த்தருள வேண்டும்" என்று திருப்பதிகம் பாடியருளினார்.

அப்போது கைலாயகிரியிலே பரமசிவன், பிரம்மா முதலான தேவர்களைப் பார்த்து, "நீங்கள் போய் நம்முடைய அடியானாகிய சுந்தரனை வெள்ளையானையின் மேல் ஏற்றிக் கொண்டு வாருங்கள்!" என்று ஆணையிட்டார்.

தேவர்கள் அதைக் கேட்டு, சுவாமியை வணங்கி அனுமதி பெற்றுக் கொண்டு வெள்ளை யானையையுங்

கொண்டு திருவஞ்சைக் களத்தையடைந்து கோயிலை வலம் செய்து திருவாயிற் படியிலே போய், உள்ளே நின்று வந்த சுந்தரமூர்த்தி சுவாமியை எதிர்கொண்டு சுவாமியினுடைய ஆணையைத் தெரிவித்தார்கள். அப்போது சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமியை நினைத்து வணங்கி எழுந்து தேவர்களுக்கு எதிரே போனார். தேவர்கள் அவரைப் பிரதட்சணம் செய்து வெள்ளை யானைமேல் ஏற்ற, அவர் பஞ்சவாத்தியங்கள் சப்திக்கவும் தேவர்கள் எல்லாம் தோத்திரம் செய்து மலர்மாரி பொழியவும் தன்னுடைய தோழனாகிய சேரமான் பெருமாள் நாயனாரை திருவுளத்திலே நினைத்துக் கொண்டு சென்றார்.

**சேரமான் பெருமாள்**

சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்திகளுடைய செயலையறிந்து அந்தக் கணமே பக்கத்திலிருந்த ஒரு குதிரை மேலேறிக்கொண்டு திருவஞ்சைக் களத்துக்குப் போய் வெள்ளை யானை மேலேறிக்கொண்டு ஆகாசத்தில் போகப்பட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கண்டு தான் ஏறிய குதிரையின் காதிலே திருஐந்தெழுத்தை ஓதியருளினார். உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்தில் பாய்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய வெள்ளை யானையை அடைந்து அதை வலம் செய்து அதற்கு முன்னாகப் போயிற்று.

சேரமான் பெருமாள் நாயனாருடைய படைவீரர்கள் குதிரையின்மேல் போகப்பபட்ட அந்த நாயனாரைத் தங்கள் கண்ணுக்குத் தெரிகிறவரைக்கும் ஆகாயத்திலே கண்டு பின் காணாமல் மிகுந்த திடபக்தியினாலே உருவிய உடைவாள் களினாலே தங்கள் தங்கள் சரீரத்தை அரிந்து வீர யாக்கையைப் பெற்றுச் சேரமான் பெருமாள் நாயனாருக்கு முன்போய் அவரைச் சேவித்துக்கொண்டு போனார்கள்.

**சுந்தரா வந்தாயா?**

சேரமான் பெருமாள் நாயனார் முன்னே போக பின்னே போன சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகங்கள் பாடிக் கொண்டு போனார். போன உடனே இருவரும் தாங்களேறிய வாகனத்தை விட்டிறங்கி அநேகமான வாசற்படிகளைத் தாண்டி திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்கள்.

அங்கே சேரமான் பெருமாள் நாயனார் தடைப்பட்டு நிற்க சுந்தரமூர்த்தி சுவாமிகள் உள்ளே போய் சுவாமி சந்நிதானத்திலே விழுந்து வணங்கி எழுந்து தோத்திரம் செய்து நின்றார். சுவாமி அவரைப் பார்த்து சுந்தரா! வந்தாயா? என்றார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதனைக் கேட்டு, "சுவாமி! அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்து என்னை அடிமையாகக் கொண்டு பந்தத்தினின்றும் நீக்கி அடியேனுக்குத் திருவடி தந்தருளிய பெருங்கிருபையை என்னால் சொல்லத்தகுமோ?" என்று சொல்லி அனேக வணக்கங்கள் செய்து சிவானந்த வெள்ளத்தில் அழுந்தி நின்றார்.

**கணங்களுக்குத் தலைவர்**

பின்பு, "சுவாமி! தேவரீருடைய திருவடிகளை அடையும் பொருட்டு சேரமான் பெருமாள் திருவணுக்கன் திருவாயிலின் பக்கத்திலே வந்து நிற்கின்றார்" என்று சொல்ல, சுவாமி அவரை உள்ளே அழைப்பித்து, "நீயும் ஆலால சுந்தரனும் நம்முடைய கணங்களுக்கெல்லாம் தலைவராயிருங்கள்", என்று அருளிச் செய்தார். அதைக் கேட்டு சுவாமியை வணங்கி எழுந்து அவருடைய திருவருளை தலைமேற்கொண்டு சுந்தரர், ஆலாலசுந்தரராகி

முன்னே தான் செய்த திருத்தொண்டை செய்யவும், சேரமான் பெருமாள் நாயனார் கணநாதராகி அவர் செய்யும் தொழிலைச் செய்யவும் ஆனார்.

முன்னே பூமியில் அவதரித்த பரவையாரும் சங்கிலியாரும் வரிசையாக கமலினியாரும் அநிந்திதை யாருமாகி பார்வதி தேவிக்குத் தாங்கள் முன் செய்த திருத்தொண்டை செய்து வந்தார்கள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தான் வழியிலே அருளிச் செய்த திருப்பதிகத்தை இந்தத் தென்னகப் பூமியிலே பாடிப்பரவும் பொருட்டு வருணனிடத்திலே கொடுக்க, அவன் அதைத் திருவஞ்சைக் களத்திலே வைத்துத் தெரிவித்தான்.

பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா!



# தில்லைவாழ் அந்தணர் சருக்கம்

*2. தில்லைவாழ் அந்தணர்*

**கவி**

நல்லவா னவர்போற்றும் தில்லை மன்றுள்
நாடகஞ்செய் பெருமானுக் கணியார் நற்பொன்
தொல்லைவான் பணியெடுத்தற் குரியார் வீடும்
துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன் பாடத்
தில்லை வாழந்தணரென் றெடுத்து நாதன்
செப்புமரு ளுடையார் முத்தீயார் பத்திக்(கு)
எல்லைகாண் பரியாரொப் புலகிற் றாமே
ஏய்ந்துளா ரெமையாள வாய்ந்து ளாரே!

**கதை**

சிவத்தலங்கள் எல்லாவற்றுள்ளும் மகா முக்கியமாகிய சிதம்பரமாகிய சிவத்தலத்தில் இருக்கின்ற கனகசபையிலே ஆனந்தத் தாண்டவம் செய்தருளுகின்ற சபாநாயகருக்கு அருச்சனை செய்கின்ற அந்தணர்கள் தில்லை வாழந்தணரென்று சொல்லப்படுவார்கள்.

அவர்கள் மூவாயிரவர், அவர்கள் ரிக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்கிற நான்கு வேதங்களையும் அத்தியயனம் செய்தவர்கள். சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கல்பம் என்கிற வேதங்கள் ஆறையும் கற்ற வல்லவர்கள். ஆகவனீயம், காருகபத்தியம், தாட்சணாக்கினியம் என்னும் மூன்று அக்கினிகளையும் விதிப்படி வளர்க்கின்றவர்கள். குற்றமில்லாத மரபின் உதித்தவர்கள். இல்லற தருமத்தை ஏற்று நடக்கின்றவர்கள்.

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்கிற அறுவகைத் தொழில்களையும் செய்கின்றவர்கள். திருநீறு உருத்திராட்சம் என்கிற சைவசாதனங்களை விதிப்படி தரிக்கின்றவர்கள், காமிகம் முதல் வாதுளம் வரையிலுள்ள இருபத்தெட்டு சைவாகமங்களிலும் பிரதிபாதிக்கப்படுகின்ற சரியை, கிரியை, யோகம், ஞானம் என்கிற நான்கு பாதங்களை அறிந்து கடைப்பிடித்து ஒழுகுபவர்கள்.

சிவனிடத்தில் இடைவிடாமல் வைக்கப்படும் அன்பே தங்களுக்குச் செல்வமெனக் கொள்கின்றவர்கள். உயர்வு ஒப்பு இல்லாத கடவுளாகிய தியாகேசரே முன்காலத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருத்தொண்டத் தொகை பாடும்படி அருளிச் செய்தபோது, முதல் "தில்லை வாழந்தணர் தம்மடியார்க்கு மடியேன்" என்று அவர்களைத் தன்னுடைய திருவாக்கினால் எடுத்துச் சொன்னாரென்றால் அவர்களுடைய அளவிறந்த வல்லமையை நாம் சொல்ல வல்லமையோ?

*தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்*



## தில்லைவாழ் அந்தணர் சருக்கம்

*3. திருநீலகண்ட நாயனார்*

**கவி**

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ரானத்
 தீண்டிலெமைத் திருநீல கண்ட மென்று
சொல்லுமனை யாடனையே யன்றி மற்றுந்
 துடியிடையா ரிடையின்பந் துறந்து முத்தங்
கெல்லையி லோடிறை வைத்து மாற்றிநாங்க
 ளெடுத்திலமென் றியம்புமென விழிந்து பொய்கை
மெல்லியலாளுடன் மூழ்கி யிளமை யெய்தி
 விளங்கு புலீச்சரத்தானை மேவினாரே!

**கதை**

**அடியாரொருவர்**

சிதம்பரத்திலே குயவர் குலத்திலே பொய் சொல்லல் சிறிதுமின்றித் தரும நெறியிலே வாழ்கின்றவருமாய் இல்லறத்திலே நிற்பவருமாய் சிவபக்தியிலேயும் அடியார் பக்தியிலேயும் சிறந்தவருமாய் வாழ்ந்த தொண்டர் ஒருவர் இருந்தார்.

அவர் தம் குலத்துக்கு ஏற்ப மண்கலங்கள் செய்து விற்றுச் சீவனம் செய்தும், ஓடுகளைச் சிவனடியார்களுக்குக் கொடுத்தும் வந்தார்.

**திருநீல கண்டர்**

அவர் ஆதி காலத்திலே பரமசிவன் திருப்பாற் கடலிலிருந்து எழுந்த ஆலகால விடத்தை உலகம் பிழைக்கும் பொருட்டு உண்டபோது அவருடைய கண்ட (கழுத்து) மானது அவர் தம்மை அடைந்தவர்களுக்கு வரும் இடையூறுகளை நீக்கி அருளுவார் என்பதை எல்லாரும் அறிந்து கொள்ளும்படி ஓர் அறிகுறியாய் விளங்கும் பொருட்டு அதை உள்ளே போக வொட்டாமல் தடுத்துத் தானே தரித்துக்கொண்டது என்று நினைந்து அந்தப் பரமசிவனுடைய கண்டத்தைத் திருநீல கண்டம் என்று எப்பொழுதும் சிறப்பித்துச் சொல்லுவார். அதனால் அவருக்குத் திருநீல கண்ட நாயனார் என்ற பெயர் உண்டாயிற்று.

**ஆணையிட்டார்**

அவர் ஒரு நாள் அவ்வூரிலே வேசியிடத்திலே போய்த் தன் வீட்டுக்குத் திரும்பும்போது கற்பிலே சிறந்த அவர் மனைவியார் அதையறிந்து அதைக் குறித்துத் தம்முடைய மனத்திலே தோன்றிய கோபத்தை அடக்கிக் கொண்டு இல்வாழ்க்கைக்குரிய மற்ற பணிகளெல்லாம் செய்து புணர்ச்சிக்கு மாத்திரம் இசையாதிருந்தார்.

நாயகர், தம்முடைய மனைவியார் கொண்ட கோபத்தைத் தீர்க்கும் பொருட்டு அவர் சமீபத்திலே போய் வேண்டிய இரப்பு உரைகளைச் சொல்லி அவரைத் தீண்டும்படிப் போனார். அப்போது அவர் மனைவியார், "நீர் நம்மைத் தீண்டுவீராகில் திருநீலகண்டம்" என்று ஆணையிட்டார். நாயகர் அதைக் கேட்டு பரமசிவனுடைய திருநீலகண்டத்திலே தான் வைத்திருந்த பக்தி குறையா வண்ணம் அம்மனைவியாரைத் தொடாமல் நீங்கி "இவர் நம்மை என்று பன்மையாகச் சொன்னதால் இவரை மாத்திரம் அல்லாமல் மற்ற பெண்களையும் நான் மனத்தினால் நினைக்க மாட்டேன்," என்று உறுதி கொண்டார்.

**இல்லறத் துறவறம்**

அவர்கள் இருவரும் தங்கள் வீட்டில் நின்று புறப்படாதொழிந்து அந்த வீட்டிலே தானேயிருந்து இல்லறத்திற்குரிய பிற செய்கைகளெல்லாஞ் செய்து கொண்டு புணர்ச்சியில்லாததைப் பிறர் அறியாதபடி வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

இளமைப் பருவத்தையுடைய இருவரும் அந்த ஆணையை வைத்துக்கொண்டு பலவருடம் செல்ல யௌவனம் நீங்கி வயோதி(கிழம்)கர்களாகி வருத்தமுற்றார்கள். மற்றும் சிவபக்தியில் சிறிதும் குறையாதவர்களாகி இருந்தார்கள்.

**சிவயோகி வந்தார்**

இப்படியிருக்குங் காலத்தில் அருள் வடிவினராகிய பரமசிவன் அந்த அடியாருடைய மகிமையை உலகத்தார் தெரிந்து, அவருடைய தொண்டை அனுசரித்து உய்யும் பொருட்டு ஒரு சிவயோகி வடிவங் கொண்டு அந்த அடியவர் வீட்டுக்குப் போனார்.

அந்த அடியவர் அவரைக் கண்டு எதிர் கொண்டு வீட்டினுள்ளே அழைத்துக் கொண்டு போய் ஆசனத்திலேயிருத்தி அவருக்குச் சாத்திர விதிப்படி அன்பினோடு பூசை செய்து வணங்கி எழுந்து அஞ்சலி செய்து நின்று, "சுவாமி அடியேன் தேவரீருக்குச் செய்ய வேண்டிய குற்றவேல் யாது?" என்று கேட்க, சிவயோகியார் இந்த ஓட்டை வைத்திருந்து நாம் கேட்கும் போது கொடு, இந்த ஓட்டுக்குச் சமமான ஓடு எங்கும் இல்லை. ஆகையால் இதைப் பொன், இரத்தினங்களைவிடப் பத்திரமாகக் காப்பாற்ற வேண்டியது" என்று சொல்லிக் கொடுத்தார்.

அதை வாங்கித் தன் வீட்டில் பத்திரமாய் வைத்து விட்டுத் திரும்பி வந்து, போகும்படி எழுந்த சிவயோகியாருக்குப் பின் கொஞ்சதூரம் போய் அவரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு வீட்டிற்குத் திரும்பி வந்திருந்தார்.

பின்பு வெகுநாள் கழித்தபின் ஒருநாள் பரமசிவன் அந்த ஓட்டை அந்த இடத்தில் இல்லாதிருக்கும்படிச் செய்து, அந்த அடியாருடைய உண்மையைப் பிறர்க்குத் தெரிவிக்கும் பொருட்டு முன்போல சிவயோகி வடிவம் கொண்டு அவர் வீட்டுக்குப் போனார். அவர் சிவயோகியாரை முன்போல் உபசரித்து, "சுவாமி, தேவரீர்! இந்த வீட்டிற்கு எழுந்தருளி வந்தது அடியேன்கள் பூர்வசென்மத்தில் செய்த தவத்தினால்," என்று சொல்லி நிற்க, சிவயோகியார், நாம் முன்னாளிலே உன்னிடத்திலே கொடுத்த ஓட்டை இப்பொழுது கொடு, என்றார். அடியவர் அதைக் கொண்டு வந்து கொடுக்கும் பொருட்டு உள்ளே போய்ப் பார்த்து, அது காணாமையாலே திகைத்து அங்கே நின்றவர்களைக் கேட்டும் பிற இடங்களிலே தேடியும் காணாமல் சிவயோகியாருக்கு உத்தரம் சொல்வதற்கு ஒன்றுமில்லாமல் அங்கே நின்றார்.

**ஓடு எங்கே?**

சிவயோகியார், உள்ளே நின்ற அடியார் கேட்கும்படி "நொடிப்பொழுதில் எடுத்துக்கொண்டு வருகின்றேன் என்று போன நீ ஏன் இவ்வளவு நேரம் தாமதஞ் செய்து நிற்கிறாய்?" என்று கேட்க, அடியார் வந்து சிவயோகியாரை வணங்கி "சுவாமி! தேவரீர் கொடுத்து ஓடு வைத்த இடத்திலும் மற்ற எந்த இடத்திலும் தேடிப்பார்த்தும் அகப்படவில்லை. பழையதான அந்த ஓட்டைப் பார்க்கிலும் புதிதாகிய வேறே ஓர் ஓடு தருகிறேன். அதைத் தாங்கள் ஏற்று அடியேன் செய்த பிழையைப் பொறுத்து அருள வேண்டும்" என்று சொல்லிப் பிரார்த்தித்து நின்றார்.

உடனே சிவயோகியார் அவரைக் கோபித்துப் பார்த்து "நீ என்ன சொன்னாய்? நான் வைத்த மண்ணோடு தவிர பொன் ஓட்டைக் கொடுத்தாலும் நான் வாங்க மாட்டேன். நான் முன்னே உன்னிடத்தில் கொடுத்த ஓட்டையே கொண்டு வா!" என்று சொல்ல, அடியவர் "சுவாமி! தேவரீர் கொடுத்த ஓட்டைத் தேடியும் அகப்படவில்லை. வேறே நல்ல ஓட்டைக் கொடுக்கிறேன் என்று சொல்லியும் அதற்குச் சம்மதப்படாமல் என் ஓட்டையே கொண்டு வா என்று சொல்லுகிறீர், இந்தச் சொல் என் அறிவு முழுவதையும் ஒழித்து விட்டது" என்றார்.

**நானோ திருடன்?**

அதற்குச் சிவயோகியார், "நான் உன்னிடத்திலே வைத்த அடைக்கலப் பொருளை நீ எ நித்துக்கொண்டு பாவத்துக்குச் சிறிதும் பயப்படாமல் பல ட ாவங்கள் செய்கிறாய், சகலரும் அறியும்படி உன்னைத் தப்ப வொட்டாமல் மறித்து என் ஓட்டை வாங்கிக் கொண்டால் அல்லது நான் போகமாட்டேன்!," என்று சொல்ல, அடியவர், "சுவாமி! தேவரீர் கொடுத்த ஓட்டை நான் எடுத்துக்கொள்ளவில்லை, என்னிடத்திலே திருடு இல்லாமையை எப்படித் தெரிவிப்பேன், சொல்லும்!" என்றார்.

சிவயோகியார், உன் புத்திரனைக் கையில் பிடித்துக்கொண்டு குளத்திலே முழுகி நான் எடுத்துக்கொள்ளவில்லை என்று சத்தியம் பண்ணிக்கொடு, என்று சொல்ல அடியவர், அப்படிச் செய்வதற்கு எனக்குப் புத்திரன் இல்லையே! என் செய்வேன் சொல்லும்! என்றார்.

சிவயோகியார், "உன் மனைவியைக் கைப்பிடித்து நீரில் முழுகி சத்தியம் பண்ணிக்கொடு," என்று சொல்ல, அடியார் "நானும் என் மனைவியும் எங்களிடத்தில் உண்டாயிருக்கிற ஒரு சபதத்தினாலே ஒன்றாய் முழுகக்கூடாது. நான்மாத்திரம் குளத்திலே மூழ்கிச் சத்தியம் பண்ணித் தருகிறேன்! வாரும்!" என்றார்.

**என்னுடன் வா!**

அதற்குச் சிவயோகியார், "நான் முன்னே கொடுத்த ஓட்டைத் தராமலும் அதை எடுத்துக் கொள்ளவில்லை என்கிற பட்சத்தில் உன் மனைவியைக் கைப்பிடித்துச் சத்தியம் செய்து கொடுக்காமலும் மனம் வலித்திருக்கின்றாய், தில்லை வாழந்தணர்கள் கூடியிருக்கிற பெரிய சபையிலே இந்த சமாசாரத்தைக் குறித்துப் பேசப் போகின்றேன்," என்று சொல்லி அந்தச் சபைக்குப் போகத் திருநீலகண்ட நாயனாரும் அவருக்குப் பின்னே போனார்.

சிவயோகியார் அந்த அந்தணர்களைப் பார்த்து, "இந்தக் குயவன் தன்னிடத்திலே நான் வைத்த வோட்டைக் கொடுக்கவும் இல்லை, அதை இழந்தது மெய்யானால் தன் மனைவியைக் கைப்பிடித்துக் குளத்திலே முழுகிச் சத்தியம் பண்ணித்தரவும் இல்லை" என்றார்.

**சத்தியம் செய்வீர்!**

உடன் அந்தணர்கள் கூடி அடியவரைப் பார்த்து, "திருநீல கண்டரே! நடந்த சமாசாரத்தை நீர் சொல்லும்!" என்று கேட்க, அவர் "சுவாமிகளே! இவர் கொடுத்த ஓடு நான் வைத்த இடத்தில் இல்லாமல் மறைந்து போய் விட்டது. நான் தேடிப் பார்த்தும் அகப்படவில்லை. இதுவே நடந்த சமாசாரம்," என்றார். அதற்கு அந்தணர்கள், "இவர் கொடுத்த ஓட்டை நீர் இழந்தீராகில் இவர் கேட்டபடி உம்முடைய மனைவியைக் கைப்பிடித்துக் குளத்திலே மூழ்கிச் சத்தியம் செய்து கொடுப்பதே நியாயம்," என்றார்கள்.

அடியவர் அதைக் கேட்டுத் தான் தம்மனைவியாரைத் தீண்டாதிருப்பதைக் குறித்துப் பேசக் கூடாதவராய், "தகுந்தபடி குளத்திலே முழுகிச் சத்தியம் செய்து தருகிறேன் வாரும்! என்று சொல்லிச் சிவயோகியாருடன் தன்னுடைய வீட்டுக்குப்போய் மனைவியாரை அழைத்துக் கொண்டு

திருப்புலீச்சுரத்துக்கு முன்னிருக்கின்ற குளத்திலே போய் ஒரு மூங்கில் தடியை ஒரு பக்கத்திலே மனைவியார் பிடிக்க மற்ற ஒரு பக்கத்திலே தான் பிடித்துக்கொண்டு நீரிலே இறங்கினார்.

சிவயோகியார் அதைக்கண்டு, "உன் மனைவியைக் கைப்பிடித்துக்கொண்டு மூழ்கு," என்று சொல்ல திருநீலகண்ட நாயனார் அப்படிச் செய்யக் கூடாமையை உலகத்தார் அறியும்படி முன்னாளிலே தான் செய்த வேசி காமத்தாலுண்டாகிய சபதமும் அந்தப் பிரகாரம் தவறாமல் நடந்து வருதலும் சொல்லி முழுகிக் கரையிலேறினார்.

**இளமை பெற்றனர்**

அந்தத் திருநீலகண்ட நாயனாரும் அவர் தம் மனைவியாரும் மூப்புப் பருவம் நீங்கி இளமைப் பருவம் உடையவர்களானார்கள். அந்த அதிசயத்தைக் கண்ட அனைவரும் அங்கே நின்ற சிவயோகியாரைக் காணாமல் மயங்கி நின்றார்கள்.

**இறைவன் காட்சி**

சுவாமி பார்வதியோடும் காளைவாகனராய் ஆகாசத்திலே தோன்றினார். அப்போது திருநீலகண்ட நாயனாரும் அவர் மனைவியாரும் பூமியிலே விழுந்து வணங்கி எழுந்து நின்று தோத்திரம் செய்தார்கள். சுவாமி அவர்களைப் பார்த்து, "ஐம்புலன்களை வென்றதனாலே மேன்மை அடைந்த அன்பர்களே! எந்தக் காலத்திலும் இந்த இளமை நீங்காமல் நம்மிடத்திலிருங்கள்!" என்று சொல்லி மறைந்தருளினார்.

பக்தி வலிமையுள்ள திருநீலகண்ட நாயனாரும் அவர் மனைவியாரும் யாவராலும் செய்தற்கரிய பெருஞ்செய்கை களைச் செய்து சிவலோகத்தையடைந்து பேரின்பத்தை அனுபவித்து வாழ்ந்து இருந்தார்கள்.

**திருநீலகண்டத்துக் குயவனார்க் கடியேன்**



# தில்லைவாழ் அந்தணர் சருக்கம்

**4. இயற்பகை நாயனார்**

**கவி**

எழிலாரும் காவிரிப்பூம் பட்டி னத்துள்
இயல்வணிக ரியற்பகையா ரிருவர் தேட
வழிலாய பிரான்றூர்த்த மறையோ னாகி
ஆயிழையைத் தரவேண்டி யணைய வையன்
கழலாறப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக்
காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால் வந்த
பிழையாருஞ் சுற்றமொலாந் துணிந்து மீளப்
பிஞ்ஞகனா ரழைத்தருளப் பெற்று ளாரே!

**கதை**

**இயற்பகை**

சோழ மண்டலத்திலே காவிரிப்பூம்பட்டினத்திலே வைசியர் குலத்திலே குரு லிங்க சங்கமம் இந்த மூன்றிலும் பக்தியில் சிறந்தவரும் ஔதாரியம் உள்ளவரும் ஆகிய இயற்பகை நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

**எல்லாம் கொடுப்பார்!**

அவர் இல்லறத்திலிருந்து திருநீறு உருத்திராட்சம் தரித்த சிவ பக்தர்களுக்கு வேண்டியவைகளையெல்லாம் மகிழ்ச்சியோடு கொடுத்து வருவார். அப்படிக்கொடுத்து

வருங்காலத்திலே ஒருநாள் பரமசிவனானவர், அந்தஇயற்பகையார் அடியார்கள் விரும்பியவைகளை எல்லாம் கொடுத்தலைச் சகலருக்கும் தெரிவிக்கும் பொருட்டு ஓர் இளம்பிராய அந்தணர் வடிவம் கொண்டு திருநீறு தரித்து அவர் வீட்டிற்குச் சென்றார்.

அவர், இவரை அன்பினோடு எதிர்கொண்டு வணங்கி அழைத்துக்கொண்டுபோய் விதிப்படி அருச்சித்து, "சுவாமி! தேவரீர்! இங்கே எழுந்தருளியது பூர்வ பிறவியில் அடியேன் செய்த தவப்பயனே!" என்றார்.

**எதையும் கொடுப்பாரோ?**

அய்யர் அதைக் கேட்டு நாயனாரைப் பார்த்து "நீர் சிவனடியார்கள் எதை விரும்பிக் கேட்ட போதிலும் அதைத் தடை இல்லாமல் கொடுக்கிறதாக நான் கேள்விப்பட்டு உம்மிடத்திலுள்ள ஒரு பொருளை விரும்பி வந்தேன். நீர் தருவதற்கு இசைவீராகில் அந்தப் பொருளை இன்னது என்று சொல்லுவேன்!" என்றார். அதற்கு இயற்பகையார், "நீர் கேட்கும் பொருள் என்னிடத்தில் இருக்குமாயின் அதைச் சிவனடியாருக்குக் கொடுப்பதற்கு ஒரு தடையும் இல்லை. அதை இன்னதென்று சொல்லும்," என்று சொல்ல, அய்யர் "உம்முடைய மனைவியை விரும்பி வந்தேன்" என்றார்.

**முன்னிலும் மகிழ்ந்தார்**

அதுகேட்ட இயற்பகையார் முன்னிலும் அதிக மகிழ்ச்சி கொண்டு வணங்கி, "சுவாமி! அடியேனிடத்திலுள்ள பொருளைவிரும்பிக் கேட்டது அடியேனுடைய பாக்கியம்," என்று சொல்லி சீக்கிரத்திலே வீட்டினுள்ளே போய் தன் மனைவியாரைப் பார்த்து, "நான் இன்றைக்கு உன்னை இந்தச் சிவனடியார்க்குக் கொடுத்து விட்டேன்", என்றார்.

உடனே மனைவியார், மனங்கலங்கி, பின்னே தெளிந்து "பிராணநாதரே! நீர் இட்ட கட்டளையின்படிச் செய்வேன்" என்று சொல்லி வணங்க, நாயனார் மனைவியின் கைப்பற்றிக் கொடுத்துச் சிவனடியாரை வணங்கினார்.

மனைவியார் போய் அவருடைய பாதங்களிலே விழுந்து வணங்கி நின்றார். இயற்பகை நாயனார் அந்த அய்யரை வணங்கி, "இன்னும் அடியேன் செய்ய வேண்டிய பணி யாது?" என்றார்.

**இன்னும் என்ன செய்ய வேண்டும்**

அய்யர், "இந்தப் பெண்ணை நான் தனியே கொண்டு போகையில் உங்கள் மேமே பற்றுள்ள பந்துக்களையும் ஊரவர்களையும் கடக்கும் வரைக்கும் அவர்களால் எனக்கு ஓர் இடையூறும் உண்டாகாதிருக்கும்படி நீ துணையாக வரவேண்டும்" என்றார்.

இயற்பகை நாயனார், அதைக் கேட்டு, இவர் கட்டளை இடுவதற்கு முன்னே இதனை நினைத்துச் செய்யாமல் இவர் சொல்லும்படியாக வைத்துக்கொண்டேனே, இது குற்றம் என்று நினைத்துத் துக்கித்து ஆயுத சாலையில் போய்ப் போர்க்கோலம் கொண்டு கத்தியும் கேடயமும் எடுத்துக்கொண்டு அய்யரிடத்திற்கு வந்து வணங்கி அவரையும் மனைவியையும் முன்னே போகச்சொல்லித் தான் பின்னே போனார்.

**பெரும் பழி**

அப்போது அந்த நாயனாருடைய சுற்றத்தாரும், அவர் மனைவியாருடைய சுற்றத்தாரும் இயற்பகை, பைத்தியத்தினாலே தன் மனைவியைக் கொடுத்தாலும் அவளையொருவன் கொண்டு போவது நியாயமா? என்று தங்கள் குலத்துக்கு வரப்பட்ட பெரும் பழியை நீக்கிக்

கொள்ளும் பொருட்டு ஆயுதங்களை எடுத்துக்கொண்டு சண்டமாருதம் போல தீவிரமாய்ப் பின்னே நடந்து அந்த நகருக்குப் பக்கத்திலே போய் அய்யருக்கு இருபக்கத்திலும் நெருங்கிக் கர்ச்சனை செய்து, "ஓ துட்டனே! எங்கள் குலத்துக்குப் பழிவராதபடி எங்கள் குலப்பெண்ணை விட்டுப்போ," என்று சொல்லி அவரை வளைத்துக் கொண்டார்கள்.

**அய்யரின் அச்சம்**

அய்யர் அதைக் கண்டு அஞ்சினவர் போல இயற்பகை நாயனாருடைய மனைவியாரைப் பார்க்க, அவள், "சுவாமி! நீர் பயப்பட வேண்டாம்! என் நாயகர் அவர்களை வெல்லுவார்," என்றாள்.

**என்ன காரியம் செய்தாய்?**

இயற்பகை நாயனார் அதைக்கேட்டு, "அடியேன் அவர்கள் எல்லாரையும் கொன்று போடுகிறேன், தேவரீர் பயப்பட வேண்டாம்," என்று சொல்லி, அங்கே வந்த சுற்றத்தினரைப் பார்த்து, "நீங்கள் வந்தால் என் வாளுக்கு இரையாவீர்கள், ஒருவரும் எனக்கு முன் நில்லாமல் ஓடிப்பிழையுங்கள்," என்று சொல்ல, அவர்கள் "ஏதடா! இயற்பகை! என்ன காரியம் செய்தாய்? ஊரார்கள் சொல்லும் பழிப்புச் சொல்லுக்கும் எங்கள் சத்துருக்கள் நகைக்கும் நகைப்புக்கும் நீ சற்றாயினும் வெட்கப்படவில்லை, மனைவியை அந்தணனுக்குக் கொடுத்தோ நீ சாமர்த்தியம் பேசுவது நாங்களெல்லோரும் ஒன்றாக மடிந்தாலும் மடிவதே யல்லாமல் இந்த பெண்ணை விடோம்!" என்றார்கள்.

உடனே இயற்பகை நாயனார் அதிக கோபங்கொண்டு உங்கள் சரீரத்தைத் துண்டம் துண்டம் ஆக ஆக்கி விடுகிறேன் என்று சொல்லி எதிர்க்க, அவர்கள் அந்த நாயனாருடனே யுத்தம் செய்யத் தொடங்காமல் அந்த அய்யருக்கு முன்னே போய் அதிக கோபம் கொண்டு அவரைத் தடுத்தார்கள்.

நாயனார் அதுகண்டு கோபம் கொண்டு வாளினால் இடது சாரி வலது சாரியாக மாறி மாறிச் சுற்றி வந்து அவர்களைத் துண்டம் துண்டமாக எல்லாரையும் கொன்றுவிட்டு அய்யரைப் பார்த்து, "சுவாமி! தேவரீர் பயப்படாத படிக்கு இந்த நாட்டைக் கடக்கும் வரைக்கும் வருகிறேன்" என்று கூடப் போனார்.

**இங்கே வா!**

திருச்சாய்க்காடு என்கிற சிவத்தலத்துக்குச் சமீபத்தில் போகும் போது அய்யர் நாயனாரைப் பார்த்து, "நீர் இனிமேல் திரும்பிப் போகலாம்!" என்று சொல்ல, நாயனார் அவரை வணங்கித் துதித்து திரும்பி விட்டார். அப்போது, "இயற்பகையே! இங்கே வா!" என்று கூப்பிட நாயனார், "இதோ வந்துவிட்டேன், பயப்படாதிருங்கள்," என்று சொல்லிக்கொண்டு வர அய்யர் மறைந்தருளினார்.

**காளை வாகனத்தில்**

நாயனார் அய்யரைக் காணாமல் மனைவியை மாத்திரம் கண்டார். பின்பு பரமசிவன் ஆகாசத்திலே பார்வதி சமேதராகி காளை வாகனத்திலே எழுந்தருளி வந்தார். நாயனார் அவரைக் கண்டு வணங்கித் தோத்திரம் பண்ணினார். சுவாமி அவரை நோக்கி, "நம்மேலும் நம்முடைய அடியார் மேலும் அன்பு வைத்த இயற்பகையே! நீ உன் மனைவியோடும் நம்முடன் வா!" என்று சொல்லி மறைந்தருளினார்.

**சிவலோகம் கண்டனர்**

இயற்பகை நாயனாரும் அவர் மனைவியாரும் சிவலோகத்தை அடைந்து பேரின்பத்தை அனுபவித்து வாழ்ந்திருந்தார்கள். போரிலே இறந்த அவர் பந்துக்களும் வானுலகத்தை அடைந்து இன்பம் அனுபவித்தார்கள்.

**இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்!**



# தில்லைவாழ் அந்தணர் சருக்கம்

*5. இளையான்குடி மாறநாயனார்*

**கவி**

மன்னியவே ளாண்டொன்மை யிளசை மாறர்
வறுமையா லுணவுமிக மறந்து வைகி
உன்னருநள் ளிருள்மழையி லுண்டி வேண்டி
உம்பர்பிரா னணையவய லுழுத வித்தும்
செந்நென்முளை முதுமனை யலக்கா லாக்கிச்
சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து
பன்னவரு முணவருந்தற் கெழுந்த சோதிப்
பரலோக முழுதாண்ட பான்மையாரே!

**கதை**

**மாறனார்**

இளையான்குடி என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பயிர்த்தொழில் செய்பவருமாய், சிவனடியார் மேல் அன்பு கொண்ட சிந்தை உடையவருமாய் வாழ்ந்த மாறனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தன்னுடைய வீட்டில் சிவபக்தர்கள் எந்த குலத்தார் வந்த போதிலும் அவர்களை அன்போடு எதிர்கொண்டு அஞ்சலி செய்து இன்சொற்களைச் சொல்லி வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வந்து பாத பூஜை செய்து ஆசனத்திலிருத்தி சைவாகம விதிப்படி அருச்சித்து திருவமுது செய்விப்பார்.

**தரித்திரம் வந்தது**

அப்படி செய்விப்பதனாலேயே அவருக்குத் தனம் விருத்தியாயிற்று. பரமசிவனானவர் அந்த நாயனாருடைய மனதைச் சோதிக்கும் பொருட்டு நினைத்து அவருக்குத் தரித்திரம் உண்டாகும்படி அருள் செய்தார். அவர் கையிலிருந்த பொருளெல்லாம் போயும் நிலங்கள் முதலானதை விற்றும் பற்றாமல் கடன்கள் வாங்கி முன்போலவே சிவனடியார்களுக்கு அன்னம் கொடுத்து வந்தார்.

**ஒருநாள் பட்டினி**

அவர் ஒருநாள் வீட்டில் ஒன்றும் இல்லாமையினாலும் கடன் ஒருவரும் கொடாமையினாலும் தானும் தன் மனைவியாரும் பட்டினியாகக் கதவைச் சாத்திப் பூட்டிக் கொண்டு படுத்துக் கொண்டார்கள்.

அப்போது பரமசிவனானவர் சிவவேடம் கொண்டு எழுந்தருளி வந்து அந்த வீட்டுக் கதவைத் தட்டி அழைக்க, நாயனார் கதவைத் திறந்து அவரை உள்ளே அழைத்துக் கொண்டு போய் மழையினால் நனைந்த அவர் திருமேனியை ஆடையினாலே துடைத்து இருப்பதற்கு இடம் கொடுத்து அவருக்குத் திருவமுது செய்விக்க வேண்டும் என்கிற ஆசை மிகுதியால் தம்முடைய மனைவியாரைப் பார்த்து, "இந்த சைவர் மிகப் பசியோடு இருக்கிறார், நமக்கே உணவுக்கு ஒன்றுமில்லை, ஆயினும், இவருக்கு எவ்விதமானாலும் திருவமுது செய்விக்க வேண்டுமே, இதற்கு என்ன செய்வோம்?" என்றார். அதற்கு மனைவியார் "அண்டை வீட்டு மனிதர்களும் இந்நேரத்துக்குக் கொடுக்கமாட்டார்கள், என்ன செய்வேன்?" என்று புலம்பி, பின்பு இன்று பகற் காலத்தில் கழனியில் விதைத்த நெல்லை வாரிக்கொண்டு வந்தால் இயன்றபடி சோறு சமைக்கலாம் என்று சொல்லித் துக்கித்தார்.

**வருவிருந்து ஓம்பல்**

நாயனார் இதைக் கேட்டு மிகவும் மனம் மகிழ்ந்து அதற்கு உடன்பட்டு மழைபொழிகின்ற அந்த அர்த்த ராத்திரியில் ஒரு பெரிய கூடையைத் தலையில் கவிழ்த்துக்கொண்டு காலிலே வழி தடவிக்கொண்டு தன் கழனியிற்போய் அதிலிருந்த நெல் முளைகளைக் கையினாலே கூய்த்து வாரி கூடை நிறைய இட்டுத் தலைமேல் வைத்துக்கொண்டு திரும்பிச் சீக்கிரத்தில் வீட்டை அடைந்தார்.

**அமுது செய்விப்போம்**

அவரை எதிர் பார்த்துக்கொண்டு வாயிலிலே நின்ற மனைவியார் மகிழ்ச்சியுடனே அதை வாங்கிச் சேறுபோக நீர் விட்டுப் பிசைந்து கழுவிப்பின் நாயகரைப் பார்த்து "விறகு இல்லையே" என்றுசொல்ல, அவர் வீட்டில் கட்டியிருக்கிற பழைய வரிச்சுகளை அறுத்துத் தள்ளினார். மனைவியார் அதை முறித்து அடுப்பிலே வைத்து நெல் முளையை வறுத்து அரிசியாக்கிச் சமைத்துத் தன் நாயகரைப் பார்த்து, "இனி பதார்த்தத்துக்கு என்ன செய்வோம்!" என்றார். உடனே நாயனார் புறக்கடைத் தோட்டத்திலே போய சின்ன பயிர்களைக் கையினால் தடவிப் பிடுங்கிக்கொண்டு வந்து கறி சமைக்கும்படிக் கொடுக்க, மனைவியார் அவைகளை ஆய்ந்து தன்னுடைய சாமர்த்தியத்தினாலே மதுரமாக வெவ்வேற கறியமுதுகள் செய்து முடித்து நாயனாருக்கு அவைகளைத் தெரிவித்துச் "சைவரை அமுது செய்விப்போம்," என்று சொன்னார்.

நாயனார் அந்தச் சைவர் சமீபத்தில் போய் நின்று "சுவாமி அமுது செய்யஎழுந்தருளும்!" என்று சொல்லி அழைக்க, அவர் ஒரு பேரொலி வடிவினராய் எழுந்து தோன்றினார். அதைக் கண்ட இளையான்குடி மாற நாயனாரும் அவர் மனைவியாரும் திகைத்து நின்றார்கள்.

பின்பு பரமசிவன் பார்வதியோடும் காளை வாகனத்தே தோன்றி இளையான்குடி மாற நாயனாரைப் பார்த்து, "அன்பனே! நம்முடைய அடியார்களை அமுது செய்வித்த நீ உன் மனைவியோடும் நம்முடைய பதத்தை அடைந்து பேரின்பத்தை அனுபவித்துக் கொண்டு இரு", என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார்.

இளையான்றன்குடிமாறன் அடியார்க்கும் அடியேன்.



# தில்லைவாழ் அந்தணர் சருக்கம்

*6. மெய்ப்பொருள் நாயனார்*

**கவி**

*சேதிபர்நற் கோவலூர் மலாடமன்னர்*
*திருவேட மெய்ப்பொருளாற் றெளிந்த சிந்தை*
*நீதியினா ருடன்பொழுது தோற்ற மாற்றான்*
*நெடுஞ்சினமும் கொடும்படையு நிகழா வண்ண*
*மாதவர்போல் ஒருமுறைகொண் டணுகி வாளால்*
*வன்மைபுரிந் திடமருண்ட வந்த தத்தன்*
*காதலுற நமர்தத்தா வென்று நோக்கிக்*
*கடிதகல்வித் திறைவனடி கைக்கொண் டாரே!*

**கதை**

**மெய்ப்பொருள்**

சேதி நாட்டிலே திருக்கோவலூரிலே மலையமா நாட்டாருக்கு அரசராயும் வேதாகமங்களின் உண்மையை அறிந்தவராயும் சிவனடியார்களுடைய திருவேடத்தையே மெய்ப்பொருளென்று சிந்தை செய்பவருமாகிய மெய்ப்பொருள் நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தர்ம நெறி தவறாமல் தம்முடைய இராச்சியத்தைப் பரிபாலனம் செய்தும் எதிர்த்த பகைவர்களை வென்றும் சிவாலயங்களுக்கும் சிவபக்தர்களுக்கும் வேண்டியவை களை நிறைவாகக் கொடுத்தும் இப்படியாக அரசு செய்து வந்தார்.

### முத்தநாதன் சூழ்ச்சி

இப்படி நடத்தும் காலத்திலே முத்தநாதன் என்கிற ஓர் அரசனானவன் அவரை வெல்லுவதற்கு நினைத்து போர்க்கோலம் கொண்டு அவரோடு சண்டை செய்து தோற்று அவமானப் பட்டுப் போனான். பின்பு அவன் போர் செய்து அவரை வெற்றி கொள்ள மாட்டாமல் அவரிடத்திலேயிருக்கிற அடியார் பக்தியை அறிந்து, திருநீறு பூசும் அடியார் வேடங்கொண்டு அவரைக் கபடத்தினாலே வெல்ல நினைத்துச் சரீரமுழுவதிலும் திருநீறு தரித்துச் சடைகளைச் சேர்த்துக் கட்டி புத்தகக் கட்டுப்போல ஆயுதங்களைச் சேர்த்துக் கட்டி எடுத்துக்கொண்டு திருக்கோவலூரில் போய் மெய்ப்பொருள் நாயனாருடைய அரண்மனை வாயிலையடைந்தான்.

### சமயமறிந்து செல்க

அப்பொழுது வாயிற் காவலாளர் அவனுக்கு வணக்கம் கூறி "சுவாமி உள்ளே எழுந்தருளும்" என்று சொல்ல அந்த முத்தநாதன் உள்ளே போய் மற்ற வாயில்களையும் கடந்து கடைசி வாயில் படியை அடைந்தான். அப்போது அந்த வாயில் காவலனான தத்தன் என்பவன் "இப்பொழுது மன்னர் நித்திரை செய்கிறார். நீர் சமயமறிந்து போக வேண்டும்!" என்றான்.

### அந்தப்புரம் சென்றான்

அதைக் கேட்ட முத்தநாதன் "இவருக்குச் சாத்திர உபதேசம் செய்யப் போகின்றபடியால் நீ என்னைத் தடுக்கலாகாது" என்று சொல்லி உள்ளே நுழைந்து மெய்ப்பொருள் நாயனார் கட்டிலிலே மனைவியுடன் நித்திரை செய்யுமிடத்தில் போனான்.

அப்பொழுது மனைவியார் சீக்கிரமாக எழுந்து மெய்ப்பொருள் நாயனாரை எழுப்ப, அவர் விழித்து எழுந்து அவரை எதிர்கொண்டு வணங்கி நின்று, "சுவாமி! தேவரீர் இங்கே எழுந்தருளிய காரணம் யாது?" என்று கேட்டார்.

**இனி அருள் செய்யும்!**

அதற்கு முத்தநாதன், "பரமசிவன் ஆதி காலத்தில் அருளிச்செய்த சைவாகமங்களில் எவ்விடத்தும் காணப்படாத ஓர் ஆகமத்தை உமக்குப் போதிக்கும்படி கொண்டுவந்தேன்!," என்றான். நாயனார் அதைக் கேட்டு, "இதைக் காட்டிலும் உயர்ந்த பேறு அடியேனுக்கு உண்டோ? அதை வாசித்து அடியேனுக்கு அதன் பொருளை அருளிச் செய்ய வேண்டும்," என்று பிரார்த்திக்க, முத்தநாதன், "உன் மனைவி இல்லாமல் நீயும் நானும் வேறிடத்திருக்க வேண்டும்," என்றான். உடனே அரசர் தன் மனைவியாரை அந்தப்புரத்துக்குப் போகும்படிச் செய்து முத்தநாதனை ஆசனத்தில் மேலிருத்தித் தான் கீழேயிருந்துகொண்டு இனி அருள் செய்யும் என்றார்.

**மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள்**

முத்தநாதன் கையிலிருந்த ஆயுதக் கட்டை மடியின்மேல் வைத்து, புத்தகம் அவிழ்க்கிறதைப் போல அவிழ்த்து மெய்ப்பொருள் நாயனார் வணங்கும்போது உடைவாளை எடுத்து அவரைக் குத்த, அவர் 'சிவவேடமே மெய்ப்பொருள்,' என்று அவனை வணங்கினார். அதையறிந்த தத்தன் உள்ளே புகுந்து தன் கைவாளினாலே அப்பகைவனை வெட்டப் போனான்.

**தடுத்து நிறுத்தினார்**

அரசர் கையினால், "வேண்டாம்!" என்று தடுத்துத் தன்னைக் குத்தினதால் அடைந்த வருத்தத்தை சகிக்காமல் கீழே விழுந்தார். அப்போது தத்தன் அரசரைத் தலையினால் வணங்கி அவரைத் தாங்கி, "அடியேன் செய்ய வேண்டிய குற்றவேல் யாது?" என்று கேட்க,அரசராகிய நாயனார், "வழியிலே இவருக்கு யாரும் இடையூறு செய்யாதபடி இவரை அழைத்துக்கொண்டு போய் விடு," என்று சொன்னார்.

அப்படியே தத்தன் முத்தநாதனை அழைத்துக்கொண்டு போகும் போது, அந்த முத்தநாதன் அரசரைக் குத்தின சங்கதியை அறிந்தவர்கள் எல்லாரும் அவனைக் கொல்லும் படியாய் வந்து சூழ, அவர்களெல்லாரையும் "சிவ பக்தருக்கு ஒருவரும் இடையூறு செய்யாதபடி இவரை அழைத்துக் கொண்டு போய்விடும் பொறுப்பை அரசர் எனக்கு அளித்துள்ளார்," என்று சொல்லித் தடுத்தான்.

**அஞ்சி ஒதுங்கினர்**

அவர்களெல்லாரும் அதைக் கேட்டவுடனே பயந்து நீங்கினார்கள். தத்தன் முத்தநாதனை அழைத்துக்கொண்டு போய் நகரகத்தைக் கடந்து சென்று அனுப்பிவிட்டு நகரத்துக்குத் திரும்பினான்.

சிவ வேடங்கொண்ட முத்தநாதனுக்கு யாதொரு இடையூறுமின்றி அழைத்துக்கொண்டு போய்விட்ட சமாசாரத்தை கேட்பதற்காக தன்னைவிட்டு நீங்கும் உயிரைத் தாங்கிக்கொண்டு அரசரிருக்க, தத்தன் வந்து அரசரை வணங்கி நின்று "சிவபக்தரை இடையூறு வராதபடி கொண்டு போய்விட்டு வந்தேன்," என்று சொன்னான்.

**யார் செய்ய வல்லார்?**

நாயனார் அதைக் கேட்டு, "இன்றைக்கு எனக்கு நீ செய்த உபகாரத்தை வேறே யார் செய்ய வல்லவர்," என்று சொல்லி பின்பு தமக்குப்பின் அரசாளுதற்குக் குமாரர்களையும் அமைச்சர் முதலானவர்களையும் பார்த்து சைவாகம விதிப்படி திருநீற்றின் மேல் வைத்த அன்பைப் பாதுகாக்கும் படிப் போதித்துக் கனகசபையிலே இருக்கின்ற சபாநாயகரைத் தியானம் பண்ணினார்.

அப்பொழுது சபாநாயகர் மெய்ப்பொருள் நாயனாருக்குத் தோன்றி அவரைத் தம்முடைய திருவடியிலே சேர்த்தருளினார்.

வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கடியேன்



# தில்லைவாழ் அந்தணர் சருக்கம்

*7. விறன்மிண்ட நாயனார்*

**கவி**

விளங்குந் திருச்செங்கூர் வேளாண் டொன்மை
விறன்மிண்டர் திருவாரூர் மேவும் நாளில்
வணங்குலவு தொண்டரடி வணங்கா தேகும்
வன்றொண்டர் புறகவனை வலியவாண்ட
துளங்குசடை முடியோனும் புறகென் றன்பால்
சொல்லுதலு மவர்தொண்டத் தொகைமுன் பாட
உளங்குளிர வுளதென்றா ரதனா லண்ணல்
உவகைதர வுயர்கணத்து ளோங்கி னாரே!

**கதை**

**விறன்மிண்டர்**

மலையமாநாட்டிலே செங்குன்றூரிலே வேளாளர் குலத்திலே பரமசிவனுடைய திருவடிகளை மனத்தில் இருத்தி உட்பற்று, புறப்பற்றுகளை அறுத்தவரும் அடியார் பத்தியிலே உயர் வொப்பிலாதவரும் ஆகிய விறன்மிண்ட நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

**அடியார்க்கு அடியார்**

அவர் சிவத்தலங்களுக்குப் போகும் போதெல்லாம் முன்னே அடியார் திருக் கூட்டங்களுக்கு முன்னே போய் அவர்களை வணங்கிக்கொண்டு பின்பு சுவாமியை வணங்குவார்.

அவர் தாம் வசிக்கின்ற மலைநாட்டை நீங்கி பல திருத்தலங்களையும் தரிசித்துச் சிவனடியார் சூழ வாழும் திருவாரூரை அடைந்து சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தார்.

**பரமசிவனும் ஒரு புறகு**

அப்படியிருக்கும் நாளில் ஒருநாள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாசிரிய மண்டபத்திலிருக்கின்ற சிவனடியார் களை அடைந்து வணங்காமல் ஒரு பிரகாரம் ஒதுங்கிச் சென்றார். அதை அந்த விறன்மிண்ட நாயனார் கண்டு அடியார்களை வணங்காமல் செல்கின்ற வன்றொண்டன் அந்த அடியார்களுக்குப் புறகு, அவனை வலிய ஆட்கொண்ட பரமசிவனும் புறகு என்றார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அந்த விறன்மிண்ட நாயனாரிடத்திலுள்ள அடியார் பக்தி வலிமையைக் கண்டு அந்த அடியார்கள் மேலே திருத்தொண்டத் தொகை யென்னும் திருப்பதிகத்தைப் பாடியருளினார். அதைக் கேட்ட விறன்மிண்ட நாயனார் மிக மகிழ்ந்து இவ்வன் றொண்டருடைய மனம் அடியாரிடத்திலே பதிந்திருக் கின்றது என்று அருளிச் செய்தார்.

**கணங்களுக்குத் தலைவரானார்**

சிவனானவர் இந்த அடியார் பக்தி வலிமையைக் கண்டு அந்த விறன்மிண்ட நாயனாரைத் தம்மைச் சேவிக்கின்ற கணங்களுக்குத் தலைவராக்கியருளினார்.

விரிபொழில் சூழ் குன்றையார்
விறன்மிண்டர்க் கடியேன்



# தில்லைவாழ் அந்தணர் சருக்கம்

*8. அமர்நீதி நாயனார்*

**கவி**

பழையாறை வணிகரமர் நீதி யார்பாற்
பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலுநல்லூர்
குழைக்காதர் வந்தொருகோ வணத்தை வைத்துக்
கொடுத்ததனையெடுத்தொளித்துக் குளித்து வந்து
தொழிலாரு மதுவேண்டி வெகுண்டு நீரித்
துலையிடுங் கோவணநேர் தூக்கு மென்ன
எழிலாரும் பொன்மனைவி யிளஞ்சேயேற்றி
யேறினார்வா னுலகுதொழ வேறி னாரே!

**கதை**

**அமர்நீதி**

சோழநாட்டிலே பழையாறை என்னும் ஊரிலே வணிகர் குலத்திலே மிக்க செல்வம் உள்ளவரும் சிவனடியார்களை அமுது செய்வித்து அவரவர் குறிப்பையறிந்து கந்தை, கோவணம் என்பவை கொடுப்பவரும் ஆகிய அமர்நீதி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

**அமுது செய்வித்தார்**

அவர் திருநல்லூர் என்னும் சிவத்தலத்திலே மாகோச்சவ தரிசனம் செய்ய வரப்பட்ட சிவனடியார்கள் அமுது செய்யும் பொருட்டு ஒரு திருமடங்கட்டிக்கொண்டு

தம்முடைய சுற்றத்தார்களோடும் அவ்விடத்திற் போய்ச் சேர்ந்து மகோச்சவ தரிசனம் செய்து தம்முடைய மடத்திலே சிவனடியார்களை அமுது செய்வித்துக் கொண்டு மனமகிழ்ச்சியோடும் இருந்தார்.

### பிரம்மச்சாரி வந்தார்

அந்த நாளிலே ஒருநாள் பரமசிவனானவர் பிராம்மண வருணத்துப் பிரம்மச்சாரி வடிவங்கொண்டு இரண்டு கௌபீனங்களையும் விபூதிப் பையையும் கட்டியிருக்கின்ற ஒரு தண்டை கையிலே பிடித்துக்கொண்டு அந்தத் திருமடத்திற்கு வந்தார்.

அமர்நீதி நாயனார் அவரைக் கண்டு மனமகிழ்ச்சியோடும் முகமலர்ச்சியோடும் எதிர்கொண்டு வணங்கி, "சுவாமி தேவரீர்! இங்கே எழுந்தருளி வருவதற்கு அடியேன் பூர்வத்தில் என்ன தவம் செய்தேனோ?" என்று சொல்லி சம்மானம் பண்ண பிரம்மச்சாரியானவர் அவரைப்பார்த்து, "நீர் அடியார்களை அமுது செய்வித்து அவர்களுக்கு ஆடைகளும் கந்தைகளும் கீழ் கௌபீனங்களும் கொடுக்கின்றீர் என்பதைக் கேள்விப்பட்டு உம்மைக் காணுதற்கு விரும்பி வந்தோம்!" என்றார்.

அமர்நீதி நாயனார் அதைக் கேட்டு, "இந்தத் திருமடத்தில் அந்தணர்கள் திருவமுது பண்ணும் பொருட்டு அந்தணர்களே பாகம் பண்ணுவது உண்டு. தேவரீர் இங்கே அமுது செய்தருளவேண்டும்," என்று பிரார்த்தித்தார்.

### காவேரிக்குச் சென்றார்

பிரம்மச்சாரியானவர் அதற்கு உடன்பட்டு "நாம் காவேரியிலே நீராடி வருவோம், ஒருபோது மழைவரினும் தரித்துக் கொள்ளும் பொருட்டு நீர் இந்த உலர்ந்த கௌபீனத்தை வைத்திருந்து தாரும்!" என்று சொல்லி

தண்டிலே கட்டியிருக்கிற இரண்டு கௌபீனங்களில் ஒன்றை அவிழ்த்து, "நான் நீராடி முடித்து வருகிற வரையில் நீர் இதைவைத்திருந்து தாரும்!" என்று சொல்லி அவர் கையிலே கொடுத்துவிட்டுக் காவேரியிலே நீராடுவதற்குப் போனார்.

அமர்நீதி நாயனார் அந்தக் கௌபீனத்தை ஒரு தகுந்த இடத்திலே பத்திரமாக வைத்தார்.

**இறைவன் திருவிளையாட்டு**

பரமசிவனானவர் நாயனார் வைத்த கௌபீனத்தை அவ்விடத்தில் இல்லாமல் நீங்கும்படிச் செய்து நீராடல் முடித்து மழையிலே நனைந்து கொண்டு திருமடத்தை அடைந்தார். அமர்நீதி நாயனார் அதுகண்டு எதிர்கொண்டு, "சமையல் ஆயிற்று," என்று சொல்லி வணங்க, பிரம்மச்சாரியார் அந்த நாயனாரைப் பார்த்து, "ஈரம் மாற்ற வேண்டும், தண்டிலே கட்டப்பட்ட கௌபீனமும் ஈரமாக இருக்கிறது, உம்மிடத்திலே கொடுத்த கௌபீனத்தைக் கொண்டு வாரும்," என்றார்.

**எங்கே கௌபீனம்?**

அமர்நீதி நாயனார் சீக்கிரமாய் முன் வைத்த இடத்தைப் பார்த்துக் கௌபீனத்தைக் காணாதவராகித் திகைத்து மற்ற இடங்களிலும் தேடிக் காணாமையால் மிக்க துக்கங் கொண்டு வேறொரு கௌபீனத்தை எடுத்துக்கொண்டு பிரம்மசாரியார் முன்னே போய் நின்று, "சுவாமி! தேவரீர் தந்த கௌபீனத்தை வைத்த இடத்திலும் பிறவிடங்களிலும் தேடியும் அஃது அகப்படவில்லை. அது போனவிதம் இன்னதென்று அறியேன், வேறொரு நல்ல கௌபீனம் கொண்டு வந்துள்ளேன், இது கிழிக்கப்பட்ட கோவணம் அல்ல. நெய்யப்பட்ட கோவணமே! தேவரீர் நனைத்த கௌபீனத்தைக் களைந்து இந்தக் கௌபீனத்தைத் தரித்து அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளும்" என்று பிரார்த்தித்தார்.

பிரம்மச்சாரியார் அதைக்கேட்டு மிகக் கோபித்து, உம்முடைய நிலைமை நன்றாயிருக்கின்றது. நான் உம்மிடத்தில் கொடுத்து நெடுநாள் செல்லவுமில்லை, இன்றைக்கே நாம் உம்மிடத்தில் வைத்த கௌபீனத்தை நீர் எடுத்துக்கொண்டு அதற்குப் பிரதியாக வேறொரு கௌபீனத்தை ஏற்றுக்கொள்ளும் என்று நீர் சொல்வது என்ன? சிவனடியார்களுக்கு நல்ல கௌபீனம் கொடுப்பேனென்று நீர் ஊரிலே பிரசித்தம் செய்தது என்னுடைய கௌபீனத்தை அபகரிப்பதற்கோ?. நீர் செய்கின்ற இந்த வர்த்தகம் நன்றாயிருக்கின்றது என்று சொல்ல அமர்நீதி நாயனார் பயந்து முகம்வாடி நடுநடுங்கி "சுவாமி! அடியேன் இந்தக் குற்றம் அறிந்து செய்ததல்ல, இதைப் பொறுத்தருளும், தேவரீருக்கு செய்யவேண்டிய பணிவிடைகளெல்லாம் செய்கின்றேன். இந்தக் கோவணந்தவிர வெகு பொன்களையும் பட்டாடைகளையும் இரத்தினங்களையும் தருகின்றேன் ஏற்றுக் கொள்ளும்" என்றார்.

**ஒத்தநிறை கொடுப்பீர்!**

அதற்குப் பிரம்மச்சாரியார் கோபம் தணிந்தவர் போல் ஆகி, "பொன்களும் பட்டாடைகளும் இரத்தினங்களும் எனக்கு ஏன்? நான் கொடுத்த கோவணத்துக்கு ஒத்த நிறையுள்ள கோவணம் கொடுத்தால் போதும்!" என்று சொல்ல அமர்நீதி நாயனார் மனம் மகிழ்ந்து "எதனுடைய நிறைக்குச் சரியாகிய கௌபீனத்தைத் தரல் வேண்டும்?" என்று கேட்டார்.

பிரம்மச்சாரியார், "நீர் இழந்த கௌபீனத்தின் நிறைக்கு ஒத்த நிறையையுடைய கௌபீனம் இது," என்று சொல்லித் தமது தண்டிலே கட்டியிருக்கிற கௌபீனத்தை அவிழ்த்து, "இதற்கு ஒத்த நிறையுள்ளதான கௌபீனத்தை நிறுத்துத் தாரும்" என்றார்.

**தராசைக் கொண்டு வந்தார்**

அமர்நீதி நாயனார் "மிக நன்று," என்று சொல்லி, ஒரு தராசைக் கொண்டு வந்து நாட்ட, பிரம்மச்சாரியார் அந்தக் கௌபீனத்தை ஒரு தட்டிலே வைத்தார். அமர்நீதி நாயனார் தம்முடைய கையிலிருந்த கௌபீனத்தை மற்ற தட்டிலே வைத்தார். அஃது ஒத்த நிறையிலே நில்லாமல் மேலே எழுந்தது. அதைக் கண்டு அடியார்களுக்குக் கொடுக்கும்படித் தாம் வைத்திருந்த கோவணங்களை எல்லாம் கொண்டு வந்து ஒவ்வொன்றாக வைக்க வைக்க பின்னும் தூக்கிக் கொண்டு எழும்பியது. அதைப் பார்த்து ஆச்சரியம் அடைந்து பல ஆடைகளையும் பட்டுகளையும் கொண்டுவந்து வைக்க வைக்க பின்னும் உயர்ந்தது. அது கண்டு அநேக ஆடைப் பொதிகளைக் கொண்டு வந்து வைத்தார். வைத்தும் அந்தத்தட்டு பின்னும் மேலே எழும்பிற்று.

**தட்டு உயர்ந்தது**

அமர்நீதி நாயனார் அதைக்கண்டு மிகப்பயந்து பிரம்மச்சாரியாரை, "கணக்கில்லாத ஆடைப் பொதிகளையும் நூல் கட்டுகளையும் வைத்தும் தட்டும் உயர்ந்தது, என்னுடைய மற்ற திரவியங்களையும் இந்தத் தட்டிலே இடுதற்கு அனுமதித்தருளும்," என்றார்.

அதற்கு பிரம்மச்சாரியார், "இனி நாம் வேறே என்ன சொல்லுவோம், மற்ற திரவியங்களையும் இட்டுப் பாரும்," என்றார். அமர்நீதி நாயனார் நவரத்தினங்களையும் பொன், வெள்ளி முதலான பொருள்களையும் சுமை, சுமையாக எடுத்துவந்து இட இட தட்டு எழுந்தபடியே மேலே நின்றது.

அமர்நீதி நாயனார் அதைக் கண்டு பிரம்மசாரியாரை வணங்கி, "என்னுடைய திரவியங்களில் இனிமேல் ஒன்றும் இல்லை, நானும் என் மனைவியும் என் புத்திரனும் மாத்திரம் எஞ்சி நிற்கிறோம், தேவரீருக்குப் பிரியமாகில் இனி நாங்களும் இந்தத் தட்டில் ஏறுவதற்கு அனுமதித்தருளும்," என்றார். பிரம்மசாரியாரும் அதற்கு உடன்பட்டார்.

**நாங்களும் தட்டில் நின்றனர்**

அமர்நீதி நாயனார் அதுகேட்டு மனமகிழ்ந்து பிரம்மச்சாரியாரை வணங்கித் தம்முடைய மனைவியோடும் புத்திரரோடும் தராசை வலம் செய்து, "சிவனடியார்களுக்குச் செய்யும் திருத்தொண்டில் நாம் தவறாமல் இருந்தது மெய்யானால் நாம் ஏறின மாத்திரத்தில் இந்தத்தட்டு மற்ற தட்டுக்கு ஒத்திருக்கக்கடவது" என்று சொல்லித் திருநல்லூரிலே வீற்றிருக்கின்ற பரமசிவனை வணங்கி திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு மனமகிழ்ச்சியோடு தட்டில் ஏறினார். அப்போது இரண்டு தட்டுகளும் ஒத்து நின்றன.

அந்த அதிசயத்தைக் கண்டவர்கள் எல்லாரும் அமர்நீதி நாயனாரை வணங்கித் தோத்திரம் செய்தார்கள். தேவர்கள் மலர்மாரி பொழிந்தார்கள்.

பரமசிவனார் தாம் கொண்டு வந்த பிரம்மச்சாரி வடிவத்தை யொழித்து ஆகாசத்திலே பார்வதியோடும் காளை வாகனராய்த் தோன்றி தம்மைத் தரிசித்து அந்தத் தராசுத்தட்டில் நின்றுகொண்டு தோத்திரம் செய்கின்ற அமர்நீதி நாயனாரோடு அவர் மனைவியாரையும் அவர் புத்திரரையும் பார்த்து "நீங்கள் மூவரும் நம்முடைய அருளைப் பெற்று

நம்முடைய சன்னிதானத்திலே நம்மை வணங்கிக்கொண்டு இருங்கள்," என்று அருளிச் செய்து மறைந்தருளினார்.

**தேவ விமானம்**

அந்தப்படியே அமர்நீதி நாயனாரும் அவர் மனைவியாரும் அவர் புத்திரரும் கடவுளுடைய திருவருளினால், அந்தத் தராசு தானே தேவ விமானமாகி மேலே போக அவரோடு சிவலோகம் அடைந்தார்கள்.

அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்



# இலை மலிந்த சருக்கம்

*9. எறிபத்த நாயனார்*

**கவி**

திருமருவு கருவூரா னிலையார் சாத்தும்
சிவகாமி யார்மலரைச் சிந்த யானை
அரனெறியோ றெறிபத்தர் பாக ரோடும்
அறவெறிய வென்னுயிரு மகற்றீரென்று
புரவலனார் கொடுத்தபடை யன்பால் வாங்கிப்
புரிந்தரிவான் புகவெழுந்த புனித வாக்கால்
கரியினுடன் விழுந்தாரும் எழுந்தார் தாமும்
கணநாத ரதுகாவல் கைக்கொண் டாரே!

**கதை**

**எறிபத்தர்**

சோழ மண்டலத்திலே இராசதானியாகிய கருவூரிலே ஆநிலை என்னும் ஆலயத்திலே வீற்றிருக்கின்ற பரமசிவனை வழிபடுகின்றவரும் அடியார்களுக்கு திருத்தொண்டு செய்கின்றவரும் அடியார்களுக்கு ஆபத்து செய்தவர்களை வெட்டுகின்றவரும் ஆகிய எறிபத்த நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

**சிவகாமியாண்டார்**

அவர் இருக்கப்பட்ட காலத்திலே சிவகாமியாண்டார் என்கிற ஒரு பெரியவர் தினந்தோறும் நீராடி வாயைத்

துணியினால் கட்டிக்கொண்டு மலருஞ் சமயத்திலே மலர்களைக் கொய்து மாலை கட்டி அந்த ஆலயத்தில் விற்றிருக்கின்ற கடவுளுக்குச் சாத்திவந்தார்.

**மலர்க்கூடை சிதறியது**

ஒரு நாள் முன்போல மலர் எடுத்துக்கொண்டு ஆலயத்துக்குப் போகப்பட்ட சமயத்திலே அந்தப் பட்டினத்தில் இருக்கின்ற புகழ்ச் சோழ மன்னனுடைய பட்டத்து யானையானது மகா நவமியின் முதல் நாளாகிய அந்த நாளிலே காவேரியில் மூழ்கி அலங்கரித்து குத்தக் கோல் காரர் முன்னேவோட தன் மேலேறிய பாகர்களோடும் அவர் பின்னே சீக்கிரமாய்ப் போய் அந்தச் சிவகாமி யாண்டாரைப் பின் தொடர்ந்துவோடி அவர் கையிலே பிடித்துக் கொண்டிருக்கிற தண்டின் முனையிலே தொங்குகிற மலர்க்கூடையைப் பறித்துச் சிதறியது.

அந்த யானையின் மேலே இருக்கின்ற பாகன் அதைக் கண்டு யானையைச் சீர்க்கிரமாகச் செலுத்திக்கொண்டு போக சிவகாமியாண்டார் பதைபதைத்துக் கோபித்து அந்த யானையைக் தண்டினால் அடிக்கும்படி அதன் பின்னே போனார். யானை அவர் சமீபிக்க வொட்டாமல் அதிசீக்கிரமாக நடந்தது. சிவகாமியாண்டார் வயோதிகரான படியால் அந்த யானைக்குப்பின் வேகமாய்ச் செல்ல சக்தியில்லாமல் தவறி விழுந்து நிலத்திலே கைகளை மோதி எழுந்து நின்று அதிக துக்கங் கொண்டு ஓலமிட்டு அழுதார்.

**யானை எங்கே?**

அந்த வழியே வந்த எறிபத்த நாயனார் அதைப்பார்த்து, மிகவும் கோபித்துத் தன் மழுவாயுதத்தை எடுத்துக்கொண்டு

ஓடிவந்து சிவகாமியாண்டாரைக் கண்டு வணங்கி, "உமக்கு இந்தத் துன்பத்தைச் செய்த யானை எங்கே போய் விட்டது?" என்று கேட்க, "அஃது இந்தத் தெருவழியே போயிற்று," என்றார்.

**யானை கீழே விழுந்தது**

உடனே எறிபத்த நாயனார் மிகவும் கோபித்து அதிக சீக்கிரமாக ஓடி யானையை மழுவாயுதத்தினாலே வீசி அதன்மேல் பாய்ந்தார். பாயவும் யானை கோபித்து எறிபத்த நாயனார் மேலே திரும்ப, எறிபத்த நாயனார் சற்றும் அஞ்சாமல் அதைத் தடுத்து அதனுடைய தும்பிக்கையை அறுத்தார். அப்போது யானை கதறிக் கீழே விழுந்து புரண்டது.

பின்பு எறிபத்த நாயனார், அதன் முன்னே ஓடி மூன்று குத்துக்கோல் காரரையும் அதன் மேலேறிய பாகர் இருவரையும் கொன்றார். மற்றவர்கள் ஓடிப்போய் புகழ்ச்சோழ மன்னனுடைய வாயில் காவலரை நோக்கி "பட்டவர்த்தன யானையையும் சில பாகரையும் சிலர் கொன்று போட்டார்கள். இதை அரசருக்குத் தெரிவியுங்கள்," என்று சொன்னார்கள். உடனே வாயில் காவலர்கள் அரசரிடத்திலே போய் அவரை வணங்கி அந்த சமாசாரத்தைத் தெரிவித்தார்கள்.

**யானையைக் கொன்றவர் யார்?**

அரசர் அதைக் கேட்ட மாத்திரத்திலே அளவிறந்த கோபங்கொண்டு புறப்பட்டுக் குதிரை மேலேறி சதுரங்க சேனையோடு விரைந்து வந்து யானையும் பாகரும் இறந்த இடத்தை அடைந்து, அங்கே நின்ற சிவவேடங்கொண்ட எறிபத்த நாயனாரை மாத்திரம் கண்டு அவரை, "யானையைக்

கொன்றவர் எவர்,'' என்று கேட்டார். பாகர் சமீபத்திலே போய் வணங்கி "இதோ நிற்கின்றவரே யானையைக் கொன்றவர்'' என்றார்கள். அப்போது புகழ்ச் சோழர் இவர் பக்தராகையால் அந்த யானை குற்றம் செய்தாலல்லாமல் அதைக் கொல்லார். அது யாதோ குற்றம் செய்திருக்கும் என்று நினைத்துத் தம்முடைய சேனைகளை அவ்விடத்துக்கு வரவொட்டாமல் நிறுத்தி, குதிரையிலிருந்து இறங்கி எறிபத்த நாயனார் முன்னே சென்று வணங்கி நின்று, "சுவாமி, தேவரீர்! இந்த யானையைக் கொன்றீர் என்பதை முன்னறிந்திலேன். அது நிற்க இந்த யானை செய்த குற்றத்தின் பொருட்டு இதனையும் பாகரையும் கொன்றது போதுமா? சொல்லியருளும்'' என்றார்.

எறிபத்த நாயனார் புகழ்ச்சோழரை நோக்கி, "சிவகாமியாண்டார் சுவாமிக்குச் சாத்தும்படிக் கொண்டு வந்த பூவை இந்த யானை பறித்து சிந்தினதால் இதையும் இது தீங்கு செய்யும் பொழுது இதை விலக்காததினால் பாகர்களையும் கொன்றேன். இதுவே இங்கே நடந்த சமாசாரம்'' என்றார்.

**என்னையும் கொன்றருளும்!**

புகழ்ச் சோழர் அதைக் கேட்டுப் பயந்து எறிபத்த நாயனாரை வணங்கி, "சிவனடியாருக்குச் செய்த அபராதத்துக்கு இந்த யானையையும் பாகரையும் குத்துக்கோற்காரரையும் கொன்றது மட்டும் போதாது. அடியேனையும் கொல்ல வேண்டும். பெரும்பாவியாகிய சிறியேனை தேவரீருடைய திருக்கரத்திலிருக்கின்ற மங்கலம் பொருந்திய மழுவாயுதத்தினாலே கொல்வது நியாயமல்ல, என்று சொல்லித் தன்னுடைய உடைவாளை உறையினின்றும் உருவி இதனாலே என்னையும் கொன்றருளும்!'' என்று நீட்டினார்.

எறிபத்த நாயனார் அதைக் கண்டு அவருடைய மிகுந்த அன்பைக் குறித்து ஆச்சரியம் அடைந்து அவர் நீட்டிய வாளை வாங்காமல் கொஞ்ச நேரம் தாழ்த்து நின்று பின்பு அவர்

கையிலே வாள் இருந்ததால் தம்மைத் தாமே மாய்த்துக் கொள்ளுவார் என்று நினைத்துப் பயந்து அதை வாங்கினார். வாங்கிய எறிபத்த நாயனாரைப் புகழ்ச்சோழர் வணங்கி நின்று, "இந்தச் சிவபக்தர் என்னை வாளினாலே கொன்று என் குற்றத்தைத் தீர்க்கும்படி பேறு பெற்றேன்" என்றார்.

எறிபத்த நாயனார் அதைக் கேட்டு மிக அஞ்சி, தன்னுடைய பட்டவர்த்தன யானையும் பாகரும் இறந்து போயும் அதைக் குறித்துச் சிறிதும் துக்கியாமல் உடைவாளைத் தந்து தம்மையுங் கொல்லும்படிக் கேட்கின்ற புகழ்ச் சோழமன்னருக்குத் தீங்கு நினைந்தேனே என்று எண்ணி, முன்னே என்னுயிரைக் கொன்று முடிப்பதே தீர்ப்பு என்று நினைத்து அந்த வாளைத் தம்முடைய கழுத்திலே பூட்டி அறுக்கத் தொடங்கினார்.

அது கண்ட புகழ்ச்சோழர் பயந்து நடுநடுங்கிச் சீக்கிரமாக எதிரே போய் அவருடைய கையையும் வாளையும் பிடித்துக் கொள்ள அவர் தம்முடைய எண்ணம் நிறைவேறாமையால் வருத்தமுற்று நின்றார்.

**அசரீரி எழுந்தது**

அப்பொழுது மிகுந்த அன்பினாலே அவ்விருவருக்கும் உண்டாகிய இந்தத் துக்கத்தை நீக்கும் பொருட்டுப் பரமசிவனுடைய திருவருளினாலே, "அடியார்களுடைய தொண்டினை உலகத்திலே வெளிப்படுத்தும் பொருட்டு இன்றைக்கு யானை, மலர்களைச் சிதறும்படி பரமசிவன் அருள் செய்தார்," என்று ஒரு அசரீரி வாக்கு ஆகாயத்திலே எழுந்தது.

உடனே யானையும் பாகரும் எழுந்தனர். அப்போது எறிபத்த நாயனார், கழுத்தில் பூட்டிய வாளை விட்டுப் புகழ்ச் சோழருடைய பாதத்திலே விழுந்து வணங்கினார்.

புகழ்ச்சோழரும் அந்த வாளை எறிந்துவிட்டு எறிபத்த நாயனாருடைய பாதத்திலே விழுந்து வணங்கினார். பின்பு இருவரும் எழுந்து அசரீரி வாக்கைத் துதித்தார்கள்.

**எல்லாம் இறையருளே!**

பரமசிவனுடைய திருவருளினாலே பூக்கூடையிலே முன்போல பூக்கள் நிறைந்திருக்க சிவகாமியாண்டார் அதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார். பாகர்கள் பட்டவர்த்தன யானையை நடத்திக்கொண்டு புகழ்ச்சோழர் முன் வந்தார்கள். எறிபத்த நாயனார் புகழ்ச்சோழரை அஞ்சலி செய்து, அடியேன் மகிழும்படி இந்த யானையின் மேல் ஏறிச் செல்லும், என்று சொல்ல புகழ்ச்சோழர் அவரை வணங்கி யானையின் மேலேறிக்கொண்டு சேனைகளோடு அரண்மனையை அடைந்தார். சிவகாமியாண்டார் பூக்கூடையை எடுத்துக் கொண்டு சுவாமிக்கு மாலை கட்டிச்சாத்தும்படி போனார்.

**சிவகணங்களுக்குத் தலைவர்**

எறிபத்த நாயனார் இப்படியே அடியார்களுக்கு வந்த இடையூற்றை நீக்கிப் பக்திவலிமையில் சிறந்தவராயிருந்து பின் கைலாயகிரியில் இருக்கின்ற சிவகணங்களுக்குத் தலைவரானார்.

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க்கடியேன்




# இலை மலிந்த சருக்கம்

*10. ஏனாதி நாயனார்*

**கவி**

ஈழக்குலச் சான்றாரெ யினனூர் வாழே
 னாதிநா தனா ரிறைவ னீற்றைத்
தாழத்தொழு மரபார் படைகளாற்றுந்
 தன்மை பெறாவதிசூரன் சமரிற் றோற்று
வாழத் திருநீறு சாத்தக் கண்டு மருண்டார்
 தெருண்டார் கைவாள் விடாநேர்
வீழக்களிப்பார் போனின்றே யாக்கை
 விடுவித்தார் சிவனருளே மேவினாரே!

**கதை**

**ஏனாதியார்**

சோழ மண்டலத்திலே எயினனூரிலே சான்றார் குலத்திலே திருநீற்றுப் பக்தியுடையராகிய ஏனாதிநாதர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அரசர்களுக்கு வாள் வித்தையைக் கற்பித்து அதனால் வரப்பட்ட திரவியத்தை எல்லாம் சிவனடியார்களுக்கு நாள்தோறும் கொடுத்து வந்தார்

**பொறாமையால் போர்**

இப்படி நடக்கும் காலத்திலே வாள்வித்தை பயிற்றலிலே அவரோடு தாயகம் போன்ற அதிசூரன் ஒருவன் வாள்வித்தையைக் கற்பிக்கிறதினாலே திரவியம் நாளுக்கு நாள் வாராதிருப்பதையும் ஏனாதி நாயனாருக்கு திரவியம்

அதிகரிப்பதையும் கண்டு பொறாமையை அடைந்து அவரோடு போர் செய்ய எண்ணி வீரர் கூட்டத்தோடும் போய் அவர் வீட்டுத் தலைக் கடையில் நின்று போர் செய்வதற்கு வரும்படி அழைத்தான்.

ஏனாதி நாயனார் போர்க்கோலம் கொண்டு புறப்பட்டார். அப்பொழுது அவரிடத்தில் போர்த்தொழில் கற்கப்பட்ட சீடரும் போர்க்கலையிலே சாமர்த்தியம் உள்ள அவர் பந்துக்களும் அதைக் கேள்வியுற்று விரைந்து வந்து அவருக்கு இரண்டு பக்கத்திலும் சூழ்ந்தார்கள்.

**ஒப்பந்தம் செய்தனர்**

அப்போது சண்டைக்குக் கூப்பிட்ட அதிசூரன் ஏனாதி நாதரைப் பார்த்து, "நாம் இருவரும் இதற்குச் சமீபமாகிய வெளியிலே சேனைகளை அணிவகுத்து யுத்தம் செய்வோம். யுத்தத்திலே வென்றவர் எவரோ அவரே வாள்வித்தை பயிற்றும் உரிமையைப் பெற வேண்டும்" என்று சொல்ல ஏனாதி நாயனாரும் அதற்கு உடன்பட்டார்.

**தோற்றபின் அதிசூரன்**

பின்பு இருவரும் தங்கள் தங்கள் சேனைகளோடே அவ்வெளியிலே போர்க் கலந்து யுத்தம் செய்தார்கள். யுத்தத்திலே அதிசூரன் ஏனாதி நாயனாருக்குத் தோற்று ஓடிப்போனான்.

அன்றைய இரவு முழுதும் அவன் தன்னுடைய வலிவின்மையை நினைத்து நித்திரையில்லாமல் துக்கித்துக் கொண்டிருந்து ஏனாதிநாயனாரை வெல்லுதற்கேற்ற உபாயத்தை ஆலோசித்து வஞ்சனையினாலே வெல்லும்படி துணிந்து விடியற்காலத்திலே நமக்கு உதவியாக ஊராரை

அழைத்துக் கொள்ளாமல் நாம் இருவரும் வேறொரிடத்திலே போர் செய்வோம்! வாரும்! என்று ஏனாதிநாத நாயனாருக்குத் தெரிவிக்கும் ஒருவனை அனுப்பினான்.

**மீண்டும் போர்**

ஏனாதி நாயனார் அதைக்கேட்டு அதற்கு உடன்பட்டு தம்முடைய சுற்றத்தார்கள் ஒருவரும் அறியாதபடி கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு தனியே புறப்பட்டு அந்த அதிசூரன் குறித்த போர்க்களத்திலே சென்று அவனுடைய வரவை எதிர்பார்த்து நின்றார்.

முன்னே எப்போதும் திருநீறு தரிக்காத அதிசூரன், திருநீற்றினைத் தரித்தவர்களுக்கு ஏனாதி நாயனார் எவ்விடத்திலும் துன்பம் செய்யார் என்பதை அறிந்து, நெற்றியிலே திருநீறு பூசி கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு தான் குறித்த போர்க்களத்திலே போய் அங்கே நின்ற ஏனாதி நாயனாரைக் கண்டு அவர் சமீபத்திலே போகும் வரைக்கும் நெற்றியைக் கேடயத்தினால் மறைத்துக்கொண்டு அவருக்கு முன்னே முடுகி நடந்தான்.

**வஞ்சனையால் வென்றான்**

ஏனாதி நாத நாயனார் அந்த அதிசூரனைக் கொல்லுதற்குச் சமயம் தெரிந்து கொண்டு அடி பெயர்ந்தார். அப்பொழுது அதிசூரன் தன் முகத்தை மறைத்துக் கொண்டிருந்த கேடயத்தை அப்பாலே எடுக்க ஏனாதி நாதநாயனார் அவனுடைய நெற்றியிலே தாக்கப்பட்ட திருநீற்றைக் கண்டார்.

கண்டபொழுதே "ஆ, கெட்டேன்! முன் ஒருபொழுதும் இவர் நெற்றியிலே காணாத திருநீற்றை இன்றைக்குக் கண்டேன். இனி வேறே என்ன ஆலோசனை? இவர் பரமசிவனுக்கு அடியவராய் விட்டார். [illegible]ால்

இவருடைய மனக்குறிப்பின்படியே நிற்பேன்" என்று நினைத்துக் கத்தியையும் கேடயத்தையும் விடக் கருதி, பின்பு நிராயுதரைக் கொன்ற பழி இவரை அடையாதிருக்க வேண்டுமென்று எண்ணி அவைகளை விடாமல் எதிர்ப்பவர் போல் நேராக நிற்க பாதகனாகிய அதிசூரன் அவரைக் கொன்றான்.

**திருவடி சேர்ந்தார்**

அப்பொழுது பரமசிவன் அவருக்குத் தோன்றி அவரைத் தம்முடைய திருவடியிலே சேர்த்து அருளினார்.

ஏனாதி நாதன்தன் அடியார்க்கு மடியேன்



# இலை மலிந்த சருக்கம்

*11. கண்ணப்ப நாயனார்*

**கவி**

வேடாதிபதி யுடுப்பூர் வேந்த னாகன்
விளங்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலரும்
காய்ச்சின மென்றிடு தசையும் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
சீறுசிவ கோசரியும் தெளியவிழுப் புண்ணீர்
ஓடவொரு கண்ணப்பி யொருகண் ணப்பல்
ஒழிகவெனு மருள்கோடாதருகுநின் றாரே!

**கதை**

**திண்ணனார்**

போத்தப்பி நாட்டிலே உடுப்பூரிலே வேடர்களுக்கு அரசனாகிய நாகன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் மனைவி பெயர் தத்தை. அந்த இருவரும் நெடுங்காலம் புத்திரபாக்கியம் இல்லாமல் அதிக துக்கம் கொண்டு குறிஞ்சி நிலத்திற்குக் கடவுளாகிய சுப்பிரமணிய சுவாமியினுடைய சன்னிதானத்திலே சேவல் கோழிகளையும் மயில்களையும் விட்டு அவரை வழிபட்டு வந்தார்கள்.

அந்த சுப்பிரமணியருடைய திருவருளினாலே தத்தையானவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பெற்றாள். அந்தப் பிள்ளையை நாகன் கையிலே எடுத்தபோது திண்ணெனவாயிருந்தபடியால் அதற்குத் திண்ணன் என்று பெயரிட்டான்.

அந்தத் திண்ணன் வளர்ந்து உரிய பருவத்திலே வில்வித்தையிலே சாமார்த்தியனானான். நாகன் வயோதிகன் ஆனபடியால் வேட்டை முயற்சியிலே இளைத்தவனாகித் தன் அதிகாரத்தைத் தன் புத்திரனான திண்ணனாருக்குக் கொடுத்தான்.

**பன்றி தப்பியது**

அந்தத் திண்ணனார் வேட்டைக் கோலங்கொண்டு வேடர்களோடும் வனத்திலே சென்று வேட்டையாடினார். அப்போது ஒரு பன்றியானது வலையில் அகப்பட்டு அதை அறுத்துக்கொண்டு மிகுந்த விசையாய் ஓடிற்று. அதைத் திண்ணனார் கண்டு கொல்ல நினைத்து அதைத் தொடர்ந்து பிடிக்கும்படி விசையாய் அதன் பின்னே சென்றார்.

நாணன், காடன் என்கிற இரண்டு வேடர்கள் மாத்திரம் அவருக்குப் பின்னாக ஓடினார்கள். அந்தப் பன்றி நெடுந்தூரம் ஓடிப்போய் இளைப்பினாலே மலைச்சாரலிலே ஒருமரத்தின் நிழலிலே நின்றது. திண்ணனார் அதைக் கண்டு அதன் சமீபத்திலே போய் உடைவாளை உருவி அதனை இருதுண்டாகும் படி குத்தினார்.

நாணனும் காடனும் இந்த பன்றியைக் கண்டு திண்ணனாரை வியந்து வணங்கி “நாம் நெடுந்தூரம் நடந்து வந்த படியால் நம்மைப் பசி மிக வருத்துகின்றது. ஆகையால்

நாம் இந்தப் பன்றியை நெருப்பிலே காய்ச்சித் தின்று தண்ணீர் குடித்து பின்பு வேட்டையாட காட்டுக்கு மெல்லப் போவோம்!" என்றார்கள்.

திண்ணனார் அவர்களைப் பார்த்து, "இந்த வனத்திலே தண்ணீர் எங்கே இருக்கின்றது?" என்று கேட்க, நாணன் "அந்தத் தேக்கமரத்துக்கு அப்பாலே போனால் மலைப் பக்கத்திலே பொன்முகலியாறு ஓடுகின்றது," என்றான்.

**திருக்காளத்தி**

திண்ணனார் அதைக் கேட்டு, இந்தப் பன்றியை எடுத்துக்கொண்டு வாருங்கள். நாம் அங்கேதானே போவோம் என்று சொல்லி அதை நோக்கி நடந்து அரைக்காத தூரத்துக்கப்பால் இருக்கின்ற காளத்தி மலையைக் கண்டு நாணனை நோக்கி, "நமக்கு முன்னதாகத் தோன்றுகிற மலைக்குப் போவோம்!" என்றுசொல்ல, நாணன், "இந்த மலையிலே குடுமித்தேவர் இருக்கிறார், நாம் போனால் கும்பிடலாம்," என்றான்.

**குடுமித்தேவர்**

திண்ணனார், "இந்த மலையைக் கண்டு இதன் சமீபத்தில் வரவர என் மேல் ஏற்றப்பட்ட பெரிய பாரம் குறைகின்றது போலும்! இனி உண்டாவது யாதோ அறியேன்!" என்று சொல்லி விருப்பத்தோடே அதிதீவிரமாய் விரைந்து சென்று பொன் முகலியாற்றை அடைந்து அதன் கரையிலிருக்கின்ற மர நிழலிலே கொண்டு வந்த பன்றியை இடுவித்துக் காடனை நோக்கி, "தீக்கடை கோல் செய்து நெருப்பை உண்டாக்கு, நாங்கள் இந்த மலையிலே ஏறி சுவாமி தரிசனம் செய்து கொண்டு வருவோம்." என்று சொல்லி நாணனோடும் அந்த பொன்முகலி நதியைக் கடந்து மலையின் மேலேறிச் சிவலிங்கத்தைக் கண்டார்கள்.

**ஆனந்தக் கண்ணீர்!**

கண்ட மாத்திரத்திலே பரமசிவனுடைய அரும் பார்வையைப் பெற்று முன் உள்ள குணங்கள் மாறி சிவனிடத்தில் வைத்த அன்புருவமானார். நெடுங்காலம் பிரிந்திருந்த தன் குழந்தையைக் கண்ட மாதாவைப் போலத் தாழாமல் சீக்கிரமாகப் போய் தோள்கள் அழுந்த அக்கடவுளைத் தழுவி மோந்து முத்தமிட்டார். நெடுநேரம் பெருமூச்சு விட்டுக்கொண்டு நின்று சரீரம் முழுவதிலும் உரோமாஞ்சிதம் கொள்ள இரண்டு கண்களில் நின்றும் கண்ணீர் சொரிய வெயிலிடை பட்ட மெழுகுபோல மனம் கசிந்து உருக, "இந்த சுவாமி, அடியேனுக்கு அகப்பட்டது என்ன ஆச்சரியம்!" என்று சொல்லி ஆனந்தங்கொண்டார்.

**திண்ணனார் செயல்**

ஐயையோ! யானை, புலி, கரடி முதலிய துட்ட மிருகங்கள் சஞ்சரிக்கின்ற இந்தக் காட்டிலே ஒரு துணையுமில்லாமல் வேடர் போல தனியே இருப்பது ஏது? என்று சொல்லி துக்கித்துத் தம்முடைய வில் கீழே விழுந்ததையும் அறியாதவராகிப் பரவசம் அடைந்தார். பின் ஒருவாறு தெளிந்து "இவருடைய முடியிலே நீரை வார்த்துப் பச்சிலையையும் பூவையும் இட்டவர் யாரோ?" என்றார்.

அப்பொழுது சமீபத்திலே நின்ற நாணன், "நான் முன் காலத்திலே உம்முடைய பிதாவுடனே வேட்டையாடிக் கொண்டு இந்த மலையிலே வந்த போது ஒரு அந்தணன் இதன் முடியிலே நீரை வார்த்து இலையையும் பூவையும் போட்டு உணவை ஊட்டிச் சிலவார்த்தைகள் பேசினதைக் கண்டிருக்கிறேன். இன்றைக்கும் அவனே இப்படிச் செய்திருக்க வேண்டும்!" என்றான்.

அதைக் கேட்ட திண்ணனார் அந்தச் செய்கைகளே திருக்காளத்தியப்பருக்குப் பிரீதியாகிய செய்கைகளாகும் என்று அறிந்தார். பின்பு "ஐயோ! இவருக்கு அமுது செய்தற்கு இறைச்சி கொடுப்பார் ஒருவரும் இல்லை, இவர் இங்கே தனியே இருக்கின்றார், இறைச்சி கொண்டு வரும் பொருட்டுப் போக இவரைப் பிரியவே மனம் இல்லை, இதற்கு என்ன செய்வேன்? எப்படியும் இறைச்சி கொண்டுவரவேண்டும்" என்று சொல்லிக்கொண்டு சுவாமியைப் பிரிந்து கொஞ்சதூரம் போவார். கன்றை விட்டுப் பிரிகின்ற தலையீற்றுப் பசுவைப் போல அவரிடத்திற்குத் திரும்பி வருவார், கட்டி அணைத்துக்கொள்வார், திரும்பப் போவார். கொஞ்சதூரம் போய் அத்தியந்த ஆசையோடு சுவாமியைத் திரும்பிப் பார்த்து நிற்பார். "சுவாமி! நீர் உண்பதற்கு மிருதுவாகிய நல்ல இறைச்சியை நானே குற்றமறத் தெரிந்துகொண்டு வருவேன்," என்பார். "நீர் யாதொரு துணையுமில்லாமல் இங்கே தனியே இருக்கிறபடியால் நான் உம்மைப் பிரியமாட்டேன், உமக்குப் பசிமிகுந்தபடியால் இங்கே நிற்கவும் மாட்டேன். ஐயையோ! நான் என்ன செய்வேன்?" என்று சொல்லிக்கொண்டு கண்ணீர் இடைவிடாது பொழிய நிற்பார்.

பின்பு ஒரு பிரகாரம் போய்வரத் துணிந்து வில்லை எடுத்துக்கொண்டு கையினாலே கும்பிட்டு சுவாமி சன்னிதானத்தை அருமையாக நீங்கி மலையை விட்டு இறங்கி நாணன் பின்னே வர பிற காரியங்களிலே உண்டாகும் ஆசை பரமாணுப்பிரமாணமானாலும் இல்லாமல் அன்பு மயமாகி முகலியாற்றைக் கடந்து கரையேறி அங்குள்ள சோலையிலே புகுந்தார். அது கண்டு காடன் எதிரே போய்க் கும்பிட்டு "நெருப்புக் கடைந்து வைத்திருக்கிறேன். பன்றியின் அவயவங்கள் எல்லாவற்றையும் உம்முடைய அடையாளப்படி பார்த்துக் கொள்ளும், திரும்பிப் போவதற்கு வெகுநேரம் சென்று போயிற்று, நீர் இவ்வளவு நேரம் தாழ்ந்தது என்ன?" என்றான்.

நாணன் அதைக்கேட்டு "இவர் மலையிலே சுவாமியைக் கண்டு அவரைத் தழுவிக் கொண்டு மரப்பொந்தைப் பிடித்துக்கொண்டு விடாத உடும்பைப் போல அவரை நீங்காமல் நின்றார். இங்கேயும் அந்த சுவாமி உண்ணுதற்கு இறைச்சி கொண்டு போகும் பொருட்டு வந்தார். நமது குலத்தலைமையை விட்டு விட்டார். அந்தச் சுவாமி வசம் ஆய்விட்டார்," என்றான்.

**அமுதூட்ட எண்ணி**

உடனே காடன், "திண்ணனாரே! நீர் என்ன செய்தீர்? பைத்தியம் கொண்டீர்?" என்று சொல்ல திண்ணனார் அவன் முகத்தைப் பாராமல் பன்றியை நெருப்பிலே அதக்கி அதனுடைய இனிய மாமிசங்களை அம்பிலே வெவ்வேறாகக் கிழித்து, அம்பிலே கோத்து நெருப்பிலே காய்ச்சிப் பதமாக வெந்தவுடனே சுவை பார்க்கும்படி அவைகளைத் தன்னுடைய வாயிலே இட்டு மென்று பார்த்து மிக இனிமையான இறைச்சிகளையெல்லாம் தேக்கிலை தொன்னையிலே வைத்து, இனிய வல்லாத இறைச்சிகளை எல்லாம் புறத்திலே உமிழ்ந்தார்.

**நாணனும், காடனும்**

அதைக் கண்ட நாணன் காடன் இருவரும், "இவர் மிகப் பைத்தியம் கொண்டிருக்கிறார், அகப்படுதற்கு அரிதான இறைச்சிகளைக் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி வீணாக உமிழ்கின்றார். மற்ற இறைச்சிகளைப் புறத்திலே உமிழ்ந்து விடுகிறார். தாம் மிகப் பசியுடையவராயிருந்தும் அதனைத் தான் உண்ணவேயில்லை. எங்களுக்குக் கொடுக்கவுமில்லை. இவர் தெய்வப் பைத்தியம் கொண்டிருக்கிறார். இதனைத் தீர்க்கத் தக்க வழியொன்றையும் அறியோம், தேவராட்டியையும் நாகனையும் அழைத்துக்கொண்டு வந்து இதைத் தீர்க்க வேண்டும். வேட்டைக் காட்டிலே நிற்கிற ஏவலாளரையும் இட்டுக் கொண்டு நாம் போவோம்!" என்று நினைத்துக் கொண்டு போனார்.

**அமுது செய்தருளும்**

திண்ணனார் அவர் போனதை அறியாதவராகி சீக்கிரமாகத் தொன்னையிலே மாமிசத்தை வைத்துக்கொண்டு திருமஞ்சன மாட்டும் பொருட்டு ஆற்றுநீரை வாயினால் முகந்து பூக்களைக் கொய்து தலைமயிரிலே சொருகி ஒரு கையிலே வில்லும் அம்பும் மற்ற கையிலே மாமிசம் வைத்த தேக்கந் தொன்னையையும் எடுத்துக்கொண்டு, "ஐயோ! என்னுயிர்த் துணையாகிய சுவாமி மிகுந்த பசியினால் இளைத்தாரோ?" என்று நினைத்து மனம் இரங்கிப் பதைபதைத்து ஏங்கித் தன் குஞ்சுக்கு இரைகொடுக்கின்ற பட்சியைப் போல ஓடிப் போய்க் கடவுளை அடைந்து அவருடைய திருமுடிமேல் இருந்த பூக்களைத் தம்முடைய கால் செருப்பினாலே தள்ளித் தன் வாயிலிருக்கின்ற திருமஞ்சன நீரை திருமுடியின் மேல் உமிழ்ந்து தம்முடைய தலைமயிரிலிருந்த பூக்களை எடுத்துச் சுவாமியின் முடியின் மேல் வணங்கிச் சாத்தி தேக்கிலைத் தொன்னையில் வைத்த மாமிசத்தை சுவாமி முன்னே வைத்து, "கொழுமையான இறைச்சிகளையெல்லாம் எடுத்து அம்பிலே கோத்து நெருப்பிலே காய்ச்சி, பல்லினால் மென்று நாவினால் சுவைத்துப் பார்த்து படைத்தேன். இவை மிக நன்றாக இருக்கின்றன. சுவாமி இதை அமுது செய்தருளும்" என்று சொல்லி உண்பித்தார். பின்பு சூரியன் மறைந்தது.

திண்ணனார் அந்த ராத்திரியில் கொடிய மிருகங்கள் சுவாமிக்குத் துன்பம் செய்யும் என்று பயந்து கையிலே வில்லைப் பிடித்துக்கொண்டு நித்திரை செய்யாமல் சுவாமி வாயிலின் பக்கத்தே கவனமாக இருந்தார்.

**சிவகோசரியார்**

பின்பு விடியற்காலம் வர சுவாமிக்கு இறைச்சி கொண்டு வரும் பொருட்டு வேட்டையாட மலைச்சாரலுக்குப் போனார்.

அப்படி இவர் போன பிறகு அந்தக் காளத்தியீசுவரரை நித்தியம் பூசை செய்கின்ற சிவகோசரியார் என்கின்ற அருச்சகர் சூரிய உதயத்தில் எழுந்து பொன் முகலியாற்றில் நீராடி திருமஞ்சனம், பத்திரம், மலர் இவைகளை எடுத்துச் சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டு சுவாமி சன்னி தானத்திற்குப் போனார்.

போனபோது அங்கே இறைச்சியும் எலும்பும் இருக்கக் கண்டு நடுநடுங்கிக் குதித்துப் பக்கத்திலே ஓடி நின்று, "தேவாதி தேவரே தேவரீருடைய சன்னிதானத்தை அடைதற்குப் பயப்படாத கொடியராகிய வேடுவப் புலையர்களே இந்த அநுசிதத்தைச் செய்தார்கள் போலும்! அவர்கள் இப்படி செய்து போதற்குத் தேவரீர் திருவுளம் இசைந்தீரோ!" என்று சொல்லிப் பதறியழுது விழுந்து புரண்டார்.

பின்பு சுவாமி அருச்சனை செய்யாமல் தாழ்த்தலால் பயன் யாது? என்று நினைந்து அங்கே கிடந்த இறைச்சி எலும்பு, தொன்னை இவைகளைத் திருவலகினால் தள்ளி பரிசுத்தப்படுத்தி பின்பு பொன் முகலியாற்றிலே போய் நீராடிவிட்டுத் திரும்பி வந்து வேதமந்திரத்தினாலே சுத்தி செய்து சுவாமிக்கு அபிடேகம் செய்து அர்ச்சனை செய்து திருமுன்னே நின்று வணங்கி இரண்டு கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் சொரிய திருமேனி எங்கும் மயிர் பொடிப்ப அக்கினியில் அகப்பட்ட மெழுகுபோல் மனம் உருகி இளக நாத்தழும்பேற கீத நடையுள்ளதாகிய சாமவேதத்தைப் பாடி பின்பு பலதரம் வலம் செய்து அடி விழுந்து வணங்கி அருமையுடன் அவ்விடம் விட்டுப் போய் தபோவனத்தை அடைந்தார்.

அது நிற்க, வேட்டை ஆடுதற்கு மலைச்சாரலிலே போன திண்ணனார், பன்றி, மான், கலை, மரை, கடம்பை என்று மிருகங்களைக் கொன்று அவைகளின் இறைச்சிகளை முன்போல பக்குவப் படுத்தித் தேக்கிலைத் தொன்னையில்

வைத்து கொம்புத் தேனைப் பிழிந்து அதனோடு கலந்து முன்போல திருமஞ்சனமும் மலரும் கொண்டு மலைமேலேறி சுவாமி சன்னிதானத்தை அடைந்து முன்போல பூசை செய்து இறைச்சித் தொன்னையைச் சுவாமி முன்னே வைத்து, இந்த இறைச்சி நான் முன் கொண்டு வந்தது போலல்ல, இவை பன்றி, மான், கலை, மரை, கடம்பை என்கின்ற மிருகங்களின் இறைச்சி, இவைகளை அடியேனும் சுவைத்துப் பார்த்திருக்கின்றேன், தேனும் கலந்து இருக்கின்றேன். தித்திக்கும்," என்று சொல்லி உண்பித்து அவருக்குப் பக்கத்தில் பிரியாமல் நின்றார்.

**பெற்றோர் வந்தனர்**

அப்போது முன்னாளில் போன நாணனும் காடனும் ஆகிய இருவராலும் தன் புத்திரராகிய திண்ணனாருடைய செய்கைகளை அவன் தகப்பனான நாகன் கேள்விப்பட்டு ஊணும் உறக்கமும் இல்லாமல் தேவராட்டியாரோடு மனைவியையும் இட்டுக்கொண்டு மலைமேலேறி திண்ணனாரிடத்தில் வந்து திண்ணனாரைப் பல பல திறங்களினாலே வசம் செய்ய, அவர் வசமாகாமையைக் கண்டு சிந்தை நொந்து, "இனி என் செய்வோம்!" என்று சொல்லி அவரை விட்டுத் திரும்பிப்போய் விட்டான்.

அது நிற்க இருவினை ஒப்பும் மலபரிபாகமும் உடைய திண்ணனார் பகல் காலத்திலே மிருகங்களைக் கொன்று சுவாமிக்கு இறைச்சியை ஊட்டியும் இராக்காலத்தில் நித்திரை செய்யாமல் சுவாமிக்குப் பக்கத்தில் நின்றும் இப்படியாகத் தொண்டு செய்து வந்தார்.

அப்படிச் செய்யும் நாளிலே சிவகோசரியாரும் தினந்தோறும் வந்து சன்னிதானத்திலே இறைச்சி கிடப்பதைக் கண்டு இரங்கி சுத்தி செய்து சைவாகம விதிப்படி அருச்சித்துக் கொண்டு இந்த அநுசிதம் உண்டாகாமல் அருளல் வேண்டும் என்று பிரார்த்தித்து வந்தார்.

**இறைவன் வாய்மொழி**

திருக்காளத்தியப்பர் அந்த சிவகோசரியாருடைய மனத்துயரத்தை நீக்கும் பொருட்டு ஐந்தாம் நாள் இராத்திரியில் அவருக்குக் கனவிலே தோன்றி, "அன்பனே! அவனை வேடுவன் என்று நீ நினையாதே! அவனுடைய செய்கைகளை சொல்வோம் கேள்! அவனுடைய உருவம் முழுவதும் நம் மேல் வைக்கப்பட்ட அன்பு உருவமே. அவனுடைய அறிவு முழுவதும் நம்மை அறியும் அறிவே. அவனுடைய செய்கைகள் முழுவதும் நமக்கு இதமாகிய செய்கைகளே. நம்முடைய முடியின்மேல் உன்னாலே சாத்தப்பட்ட பூக்களை நீக்கும்படி அவன் வைக்கின்ற செருப்பு அடி நம்முடைய குமாரனான சுப்பிரமணியனுடைய காலினும் பார்க்க மிகுந்த ஆனந்தத்தைத் தருகின்றது.

அவன் என் மேல் தன் வாயினால் உமிழ்கின்ற நீரானது கங்கை முதலாகிய புண்ணிய தீர்த்தங்களைப் பார்க்கினும் பரிசுத்தமுள்ளதாயிருக்கிறது. அவன் தன்னுடைய தலை மயிரிலே சொருகிக்கொண்டு வந்து நமக்குச் சாத்துகின்ற மலர்கள் அவனுடைய மெய்யன்பானது விரிந்து விழுதல் போல் விழுதலால் பிரம்மா, திருமால் முதலாகிய தேவர்கள் நமக்குச் சாத்தும் மலர்களும் அவைகளுக்குக் கொஞ்சமாகிலும் சமமாகாது. அவன் நமக்குப் படைக்கின்ற மாமிசம் பதமாக வெந்திருக்கின்றதோ என்று அன்பினால் உருகியிளகிய மனசினோடும் மென்று சுவை பார்த்துப் படைக்கப்பட்ட படியால் வேதவிதிப்படி வேள்வி செய்கின்ற வர்களால் கொடுக்கப்பட்ட அவிர்ப்பாகத்திலும் அதிமதுரமாக விருக்கின்றது. அவன் நம்முடைய சந்நிதானத்திலிருந்து சொல்லப்பட்ட சொல்லுகள் களங்கமற்ற அன்பினோடும் நம்மையன்றி மற்றொருவரையும் அறியாது வெளிப்படுத்தலால் வேதங்களும் மகாமுனிவர்கள் மகிழ்ந்து செய்கின்ற தோத்திரங்களும் ஆகிய எல்லாவற்றி லும் பார்க்க மிக இனியதாயிருக்கின்றது. அவனுடைய அன்பினாலாகிய செய்கைகளை உனக்குக் காட்டுவோம். நீ நாளைக்கு வந்து நம்மின் பின்பக்கத்தில் ஒளிந்திருந்து பார் " என்று சொல்லி மறைந்தருளினார்.

**அந்தணர் வியந்தார்**

சிவகோசரியார் கனவு நிலை நீங்கி உணர்வு நிலை அடைந்து பரமசிவன் தனக்கு அருளிச் செய்த வார்த்தைகளை நினைத்து நினைத்து அறியாமை நிறைந்துள்ள இழிவாகிய வேடுவர் குலத்திலே பிறந்து அவருக்கு வேதாகமாதி சாத்திரங்களிலே மகா பாண்டித்திய மகாமுனிவர்கள் தேவர்களிடத்திலும் காணப்படாத சமாநாதிகரகிதமாகிய இவ்வளவு பேரன்பு வந்தது? ஐயையோ! எவ்வளவு அருமை என்று ஆச்சரியமும் இப்படிப்பட்ட பேரன்பாற் செய்த அன்பின் செய்கைகளை புழுத்த நாயினும் கடையனாகிய பாவியேன் அனுசிதமென்று நினைந்தேனே! ஐயையோ இஃது என்ன கொடுமையோ? என்று அச்சம் அடைந்து காலத்திலே போய் முகலியாற்றிலே நீராடி திருமஞ்சனம் கொண்டு மலை மேலேறி முன்போல சுவாமியைப் பூசை பண்ணி அவருக்குப் பின் பக்கத்திலே ஒளிந்திருந்தார்.

சிவகோசரியார் வருகிறதுக்கு முன்னே வேட்டையாடப் போன திண்ணனார் வேட்டையாடி இறைச்சியும் திருமஞ்சனமும் மலரும் முன்போல அமைத்துக்கொண்டு அதி சீக்கிரமாகத் திரும்பினார். திரும்பி வரும்போது பலப்பல துர்ச்சகுனங்களைக் கண்டு, "இந்த சகுனங்களெல்லாம் உதிரம் காட்டுகின்றன. ஆ! கெட்டேன்! என் கண்மணி போன்ற சுவாமிக்கு என்ன அபாயம் சம்பவித்ததோ?" என்று மனங்கலங்கி அதி சீக்கிரமாக நடந்தார். அப்போது பரமசிவனானவர் திண்ணனாருடைய அன்பு முழுவதையும் சிவகோசரியாருக்குக் காட்டும் பொருட்டுத் திருவுளங்கொண்டு தம்முடைய வலது கண்ணிலிருந்து இரத்தம் சொரியப் பண்ணினார். அதைத் திண்ணனார் தூரத்திலே கண்டு சுருக்காய் ஓடிவந்தார்.

வந்தவுடனே இரத்தம் சொரிதலைக் கண்டார். காணவும் வாயிலுள்ள திருமஞ்சனமும் கையிலிருந்த இறைச்சியும் அன்பும் வில்லும் கீழே விழவும் தலையிலே சொருகிய மலர்

அலைந்து சோர, ஆட்டுகின்ற கயிறு அற்று வீழ்ந்த பொம்மையைப் போல சீக்கிரமாய்ப் பதைபதைத்து நிலத்திலே வீழ்ந்து எழுந்து போய் இரத்தத்தைப் பலதரம் கையினாலே துடைக்க அது நிற்காததைக் கண்டு அதற்கு இன்னது செய்வோம் என்று அறியாமல் பெருமூச்செறிந்து திரும்பிப் போய் விழுந்து வெகு நேரம் மூச்சு விடாமல் இறந்தவர்போலக் கிடந்தார்.

**செய்தவர் யாவர்?**

பின் ஒருவாறு தெளிந்து, இப்படிச் செய்தவர்கள் யாவர்? என்று சொல்லிக்கொண்டு எழுந்தார். எங்கும் பார்த்தார், வில்லைஎடுத்து அம்பு பூட்டி இந்தத் தீங்கு வந்தது என் பகைவர்களாகிய வேடுவர்களாலேயோ அல்லது இந்த வனத்தில் சஞ்சரிக்கின்ற துட்ட மிருகங்களாலேயோ ஒன்றும் தெரியவில்லையே? என்று சொல்லி மலைப்பக்கங்களில் நெடுந்தூரம் தேடிப்போனார்.

வேடர்களாவது விலங்குகளாவது ஒன்றும் அகப்படாததினால் திரும்பி வந்து மிகுந்த துன்பத்தை அடைந்து சுவாமியைக் கட்டிக்கொண்டு கண்ணீர் சொரிய வாய்விட்டு அழுதார். என்னுயிரினும் சிறந்தவராகிய சுவாமிக்கு எப்படி இந்தத் துன்பம் சம்பவித்ததோ? இதைத் தீர்ப்பதற்கு மருந்து ஒன்றும் அறியேனே! ஐயையோ! இதற்கு என்ன செய்வேன்? என்றார்.

**பச்சிலை மருந்து**

இந்த உதிரம் என்னத்தால் நிற்குமோ? வேடர்கள் அம்புபட்ட புண்ணைத் தீர்க்கின்ற பச்சிலை மருந்துகளை மலையடிவாரத்தில் போய்த் தேடிப்பிடுங்கிக் கொண்டு வருவேன், என்று சொல்லிக் கொண்டு போய் வனங்களெல்லாம் திரிந்து பலவகைகளாகிய பச்சிலைகளைப் பிடுங்கிக் கொண்டு சீக்கிரமாய் நடந்து வந்து அந்த மருந்துகளைக் கசக்கிப் பிழிந்து கண்ணிலே வார்த்தார்.

அதனால் அக்கண்ணிலிருந்து வருகின்ற இரத்தம் நிற்காததைக் கண்டு ஆவி சோர்ந்து, "இனி நான் என்ன செய்வேன்?" என்று ஆலோசித்துக்கொண்டு நின்றார். நிற்கும் போது "ஊனுக்கு ஊனிடல் வேண்டும்" என்னும் பழமொழி அவருடைய ஆத்தியானத்திலே வந்தது. உடனே இனி என்னுடைய கண்ணை அம்பினாலே எடுத்து அப்பினால் இந்த இரத்தம் தடைபடும் என்று எண்ணம் கொண்டு மனமகிழ்ச்சியுடனே சுவாமி முன்னேயிருந்து அம்பை எடுத்துத் தன் கண்ணைத் தோண்டி சுவாமியினுடைய கண்ணிலே வைத்தார். வைத்த மாத்திரத்திலே இரத்தம் தடைபட்டதைக் கண்டார். உடனே மிகுந்த மகிழ்ச்சியடைந்து குதித்துப் பாய்ந்தார். மலை போன்ற பருத்த புயங்களைக் கைகளினாலே தட்டி ஆரவாரித்தார். கூத்தாடினார். நான் செய்த செய்கை நன்று! நன்று! என்று சொல்லி வியந்து அத்தியந்த ஆனந்தத்தினாலே உன்மத்தர் போலானார்.

**கண்ணிலே மீண்டும் குருதி**

இப்படி மகிழ்ச்சிக் கடலிலே உலவும் பொழுது சுவாமி அந்தத் திண்ணனாருடைய பேரன்பைச் சிவகோசரியாருக்கு இன்னமுங் காட்டுதற்குத் திருவுளங்கொண்டு மற்ற இடது கண்ணிலும் இரத்தம் சொரியப் பண்ணினார்.

திண்ணனார் அதைக் கண்டு மகிழ்ச்சி நீங்கிக் கரையில்லாத துன்பக் கடலில் அழுந்தி ஏங்கி பின்பு ஒருவாறு தெளிந்து "இதற்கு நான் அஞ்சேன், மருந்து கை கண்டு கொண்டேன். இன்னம் ஒரு கண் இருக்கிறதே அதைத் தோண்டி அப்பி இந்த நோயைத் தீர்ப்பேன்," என்று சொல்லித் துணிந்து தன்னுடைய கண்களைத் தோண்டிய போது சுவாமிகளுடைய கண், இந்த இடத்தில் இருக்கிறது என்று தெரியும் பொருட்டு ஒரு செருப்புக் காலை அவர் கண்ணின் பக்கத்தில் ஊன்றிக்கொண்டு சம்பூரணமான ஆசையுடனே தம்முடைய கண்ணைத் தோண்டும்படி அம்பை வைத்தார்,.

**கண்ணப்பர்**

தயாநிதியாகிய கடவுள் அதைச் சகிக்காமல் தன்னுடைய திருவாக்கை திறந்து, "கண்ணப்பா நில்லு" என்று அருளிச் செய்து, அவருடைய கண்ணைத் தொட்ட கையைத் தம்முடைய திருக்கரத்தாலே பிடித்துக் கொண்டார்.

பிரம்மா முதலான எல்லாத் தேவர்களும் வேதமுழக்கத் தோடும் கற்பகப் பூமாரி பெய்தார்கள். மகாஞானியாகிய சிவகோசரியும் இந்தச் சமாசார முழுவதையும் கண்டு அத்தியந்த ஆச்சரியம் அடைந்து சுவாமியை வணங்கினார்.

**கண்ணப்பரானார்**

அன்றைய நாள் முதலாகப் பெரியோர்கள் சுவாமி சொல்லியபடியே அவருக்குக் கண்ணப்பர் என்கிற பேரையே வழங்குகிறார்கள்.

நெடுங்காலம் வெப்பமாகிய அக்கினி மத்தியிலே நின்று மனசை ஐம்புலன் வழியே செல்லாதபடி ஒடுக்கி அருந்தவம் செய்கின்றவருக்கும் கிட்டாத பரம்பொரு ளிடத்தே ஆறு நாளைக்குள்ளே பெருகிய அன்பு மேலீட்டினால் தம்முடைய திருநயனத்து இரத்தத்தைக் கண்டு அஞ்சித் தம்முடைய கண்ணை இடந்து அவர் திருநயனத்திலே அப்பும் திண்ணனாருடைய கையை தமது திருக்கரத்தினாலே பிடித்துக்கொண்டு "குறையற்ற பக்தியையுடைய கண்ணப்பா, நீ நம்முடைய வலது பக்கத்திலே நில், " என்று திருவருள் புரிந்தார். இதைக் காட்டிலும் பெறவேண்டிய பெரும் பேறு யாது?

கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கடியேன்



# இலை மலிந்த சருக்கம்

*12. குங்கிலியக்கலய நாயனார்*

**கவி**

சீலமலி திருக்கடவூர் கலய னாராந்
திகழ்மறையோர் பணிவறுமை சிதையா முன்னே
தாலியைநெற் கொளவென்று வாங்கிக் கொண்டு
சங்கையில்குங் கிலியத்தாற் சார்ந்த செல்வர்
ஞாலநிகழ் திருப்பனந்தாள் நாதர் நேரே
நரபதியுந் தொழக்கச்சா ணயந்து போதப்
பாலமுத முண்டாரு மரசுமெய்திப்
பரிந்தமுது செயவருள்சேர் பான்மை யாரே!

**கதை**

**கலயர்**

சோழ மண்டலத்திலே திருக்கடவூரிலே அந்தணர் குலத்திலே சிவபக்தியில் மிகுந்த கலயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தத் திருப்பதியில் வீரட்டானம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கின்ற பரமசிவனுக்குத் தினந்தோறும் குங்கிலியத் தூபம் இட்டுவந்தார்.

அப்படி இட்டு வருங்காலத்திலே பரமசிவன் அவர் பக்தி வலிமையை அறியும் பொருட்டு அவருக்கு வறுமையை உண்டாக்கினார். உண்டாக்கியும் தன்னுடைய நிலங்கள் முதலியவற்றையும் அடிமைகளையும் விற்று குங்கிலியம் வாங்கித் தூபமிட்டு வந்தார். வீட்டில் உள்ளவையெல்லாம் செலவாயினதால் அவர் பந்துக்களும் மக்களும் வருந்தினார்கள்.

**தாலியைக் கொடுத்தார்**

அப்படியிருக்க இரண்டுநாள் வீட்டில் ஒன்றும் இல்லாமல் பட்டினியாயிருப்பதால் அவர் மனைவியார் அரிசி முதலானவை வாங்குவதற்குத் தன்னுடைய தாலியை உருவி நாயகர் கையில் கொடுத்து, "இதற்கு நெல் வாங்கி வாரும்!" என்றார்.

**தாலிக்கு குங்கிலியம்**

குங்கிலியக் கலய நாயனார் அந்தத் தாலியை வாங்கிக்கொண்டு நெல் வாங்கும்படிப் போகும்போது வழியிலே ஒரு வர்த்தகன் மாட்டின் மேல் குங்கிலியப் பொதியைப் போட்டுக்கொண்டு எதிரே வந்தான். நாயனார் அவனைப் பார்த்து மனம் மகிழ்ந்து, "சுவாமிக்குத் தூபம் இடும்படி குங்கிலியத்தைப் பெற்றுக்கொண்டேன். இதைப் பார்க்க மேலாகிய பேறு உண்டோ? " என்று சொல்லித் தன் கையிலிருந்த தாலியைக் கொடுத்து அந்தக் குங்கிலியப் பொதியை வாங்கிக்கொண்டு ஆலயத்துக்கு விரைந்து சென்று அங்குள்ள பண்டாரத்திலே அந்தக் குங்கிலியத்தை வைத்து விட்டுச்சுவாமியைத் துதித்துக்கொண்டிருந்தார்.

**இறைவன் அருளால்**

வீட்டில் அவர் மனைவியாரும் மக்களும் பசியினால் வாடி அன்றைய இராத்திரியிலே களைப்பை அடைந்து நித்திரை செய்தார்கள்.

அப்போது பரமசிவனானவர் அந்த வீடு முழுவதிலும் பொன் கும்பலும், நெல் கும்பலும், அரிசி கும்பலும் பிறவளங்களும் நிறைந்து இருக்கும்படி அருள் செய்து அந்த மனைவியாருக்கு சொப்பனத்திலே தோன்றி அனுக்கிரகம் செய்தார். உடனே அவர் விழித்தெழுந்து அங்கேயிருக்கின்ற செல்வத்தைக் கண்டு பரமசிவனுடைய திருவருளைத் துதித்துத் தம்முடைய நாயகருக்குத் திருவமுது பாகம் பண்ணினார்.

கோவிலில் பரமசிவனானவர் குங்கிலியக் கலய நாயனாருக்கு தோன்றி, "நீ மிகவும் பசி கொண்டிருக்கிறாய்! உன் வீட்டுக்குப்போய் திருவமுது செய்!" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

குங்கிலியக் கலய நாயனார் அதைக் கேட்டுக் கைகூப்பி வணங்கி அவருடைய கட்டளையை மறுத்து இருப்பதற்குப் பயந்து கோயிலை விட்டுத் தன்னுடைய வீட்டினுள்ளே போய்ப் புகுந்தார். அப்போது அவ்வீடெங்கும் நிறைந்திருக்கின்ற நிதிக் கும்பலை நாயனார் கண்டு மனைவியாரைப் பார்த்து, "இந்தச் சம்பத்துக்கள் எல்லாம் எப்படி வந்தது?" என்று கேட்க அவள் சுவாமியினுடைய அருளினால் வந்தது என்றாள்.

**இறைவன் கருணையோ?**

நாயனார் அதைக் கேட்டு, ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை ஆட்கொள்ளும் பொருட்டு எங்கள் கடவுளுடைய கருணை இருந்தபடி இப்படியோ? என்று கடவுளை வணங்கினார். மனைவியார் சீக்கிரத்திலே கணவரையும் சிவனடியார்களையும் விதிப்படி தூபதீபங்களால் ஆராதனை செய்து அமுது செய்வித்தார்.

அவர் இப்படி நடத்தி வருங்காலத்திலே திருப்பனந்தாள் என்கிற திருப்பதியில் வீற்றிருக்கின்ற சிவலிங்கம் சாய்ந்திருக்கின்றமையால் அதனை நிமிரச் செய்து கும்பிடுவதற்கு விரும்பி, அரசரானவர் யானைகள் எல்லாவற்றையும் பூட்டி இழுத்தும் அது நிமிராமையால் அகோராத்திரம் தீராத கவலையுற்றிருந்தார். குங்கிலியக் கலய நாயனார் அந்தச் சமாசாரத்தைக் கேள்விப்பட்டு சுவாமி தரிசனம் செய்யும்படி அந்தத் தலத்துக்குப் போனார்.

*சிவலிங்கம் நிமிர்ந்தது*

அங்கே அந்தச் சிவலிங்கத்தை நிமிர்த்த வேண்டும் என்கிற ஆசையால் அரசர் வருத்தமுறுதலையும் சேனைகள் யானைகளோடு சிவலிங்கத்தை இழுத்து வலி குறைந்து விழுந்து இளைத்தலையும் கண்டு மனசிலே துன்பம் கொண்டு அடியேனும் இந்தத் திருப்பணியைச் செய்ய வேண்டும் என்று விரும்பி சிவலிங்கத்திலே கட்டியிருக்கிற கயிற்றைத் தம்முடைய கழுத்திலே கட்டிக்கொண்டு இழுத்தார்.

உடனே சிவலிங்கம் இவருடைய பக்தி வலிமையினாலே நிமிர்ந்தது. அரசரும் சேனைகளும் அதைக் கண்டு மிகுந்த களிப்பை அடைந்து அரசர் குங்கிலியக் கலய நாயனாரை வணங்கி அதிசயித்துத் தோத்திரம் செய்து சுவாமிக்கு வேண்டிய திருப்பணிகள் பலவற்றை நிறைவேற்றிக் கொண்டு தம்முடைய நகரத்துக்குப் போய் விட்டார்.

குங்கிலியக் கலய நாயனார் சிலநாள் அவ்விடத்தில் சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்து பின்பு தான் இருக்கிற திருக்கடவூருக்குப் போய் தாம் செய்யப்பட்ட திருப்பணியைச் செய்து கொண்டு இருந்தார்.

**அப்பரும் சம்பந்தரும்**

அந்நாளிலே அந்தத் தலத்துக்கு எழுந்தருளிவந்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரையும் திருநாவுக்கரசு நாயனாரையும் எதிர்கொண்டு போய் தம்முடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்து அமுது செய்வித்து அவர்களுடைய திருவருளையும் பரமசிவனுடைய திருவருளையும் பெற்றார்.

பின்பு, சில காலம் அன்பு மென்மேலும் பெருக பல திருப்பணிகளையும் செய்து கொண்டிருந்து சிவலோகப் பதவி எய்தினார்.

கடவூரிற் கலியன்றன் அடியார்க்கும் அடியேன்

## இலைமலிந்த சருக்கம்

*13. மானக் கஞ்சாற நாயனார்*

**கவி**

கஞ்சநகர் மானக்கஞ் சாற னார்சீர்க்
காதன்மகள் வதுவைமணம் காண நாதன்
வஞ்சமலி மாவீரத் தலைவனாகி
வந்து புகுந் தவ்வளக மகிழ்ந்து நோக்கிப்
பஞ்சவடிக் காமென்னா வரிந்து நீட்டும்
பத்தரெதிர் மறைந்திறைவன் பணிந்தவாக்கால்
எஞ்சலில்வண் குழல் பெற்ற பேதை மாதை
ஏயர்பிராற் குதவியரு ளெய்தினாரே.

**கதை**

**மானக்கஞ்சாறர்**

கஞ்சாறூரிலே வேளாளர் குலத்திலே அரசர்களிடத்தில் பரம்பரையாகச் சேனாதிபதி உத்தியோகத்தில் இருக்கின்ற குடியிலே சிவபக்தி அடியார் பத்திகளில் மிகுந்த மானக்கஞ்சாறர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கு வெகுநாள் புத்திர விருத்தியில்லாததினால் அதிக துக்கம் கொண்டு பரமசிவனை உபசாரம் பண்ணி அவருடைய திருவருளினால் ஒரு பெண் குழந்தையைப் பெற்றார்.

**மணப்பெண் ஆனார்**

அந்தப் பெண் வளர்ந்து மணப்பருவம் அடைய கலிக்காம நாயனார் சில முதியோர்களை மானக்கஞ்சாற நாயனார் இடத்துக்கு அனுப்பி அந்தப் பெண்ணைத் தமக்கு திருமணம் செய்து தரும்படிப் பேசுவித்து அவர் அதற்கு உடன்பட்டமையை அறிந்து சோதிடர்களாலே நியமிக்கப்பட்ட சுபதினத்திலே மணக்கோலங் கொண்டு சுற்றத்தார்களோடு கஞ்சாறூருக்குச் செல்லும்படி புறப்பட்டார்.

அவர் கஞ்சாறூருக்கு வருதற்கு முன்னே கருணா நிதியாகிய பரமசிவன் மகாவிரதி வடிவங்கொண்டு மானக்கஞ்சாற நாயனார் வீட்டுக்குச் சென்றார். அந்த நாயனார் அவரைக் கண்டு எதிர்கொண்டு உபசார வார்த்தைகளைச் சொல்லி வணங்கினார்.

மகாவிரதியார் அந்நாயனாரை நோக்கி, இங்கே என்ன மங்கல காரியம் நடக்கப் போகிறது? என்று வினாவ நாயனார் என்னுடைய புத்திரியின் திருமணம் நடக்கப் போகிறது என்றார்.

மகாவிரதியார், "உமக்குச் சோபனம் உண்டாகுக!" என்று ஆசீர்வதித்தார். நாயனார் உள்ளே போய் மணக்கோலம் கொண்டிருந்த தன் புத்திரியை அழைத்து வந்து மகாவிரதியாருக்கு வணக்கம் செய்யும்படிச் செய்தார்.

**பஞ்சவடிக்கு உதவும்**

மகாவிரதியார் தன்னை வணங்கிய அந்தப் பெண்ணினுடைய கூந்தலைப் பார்த்து மானக்கஞ்சாற நாயனாரை நோக்கி இந்தப் பெண்ணினுடைய தலைமயிர் நமக்குப் பஞ்சவடிக்கு உதவும் என்றார்.

உடனே நாயனார் தம்முடைய உடைவாளை உருவி, “இவர் இதைக் கேட்பதற்குச் சிறியேன் என்ன புண்ணியம் செய்தேனோ? ” என்று அந்தப் பெண்ணினுடைய மயிரை அடியோடே அரிந்து அந்த மகாவிரதியார் கையிலே நீட்ட கடவுள் தான் கொண்டுவந்த மகாவிரத வடிவத்தை ஒழித்து ஆகாசத்திலே உமாதேவியோடு இடபாரூடராய்த் தோன்றினார்.

மானக்கஞ்சாற நாயனார் அது கண்டு பரவசமாகி அவர் பாதத்தில் விழுந்து வணங்கி எழுந்து கூப்பிய கையினராய் நின்றார். சுவாமி அந்த மானக்கஞ்சாற நாயனாருக்குத் தம்முடைய பெருங்கருணைத் திறத்தை புகழ்ந்து கொண்டிருக்கிற பெரும் பேற்றைக் கொடுத்து மறைந்தருளினார்.

கலிக்காம நாயனார் கஞ்சாரூரிலே வந்து சேர்ந்து அங்கே நடந்த சமாச்சாரத்தைக் கேள்விப்பட்டு மனமகிழ்ந்து திருவருளைத் துதித்து முண்டித பெண்ணைத் திருமணம் பண்ணுகிறது சாத்திர விரோதமல்லவா? என்று மனந்தளர்ந்தார். அதற்குச் சுவாமி, “கலிக்காமா! இந்தப் பெண்ணுக்குக் கூந்தலை மீளக்கொடுத்தருளிகின்றோம் ” என்று அருளிச் செய்தார்.

அதைக் கேட்டவுடனே மனத்தளர்ச்சி நீங்கி முன்போல கூந்தலைப் பெற்ற அந்தப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு ஊருக்குப் போய் விட்டார்.

மலை மலிந்த தோள்வள்ளல் மானக்கஞ்சாறன்
எஞ்சாத வாட்டாய னடியார்க்கும் அடியேன்



## *இலைமலிந்த சருக்கம்*

*14. அரிவாள்தாயநாயனார்*

**கவி**

*தாவில்கண மங்கலத்துள் வேளாண் தொன்மை*
*தாயனார் நாயனார் தமக்கே செந்நெற்*
*றூவரிசி எனவிளைவ தவையே யாகத்*
*துறந்துணவு வடுவரிசி துளங்கு கீரை*
*ஆவிநினைந் துடன்கொணர்வார் கமரிற் சிந்த*
*அழிந்தரிவாள் கொண்டூட்டி யரியா முன்னே*
*மாவடுவி னொலியு மான்கரமுந் தோன்றி*
*வாள் விளக்கி யமரர்தொழவைத்த வன்றே.*

**கதை**

**தாயனார்**

சோழமண்டலத்திலே கணமங்கலம் என்கிற ஊரிலே வேளாளர் குலத்திலே சிவபத்தியிலே சிறந்தவரும் இல்லறத்தை ஒழுங்காக நடத்துகின்றவரும் மிகுந்த செல்வமுள்ளவரும் ஆகிய தாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுக்குச் செந்நெல்லரிசியும் செங்கீரையும் மாவடுவும் தினந்தோறும் கொண்டு போய் அமுது செய்வித்து வருவார்.

**கூலிக்குப் போனார்**

அப்படி வருங்காலத்திலே கடவுள் அவருடைய அன்பைச் சோதிக்கும்பொருட்டு அவருக்கு வறுமையை உண்டாக்கினார். அப்போது அவர் கூலிக்குப் போய் நெல்லறுத்துக்கூலி வாங்கின செந்நெல்லெல்லாம் அரிசியாக்கிச் சுவாமிக்கு அமுது செய்வித்து கார்நெல் வந்ததைத் தாம் சீவனம் செய்து வந்தார்.

அப்படிச் செய்துவரும் நாளிலே பரமசிவன் அந்த ஊரிலிருக்கிற நெல்லெல்லாம் செந்நெல் ஆகும்படி யருள் செய்ய, தாயனார் மனமகிழ்ந்து தினந்தோறும் வயல்களுக்குப் போய் நெல் அறுத்துக் கூலி வாங்கி, "இப்படிக் கிடைத்தது அடியேன் செய்த புண்ணியத்தால், " என்று சுவாமிக்கு மிக அமுது செய்பவரானார்.

இப்படி நடக்கின்ற படியால் நாள்தோறும் உணவு இல்லாமை பற்றி மனைவியார் வீட்டின் புறத்திலுள்ள தோட்டத்திற்குப் போய் இலைக்கறி எல்லாம் அற்றுப்போன பின்பு நீரை அருந்தித் திருப்பணியைச் செய்து வந்தார்.

இப்படி செய்துவரும் நாளிலே ஒருநாள் செந்நெல் அரிசியும் செங்கீரையும் மாவடுவும் ஒரு கூடையில் வைத்து தலைமேல் எடுத்துக்கொண்டு போக அவர் மனைவியார் பஞ்சகவியங்கொண்டு அவருக்குப் பின்னாக நடந்தார். அப்போது நாயனார் பசியினாலே கால் தள்ளாடி, தவறி விழ மனைவியார் பஞ்சகவியக் கலசத்தை மூடியிருந்த கையினால் அவரைப் பிடித்தார். பிடித்தும் கூடையில் வைத்ததெல்லாம் அங்கே கீழே இருந்த மண்வெடிப்பிலே விழ தாயனார் அதைக் கண்டு இனிக் கோவிலுக்குப் போவதினால் பயன் என்ன? என்று துக்கித்து இங்கே சிந்திய செந்நெல் அரிசியையும் செங்கீரையையும் மாவடுவையும் கடவுள் அமுது செய்தருளும் பேற்றைப் பெற்றேனில்லையே என்று அரிவாளினாலே தன்னுடைய ஊட்டியை அரியத் தொடங்கினார்.

**விடேல் விடேல்**

அப்போது அவ்வடியார் தம்முடைய கழுத்தை அரிகின்ற கையைத் தடுக்கும் பொருட்டு சிந்தித்து பரமசிவனானவர் உயர நீட்டிய திருக்கரமும் மாவடுவைக் கடித்ததால் உண்டாகின்ற "விடேல் விடேல்" என்கிற ஓசையும் அந்த வெடிப்பிலிருந்து எழுந்தது.

தாயனார் பரமசிவனுடைய திருக்கரம் வெளியில்வந்து தன் கையைப் பிடித்த பொழுதே பயங்கொண்ட முந்திய துன்பம் நீங்கி மனம் மிகவும் மகிழ்ந்து அவர் தமக்குச் செய்த திருவருளை வியந்து அஞ்சலி செய்து ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு நின்றார்.

**சிவலோகம் சேர்ந்தனர்**

சுவாமி இடபாரூடராய்த் தோன்றி, "நீ நம்மிடத்திலே வைத்த அன்பினாலே செய்த செய்கை நன்றாயிருக்கிறது. நீ உன் மனைவியோடு வந்து நம்முடைய சிவலோகத்தில் வாழ்ந்திரு" என்று சொல்லி அவர்களை அழைத்துக்கொண்டு கைலாயம் போயருளினார்.

அரிவாளினால் தன் தலையை அரிந்ததால் அரிவாட்டாய நாயனார் என்று பெயர் ஆயிற்று.

மலை மலிந்த தோள்வள்ளன் மானக் கஞ்சாறன்
எஞ்சாத வாடாய னடியார்க்கும் அடியேன்



# இலைமலிந்த சருக்கம்

*15. ஆனாய நாயனார்*

**கவி**

மங்கலமா மழநாட்டு மங்கலமா நகருள்
மருவுபுக ழானாயர் வளரா மேய்ப்பார்
கொங்கலர் பூந் திருக்கொன்றை மருங்கு சார்ந்து
குழலிசை யினைந் தெழுத்தும் குழைய வைத்துத்
தங்குசரா சரங்களெல்லாம் உருகா நிற்பத்
தம்பிரா னணைந்துசெவி தாழ்ந்து வாழ்ந்து
பொங்கியவான் கருணைபுரிந் தென்று மூதப்
போதுகவென் றருளவுடன் போயி னாரே!

**கதை**

**ஆனாயர்**

மழநாட்டிலே மங்கல நகரிலே ஆயர் குலத்திலே சிவபக்தியில் மிகுந்த ஆனாயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தம் ஏவலாளராகிய மற்றை இடையர்களோடும் பசுநிரைகளைக் காட்டுக்குக் கொண்டுபோய் மேய்த்துக் கொண்டும் காந்தர்வ வேதத்திலே சொல்லியபடி மூங்கிலினால் செய்த புல்லாங்குழலிலே திரு ஐந்தெழுத்தை ஏழு சுரங்களும் பொருந்த வாசித்து ஆத்மாக்களுக்குத் தன்னுடைய இசையமுதத்தைச் செவித் துவாரத்தினாலே புகட்டிக்கொண்டு வருவார்.

அப்படி வரும் நாளிலே மழைக்காலத்தில் ஒருநாள் இடையர்களுடன் பசுக்கூட்டம்கொண்டு காட்டிற்குப் போனபோது அவ்விடத்தில் ஒரு கொன்றை மரத்தைக் கண்டு அதன் சமீபத்திலே போய் அதைப்பார்த்துக் கொண்டு நின்று அன்பினாலே உருகி இளகிய மனத்தை உடையவராய்ப் புல்லாங்குழலினாலே கீத சாத்திரப்படிக்கு திருஐந்தெழுத்தை வாசித்தார்.

**இசையில் மயங்கின**

அந்த அதிமதுரமான ஓசையானது சகலமான சீவராசிகளின் காதிலும் கற்பகத்தருவின் பூந்தேனைத் தேவாமிர்தத்தோடு கலந்து வார்த்ததுபோல புகுந்தது. புற்களை மேய்ந்த பசுக்கூட்டங்களெல்லாம் அவரை அடைந்து உருக்கத்தினாலே மெய்மறந்து அசையாதிருந்தது. மற்ற சீவனான பசுவின் கன்றுகளெல்லாம் பால் குடிப்பதை விட்டு இசை கேட்டு நின்றது. மற்ற எருதுகளும் அந்தக் காட்டிலுள்ள மான், மயில், மற்ற பட்சிகள் இவைகளெல்லாம் அந்தச் சங்கீதத்தைக் கேட்க அவர் சமீபத்தை அடைந்தன. மாடு மேய்த்துக்கொண்டிருந்த இடையர்களெல்லாம் தங்கள் தொழிலை மறந்து கானத்தைக் கேட்டுக்கொண்டு நின்றார்கள்.

இந்த இசையைக் கேட்ட விஞ்சையர், சாரணர், கின்னரர், தேவர்கள் இவர்களெல்லாரும் மெய்மறந்து, விமானங்களிலேறிக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். பாம்புகள் மயங்கிப் பயமில்லாமல் மயில்களின் மேல் விழும். சிங்கமும் யானையும் ஒன்றாகக் கூடி நிற்கும். மரக்கொம்புகளெல்லாம் அசையாதிருந்தன. இப்படி சரம், அசரம் என்கிற ஆத்மா வருக்கங்களெல்லாம் ஆனாய நாயனாருடைய வேய்ங்குழலிசையைக் கேட்டு இசைமயமாயின.

அந்த இசையைக் கைலயங்கிரியில் வசிக்கின்ற பரமசிவனார் கேட்டுப் பார்வதிதேவியோடும் காளை வாகனத்திலே ஆகாச மார்க்கத்தில் எழுந்தருளி வந்து நின்று அந்த நாயனாருக்கு அருள் பாலித்து, "அன்பனே! நம்முடைய அடியார்களெல்லாம் உன்னுடைய வேய்ங்குழலிசையைக் கேட்கும் பொருட்டு நீ இப்போது நம்மிடத்துக்கு வரவேண்டும் " என்று திருவாய் மலர்ந்தருள, அந்த ஆனாய நாயனார் புல்லாங்குழல் வாசித்துக்கொண்டு பக்கத்திலே போகக் கைலாசகிரியை அடைந்தார்.

அலைமலிந்த புனல் மங்கை ஆனாயர்க் கடியேன்



# *மும்மையால் உலகாண்ட சருக்கம்*

*16. மூர்த்தி நாயனார்*

**கவி**

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தி யாராம்
வணிகர்திரு வாலவாய் மன்னர் சாத்தத்
தழங்குகிற முழங்கை தரத்தேய்த்த வூறும்
தவிர்ந்தமணர் வஞ்சனையும் தவிர மன்னன்
இழந்தஉயி ரினனாக ஞால நல்க
வேணிஎழில் முடியாக விளங்கு வேட
முழங்குபுக ழணியாக விரைநீ றாக
மும்மையுல காண்டருளின் முன்னினாரே!

**கதை**

**மூர்த்தியார்**

பாண்டிய நாட்டிலே மதுராபுரியிலே வணிகர் குலத்திலே சிவபக்தியிலே மிகுந்த மூர்த்தியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தத் தலத்திலே வீற்றிருக்கின்ற சொக்க நாத சுவாமிக்குத் தரிக்கும் பொருட்டு தினந்தோறும் சந்தனம் கொடுத்துக்கொண்டு வந்தார்.

அந்நாளிலே கர்நாடகத்தரசன் சதுரங்கச் சேனைகளோடும் அந்த மதுரைக்கு வந்து பாண்டியனுடனே போர் செய்து அவனை வென்று ஓட்டி விட்டு அந்த மதுரைக்கு அரசனாயினான்.

**சந்தனப் பணிக்குத் தடை**

அவன் புறச்சமயமாகிய சமணர்களுடைய போதனா சக்தியினாலே ஆருகத மதத்தில் பிரவேசித்து, சிவன் அடியார்களுக்கு இடுக்கண் செய்யும்படியாகினான். பின்பு மூர்த்தி நாயனாரை ஆருகத மதத்திலே பிரவேசிப்பதற்கு உத்தேசித்து அவருக்குப்பல கொடும் செய்கைகளைச் செய்து அவர் சந்தனக் கட்டை வாங்கும் இடங்களிளெல்லாம் அவருக்குச் சந்தனக்கட்டை கொடுக்க விடாமல் தடை செய்து விட்டான்.

**மூர்த்தியார் வருந்தினார்**

அதனால் அவர் மனம் நொந்து இந்தப் பாண்டி நாடு துர்ச்சமயமாகிய ஆருகத சமயத்திலே பிரவேசித்து சிவபுண்ணியத்துக்கு இடையூறு செய்கிற அதிபாதகனாகிய இந்த அரசன் இறந்து போய் சத்சமயமாகிய சைவ சமயத்தை பரிபாலனம் செய்கின்ற அரசரைச் சேருங்காலம் எந்தக்காலம்? என்று நினைத்து துக்கமுடையவராகி அன்று பகல் முழுமையும் சந்தனக்கட்டை தேடித் திரிந்து பார்த்து எங்கும் அகப்படாமையால் கோயிலுக்கு வந்து சுவாமிக்குத் தரிப்பதற்கு தேய்த்துக் கொடுக்கும் பொருட்டு சந்தனக் கட்டைக்கு இன்று முட்டு வந்தாலும் அந்தக் கட்டையைப் போல தேய்க்கத்தக்க கைக்கு ஒரு முட்டும் இல்லை என்று கோயிலிலிருக்கிற சந்தனக் கல்லிலே தன்னுடைய முழங்கையை வைத்துத் தேய்த்தார்.

**கை, சந்தனக்கட்டை ஆயிற்று**

அப்போது அவர் கையின் தோல், நரம்பு, எலும்பு இவைகள் தேயப்பட்டுக் குறைந்து உதிரம் ஒழுகி நான்கு பக்கத்திலும் பெருகி எலும்பினுள்ளிருக்கிற துவாரம் திறந்து உள்ளேயிருந்த முளை வெளியிலே வந்தது.

**இறைவன் தந்த வரம்**

அப்போது ஆகாசத்திலே அசரீரி வாக்கு, அன்பனே! பக்தியினுடைய உறுதிப்பாட்டினாலே இப்படிப்பட்ட செய்கையைச் செய்யாதே, உனக்கு இடுக்கண் செய்த இந்த அரசன் பெற்ற நாடுமுழுதும் நீயே கைக்கொண்டு இவன் வந்து செய்த கொடுமைகளை எல்லாம் நீக்கி அரசு செய்து நீ செய்த திருப்பணியை நடப்பித்து அந்திய காலத்தில் நம்முடைய சிவலோகத்தை அடைவாய் என்று எழுந்தது.

மூர்த்தி நாயனார் அதைக் கேட்டு பயந்து கையைத் தேய்க்காமல் எடுத்துக் கொண்டார். உடனே அவர் கையானது தேய்ந்ததெல்லாம் நீங்கி முன் போலாயிற்று. அன்றைய இராத்திரியிலே இவர் கொடுத்த சாபத்தினால் அந்தக் கர்நாடக அரசன் இறந்து நரகம் போய்ச் சேர்ந்தான்.

மற்றாநாள் பிராத காலத்திலே அமைச்சர் முதலானவர்கள் கூடி தகனம் முதலிய காரியங்களைப் பண்ணி பின்பு தங்கள் அரசனுக்குப் புத்திரனில்லாமையால், வேறொருவரை அரசராக நியமிப்பதற்குப் "பட்டத்து யானையைக் கண்கட்டி விடுவோம். அஃது எவரை எடுத்துக்கொண்டு வருமோ அவரையே இந்த நாட்டுக்கு அரசனாக்கி வைத்துக்கொள்ளுவோம்!" என்று ஆலோசித்து பட்டத்து யானையை அலங்காரம் செய்து "நீ இந்த நாட்டை ஆளுதற்கு ஒருவரை எடுத்துக்கொண்டு வா," என்று சொல்லி அதன் கண்களை ஆடையினால் கட்டி ஓட்டிவிட்டார்கள்.

**பட்டத்து யானை**

அந்த யானையானது அந்தப் பட்டணத்து வீதிகளிலே திரிந்து சென்று சொக்கநாத சுவாமியினுடைய ஆலயத்தின்

கோபுரத்தின் முன்னே போயிற்று. மூர்த்தி நாயனார் இராத்திரியிலே தமக்கு அருளிய அசரீரி வாக்கினால் மனத்துயரம் நீங்கி, "எங்கள் கடவுளாகிய பரமசிவனுக்குத் திருவுளமுண்டாயிருந்ததேயானால், அடியேன் இந்த நாட்டை ஆளுதற்கு உடன்படுவேன்!" என்று நினைத்துக் கொண்டு கோவில் பக்கத்திலே நின்றார்.

**மூர்த்தி நாயனார் மன்னரானார்**

யானையொன்று அவர் முன்னே சென்று தாழ்ந்து அவரை எடுத்து முதுகின் மேல் வைத்துக் கொண்டது. மந்திரிமார்கள் அதைக் கண்டு அவரை வணங்கி யானையின் முதுகினின்றும் இறக்கி மலர் மாலைகள் தொங்கக் கட்டிய சிங்காதனத்தில் உட்கார வைத்து முடி சூடுதற்கு வேண்டிய மங்கல காரியங்களை ஆரம்பித்தார்கள்.

**நாயனார் வேண்டுகோள்**

நாயனார் அவர்களைப் பார்த்து, "ஆருகத மதம் நீங்கி சைவசமயம் விருத்தியானால் நான் இந்த நாட்டை ஆளுதற்கு உடன்படுவேன், என்றார். அதைக் கேட்ட மந்திரிமார்களும் சாத்திரப் பயிற்சியுள்ள பிறரும் அவரை வணங்கி நின்று "சுவாமி தேவரீருடைய ஆணையின்படிக் கல்லாமல் அதற்கு விரோதமாக யாவர் செய்வார்கள்?" என்று சொன்னார்கள்.

பின்பு மூர்த்தி நாயனார், "நான் அரசாள்வேனாகில் எனக்கு திருநீறே அபிஷேக திரவியமும், உருத்திராட்சமே ஆபரணமும் சடாமுடியே கிரீடமும் ஆகும்" என்றார். அவர்கள், "தேவரீர் அருளிச் செய்த படியே ஆகும்" என்று சொல்லி மகுடாபிடேத்துக்கு வேண்டிய செய்கைகளைச் செய்து நிறைவேற்றினார்கள்.

மூர்த்தி நாயனார் சடைமுடி தரித்து ஆலயத்தில் போய் சுவாமியை வணங்கிக் கொண்டு, யானையின் மேலேறி அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தார்.

**சிவபதம் அடைந்தார்**

அங்கே அத்தாணி மண்டபத்திலே இரத்தின சிங்காதனத்தின் மேலே தவளக்குடை நிழலிலே வீற்றிருந்துகொண்டு பொய்ச் சமயமான ஆருகத மதம் நீங்கவும் மெய்ச்சமயம் ஆகிய சைவ சமயமே எங்கும் விளங்கவும் பெண் ஆசை சிறிதும் இல்லாமல் நெடுங்காலம் திருநீறு உருத்திராட்சம் சடைமுடி என்கிற மூன்றினாலும் அரசு ஆண்டு முடிவில் சிவபதம் அடைந்தார்.

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்



# மும்மையால் உலகாண்ட சருக்கம்

*17. முருக நாயனார்*

**கவி**

மன்னுதிருப் புகலூர்வாழ் முருக னாராம்
மறையவர் கோவர்த்த மானீச் சரத்தார்
சென்னியினுக் கழகமரும் மலர்கள் கொய்து
திருமாலை புகழ்மாலை திகழச் சாத்திக்
கன்னிமதிற் கழுமலநா டுடைய நாதன்
காதன்மிகு மணம்காணும் களிப்பி னாலே
மின்னல்கெட வுடன்சேவித் தருளான் மீளா
திரங்கு பெருமணத்தரனை யெய்தினாரே!

**கதை**

**முருகர்**

சோழமண்டலத்திலே திருப்புகலூரிலே அந்தணர் குலத்திலே சிவபக்தி மிகுந்த முருகர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் நித்தியம் சூரிய உதயத்துக்கு முன் எழுந்து நீராடி மலர்த்தோட்டத்துக்குப் போய் பூக்கூடையிலே கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்கிற நால்வகைப் பூக்களில் உரிய பூக்களை எடுத்து வைத்துக்கொண்டு வந்து பலவகைப்பட்ட மாலைகள் செய்து அந்தத் தலத்தில் இருக்கின்ற பரமசிவனுக்குச் சாத்தியும் திருஐந்தெழுத்தை உச்சரித்தும் வருவார்.

**சிவபாதம் அடைந்தார்**

இப்படிச் செய்து வருங்காலத்திலே திருஞான சம்பந்த சுவாமிகளுக்குச் சிநேகிதராகி அவர் சிநேகத்தினாலும் சிவபூசை பலத்தினாலும் அந்திம காலத்தில் பரமசிவனுடைய பாதத்தை அடைந்தார்.

**முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்**



# மும்மையால் உலகாண்ட சருக்கம்

### 18. உருத்திரபசுபதி நாயனார்

**கவி**

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர் வாழும்
பசுபதியா ரெனுமறையோர் பணிந்து செந்தேன்
அங்கமல வாவியிடை யல்லும் எல்லும்
அகலாதே யாகளமா யமர்ந்து நின்று
திங்கள்வளர் சடைமுடியா னடிகள் போற்றித்
திருவெழுத்து முருத்திரமும் திகழ வோதி
மங்கையிட முடையபிரானருளால் மேலை
வானவர்க டொழுமுலகின் மன்னி னாரே.

**கதை**

**பசுபதி**

சோழ நாட்டிலே திருத்தலையூரிலே அந்தணர் குலத்திலே பரமசிவனுடைய திருவடிகளிலே பதிந்த அன்பே தமக்குச் செல்வமெனக் கொண்ட பசுபதி என்பவர் ஒருவர் இருந்தார்.

**உருத்திரம் ஓதுவர்**

அவர் தாமரைத் தடாகத்திலே அகோராத்திரம் கழுத்தளவு தண்ணீரிலே இறங்கி நின்றுகொண்டு இரண்டு கைகளையும்

சிரசின் மேல் குவித்துப் பரமசிவனுடைய திருவடிகளை நினைத்துக்கொண்டு வேதத்தின் சாரமாகிய உருத்திரத்தை ஓதி அந்திய காலத்தில் சிவபதத்தை அடைந்தார்.

உருத்திரத்தை ஓதினதால் அவருக்கு உருத்திர பசுபதி நாயனார் என்று பெயர் ஆயிற்று.

முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்



# மும்மையால் உலகாண்ட சருக்கம்

### *19. திருநாளைப் போவார் நாயனார்*

**கவி**

*நன்மைதிகழ் மேற்காநாட் டாதனூர் வாழ்*
*நந்தனார் புறத்தொண்டர் நாளைப் போக*
*பொன்மலிதென் புலியூர்க் கென்றுரைப்பார் புன்கூர்*
*பொய்கையமைத் திடலேறு பிரிய நோக்கி*
*வன்மதில் சூழ் தில்லையிறை யருளால் வாய்ந்த*
*வண்டழலி னிடைமூழ்கி மறையோர் போற்ற*
*மின்மலி செஞ்சடைமுனியா எழுந்து நாதன்*
*விளங்குநடந் தொழமன்றுள் மேவி னாரே!*

**கதை**

**நந்தனார்**

சோழ மண்டலத்திலே மேற்கா நாட்டிலே ஆதனூரிலே புலையர் குலத்திலே நந்தனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருவடியேஅல்லாமல் மற்றொன்றையும் நினைக்காதவர்.

**நந்தனார் பணி**

அவர் அந்த ஊரிலே வெட்டிமை செய்து, அதற்காக விட்டிருக்கின்ற மானிய நிலங்களைப் பயிரிட்டு சீவனம் செய்வார். சிவாலயங்கட்கெல்லாம் பேரிகை, மத்தளம்

முதலாகிய வாத்தியங்கள் செய்வதற்குத் தோலும் வாரும், வீணை முதலான வாத்தியங்களுக்கு நரம்பும், அருச்சனைக்குக் கோரோசனையும் கொடுக்கின்றவர்.

ஆலயங்களின் திருவாயில் புறத்தில் நின்றுகொண்டு அதிக அன்பினாலே கூத்தாடிப் பாடுகின்றவர். அப்பேர்ப்பட்டவர் ஒருநாள் திருப்புன்கூரிலே போய் சுவாமி தரிசனம் பண்ணி திருப்பணி செய்வதற்கு விரும்பி அங்கே கோபுரவாசலிலே நின்று கொண்டு சுவாமியைத் தரிசித்துக் கும்பிட வேண்டும் என்று நினைத்தார்.

**நந்தி விலகியது**

சுவாமி ,அவருடைய விருப்பத்தின் படியே தனக்கு முன் இருக்கின்ற நந்திதேவரை விலகும்படிச் செய்து அவருக்குக் காட்சி கொடுத்தருளினார். நந்தனார், அந்தத் திருத்தலத்திலே ஒரு பள்ளத்தைக் கண்டு அதைப் பெரிய குளமாகவெட்டித் தன்னுடைய ஊருக்குத் திரும்பி வந்துவிட்டார்.

அவர் இந்தப்படியே பல திருத்தலங்களையும் போய் வணங்கித் திருப்பணி செய்து வந்தார்.

**நாளைப் போவார்**

அந்நாளிலே ஒரு நாள் சிதம்பரமாகிய திருத்தலத்துக்குப் போகவேண்டும் என்று ஆசை கொண்டு அன்றிரவு முழுவதும் நித்திரை செய்யாமலிருந்து விடிந்தபின் நான் சிதம்பரத் திருத்தலத்திற்குப் போனால் கோயிலுள்ளே பிரவேசிக்கும் யோக்கியதை என் சாதிக்கு இல்லையே என்று துக்கித்து இதுவும் சுவாமியினுடைய திருவருள்தான் என்று சொல்லிப் போகாமல் இருந்தார். பின்னும் ஆசை அதிகரித்ததால் நாளைக்குப் போவேன் என்றார்.

இப்படியே நித்தியமும் "நாளைக்குப் போவேன்! நாளைக்குப் போவேன்!" என்று அனேக நாட்களைக் கழித்ததால் அவருக்குத் 'திருநாளைப் போவார்' என்று பெயர் உண்டாயிற்று.

அவர் ஒரு நாள் சிதம்பர தரிசனம் பண்ண வேண்டும் என்கிற அளவிறந்த ஆசையினாலே தன் ஊரை விட்டுப் புறப்பட்டு சிதம்பரத்தின் எல்லையை அடைந்து மதில்வாயிலில் புகுந்து அங்குள்ள அந்தணர்களுடைய வீடுகளிலே ஓமம் செய்யப்படுதலைக் கண்டு பயந்து அங்கே நின்று வணங்கி அந்த எல்லையை வலம் செய்து கொண்டு போவார்.

இப்படி செய்துகொண்டிருந்த நாளைப் போவார், இந்த இழிந்த பிறப்பு, சபாநாயகரைப் போய் தரிசிக்க தடை செய்கின்றதே, என்று துக்கத்தோடும் நித்திரை செய்தார். சாபாநாயகர் அவருடைய வருத்தத்தை நீக்கி அருள் செய்ய திருவுள்ளங்கொண்டு, அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நீ இந்தப் பிறப்பு நீங்கும்படி நெருப்பிலே மூழ்கி எழுந்து அந்தணர்களோடும் நம்முடைய சந்நிதானத்திற்கு வருவாய்," என்று அருளிச் செய்து தில்லைவாழ் அந்தணர்க்கும் சொப்பனத்திலே தோன்றி அந்தத் திருநாளைப் போவார் பொருட்டு நெருப்பு வளர்க்கும்படி ஆணையிட்டு மறைந்தருளினார்.

தில்லைவாழ் அந்தணர்கள் எல்லாரும் விழித்தெழுந்து கோயில் வாயிலிலே வந்து கூடி, சபாநாயகர் ஆணையிட்டபடி செய்வோம் என்று சொல்லி, திருநாளைப் போவாரிடத்திலே சென்று, "அய்யரே! சபாநாயகருடைய கட்டளையாலே இப்பொழுது உம்பொருட்டு அக்கினி வளர்க்கும்படி வந்தோம்," என்றார்கள்.

**நெருப்பிலே மூழ்கினார்**

திருநாளைப் போவார் அதைக் கேட்டு, "அடியேன் பிழைத்தேன்," என்று சொல்லி வணங்கினார். அந்தணர்கள் தென்மதில் பக்கத்திலே கோபுர வாயிலுக்கு முன்னே ஒரு குழியிலே அக்கினி வளர்த்து அதைத் திருநாளைப் போவாருக்குப் போய்த் தெரிவித்தார்கள். திருநாளைப் போவார் அந்த நெருப்புக் குழியை அடைந்து சபாநாயகருடைய திருவடிகளை மனத்திலே தியானித்து அதனை வலம் செய்து கும்பிட்டுக் கொண்டு அதன் உள்ளே புகுந்தார்.

**கனகசபை அடைந்தார்**

புகுந்த நாயனார் அந்தத் தேகத்தை ஒழித்து புண்ணிய மாகிய அந்தண வடிவம் கொண்டு சடை முடியோடு எழுந்தார். அதுகண்டு தில்லைவாழ் அந்தணர்களும் மற்ற சிவபக்தர்களும் அஞ்சலி செய்து களிப்படைந்தார்கள். திருநாளைப் போவார் அவர்களோடு கோபுரத்தை அணுகி அதை வணங்கி எழுந்து உள்ளே போய்க் கனகசபையை அடைந்தார்.

அவரை, பின் அங்கே நின்ற அந்தணர் முதலான பேர்கள் யாவரும் காணாமையால் ஆச்சரியம் கொண்டு தோத்திரம் செய்தார்கள்.

சபாநாயகர், திருநாளைப் போவாருக்குத் தம்முடைய திருப்பாதங்களைக் கொடுத்தருளினார்.

**செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்**



## மும்மையால் உலகாண்ட சருக்கம்

*20. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்*

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரே காலி
குலத்தலைவர் தவர்க்குறிப்புக் குறித்துளார் பால்
வந்திறைவர் நமக்கின்று தாரீ ராயின்
வருந்துமுட லெனவாங்கி மாசு நீத்த
கந்தைபுல ராதொழிய மழையு மாலைக்
கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன்மேல்
சிந்தமுடி புடைப்பளவிற் றிருவேகம்பர்
திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னாரே!

**ஒரு பெரியவர்**

தொண்டை மண்டலத்திலே காஞ்சிபுரத்திலே ஏகாலியர் குலத்திலே சிவனடியார்களுடைய திருக்குறிப்பையறிந்து தொண்டு செய்கின்றமையால் திருக்குறிப்புத் தொண்டர் என்னும் பெயர் பெற்று ஒரு பெரியவர் இருந்தார்.

**சிவபக்தர் வந்தார்**

அவர் மிகுந்த விருப்பத்தோடு சிவபக்தர்களுக்கு ஆடைகளை ஒலித்துக் கொடுத்து வருங்காலத்திலே ஒரு நாள்

ஏகாம்பரேச்சுவரர் குளிர் காலத்திலே ஒரு சிவ பக்தர் வேடங்கொண்டு மெலிந்த சரீரமுடைய ஒரு பெரியவர் போலாகி அழுக்கடைந்த கந்தைகளைத் தரித்துக்கொண்டு அந்த ஏகாலியரிடத்தில் போனார்.

**திருக்குறிப்புத் தொண்டர்**

திருக்குறிப்புத் தொண்டர் அவரைக்கண்டு எதிர்கொண்டு வணங்கிப் பல உபசார வார்த்தைகளைச் சொல்லி அவருடைய குறிப்பை அறிந்து "உமது கந்தையைத் தந்தருளும், ஒலித்துத் தருகிறேன்" என்றார்.

சிவபக்தர் வேடங்கொண்ட கடவுள், "இந்தக் கந்தை அழுக்கு அதிகமாக ஏறப் பெற்றுத் தரிப்பதற்குத் தகுதியில்லாததாய் இருந்தாலும் குளிர் மிகுதியால் வருத்தப்படுகின்ற படியால் இதைக் கைவிடக் கூடாது, அத்தமனத்திற்கு முன் தருவதாயின் கொண்டு போய்ச் சீக்கிரமாய் ஒலித்துக் கொண்டு வாரும்," என்றார்.

**அப்படிக்கே செய்வேன்**

நாயனார் "அப்படிக்கே ஒலித்து அத்தமனத்துக்கு முன் கொண்டுவந்து தருகிறேன் கொடும்," என்று சொல்ல, சுவாமி "விரைவிலே ஒலித்துத் தராவிட்டால் இந்தத் தேகத்துக்குத் துன்பம் செய்தீராகும்" என்று சொல்லி அந்தக் கந்தையை அவர் கையில் கொடுத்தார்.

**மழை வந்தது**

திருக்குறிப்புத் தொண்ட நாயனார் அதை வாங்கிக்கொண்டு ஒரு குளத்திலே போய் வெள்ளாவியில் வைத்துப் பின்பு ஒலிக்க ஆரம்பித்தார். அப்போது பரமசிவனுடைய திருவருளினாலே மேகங்கள் மழை பெய்ய ஆரம்பித்தது.

**என்ன செய்வேன்?**

திருக்குறிப்புத் தொண்டர் சிவபக்தருக்குத் தான் வாக்குக் கொடுத்ததை நினைத்து, இனி நான் என்ன செய்வேன்? என்று விசனித்து மழை சற்று நேரத்தில் விடும் என்று அங்கே தானே நின்றார்.

அது விடாமல் பெய்ய இராக்காலமும் வர திருக்குறிப்புத் தொண்டர் "குளிரினால் திருமேனி நடுங்குகின்ற சிவபக்தருக்கு நான் செய்ய விரும்பிய பணி விடை தவறிப் போயிற்றே! ஐயையோ!" என்ன செய்வேன்? என்று சொல்லிக் கீழே விழுந்தார்.

**கல்லிலே தலையை மோதினார்**

"இனியும் மழையும் விடாது, அவருக்கு நாம் சொன்ன கெடுவு காலமும் போயிற்று, நான் முன்னேயே ஒலித்து வீட்டிலே காயப் போடவும் மறந்து விட்டேன். சிவபக்தருடைய திருமேனி குளிரினாலே வருந்தும்படி தீங்கு செய்த சிறியேனுக்கு இனி இதுவே செயல்," என்று எழுந்து ஆடைகளைப் புடைக்கின்ற கல் பாறையிலே தலையை சிதறும்படி எற்றுவேன் என்று போய் அந்தக் கல்பாறையிலே தன் சிரசை எற்ற, சர்வ வியாபியாகிய பரமசிவனுடைய திருக்கரம் அந்தக் கல்பாறையின் பக்கத்தில் தோன்றி அவரைப் பிடித்துக்கொண்டது.

ஆகாயத்திலிருந்து சொரிந்த நீர் மழை நீங்கிப் பூமழை பொழிந்தது. பரமசிவன் உமாதேவியோடு காளை வாகனத்தே வந்து காட்சி கொடுத்தார். திருக்குறிப்புத் தொண்ட நாயனார் மிகுந்த அன்பினோடு விழுந்து வணங்கி எழுந்து நின்றார்.

**திருவருள் பெற்றார்**

பரமசிவன் அவரைப் பார்த்து உன்னுடைய பக்தி வலிமையை மூன்று உலகத்தாருக்கும் தெரிவித்தோம். இனி நீ நம்முடைய உலகத்தை அடைந்து பேரின்பம் பெற்று வாழ்ந்திரு என்று திருவருள் புரிந்து மறைந்தருளினார்.

**திருக்குறிப்புத் தொண்டர் தம் அடியார்க்கும் அடியேன்**



# மும்மையால் உலகாண்ட சருக்கம்

*21. சண்டேச்சுவர நாயனார்*

**கவி**

வேதமலி சேய்ஞலூ ரெச்ச தத்தன்
விளங்கியசேய் மறைபயிலும் விசார சர்மர்
கோதனமேய்ப் பவன்கொடுமை பொறாது தாமே
கொண்டுநிரை மண்ணியென்றென் கரையினீழற்
றாதகியின் மணலிலிங்கத் தான்பா லாட்ட
தாதைபொறா தவையிடறுந் தாள்கண் மாளக்
காதிமலர்த் தாமமுயர் நாம முண்ட
கலைமகளும் பதமருளாற் கைக் கொண்டாரே!

**கதை**

**விசார சர்மர்**

சோழ மண்டலத்திலே திருச்சேய்ஞலூரிலே அந்தணர் குலத்திலே காசியப கோத்திரத்திலே எச்சதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் மனைவி வயிற்றிலே விசார சர்மர் என்பவர் அவதரித்தார்.

**தானே அறியும் அறிவு**

அவருக்கு ஐந்து வயதிலே வேதம், வேதாங்கம் வசவாகமம் இவை முதலாகியவை ஒருவரும் கற்பிக்காமலே பூர்வசன்ம அறிவுத் தொடர்ச்சியினாலே தானே அறியும் அறிவு உண்டாயிற்று.

மாதா பிதாக்கள் அவருக்கு ஏழு வயதிலே வேதாத்தியானமும் மற்ற கலைகளும் ஓத ஆரம்பிக்கத் தாமே அவை முழுவதையும் அறிந்தார். அதை யாவரும் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள்.

அந்த விசார சர்மா சாத்திரார்த்தப்படி சிவனையே மெய்யென்று நினைத்து அந்தச் சிவனிடத்திலே மெய்யன்பு நாளுக்கு நாள் மேன் மேலாகக் கணக்கில்லாமல் வளர்வதாயிற்று. அவர் ஒரு நாள் தம்முடனே அத்தியயனம் செய்கின்ற பிள்ளைகளுடனே அவ்வூர் பசு நிறைகளுடன் கூடிச் சென்றபோது ஒரு தலையீற்றுப் பசு தன்னை மேய்க்கின்ற இடையனைக் குத்தப் போயிற்று. அவ்விடையன் சிறிதும் பாவத்துக்கு அஞ்சாமல் அந்தப் பசுவை கோலினால் அடித்தான்.

**பசுக்களின் வரலாறு**

விசார சர்மர் அதைக்கண்டு பதை பதைத்து அதன் சமீபத்தில் சென்று மகா கோபங்கொண்டு பின்னும் அடிக்காதபடி அவனைத் தடுத்து நின்று பசுக்களின் வரலாற்றையும் அவை தரும் பஞ்சகவ்வியங்கள் சிவனுக்கு அபிடேகம் செய்வதற்கு உபயோகப்படுதலையும் சைவ சாதனமாகிய விபூதிக்கு மூலம் அவற்றின் சாணமாதலையும் நினைத்து அந்தப் பசுக்களைத் தானே மேய்க்கும்படி விரும்பி அந்த இடையனைப் பார்த்து, "இந்தப் பசு நிரையை இனி, நீ மேய்க்க வேண்டியதில்லை, நானே மேய்ப்பேன்!" என்றார். இடையன் அதைக் கேட்டுக் கும்பிட்டு வீட்டுக்குப் போய் விட்டான்.

**விசாரசர்மர் இடையரானார்**

விசாரசர்மா அந்தந்த பசுக்களுக்குரிய அந்தணர்களின் சம்மதி பெற்றுத் தினந்தோறும் மண்ணியாற்றங் கரையிலிருக்கின்ற காடுகளிலும் கழனி ஓரங்களிலும் புல்லு

நிறைந்தது மற்ற இடங்களிலும் கொண்டு போய் வேண்டிய மட்டும் மேய்த்துத் தண்ணீர்க் காட்டி வெய்யிலெரிக்கும்போது நிழலிருக்குமிடங்களில் மடக்கி நன்றாகக் காப்பாற்றி சமித்துகள் ஒடித்துக்கொண்டு அத்தமனத்திற்கு முன் அந்தந்த பசுக்களை அவரவர் வீட்டுக்கு ஓட்டிக்கொண்டு போய் விட்டுப் பின்பு தம்முடைய வீட்டுக்குப் போவார்.

**அந்தணர்கள் மகிழ்ந்தனர்**

இப்படிச் செய்யுங்காலத்திலே பசுநிரைகளெல்லாம் அழகு மிகவுண்டாகிப் போசனபானங்களிலே குறைவில்லாமையால் மகிழ்ச்சியடைந்து இராப்பகல் மடி சுரந்து பாலை மிகப் பொழிந்தன. அந்தணர்கள் நித்திய ஓம ஆகுதியின் பொருட்டு விட்டிருக்கின்ற தங்கள் பசுக்களை விசாரசர்மர் மேய்க்கத் தொடங்கிய பின் முன்னிலும் அதிகமாகப் பாலைக் கறக்கக் காண்கையில் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்கள்.

**பால் பரமசிவனுக்கே!**

பசுக்கள் உபசரிப்பினாலும் அளவிறந்த களிப்பையடைந்து வீட்டிலே கட்டப்பட்ட தங்கள் கன்றுகள் பிரிந்தாலும் சிறிதும் வருத்தமுறாதவைகளாகி மிகுந்த ஆசையோடு தங்களை மேய்க்கின்ற விசாரசர்மர் பிரிவாராயின் அப்பிரிவு ஆற்றாமல் தாய்போல உருகி அவர் சமீபத்தில் சென்று கனைத்து மடிசுரந்து ஒருவர் கறக்காமல் தானே பால் பொழியும். அது கண்ட விசாரசர்மர் அந்தப்பால் பரமசிவனுக்குத் திருமஞ்சனமாகும் தகுதி உடைமையை நினைந்தார்.

நினைக்கவே அவருக்குச் சிவார்ச்சனையிடத்தே அத்தியந்த விருப்பம் உண்டாகி மண்ணியாற்றின் கரையிலிருக்கின்ற ஒரு மணல் திட்டிலே ஆத்திமரத்தின் கீழே மணலினாலே ஒரு சிவலிங்கம் குவித்துக் கோயிலும்

கோபுரமும் மதிலும் வகுத்து ஆத்திப்பூ முதலிய மலர்களும் பத்திரங்களும் பறித்துப் பூக்கூடை யிலிட் டுவைத்துக்கொண்டு புதிய குடங்கள் வாங்கி வந்து கறவைப் பசுக்கள் ஒவ்வொன்றின் இடத்திலும் போய் அதன் முலையைத் தீண்டினார். அவைகள் கனைத்துக் குடம் நிறைய பாலைப் பொழிந்தன.

**சிவலிங்கத்துக்கு அபிடேகம்**

அதை எடுத்துக் கொண்டு போய் முன் செய்த சிவலிங்கத்துக்கு அபிடேகம் செய்து அருச்சனை செய்து வந்தார். அந்தப் பசுக்கள் சிவபூசைக்கும் அந்த அந்தணர்களுக்குச் சாப்பிடவும் மிகவும் பாலைக் கொடுத்தன.சுவாமியும் அந்தப் பூசையை அதிக அன்போடு அங்கீகாரம் செய்தருளினார்.

இப்படி நெடுநாளாகப் பார்ப்பவருக்கு விளையாட்டுப் போலத் தோன்றுகின்ற சிவார்ச்சனையை ஒருநாள் ஒருவன் அதன் உண்மை அறியாமல் அதை அந்த ஊர் அந்தணர்களுக்குத் தெரிவித்தான். அதை அவர்கள் சபையாருக்குத் தெரிவிக்கச் சபையார் அவன் தகப்பனை அழைத்து, "உன் குமாரன் பசுக்களை எல்லாம் அன்போடு மேய்ப்பவன் போல ஓட்டிக்கொண்டு போய் பாலைக் கறந்து வீணாக மணலிலே சொரிந்து விளையாடுகின்றான்," என்றார்கள்.

**எச்சதத்தன் ஒளிந்திருத்தல்**

எச்சதத்தன் அதைக்கேட்டுப் பயந்து "சிறு பிள்ளையான விசாரசர்மன் செய்கின்ற இந்தச் செய்கையை இதற்குமுன் நான் சிறிதாயினும் அறியவில்லை. அந்தக் குற்றத்தை நீங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும்" என்று குறையிரந்து வணங்கி, "இனி அவன் அப்படிச் செய்வான் ஆயின் அந்தக் குற்றம் என் மேலதாகும்," என்று சொல்லி, அந்தச் சபையாரிடத்திலே அனுமதி பெற்றுக்கொண்டு வீட்டுக்குப்

போய் மறுநாள் காலையில் அந்த சமாசாரத்தைச் சோதித்து அறிய நினைத்து விசாரசர்மர் பசு மேய்க்கப்போன பின்பு அவர் அறியாதபடி அவர் பின்னே சென்று அவர் மேய்க்கும் இடத்தின் அருகிலிருந்த ஒரு குரா மரத்தில் ஏறி அங்கே நிகழ்வதை அறியும்படி ஒளிந்திருந்தான்.

விசாரசர்மர் நீராடி முன்போல மணலினால் கோயிலும் சிவலிங்கமும் செய்து இலை, மலர்கள் பறித்துக்கொண்டு வந்து வைத்துப் பின்பு பால் குடங்களைக் கொண்டுவந்து தாபித்து அருச்சனைக்கு வேண்டிய பிறவற்றையும் அமைத்து மிகுந்த அன்பினோடு பூசைக்கு ஆரம்பித்து இலை, மலர்களைச் சிவலிங்கத்துக்கு அருச்சித்துப் பால் குடங்களை எடுத்து அபிடேகம் பண்ணினார்.

**கோபங்கொண்டார்**

குரா மரத்தில் ஏறி இருந்த எச்சதத்தன் அதைக்கண்டு மிகுந்த கோபம் கொண்டு சீக்கிரத்தில் மரத்தை விட்டிறங்கிப் போய் தன் கையிலிருக்கின்ற தண்டினால் அவருடைய முதுகிலே அடித்துக் கொடுஞ் சொல்லுகளைச் சொல்ல, அவருடைய மனம் பூசையிலேயே முழுவதும் பதிந்து கிடந்தபடியால் அஃது அவருக்குத் தெரியவில்லை. பின்னும் தகப்பன் கோபங்கொண்டு பலமுறை அடிக்க விசாரசர்மர் அந்த அடியின் வருத்தத்தைப் பெறாதவராயிருந்தும் அபிடேகம் செய்வதில் தவறாதிருந்தார்.

**தந்தையின் காலை வெட்டினார்**

அவருடைய உள்ளன்பை அறியாத எச்சதத்தன் மிகவும் கோபித்துப் பால்குடத்தை காலினால் இடறிச் சிந்தினான். உடனே விசாரசர்மர் அதைக்கண்டு அதைச் செய்தவன் பிதா என்று தெரிந்திருந்தும் அவன் சிவாபராதம் செய்ததால் அவன்

காலை வெட்ட நினைத்துத் தனக்கு முன்னாலிருந்த ஒரு கோலை எடுக்க, அது மழுவாயிற்று. அதனால் அவன் கால்களை வெட்டிய பின்பு முன்போலப் பூசை செய்ய, பரமசிவன் உமாதேவியோடும் இடபாரூடராய்த் தோன்றினார்.

அவரை விசாரசர்மர் கண்டு மனங் களித்து விழுந்து வணங்கினார். பரமசிவன் அவரைத் தம்முடைய திருக்கரங்களினால் எடுத்து "நீ நம் பொருட்டு உன் பிதாவை வெட்டினாய்! இனி உனக்கு நாமே பிதா," என்று அருளிச்செய்து அவரை அணைத்துச் சரீரத்தைத் தடவி உச்சி மோந்து "நம்முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனாக்கி நாம் ஏற்றுக்கொண்ட அமுதும் பரிவட்டமும் மலரும் உனக்கே கிடைக்கும்படிச் சண்டேசுவர பதத்தைத் தந்தோம்!" என்று திருவாய் மலர்ந்து தம்முடைய சடையிலே தரித்திருக்கின்ற கொன்றை மாலையை எடுத்து அவருக்குச் சூட்டியருளினார்.

**சண்டேசுவரரானார்**

அவ் விராரசர்மர் அனைவரும் ஆரவாரிக்கவும் மலர் மழை பொழியவும் சிவகணங்கள் பாடியாடிக் களிகூரவும் வேதங்கள் ஒலிக்கவும், நானாவித வாத்தியங்கள் முழங்கவும் இந்த வைபோகத்துடன் சண்டேசுவர பதத்தை அடைந்தார்.

எச்சதத்தர் சிவத் துரோகம் செய்தும் சண்டேசுவர நாயனாராலே தண்டிக்கப் பட்டதால் அந்தக் குற்றம் நீங்கிச் சுற்றத்துடன் சிவலோகம் அடைந்தார்.

**அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்**



# திருநின்ற சருக்கம்

*22. திருநாவுக்கரசு சுவாமிகள்*

**கவி**

போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மை
பொருவில்குறுக் கையரதிபர் புகழ னார்பான்
மாற்றருமன் பினிற்றிலத வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாரும்
தோற்றியமண் சமயமுறு துயரம் நீங்கத்
துணைவரரு டரவந்த சூலை நோயால்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலி புரத்தில்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார்.

வந்துதமக் கையா ரூர னீறு சாத்தி
வண்டமிழா னோய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன் சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
அந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
அருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தி னாரே!

**கதை**

**மருணீக்கியார் பிறந்தார்**

திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூரிலே வேளாளர் குலத்திலே குறுக்கையர் குடியிலே புகழனார் ஒருவர் இருந்தார். அவர் மனைவியார் பேர் மாதினியார்.

அந்த மாதினியார் வயிற்றிலே திலகவதியார் என்கிற ஒரு மகளார் பிறந்தார். பின்பு சில ஆண்டு பொறுத்து சைவசமயம் அபிவிருத்தியாகும்படி மருள் நீக்கியார் என்கிற மகனார் பிறந்தார். அவருக்குத் தந்தையார் உரிய பருவத்திலே வித்தியாரம்பம் செய்ய அவர் பல கலையும் கற்று வல்லவராயினார்.

**திலகவதியார் திருமணம்**

திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயதானபொழுது தம் மரபிற்கு ஒத்தவரும் சிவபத்தியில் மிகுந்தவரும் இராசாவினிடத்தில் சேனாதிபதி உத்தியோகம் செய்கின்றவரும் ஆகிய மூன்று திறத்தை உடைய கலிப்பகையார் என்பவர் அப்புகழனாரிடத்தில் சில முதியோர்களை அனுப்பித் திலகவதியாருக்கும் தமக்கும் மணம் பேசுவித்தார்.

**திருமணம் நின்றது!**

புகழனார் அதற்கு இசைந்தமையால் அம்முதியோர்கள் மீண்டு சென்று கலிப்பகையாருக்குத் தெரிவித்தார்கள். கலிப்பகையார் தாம் திருமணம் செய்வதற்கு முன் தம்முடைய அரசனது ஆணையினாலே சேனைகளோடு சில நாளிலே அவன் பகைஞராகிய வடதேசத்தரசரிருக்கும் இடத்தைச் சேர்ந்து அவர்களோடு நெடுநாள் போர் செய்யுங் காலத்திலே இங்கே புகழனார் விண்ணுலக வாழ்வை அடைந்தார். அப்போது அவர் மனைவியாகிய மாதினியார் உடன்கட்டை ஏறினார்.

அவர்கள் பிள்ளைகளாகிய திலகவதியாரும் மருள்நீக்கியாரும் சுற்றத்தார்களோடு மிகவும் மனக் கவலையுற்று சுற்றத்தாருள் அறிவால் அமைந்த பெரியோர்கள் தேற்ற ஒருவாறு தேறித் தாய் தந்தையர்களுக்குச் செய்ய வேண்டிய அந்திய கருமங்களை முடித்தார்கள்.

இங்கே இப்படி நடக்க, முன்னே சண்டைக்குப்போன கலிப்பகையார் போர்க் களத்திலே மரணமடைந்தார். அந்தச் சமாசாரம் இந்தத் திலகவதியாருடைய உள் மனத்தினுக்குப் புலப்பட அவர், "என்னுடைய பிதா, மாதாக்கள் என்னை அவருக்கு மணம் செய்து கொடுக்க உடன்பட்டிருந்தமையால் இவ்வுயிர் அவருக்கே உரியதாதலால் என்னுயிரை அவரோடு இசைவிப்பேன்" என்று சாவத் துணிந்தார்.

**தவநெறி ஏற்றல்**

மருள் நீக்கியார் அதைக் கண்டு அவருடைய இரண்டு பாதங்களிலும் விழுந்து "அடியேன் எங்கள் பிதா, மாதாக்கள் இறந்து போனதால் உம்மை அவர்களாகப் பாவித்துப் பூசிக்கலாம் என்று உயிர் வைத்துக் கொண்டிருக்கின்றேன். நீர் இறக்கிறதானால் உமக்கு முன்னமே நான் இறந்து விடுகிறேன்," என்றார்.

திலகவதியார் அதைக்கேட்டுத் தம்பியார் உயிரோடு இருக்கவேண்டும் என்னும் ஆசையால் இறப்பதைவிட்டு வேறொருவரையும் திருமணம் செய்து கொள்ளாமல் சீவகாருண்ணியம் உள்ளவராகி வீட்டிலே தவஞ்செய்து கொண்டு இருந்தார். அது நிற்க,

மருணீக்கியார் சரீர நிலையாமையையும் செல்வம் நிலையாமையையும் நினைத்துத் தருமம் செய்ய விரும்பி அன்புடனே திரவியங்களைச் செலவழித்துத் தருமசத்திரமும், தண்ணீர்ப் பந்தலும் அமைத்தார். சோலைகளை வைப்பித்தார், குளங்களைத் தோண்டுவித்தார், விருந்தினரை உபசரித்தார், புலவர்களுக்குக் கனகமாரி பொழிந்தார், பிரபஞ்ச வாழ்வினுடைய அநித்தியத்தை அறிந்து இல்வாழ்க்கையிலே புகாமல் எல்லாவற்றையும் துறந்தார்.

**தருமசேனரானார்**

அனைத்து சமயங்களுள்ளும் சத்சமயம் இதுவென்று அறியும் அறிவு அவருக்குத் தெரியவில்லை. அவர் பாடலிபுரம் என்கிற நகரத்தில் சென்று சமணர்களுடைய பள்ளிக்கூடத்தை அடைந்து அங்குள்ள சமணர்களுடைய போதனா சக்தியினாலே அவர்கள் அனுசரிக்கின்ற ஆருகத சமயமே முக்தியடைதற்குத் தகுந்த நெறியென்று உறுதிசெய்து அந்தச் சமயத்திலே பிரவேசித்து அந்தச் சமணசமய நூல்கள் எல்லாவற்றையும் கற்று அதில் மகா பாண்டித்தியம் உடையவரானார். சமணர்கள் அதைக் கண்டு அவருக்குத் தருமசேனர் என்று பெயரிட்டு அவரைத் தங்கள் மதாசாரியாராக வைத்துக் கொண்டார்கள்.

அவர் தன்னுடைய வித்தியா சமர்த்தியத்தினாலே பௌத்தர்களை வாதில் வென்று புகழ்பெற்று ஆருகத சமயாசிரியர்களுக்குள்ளே சிறந்த ஞானியாக இருந்தார். அது நிற்க,

**திலகவதியார் சிவத்தொண்டு**

திருவாமூரிலே இருந்த திலகவதியார் சிவனிடத்திலே பக்திமிகுந்து சிவ புண்ணியங்கள் செய்ய விரும்பிக் கெடில நதிக்கு வடகரையில் இருக்கின்ற திருவதிகை வீரட்டானம் என்னும் திருப்பதியில் சென்று பரமசிவனை வணங்கிச் சிவ சின்னங்களைத் தரித்து நித்தியம் சூரியோதயத்துக்கு முன் கோயிலின் உள்ளும் புறமும் திருவலகிடல், கோமயத்தினால் மெழுகுதல், நந்தவனங்களில் சென்று மலர்களைப் பறித்துக்கொண்டு வந்து மாலை தொடுத்துச் சுவாமிக்குச் சாத்தக் கொடுத்தல் ஆகிய சிவபுண்ணியங்களைச் செய்து வந்தார்.

இப்படிச் செய்து வருங்காலத்திலே தன்னுடைய தம்பியாராகிய மருணீக்கியார் கபட மார்க்கமாகிய ஆருகத மதத்திலே பிரவேசித்ததை நினைந்து, துக்க சாகரத்தில் அமிழ்ந்தி வீரட்டானேசுவரரை வணங்கி, "ஆருகத மதத்தில்

பிரவேசித்த என் தம்பியை அதினின்றும் தூக்கிக் காப்பாற்றியருளவேண்டும்" என்று பலமுறை விண்ணப்பம் செய்தார்.

**இறைவன் அருள்!**

அன்று இராத்திரியில் பரமசிவன் திலகவதியாருக்குச் சொப்பனத்தில் தோன்றி, "தபோதனையே! உன் மனக்கவலையை ஒழி, உன்னுடைய தம்பி துறவியாகி நம்மை அடையும் பொருட்டுப் பழம்பிறவியில் தவஞ்செய்திருக்கின்றான். அந்தத் தவத்தின் அற்ப குற்றத்தினாலே அன்னிய மதத்தில் பிரவேசித்தான். இனி அவனைச் சூலை நோயினால் வருத்தி ஆட்கொள்வோம்" என்று சொல்லி மறைந்தருளினார்.

பின்பு தருமசேனருடைய வயிற்றிலே பரமசிவன் அருளினாலே சூலை நோய் உண்டாகிக் குடலைக் குடைதல் உற்றது. அதனால் அவர் வருந்தி நடுக்கம் உற்றுச் சமண் பாழியறையில் விழுந்து தனக்குத் தெரிந்த சமணசமய மந்திரோச்சாரணத்தால் தடுக்க அது தடைபடாமல் அதிகமாகி பாம்பின் நஞ்சு கொண்டது போல மயங்கி மூர்ச்சை யடைந்தார்.

சமணர்கள் அதைக்கண்டு பலபேர் கூடி வந்து பார்த்து, "இதற்கு என்ன செய்வோம்?" என்று துக்கம் உற்று கமண்டலத்தில் இருக்கின்ற நீரை அபிமந்திரித்துக் குடிப்பித்தார்கள். அதனால் அது தணியவில்லை.

பின்பு மயிற்பீலியால் காலளவும் இறக்கினார்கள். அதிலும் தணியவில்லை. சூலை முன்னிலும் அதிகப்பட தருமசேனர் அதைச்சகிக்காமல் துன்பப்பட்டார்.

சமணர்கள் அதைக்கண்டு, "ஐயோ! இதற்கு நாம் என்ன செய்வோம்?" என்று மனங்கலங்கி, இந்த நோயை நீக்குவதற்கு நம்மால் ஆகமாட்டாது என்று சொல்லி அவரைக் கைவிட்டுப் போயினார்கள்.

**திலகவதியாரை அடைந்தார்!**

பின்பு தருமசேனர் தன்னுடைய சகோதரியாகிய திலகவதியாரை நினைத்து அவரே தமக்கு உதவி செய்ய வல்லவர் எனத் துணிந்து தம்முடைய சமாசாரத்தைப் பாகுகனுடன் சொல்லி அவரிடத்துக்கு அனுப்பினார். அந்தப் பாகுகன் திருவதிகையிலே சென்று நந்தவனத்தின் சமீபத்திலே அந்தத் திலகவதியாரைக் கண்டு வணங்கி, உம்முடைய தம்பியார் ஏவலினால் உம்மிடத்துக்கு வந்தேன், என்று சொல்ல "திலகவதியார் என் தம்பியாருக்கு யாதானும் தீங்குண்டா?" என்றார்.

அதற்கு அவன், "அவர் கொடிய சூலை நோயினால் மிக வருத்தப்படுகின்றார். சமணர்கள் அதற்கு ஏதேதோ உபசாந்தம் செய்தும் சௌக்கியமாகாமையால் அவரைக் கைவிட்டார் கள். அவர் அதுகண்டு என்னை நோக்கி, இந்தச் சமாசாரத்தை உமக்குத் தெரிவித்துக் கேட்டுக்கொண்டு, ஒருவருக்குந் தெரியாதபடி இரவிலே தம் இடத்தில் வரும் பொருட்டு என்னை ஏவினார்," என்றான்.

திலகவதியார், "பதிதராகிய சமணர்களுடைய பள்ளிக்கு நான் வாரேன், இதை என் தம்பிக்குச் சொல்லு," என்றார். பாகுகன் அதைக் கேட்டுத் திரும்பி தருமசேனரிடத்தில் வந்து அதைத் தெரிவிக்க, தருமசேனர், "இதற்கு என்ன செய்வேன்?" என்று சோகித்து, "இந்தத் துர்ச்சமயத்தை நீங்கிச் சத்சமயத்தை அனுசரிக்கின்ற திலகவதியாருடைய திருவடிகளை அடைவேன்" என்று எண்ணி இரவிலே பீலி கமண்டலங்களை நீக்கி ஆடை தரித்துக்கொண்டு தனக்காக வருத்தப் படுகின்றவர்களைச் சகாயமாய் அழைத்துக்கொண்டு ஒருவருங் காணாதபடி இரகசியமாய் அவ்வூரை விட்டு நீங்கித் திருவதிகையில் போய்த் திலகவதியாருடைய திருமடத்தையடைந்து, "அம்மா! அடியேன் கொடிய சூலை நோயைச் சகிக்காமையால் உம்மைக் கதியென்று அடைந்தேன். இனி நான் கடைத்தேறும் வழியை அருள் செய்யும்!" என்று சொல்லிப் பாதத்திலே விழுந்து சோர்ந்தார்.

திலகவதியார் தம்பியாரைப் பார்த்து தமக்குக் கனவிலே பரமசிவன் அருளிச் செய்தபடி முடிந்ததை நினைத்து மனம் கரிந்துருகி, அவரை அஞ்சலி கொண்டு "அறியாமையினாலே பரசமயப் படுகுழியிலே விழுந்து கொடுந்துயரத்தை அனுபவிக்கின்ற தம்பியாரே! எழுந்திரும்!" என்றார்.

தம்பியார் சூலை நோயுடனே நடுக்குற்று எழுந்து அஞ்சலி செய்தார். திலகவதியார், "இது பரமசிவனுடைய திருவருளே! தம்முடைய திருவடிகளை அடைந்த மெய்யன்பர்களுக்கு இன்னருள் புரிகின்ற அந்தக் கடவுளை வணங்கி அவருக்குத் திருத்தொண்டு செய்யும்,Ç" என்று உபதேசித்தார்.

**சூலைநோய் நீங்கிற்று**

உடனே மருணீக்கியார் அந்த உபதேசத்தை ஏற்றுக்கொண்டு வணங்கி நிற்க, திலகவதியார் திருவருளை நினைத்துத் திருவைந்தெழுத்தை ஓதி அவருக்குத் திருநீறு கொடுத்தார். அவர் மிகுந்த ஆசையோடு வாங்கிச் சரீரம் முழுவதும் அணிந்துகொண்டார். திலகவதியார் திருப்பள்ளி எழுச்சியிலே திருவலகும் திருமெழுக்குத் தோண்டியும் எடுத்துக்கொண்டு தம்பியாரை அழைத்துக்கொண்டு போகத் தம்பியார் வீரட்டானேசுவரரை வலங்கொண்டு சன்னிதானத்திலே விழுந்து வணங்கி எழுந்து நின்று அவருடைய திருவருளினாலே தமிழ்ச் செய்யுள் பாடுகின்ற சக்தி உண்டாகப் பெற்றுத் தன்னுடைய சூலைநோய் நீங்கும் பொருட்டும், பின் காலத்தில் அதை ஓதுகின்றவருடைய துன்பம் நீங்கும் பொருட்டும் பரமசிவன் மேல் திருப்பதிகம் பாட உடனே சூலை நோய் நீங்கிற்று.

அப்பொழுது மருணீக்கியார் பரமசிவனுடைய திருவருளில் அமிழ்ந்து திருமேனி முழுவதிலும் உரோமாஞ்சிதம் கொள்ள இரண்டு கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் சொரிய நிலத்திலே விழுந்து புரண்டு, "சமணசமயப் படுகுழியில் விழுந்து எழுமாறுஅறியாதுமயங்கிய

பாவியாகிய யான் பரமசிவனுடைய திருவடி நிழலையடைதலாகிய இந்தப் பேரின்ப வாழ்வைப் பெறும்படி செய்த சூலை நோய்க்கு என்ன பிரதியுபகாரம் செய்வேன்?" என்றார்.

**திருநாவுக்கரசரானார்!**

அப்போது வீரட்டானேசுவரருடைய திருவருளினால், "நீ அற்புதச் சின்மய மதுரமான தேவாரப் பதிகத்தைப் பாடினபடியால் உனக்கு 'நாவுக்கரசு' என்னும் பெயரே ஏழு உலகங்களிலும் வழங்குக!" என்று அனைவருக்கும் தெரியும்படி ஆகாயத்திலே அசரீரி வாக்கு உண்டாயிற்று.

ஆகையால் அவருக்குத் திருநாவுக்கரசு சுவாமி என்றும் பெயர்.அந்த அசரீரி வாக்கைக் கேட்ட திருநாவுக்கரசு "சுவாமிகள், பரமசிவன் இத்தனை நெடுங்காலமாகத் தன்னை நிந்தித்த சிறியேனுக்கு இந்தப் பெருவாழ்வைக் கொடுத்தருளினாரே" என்று மிக மகிழ்ந்து இராவணனுக்கு அருளிய கருணையின் மெய்த்தன்மையை அறிந்து துதிப்பதை மேற்கொண்டுவணங்கினார்.

**உழவாரப் பணிவிடை**

பின்பு மனம், வாக்கு, காயம் என்கிற திரிகணங்களாலும் திருத்தொண்டு செய்யவேண்டும் என்று ஆசைகொண்டு சிவச்சின்னங்களைத் தரித்துக்கொண்டு மனதினால் தியானமும் வாக்கினால் போற்றுதல் வடிவமான வாசகமும் கையினால் உழவாரப் பணிவிடையும் ஆகிய மூன்றையும் எப்போதும் உடையவரானார்.

திலகவதியார், தம்முடைய வேண்டுகோளின்படி பரமசிவன் தன் தம்பியை ஆட்கொண்ட பெருங்கருணையை நினைத்து மகிழ்ந்து சுவாமியை வணங்கினார்.

**சமணர் தம் சூழ்ச்சி**

இப்படியிருக்க இந்தச் சமாசாரத்தைப் பாடலிபுத்திரத்தில் இருக்கின்ற சமணர்கள் கேள்விப்பட்டுப் பொறாமை கொண்டு சொல்லுவதாவது: "இங்கு மாறுபட்ட பல சமயங்களையும் வாதித்து வென்று எங்கள் சமயத்தை நிலைநாட்டிய தருமசேனர், தமக்கு வந்த சூலைநோய் இங்கே ஒருவராலும் நீங்காமையால் பிழைக்கும் வழியைத்தேடித் திருவதிகையில் போய் முன்போலச் சைவ சமயத்திலே பிரவேசித்துப் பிழைத்து விட்டார்."

"இனி எங்கள் சமயம் அழிந்து போயிற்று," என்று துக்கித்துத் தலையும் பீலியும் தாழ ஓர் இடத்தில் சமணர்களெல்லாம் கும்பலாய்க் கூடி யோசனை செய்த விபரமாவது: "தருமசேனருக்கு வந்த சூலை நோய் எங்கள் ஒருவராலும் நீங்காமல் சைவ மதத்தில் பிரவேசித்து நீக்கிக் கொண்டதை எங்கள் அரசன் அறிந்தால் எங்கள்மேல் கோபம் கொண்டு தானும் சைவனாவான், இனி இதற்கு என்ன செய்வோம்?" என்று ஆலோசித்து ஒரு சம்பிரதாரணை செய்துகொண்டு தங்களுக்கு அரசனான பல்லவராசனுடைய நகரத்தில் போய் அவனைப் பார்த்து, எங்கள் எல்லாருக்கும் தலைவராயிருந்த தருமசேனர், தாம் சிவமதத்தில் சேர நினைத்துத் தனக்குச் சூலை நோய் வந்ததாகக் காட்டி அது நம்மாலே தீரவில்லையென்று யாவருக்குந் தெரியச் செய்து திருவதிகையில் இருக்கிற தன் சகோதரியிடத்தில் போய்ச் சேர்ந்து முன்போலச் சைவ சமயத்திலே பிரவேசித்து நம்முடைய சமயத்தை நிந்தை செய்தார்," என்று சொன்னார்கள்.

பல்லவராசன் அதைக்கேட்டு உடனே கோபங்கொண்டு "இதற்கு என்ன செய்யலாம்?" என்றான். சமணர்கள் அதைக் கேட்டுத் தங்களுடைய உத்தமமான சமயத்தையும் ஆணையையும் கடந்த தருமசேனரை நீர் அழைத்துத் தண்டிக்க வேண்டும் என்றார்கள்.

**நீற்றறையில்....**

அப்பொழுது, அரசன் மந்திரிமாரைப் பார்த்து, "உங்கள் திருவதிகைக்குப்போய் தருமசேனரைக்கொண்டு வாருங்கள்," என்று ஆணையிட்டான். உடனே மந்திரிகள் சேனையோடும் புறப்பட்டுப் போய், திருவதிகையை அடைந்து, திருநாவுக் கரசு சுவாமிகளிடத்திற் சென்று இன்றைக்கு உம்மை அழைத்துக்கொண்டு வரும்படி எங்களை அரசன் அனுப்பினான், வாரும்!" என்றார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள் அதைக் கேட்டுப் பரமசிவன் மேல் திருத்தாண்டகம் பாடி அடியேனுக்கு வரப்பட்ட அபாயங்களுக்கெல்லாம் பரமசிவன் இருக்கிறார், என்று போகிறதற்குச் சம்மதிப்பட, அவர்கள் அவரை அழைத்துக்கொண்டு போய் அரசன் சமூகத்தில் சென்று அறிவித்தார்கள்.

பல்லவராசன் அதைக்கேட்டுத் தன் பக்கத்தில் இருந்த சமணர்களைப் பார்த்து, "இனி அவனுக்கு என்ன செய்வோம்?" என்று கேட்க, சமணர்கள், "நீற்றறையில் அடைக்க வேண்டும்," என்றார்கள். அரசன் சமீபத்தில் நின்ற பணிவிடைக் காரர்களைப் பார்த்து, "அவனை இவர்கள் சொல்லியபடி செய்யுங்கள்," என ஆணையிட அவர்கள் நீற்றறையினுள் போகவிட்டு கதவைச் சாத்திப் பூட்டினார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள், பரமசிவனுடைய திருவடியை அடைந்த சிவனடியார்களுக்குத் துன்பம் வருவதுண்டோ? என்று அந்தக் கடவுளைத் தியானித்து வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசுதென்றலும் வீங்கிளவேனிலும்
மூசுவண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசனெந்தை இணையடி நீழலே!"

அப்போது அந்த நீற்றறை சிவன் அருளால் நீர் நிறைந்த குளத்தைப் போல குளிர்ச்சியைக் கொடுத்தது.

ஒருநாள் சென்ற பின்பு பல்லவராசன் சமணர்களை அழைத்து, "நீற்றறையைத் திறந்து பாருங்கள்!" என்று சொல்ல, அவர்கள் போய் நீற்றறையைத் திறந்து பார்த்தார்கள். நாயனார் யாதொரு ஊனமும் இல்லாமல் மகிழ்ச்சியோடு இருப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்து இராசாவிடத்திற் குப் போய், "அவன் நம்முடைய சமயத்தில் இருந்து கற்றுக் கொண்ட மந்திர பலத்தினால் வேகாமல் பிழைத்துக் கொண்டான். இனி அவனுக்கு நஞ்சினை ஊட்டுவதே தகும்," என்றார்கள்.

**நஞ்சூட்டினார்கள்**

அரசன் அப்படியே செய்யுங்கள் என்று சொல்ல நஞ்சும் பாலும் சேர்த்துச் சாதம் செய்து நாயனாருக்குச் சாப்பிடும்படிக் கொடுத்தார்கள். நாயனார் அவர்களுடைய வஞ்சனையை அறிந்து, "பரமசிவனுக்கு நஞ்சு அமிருதமானால் அவருடைய அடியார்களுக்கும் நஞ்சு அமிருதமேயாகும்," என்று சொல்லி அதைச் சாப்பிட்டுத் துன்பமில்லாமல் இருக்க, அவரைச் சமணர்கள் கண்டு, "இவனுக்கு நஞ்சும் அமிருதமாயிற்று, இனி நமக்கெல்லாம் நாசம் உண்டாகும்," என்று அரசனிடத்தில் போய் "நாங்கள் நஞ்சினைச் சாதத்திலே கலந்து உண்பித்தோம், நம்முடைய சமய சாத்திரங்களிலே முன் கற்றுக்கொண்ட மந்திரத்தினாலே பிழைத்துவிட்டான். இவன் இறவாதிருந் தால் எங்கள் உயிரும் உங்கள் அரசாட்சியும் நிச்சயமாய் நீங்கிப் போகும்," என்றார்கள்.

**யானை வலம் வந்தது**

அரசன் அதைக்கேட்டு "இனி அவனைக் கொல்லுவதற்கு உபாயம் என்ன?" என்று கேட்க சமணர்கள், "உம்முடைய யானையை அவன் எதிரே விடுவதே உபாயம்"

என்றார்கள். அரசன் அதைக் கேட்டு அப்படியே செய்யும் பொருட்டுக் கட்டளையிடச் சமணர்கள் நாயனாருக்கு எதிரே யானையைக் கொண்டு வந்து விட்டார்கள்.

நாயனார் கொஞ்சமும் பயம் இல்லாமல் சிவனுடைய திருப்பாதங்களைத் துதித்து அந்த யானையைப் பார்த்துத் திருப்பதிகம் பாடினார். யானையானது நாயனாரை வலம் செய்து எதிரே நின்று பூமியிலே தாழ்ந்து வணங்கி எழுந்து அப்புறம் போக அதன் மேலிருந்த பாகர்கள், அதை அங்குசத்தினாலே குத்தித் திருப்பி அவரைக் கொல்ல வேண்டும் என்கிற குறிப்பைக் காட்டினார்கள்.

அஃது அப்படிச் செய்யாமல் துதிக்கையால் அவர்களை எடுத்து எறிந்து கொன்றுவிட்டு பின்பு வெவ்வேறிடங்களிலுள்ள சமணர்களைத் தேடித் தேடி, ஓடி அவர்களைத் தள்ளி மிதித்துக் கிழித்து எறிந்து கொன்று விட்டு, அந்த நகரத்தில் உள்ளவர்கள் எல்லாரும் கலங்கும்படி ஆகுலத்தை உண்டாக்கிற்று.

**கல்லும் தெப்பமாயிற்று!**

அந்த யானைக்குத் தப்பிய சமணர்கள் எல்லாரும் மானம் அழிந்து மயங்கி வருத்தப்பட்டு அரசனை அடைந்து, "தருமசேனன் நம்முடைய சமயசாத்திரங்களிலே கற்றுக்கொண்ட மந்திர பலத்தினாலே நாங்கள் விட்ட யானையைக் கொண்டே நம்முடைய மனிதர்களையும் கொன்று எங்கள் மனோதிடத்தையும் அழித்தான்" என்று சொல்லிப் புலம்பினார்கள். அரசன் அதைக் கேட்டுக் கோபம் கொண்டு, "இனி அவனுக்கு என்ன செய்யலாம்" என்று கேட்க, சமணர்கள் "அவனை கல்லோடு சேர்த்துக் கட்டிச் சமுத்திரத்திலே தள்ள வேண்டும்" என்றார்கள்.

அரசன் அதைக்கேட்டுக் கொலைத் தொழில் செய்பவரைப் பார்த்து, "தருமசேனரைக் காவலோடு கொண்டு போய் ஒரு கல்லோடு சேர்த்துக் கயிற்றினாலே கட்டி ஒரு படகில் ஏற்றிச் சமுத்திரத்திலே தள்ளி விடுங்கள்!" என்று ஆக்ஞாபித்தான்.

கொலைத் தொழில் செய்பவரும் சமணரும் கூடி நாயனாரை அரசன் சொல்லியபடியே கட்டிச் சமுத்திரத்திலே தள்ளிவிட்டுத் திரும்பி வந்து வீடுசேர்ந்தார்கள். நாயனார் "அடியேனுக்கு எது சம்பவித்தாலும் சம்பவிக்கட்டும். அடிேன் சுவாமியைத் தோத்திரம் பண்ணுவேன்," என்று சொல்லி நமசிவாயப் பதிகம் பாடினார். பின் கல்லானது சமுத்திரத்திலே நாயனார் மேலிருக்கத் தான் கீழே தெப்பம் போல மிதந்து, கட்டின கயிறு அற்றுப் போய் வருண பகவான் அந்தக் கல்லை பல்லாக்குப் போலத் தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூர் என்னும் சிவத்தலத்திலே கொண்டு போய்ச் சேர்த்தான்.

நாயனார் அந்தத் திருப்பதியில் அரகர என்னும் ஓசையுடன் தம்மை எதிர்கொண்ட சிவன் அடியார்களோடு ஆலயத்தில் சென்று சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு அங்கே சில நாளிருந்தார். பின் திருவதிகை வீரட்டானேசுவரரைத் தரிசிக்க வேண்டும் என்கிற ஆசையினாலே அவ்விடத்தில் இருந்து புறப்பட்டுத் திருமாணிக் குழியையும் திருத்தினை நகரையும் வணங்கிக் கொண்டு கெடில நதியைக் கடந்து சென்றார்.

**சைவ சமயத்தில் பல்லவன்!**

அப்போது திருவதிகையிலிருக்கிற அடியாரனைவரும் நாயனார், சமணர்கள் செய்த இடர்களையெல்லாம் வென்று வருவதைக் கேள்விப்பட்டுத் தங்களுடைய ஊரை அலங்கரித்து மங்கல வாத்தியத்தோடு அவரை எதிர்கொண்டு வணங்கினார்கள். அவர் தம்மை எதிர்கொண்ட மக்களுடனே ஆலயத்தில் பிரவேசித்துச் சுவாமியை வணங்கி திருத்தாண்டகம் பாடி அவ்விடத்திலிருந்தார்.

அந்த நாளிலே சமணர்களுடைய துர்போதனைக்குச் சம்மதிப்பட்டு முன்னே தீங்கு செய்த பல்லவராசன் சிவசமயமே மெய்யென்று எண்ணித் திருவதிகையிலே வந்து நாயனாரை வணங்கிச் சிவ சமயத்தில் பிரவேசித்தான்.

காடவராசனும் சமண சமயம் பொய்யென்றும் சைவசமயமே மெய்யென்றும் அறிந்து கொண்டு பாடலிபுரத்திலிருந்த சமணர்களுடைய பாடசாலைகளையும் பாழிகளையும் இடித்து அவைகளின் கல்லுகளையெல்லாம் திருவதிகையிலே கொண்டு வந்து குணதரேச்சுவரம் என்னும் கோயிலைக் கட்டினான்.

**தலயாத்திரை**

அந்நாளிலே திருநாவுக்கரசு சுவாமிகள் சிவத்தலங்களுக்குப் பிரவேசித்துச் சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாட மிகவிரும்பி, அந்த இடத்தை விட்டு நீங்கி திருவெண்ணெய்நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவிலூர் முதலிய தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு பின்பு பெண்ணாகடத்தில் சென்று திருத்தூங்கானைமாடம் என்கிற ஆலயத்தில் பிரவேசித்துச் சுவாமியை வணங்கி, "சுவாமி! அடியேன் இழிவினையுடைய சமணசமயத் தொடக்கிலகப்பட்டு வருந்திய இந்த தேகத்துடனே உயிர் வாழ்வதற்குத் தரியேன், தரிக்கும் பொருட்டுத் தேவரீருடைய இலச்சினையாகிய சூலத்தையும் காளையையும் என் மேல் தரித்தருள வேண்டும்," என்று திருப்பதிகம் பாடினார்.

அப்போது பரமசிவனுடைய கிருபையினால் ஒரு சிவபூதம் ஒருவருக்கும் தெரியாதபடி அந்த வாகீச்வரருடைய புயத்திலே சூலக்குறியையும் காளைக்குறியையும் பொறித்தது. நாயனார் அந்த இலச்சினைகளைக் கண்டு மனம் மகிழ்ந்து திருவருளை நினைந்து கண்ணீர் சொரிய விழுந்து வணங்கி எழுந்து நின்று பின்பு சிலநாள் பொறுத்துத் திருவரத்துறை, விருத்தாசலம் இத்தலங்களுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடி மிக்க விருப்பத்தோடு சிதம்பரத்தை அடைந்து சுவாமியை விழுந்து வணங்கி எழுந்து இரண்டு கைகளும் சிரசின்மேல் குவிய இரண்டு நேத்திரங்களிலிருந்தும் ஆனந்தக் கண்ணீர் சொரிய அக்கினியில் பட்ட வெண்ணெய் போல மனம் கசிந்து உருக திருப்பதிகங்கள் பாடிச் சுவாமி தரிசனம் செய்து கொண்டு உழவாரப் பணியையும் செய்துகொண்டு சிலநாள் அங்கே இருந்தார்.

பின்பு அவ்விடம் விட்டு நீங்கித் திருக்கழிப்பாலை, சிதம்பரம் இவைகளுக்குச் சென்று சுவாமியை வணங்கித் திருத்தாண்டகமும் திருநேரிசையும் பாடி உழவாரப் பணிகளையும் செய்திருந்தார்.

**அப்பரே! என்றார்**

அப்படியிருக்க ஒருநாள் திருநாவுக்கரசு சுவாமிகள், சீர்காழியில் இருக்கின்ற திருஞானசம்பந்த மூர்த்திகளுடைய மகிமையை அடியார்கள் சொல்லக்கேட்டு அவருடைய திருவடிகளை வணங்க மிகவும் விரும்பிச் சபாநாயகரைத் தொழுது அனுமதி பெற்றுக்கொண்டு புறப்பட்டுத் திருவீதியிலே அங்க பிரதட்சணம் செய்து அந்தத் திருத்தலத்தை விட்டு நீங்கித் திருநாரையூரைப் பணிந்து பாடி சீர்காழிக்குச் சமீபித்தார்.

அப்போது, திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் சீர்காழிக்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் வருவதைக் கேள்விப் பட்டு அத்யந்த ஆசையுடனே அடியார்கள் பக்கத்தில் சூழ அவரை எதிர்கொண்டார். அப்போது திருநாவுக்கரசு சுவாமி கள் திருஞானசம்பந்த சுவாமிகளுடைய திருவடியிலே விழுந்து வணங்கி அவரைத் தம்முடைய திருக்கரங்களினால் இவருடைய திருக்கரங்களைப் பிடித்து எடுத்துத் தாமும் அஞ்சலி செய்து "அப்பரே!" என்றார். அதற்கு அவர் "அடியேன்" என்றார். அந்த இருவரும் தாங்கள் ஒருவருக் கொருவர் காணப்பெற்றதனால் மனம்மிக மகிழ்ந்து ஆலயத் திற் சென்று சுவாமியை வலம் செய்து வணங்கி எழுந்தார்கள்.

திருஞானசம்பந்த சுவாமிகள் அப்பரைப் பார்த்து, "அப்பரே! உம்முடைய சுவாமியைப் பாடும்!" என்று சொல்ல இவர் திருப்பதிகம் பாடிப் பின்பு திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய மடத்தில் பிரவேசித்து அவரோடு அளவளாவிப் பல நாள் இருந்தார்.

அப்படியிருக்கும் நாளில் ஒருநாள், சோழ மண்டலத்திலுள்ள சிவத்தலங்களை எல்லாம் வணங்க வேண்டுமென்று திருஞானசம்பந்த மூர்த்திகளுக்குத் தெரிவித்து அவரோடு திருக்கோலக்காவிற்குப் போய் சுவாமி தரிசனம் பண்ணித் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு திரும்பிவிட்டார்.

அப்பமூர்த்தி, கருப்பறியலூர், புன்கூர், நீடூர், குறுக்கை, நின்றையூர், நனிபள்ளி, செம்பொன்பள்ளி, மயிலாடுதுறை, துருத்தி, வேள்விக்குடி, எதிர்கொள்பாடி, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சுவரம், பழையாறை என்கிற இந்தத் திருத்தலங்களை அடைந்து சுவாமியை அளவு மிக்க திருத்தாண்டகமும் திருக்குறுந்தொகையும் நேரிசையும் சந்த விருத்தங்களும் ஆகிய இவைகளைப் பாடி மிகுந்த அன்பினோடு பூமியிலுள்ளார் பரவ அந்தந்தத் திருத்தலங்களிலேயே பலநாளிருந்து கைத்தொண்டு செய்திருந்தார்.

பின்பு திருச்சத்தி முற்றத்தை அடைந்து சுவாமியை வணங்கிப் பதிகம் பாட சுவாமி, "திருநல்லூருக்கு வா!" என்று அருளிச் செய்தார்.

**எங்கும் திருநாவுக்கரசு!**

அப்படியே அப்ப மூர்த்தி திருநல்லூரிலே சென்று சுவாமியை வணங்கி எழுந்தார். சுவாமி, உம்முடைய நினைப்பை முடிக்கிறோம், என்று சொல்லித் தம்முடைய திருவடிகளை அவர் சிரசின்மேல் சூட்டினார். அப்ப மூர்த்தி, திருத்தாண்டகமும் திருப்பதிகமும் பாடி வணங்கிக்கொண்டு சிலநாள் அங்கிருந்தார். பின்பு கருகாவூர், திருவாரூர், திருப்பாலைத்துறை முதலிய திருத்தலங்களுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்துகொண்டு பின்பு, திருநல்லூர், திருப்பழனம், இந்தத் திருத்தலங்களை வணங்கித்

திருத்தாண்டகம் பாடிப் பின்பு அவ்விடம் விட்டு நீங்கித் திங்களூரின் வழியாகப் போகும்போது, அவ்வூரிலே அப்பூதியடிகள் நாயனார், இவருடைய சமாசாரங்களைக் கேட்டு இவர் மேல் வைத்த பக்தி சிரத்தையாலும், ஆசையாலும் தம்முடைய மக்களுக்குத் திருநாவுக்கரசு என்றும் தம்முடைய அன்னசத்திரம், குளம், கிணறு, தண்ணீர்ப்பந்தல், தோப்பு இவை முதலிய பலவற்றிற்கும் எல்லாம் தனித்தனியே திருநாவுக்கரசு சுவாமிகளுடையது என்றும் பெயர் வைத்திருந்ததைக் கேள்வியுற்று அவர் வீட்டுக்குச் சென்றார்.

**அப்பூதியடிகள்**

அப்பூதியடிகள் நாயனார் தன்னுடைய மனைவி, மக்கள் முதலானவரோடும் அவரை வணங்கி அங்கே திருவமுது செய்யும்படி பிரார்த்தித்து, அமுது சமைத்துத் தன் புத்திரரை நோக்கி, "நம் தோட்டத்திலே சென்று வாழைக் குறுத்து அரிந்து கொண்டு வா," என்று சொல்லி அனுப்பினார்.

அவர் விரைந்து சென்று வாழைக்குருத்தை அரியும்போது அவரை ஒரு பாம்பு தீண்டிற்று. அதை அவர் இலட்சியம் பண்ணாமல் குருத்தை அரிந்து கொண்டு சீக்கிரத்தில் திரும்பி வந்து நஞ்சு தலைக்கு ஏறினதால் மயக்கம் அடைந்து வாழைக் குருத்தை தன்னுடைய தாயார் கையிலே கொடுத்துத் தன்னைச் சர்ப்பம் தீண்டியதைச் சொல்லிக் கீழே விழுந்து இறந்தார்.

**இறந்தவன் எழுந்தான்!**

அப்பூதி நாயனாரும் அவர் மனைவியாரும் அதைக் கண்டு, "ஐயோ! இனி நாயனார் அமுது செய்ய மாட்டாரே!" என்று துக்கித்து, சவத்தை மறைத்து வைத்துச் சிறிதும் வியாகுலம் இல்லாமல் அப்பமூர்த்தியிடத்தில் சென்று, "சுவாமி எழுந்து வந்து அமுது செய்து அருள வேண்டும்," என்று பிரார்த்தித்தார்கள். அப்ப மூர்த்தி அங்கே நடந்த

சங்கதிகளை எல்லாம் திருவருளால் அறிந்து கொண்டு அவர்களுடைய அன்பை நினைந்து அருள் சுரந்து அந்தச் சவத்தைச் சிவாலயத்தின் முன் கொண்டு வரச் சொல்லி திருப்பதிகம் பாடினார்.

உடனே அந்த புத்திரர் உயிர் பெற்று எழுந்தார். அப்பூதி நாயனார் தன் புத்திரர் பிழைத்ததைக் குறித்து மனம் மகிழ்ச்சி கொள்ளாமல் அப்ப மூர்த்தி அமுது செய்யாததைக் குறித்துத் துக்கிக்க அந்த வருத்தத்தை நீக்கும் பொருட்டு அப்பமூர்த்தி அவருடைய வீட்டில் சென்று சிலநாள் அங்கே இருந்து பின்பு, திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருநல்லூர், பழையாறை, வலஞ்சுழி, திருக்குடமூக்கு (கும்பகோணம்) நாலூர், திருச்சேறை, குடவாயில், நறையூர், திருவாஞ்சியம், பெருவேளூர், திருவாரூர் இந்தத் திருத்தலங்களை அடியார்களுடனே அடைந்து தன்னை எதிர்கொண்டவர்களோடு ஆலயத்தில் சென்று வலம் வந்து வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு திருவாரூரிலே இருக்கும்போது, நமிநந்தியடிகணாயனார், நீர் விட்டு விளக்கேற்றியதை ஒரு பதிகத்தில் சிறப்பித்துப் பாடி, பின்பு திருவலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் இவைகளுக்குப் போய் பதிகம் பாடி வணங்கிப் பின் திருவாரூரை அடைந்து அவ்விடத்தில் திருவாதிரை நட்சத்திரத்திலே வீதி விடங்கப் பெருமாளுடைய திருவிழாவை அடியார்களுடன் சேவித்து மகிழ்ந்திருந்து பின்பு திருவாரூரை விட்டு நீங்கிப் பல திருத்தலங்களையும் பணிந்து திருப்புகலூருக்குச் செல்ல அந்நாளிலே சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருப்புகலூருக்கு வந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு முருக நாயனாருடைய திருமடத்திலிருக்கும் போது ஒருநாள் அப்பமூர்த்தி திருப்புகலூருக்கு வருதலைக் கேள்வியுற்று அடியார் கூட்டத்தோடும் அவரை எதிர்கொண்டார்.

**திருவாதிரைச் சிறப்பு**

அப்போது அப்பமூர்த்தி திருஞானசம்பந்தமூர்த்தியை வணங்க இவரும் அப்பமூர்த்தியை வணங்கி, "அப்பரே! வரும் நாளிலே திருவாரூரிலே நடந்த பெருமையைச் சொல்லும்" என்றார்.

அப்பமூர்த்தி தான் கண்ட திருவாதிரை சிறப்பைப் பதிகமாகப் பாடியருளினார். திருஞானசம்பந்தமூர்த்தி அதைக் கேட்டு"நான் திருவாரூருக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து வருவேன்," என்று திருவாரூருக்குப் போய் சுவாமி தரிசனம் செய்தார்.

அப்பமூர்த்தி, திருப்புகலூருக்கு வந்து சுவாமி தரிசனம் செய்து பதிகம் பாடிக்கொண்டிருந்து பின்பு செங்காட்டாங்குடி, திருநள்ளாறு, சாத்தமங்கை, திருமருகல் என்கிற திருத்தலங்களுக்குப் போய் வணங்கிக் கொண்டு திருப்புகலூருக்குத் திரும்பி வந்திருந்தார்.

**அடியார்களோடு அரசர்**

சிலநாள் சென்றபின் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாரூரை விட்டு நீங்கித் திருப்புகலூருக்கு வர அவ்விடத்திலிருந்த அப்பமூர்த்தி அவரை எதிர்கொண்டு அழைத்து வந்து முருகநாயனாருடைய திருமடத்தில் அவரோடும் இருந்தார்.

அப்போது சிறுத்தொண்ட நாயனாரும் நீல நக்க நாயனாரும் வந்து அவர்களோடு கூடியிருந்தார்கள். சிலநாளான பின் திருஞானசம்பந்த மூர்த்தியும் அப்பமூர்த்தியும் திருப்புகலூரை நீங்கி, திருநீலநக்க நாயனாரும் சிறுத்தொண்ட நாயனாரும் முருக நாயனாரும் மற்றை அடியார்களும் அனுமதி பெற்றுக்கொண்டு போய்விட அப்பமூர்த்தியும் சம்பந்த மூர்த்தியும் திருவம்பர் என்னும் திருத்தலத்தை அடைந்து சுவாமியை வணங்கித் திருக்கடவூரில் சென்று சுவாமியை வணங்கி அவ்விடத்திருந்த குங்கிலியக்கலய நாயனார் திருமடத்தில்

அமுதுண்டு பின் திருக்கடவூர் மயானம், திருவாக்கூர், இதை வணங்கி திருவீழிமிழலைக்குச் சமீபித்துத் தன்னை எதிர்கொண்ட அவ்வூராருடன் அந்தத் திருத்தலத்தை அடைந்து ஆலயத்துள் பிரவேசித்து பிரதட்சணம் வந்து சுவாமியை வணங்கி திருத்தாண்டகம் பாடி அவ்விடத்திலிருந்தார்.

அதன்பின் சிலநாள் சென்றபின் மழை இல்லாததினாலும் காவேரிப்பெருக்கு இன்மையாலும் வற்கடம் உண்டாக அதனால் உயிர்கள் எல்லாம் வருத்தமுற்றன. அக்காலத்தில் பரமசிவன் அப்பமூர்த்திக்கும் சம்பந்தமூர்த்திக்கும் தோன்றி, "இந்த வற்கடத்தினாலே நீங்கள் மனவாட்டம் அடைவீர்கள்! ஆயினும் உங்களை வழிபடுகின்ற அடியார்களுக்குக் கொடுக்கும் பொருட்டு நாம் உங்களுக்குப் படிக்காசு தருகின்றோம்" என்று சொல்லிக் கோயிலின் கிழக்கு வாயில் படியிலும் மேற்கு வாயில் படியிலும் தினந்தோறும் ஒரு படிக்காசு வைத்தருளினார். அந்த நாயனார் இருவரும், "நாங்கள் பெற்ற படிக்காசுகளைக் கொடுத்துப் பண்டங்கள் வாங்கி அமுது சமைத்து அளிக்கிறோம். சிவன் அடியார்கள் எல்லாரும் வந்து திருவமுது பண்ணக் கடவர்," என்று காலையும், மாலையும் பறைசாற்றித் தெரிவித்து அன்னமிட்டார்கள்.

சம்பந்தமூர்த்தி பதிகம் மட்டும் பாடுவதால் தாம் பெற்ற காசை வட்டங்கொடுத்து மாற்றினார். அப்பமூர்த்தி பதிகம் பாடி கைத்தொண்டும் செய்வதால் தாம் பெற்ற காசை வட்டம் கொடாமல் மாற்றினார்.

**கதவு திறக்கப் பாடினார்**

இந்த இருவருடைய திருமடங்களில் சிவனடியார்கள் நாள் தோறும் உணவு உண்டு மகிழ்ந்திருக்கும் காலத்திலே எங்கும் மழை பெய்து தானியங்கள் விளைந்து சேமம்

உண்டாயிற்று. பின்பு அப்பமூர்த்தியும் சம்பந்த மூர்த்தியும் அந்தத் திருவீழிமிழலையினின்றும் நீங்கித் திருவாஞ்சியம் முதலிய திருத்தலங்களை வணங்கிக்கொண்டு வேதாரணியத்தை அடைந்து ஆலயத்திலே பிரவேசித்து பிரதட்சணம் செய்து வேதங்கள் அருச்சித்து திருக்காப்பு செய்த நாள் முதல் இந்த நாள் வரையில் அடைக்கப்பட்டிருந்த கதவுக்கு முன்வந்து வேதங்களாலே திருக்காப்பு செய்த கதவை அடியார்கள் நீக்கப்பெறாமையால் பக்கத்தில் வேறேயொரு வாசற்படி செய்து அதன்வழியே செல்கின்றார்கள் என்பதைக் கேட்டறிந்தார்கள். சம்பந்தமூர்த்தி, அப்பமூர்த்தியைப் பார்த்து, "அப்பரே! எப்படியும் சுவாமியை அபிமுகத் திருவாயில் வழியே சென்று தரிசிக்க வேண்டும், ஆதலால் இந்தக் கதவு திறக்கும்படி நீர் திருப்பதிகம் பாடுக!," என்றார். அப்பமூர்த்தி திருப்பதிகம் பாட உடனே வேதாரணியேச்சுவர ருடைய திருவருளினால் கதவு திறக்கப்பட்டது.

பின்பு இவர் இருவரும் மற்ற அடியார்களும் விழுந்து வணங்கிப் பேரின்ப வெள்ளத்தில் அழுந்தி உள்ளே போய்ச் சுவாமி தரிசனம் செய்துகொண்டு வெளியே வந்தார்கள். அப்போது சம்பந்தமூர்த்தியைப் பார்த்து, சுவாமியினுடைய கிருபையால் என்றைக்கும் இந்தக் கதவு திறக்கவும் மூடவும் ஆக இருக்கும்படி திருப்பதிகம் பாடும், என்றார். சம்பந்த மூர்த்தி முதல் பதிகம் பாடின மாத்திரத்தில் கதவு மூடிற்று. அது முதலாக அந்தக் கதவு திறக்கவும் மூடவும் வழக்கம் உண்டாயிற்று.

அதைக் கண்ட அடியார்கள் முதல் அனைவரும் ஆச்சரியம் கொண்டு சரீரம் உரோமாஞ்சிதம் கொள்ளக் கண்ணீர் சொரிய இரண்டு நாயன்மார் திருவடிகளிலும் விழுந்து வணங்கினார்கள். பின்பு நாயன்மார் இருவரும் திருமடத்தை அடைந்த பின்பு திருநாவுக்கரசு சுவாமிகள் அந்த மடத்தின் ஒரு பக்கத்தில் போய்க் கோவிலின் முன் நடந்த

அதிசயங்களை நினைத்துச் சுவாமியினுடைய திருவுள்ளம் இதுவென்று அறியேன் என்று மிகவும் பயந்து நித்திரை செய்தார். அப்போது பரமசிவன் அவரிடத்தில் சென்று “வாய்மூரில் இருப்போம் அவ்விடத்திற்கு வா,” என்று அருளிச்செய்ய அப்பமூர்த்தி திருப்பதிகம் பாடிக்கொண்டே எழுந்து வேதாரணியத்தை நீங்கிப் போகச் சுவாமி அவருக்கு முன்னாகத் தன் திருக்கோலத்தோடும் வழிகாட்டிக்கொண்டு திருவாய்மூரிலே போய் ஒரு கோயிலைக் காண்பித்து அதனுள்ளே புகுந்தார்.

அப்பமூர்த்தியும் அவ்விடத்திலே விரைந்து தொடர சம்பந்தமூர்த்தியும் இவைகளை அறிந்து இவருடன் கூடவந்து சேர்ந்தார். அப்பமூர்த்தி, சுவாமி மறைந்ததைக் குறித்துத் துக்கித்துக் கதவைச் சம்பந்தமூர்த்தியே திறக்கவேண்டும் என்பதை நினைக்காமல் திறந்து குற்றம் செய்த எனக்கு நீர் ஒளிக்கலாம். ஒரு பதிகத்தின் முதல் பாட்டிலேயே அடைப்பித்த சம்பந்தமூர்த்திகளும் இங்கே வந்திருக்கிறார். அவருக்கு எப்படி ஒளிக்கலாம்? என்று அப்பர் சொல்ல உடனே பரமசிவன் திருஞானசம்பந்த மூர்த்திகளுக்குக் காட்சி கொடுத்தார். பின்பு அப்பமூர்த்திக்கும் தரிசனம் கொடுத்தார். அப்போது இரண்டு நாயன்மாரும் தரிசித்துத் தோத்தரித்து திருத்தாண்டகம் பாடினார்கள். பின்பு சுவாமி அந்தப் பதிகத்தை ஏற்றுக்கொண்டு எழுந்தருள நாயன்மார் இருவரும் திருவாய்மூரை அடைந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு சிலநாள் அங்கிருந்து பின்பு வேதாரணியத்தை அடைந்திருந்தார்கள்.

**சம்பந்தர் மதுரை சென்றார்!**

இருக்கும் நாளிலே திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள், மதுரையில் இருக்கின்ற பாண்டியன் மனைவியரான மங்கையர்க்கரசியாரும் அவன் மந்திரியாகிய குலச்சிறையாரும் அனுப்பிய தூதர்களாலே பண்டிய தேசத்திலே ஆருகத சமயம் அதிகமாகவும் சைவசமயம்

குன்றியும் இருக்கிற சமாசாரத்தைக் கேள்வியுற்றுச் சமணர்களை வென்று சைவ சமயத்தை நிலைநிறுத்தும் பொருட்டு அந்த இடத்திற்குச் செல்ல எழுந்தார்.

அப்பொழுது திருநாவுக்கரசு சுவாமிகள் சமணர்களுடைய கொடுமைகளை நினைத்து மதுரைக்குப் போகாதிருக்கும்படி திருஞானசம்பந்த மூர்த்தியைத் தடுக்க அவர் அதற்குச் சம்மதிப்படாமல் பாண்டிய நாட்டுக்கு எழுந்தருளினார்.

**பத்தாயிரம் செம்பொன்!**

திருநாவுக்கரசு சுவாமிகள் அந்த வேதாரணியத்திலே சில நாளிருந்து பின் அதை நீங்கி நாகைக்காரோணம் முதலிய திருத்தலங்களை வணங்கிக்கொண்டு திருவீழிமிழலையை அடைந்து சிலநாள் அங்கே இருந்து பின்பு திருவாவடுதுறையில் சென்று திருஞானசம்பந்த மூர்த்திக்கு ஒரு பதிகத்தின் பொருட்டு பத்தாயிரம் செம்பொன் கொடுத்தருளிய திறத்தைப் புகழ்ந்து பழையாறையிற் சென்றார்.

அங்கே வடதளி என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற பரமசிவனைச் சமணர்கள் மறைத்து வைத்திருத்தலைக் கேள்வியுற்றுச் சமீபமாகிய ஓரிடத்தில் சென்று அமுது செய்யாமல் சுவாமியைத் தியானித்து, "சுவாமி அடியேன் தேவரீருடைய திருவுருவைக் கண்டு வணங்கினால் அல்லாமல் திரும்பிப் போகேன், அந்தத் திருவுருவை மறைத்தருளிய சமணர்களுடைய செய்கையைக் கெடுத்தருளும்," என்று சொல்லிக் கொண்டு இருந்தார்.

சுவாமி, அரசனுக்குச் சொப்பனத்திலே தோன்றி, "நாம் சமணர்களால் மறைக்கப்பட்டிருக்கின்றோம், நாவுக்கரசன் நம்மை வெளிப்படக் கண்டு கும்பிட வேண்டும் என்று இருக்கின்றான், நீ அந்தச் சமணர்களை அழித்து நமக்கு ஆலயம் செய்ய வேண்டும்," என்று அருளிச் செய்து தாம் இருக்கின்ற இடத்தின் அடையாளங்களைத் தெரிவித்து மறைந்தருளினார்.

**சமணர்களை அழித்தல்**

அரசன் விழித்தெழுந்து ஆச்சரியமடைந்து மந்திரிமாரோடு சீக்கிரத்திலே கோயிலில் போய் அருளிச்செய்த அடையாளத்தின் வழிகண்டு சமணர்கள் செய்த வஞ்சனையை உணர்ந்து அப்பமூர்த்தியை வணங்கி அந்தச் சமணர்களை யானைகளாலே மிதித்துக்கொன்று பரமசிவனுக்கு விமானம் செய்து நிவந்தங்கள் அமைத்தான். அப்பமூர்த்தி உள்ளே புகுந்து சுவாமியைத் தரிசித்து திருப்பதிகம் பாடிச் சிலநாள் அங்கிருந்தார்.

**பொதிச்சோறு உண்டார்**

பின் அதைவிட்டுத் திருவானைக்கா, திருவெறும்பியூர், கற்குடி, திருப்பராய்த்துறை என்னும் திருத்தலங்களை வணங்கிக்கொண்டு திருப்பைஞ்ஞீலியை நோக்கிச் சென்றார். அப்போது பசியினாலும் தாகத்தினாலும் மிக வருந்தி இளைத்தார். இளைத்தும் சித்தம் அலையாமல் நடக்கப் பரமசிவன் அவருடைய வருத்தத்தை நீக்கும்படி வழியிலே ஒரு தோப்பும் , குளமும் உண்டாக்கி ஓர் அந்தணர் வடிவம் கொண்டு ஒரு பொதிச்சோறு வைத்துக்கொண்டிருந்தார். அப்போது திருநாவுக்கரசு சுவாமிகள் அவர் சமீபத்தில் வந்தவுடனே அய்யர் அவரை நோக்கி, "நீர் வழி நடந்து மிக இளைத்துப் போனீர்! என் இடத்திலே பொதி சோறு இருக்கின்றது. இதை உண்டு இந்தக் குளத்திலே நீர் அருந்தி இளைப்பு நீக்கிக்கொண்டு போம்," என்று சொல்லிப் பொதி சோற்றைக் கொடுத்தார். அப்பர் சுவாமி, அதை வாங்கி உண்டு நீரருந்தி இளைப்பு நீங்கி இருந்தார்.

சுவாமி அவரை நோக்கி, "நீர் எங்கே போகின்றீர்?," என்று கேட்க, வாகீசர், "நான் திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்," என்று சொல்லிப் போனார். சுவாமி "நானும் அங்கே தான் போகின்றேன்," என்று சொல்லி அவருடனே கூடிச் சென்று திருப்பைஞ்ஞீலி சமீபத்தில் போய் மறைந்தருளினார்.

அப்பமூர்த்தி அதுகண்டு திருவருளை வியந்து கண்ணீர் பொழிந்து அழுது விழுந்து வணங்கி எழுந்து ஆலயத்தின் கண் சென்று சுவாமியை வணங்கிப் பதிகம் பாடி கைத்தொண்டு செய்துகொண்டிருந்தார். சில நாளான பின் அதை விட்டுத் திருவண்ணாமலை, இன்னும் பல சிவத்திருத்தலங்கள் இவைகளிற் சென்று வணங்கித் திருப்பதிகம் பாடிக் காஞ்சி நகரத்தைச் சமீபித்தார். அந்தக் காஞ்சி நகரத்திலுள்ளவர்கள் இவர் வருதலைக் கேட்டு மனம் மகிழ்ந்து நகரத்தை அலங்கரித்து அவரை எதிர்கொண்டு வணங்க , அவர் அவர்களுடன் ஆலயத்தில் பிரவேசித்து, வலம் செய்து சுவாமியைத் தரிசித்துத் திருப்பதிகம் பாடியருளினார்.

பின்பு அதை விட்டுப் பல சிவாலயங்களையும் தரிசனம் செய்துகொண்டு திருக்கழுக்குன்றமும் அதன் சமீபத்திலுள்ள சிவாலயங்களும் சென்று வணங்கித் திருப்பதிகம் பாடிப் பின்பு திருமயிலை கபாலீசுவரரை வணங்கிப் பின்பு திருவொற்றியூருக்குச் சமீபத்தில் போய்த் தன்னை எதிர்கொண்டவர்களுடன் கூடிப் போய் நகரில் பிரவேசித்து ஆலயத்தைக் கண்டு வணங்கி உள்ளே சென்று வலம் வந்து சுவாமியை அடிவீழ்ந்து வணங்கிப் பரவசமாகி மன மகிழ்ச்சியோடு திருப்பதிகம் பாடித் திருப்பணியும் செய்துகொண்டு பலநாள் அங்கே இருந்தார்.

**கயிலாயம் காண**

பின்பு அதை நீங்கித் திருப்பாசூரும் அதன் அருகில் உள்ள சிவாலயங்களையும் போய்த் தரிசித்துப் பின்பு திருவாலங்காடு, திருக்காளத்தி, சைலம் இந்தத் திருத்தலங்களை அடைந்து வணங்கித் தாண்டகங்கள் பாடிப் பின்பு காசியை வணங்கிக் கொண்டு அதற்கு அப்பால் இருக்கின்ற கற்சுரத்திலே சாகமூலபலங்கள் புசித்தலையும்

ஒழிந்து கயிலாயத்தை தரிசிக்க வேண்டும் என்கிற விருப்பத்தால் இராப் பகல் இடைவிடாமல் நடந்தார். அதனால் அவருடைய கால்கள் பரடு வரைக்கும் தேய்ந்தது. பின்பு இரண்டு கைகளாலும் தாவிச் சென்றார். கைகளும் மணிக்கட்டு அசைந்து கரைந்து சிதைந்தது.

கொடிய நெருப்பை ஒத்த பருக்கைக் கல்லுகள் பொருந்திய இடங்களில் மார்பினால் நகர்ந்து போனார். மார்பும் தசை நைந்து சிந்த, எலும்புகளும் முறிந்தன. பின்பு புரண்டு புரண்டு போனார். அதனால் தேகம் முழுதும் அரைபட்டது. பின்பு நகருதற்கு முயன்றும் சரீரம் எழும்பாமையால் வழியிலே கிடந்தார்.

அப்போது பரமசிவன் அப்பமூர்த்தியைத் தமிழ் நாட்டில் செலுத்தி அந்நாட்டார் உய்யும் பொருட்டுத் தமிழ் வேதமான தேவாரம் பாடுவித்தற்கும் அவர் கருத்தின்படி முடிப்பதற்கும், திருவுளங்கொண்டு ஒரு முனிவர் வடிவங்கொண்டு அவ்விடத்தில் வந்து ஒரு தடாகம் உண்டாக்கி அப்பருக்கு முன் வந்து நின்று, "நீர் அங்கங்கள் எல்லாம் அழிந்து போக வருத்தத்தோடு இந்தக்கொடிய காட்டில் எதன் பொருட்டு வந்தீர்?" என்று கேட்டார்.

**திரும்புவதே உத்தமம்**

அப்பமூர்த்தி அவரைக் கண்டபோதே கொஞ்சம் சக்தியுண்டாக அவரை நோக்கி, "முனிவரே நமது கடவுளாகிய பரமசிவன் உத்தர கைலாயத்தில் உமாதேவி சமேதராய் வீற்றிருக்கின்ற கோலத்தைத் தரிசிப்பதற்கு விருப்பப்பட்டு வந்தேன்," என்றார். அதற்கு அந்த முனிவர் "தேவர்களாலும் அடைதற்கு அரிய கயிலாய கிரி மனிதர்களால் அடையப்படுதற்கு எளியதா? ஆகையால் இனி நீர் திரும்பி விடுவதே உத்தமம்" என்றார்.

அப்பமூர்த்தி "கைலாயத்தைத் தரிசிக்காமல் திரும்பமாட்டேன்!" என்றார். சுவாமி அவருடைய துணிவைக் கண்டு மறைந்து ஆகாயத்தில் அசரீரியாகி நின்று, "நாவுக்கரசனே! எழுந்திரு!" என்றார். உடனே சிவன் அருளால் அப்பமூர்த்தி அழிந்த உறுப்புகளெல்லாம் முன்போல் பெற்று நல்ல தேகத்துடனே எழுந்து, "சுவாமி! தேவரீர் கைலாயத்திலிருக்கின்ற திருக்கோலத்தை அடியேன் தரிசித்து வணங்கும் பொருட்டு அருள் செய்யும்!" என்று பிரார்த்தித்து வணக்கம் பண்ணினார்.

**திருவையாற்றிலே காண்பாய்!**

அப்போது பரமசிவன் "நீ இந்தத் தடாகத்திலே முழுகித் திருவையாற்றை அடைந்து நம்மைக் கைலாயகிரியில் வீற்றிருந்தபடி தரிசித்து வணங்கு," என்று சொல்லி ஆக்ஞாபித்தார். அதைச் சிரசின் மேல் கொண்டு பஞ்சாட்சரத்தை ஓதி (திருஐந்து எழுத்து - நமசிவாய) தடாகத்தில் முழுகித் திருவையாற்றை அடைந்து ஆலயத்தின் முன் சென்றார். அப்போது அந்த ஆலயமே கைலாயகிரியாக, அதிலே வேதங்களும் சிவாகமங்களும் இருபக்கத்திலும் வாழ்த்தவும் தும்புரு, நாரதர் இருவரும் வீணை வாசிக்கவும் பிரம்மா, விட்டுணு இருவரும் வாயைக் கையினால் மூடிக்கொண்டு தம்தம் குறைகளைச் சொல்லவும் பூதகணங்கள் வாயில்தோறும் காக்கவும் தேவர், சித்தர், அசுரர், சாரணர், காந்தருவர், கின்னரர், யட்சர், வித்யாதரர் இவர் முதலாகிய கணத் தலைவர்கள் துதிக்கவும் நந்திகேசுவரர் கையிலே பிரம்பு வைத்துக்கொண்டு பணி செய்யவும் காருணிய வடிவாகிய பரமசிவன் ஒரு திவ்யாசனத்தின் மேல் அனந்த கோடி சூர்யப் பிரகாசத்தோடும் பார்வதி சமேதராய் வீற்றிருந்தார். அப்படி இருந்ததை அப்பமூர்த்தி கண்டு வணங்கி உரை தடுமாற உரோமம் சிலிர்ப்ப ஆனந்த அருவி சொரிய சன்னிதானத்திலே ஆனந்தக் கூத்தாடித் திருத் தாண்டகங்கள் பாடினார்.

### சிவிகையைத் தாங்கினார்

பின்பு கைலாயபதி மறைந்தருளினார். அப்பமூர்த்தி அதுகண்டு மனம் வருந்திப் பின் ஒருவாறு தெளிந்து திருப்பதிகங்கள் பாடித் திருத்தொண்டுகள் செய்து சிலநாள் அங்கே இருந்தார். பின்பு அதை நீங்கி நெய்த்தானம், மழபாடி முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருப்பூந்துருத்தியை அடைந்து சுவாமி தரிசனம் செய்து பதிகம் பாடி ஒரு திருமடம் கட்டுவித்து அங்கே இருக்கும்போது, சம்பந்தமூர்த்தி பாண்டிய தேசத்தில் போய் சமணர்களை வாதில் வென்று சைவத்தை நிலைபெறச் செய்து பாண்டியனுடைய கூனை நிமிர்த்து பாண்டிய நாட்டை நீங்கிச் சோழ தேசத்தை அடைந்து திருப்பூந்துருத்தியில் அப்பமூர்த்தி இருப்பதைக் கேள்வியுற்று அதற்குச் சமீபத்திலே வந்தருளினார். அதை அப்பமூர்த்தி அறிந்து மனம் மகிழ்ந்து எதிர்கொண்டு சென்று அவர் திருச்சின்ன ஓசையைக் கேட்டு அவரைத் தரிசிக்கும்படி சூழ்ந்த அடியார்களுடைய நெருக்கத்தினாலே தம்மை ஒருவரும் இன்னாரென்று அறியாதபடி உட்புகுந்து அவர் ஏறி வருகின்ற முத்துச் சிவிகையைத் தாங்குகின்றவரோடு தாமும் ஒருவராய்த் தாங்கிக் கொண்டு வந்தார்.

திருஞானசம்பந்த மூர்த்தி திருப்பூந்துருத்தியைச் சமீபித்தவுடனே "அப்பர் எங்குற்றார்?" என்று தன்னை எதிர்கொண்டவர்களைக் கேட்க, அப்பமூர்த்தி அதைக் கேட்டு, "அடியேன் தேவரீரைத் தாங்கி வரும் பெருவாழ்வைப் பெற்றேன்", என்றார்.

உடனே சம்பந்தமூர்த்தி சீக்கிரமாய்ப் பல்லக்கை விட்டிறங்கி மனம் பதைப்போடும் அப்பமூர்த்தியை வணங்க இவரும் தம்மை வணங்குதற்கு முன்னே, தான் அவரை வணங்க அதுகண்ட அடியார்களெல்லாம் வணங்கி ஆனந்தப் பேரொலி செய்தார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி வாகீசரோடும் திருப்பூந்துருத்தியில் சென்று சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தார்.

திருஞானசம்பந்த மூர்த்தி, தான் பாண்டிய தேசத்தில் சென்று சமணர்களை வாதில் வென்றதையும் பாண்டியனுடைய கூனை நிமிர்த்ததையும் அந்நாடெங்கும் சைவத்தை வளர்த்ததையும் பாண்டியன் தேவியான மங்கையர்க்கரசியார் அவன் மந்திரியான குலச்சிறையார் என்ற இருவருடைய பெருமையையும், இவைகளை எல்லாம் வாகீசருக்குச் சொல்லியருளினார்.

**ஓடும் செம்பொன்னும்**

திருஞானசம்பந்தமூர்த்தி தொண்டை நாட்டுக்கு யாத்திரை செய்ய விரும்பிப் போயினார். அப்பமூர்த்தி பாண்டிய நாட்டுக்கு யாத்திரை செய்ய விரும்பி புறப்பட்டு பாண்டிய நாட்டை அடைந்து திருப்புத்தூரை வணங்கி மதுரையில் சென்று சுவாமி தரிசனம் செய்துகொண்டு திருத்தாண்டகம் பாடி பாண்டியன் வீட்டில் சிலநாள் இருந்தார். பின்பு திருப்புவனம், நாகேசுவரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர், திருப்புகலூர் முதலிய திருத்தலங்களை வணங்கித் திருப்பதிகங்களைப் பாடி, அந்தத் திருப்புகலூரில் இருக்கும் நாளிலே பரமசிவன் அந்த நாயனாருடைய வைராக்கியத்தை யாவருக்குங் காட்டுதற்குத் திருவுளங்கொண்டு அவர் திருமுன்றிலே கைத்தொண்டு செய்யும்பொழுது உழவாரம் நுழைந்த இடங்களெங்கும் பொன்னும் நவரத்தினங்களும் கிடைக்கும்படி அருள் செய்தார்.

நாயனார் அவைகளைக் கண்டு அங்கே கிடக்கின்ற பருக்கைக் கல்லுகளோடு சமமாக எண்ணி உழவாரப் படையில் ஏந்திக் குளத்திலே எறிந்துவிட்டார்.

**தேவதாசியர் மயக்கினர்**

பின்பு சுவாமி தேவதாசிகளை அழைப்பித்து ஏவ அவர்கள் நாயனார் முன்னே வந்து இசைபாடிக் கூத்தாடி அவர்மேல் மலர்களைப் பொழிந்து அவரை அணைப்பவர் போலச் சமீபித்து, இப்படி அவரை மோகித்தார்கள்.

அவர் சிவனுடைய திருவருளையே முன்னிட்டு தன்னுடைய சிந்தனை சிறிதும் கலங்காதபடி தாம் செய்யும் திருப்பணியிலே உறுதிகொண்டு இருவினை முதலியவைகளை முன்னிலைப்படுத்தி நான் திருவாரூரிலே வீற்றிருக்கின்ற சுவாமிக்கு ஆளானேன். உங்களாலே நான் ஆட்டுண்ணேன். நீங்கள் என்னை அலையச்செய்யாதே இருங்கள் என்னும் கருத்தால் திருத்தாண்டகம் பாடினார்.

பின்பு தேவதாசிகள் தங்கள் கருத்து முற்றாமையால் அவரை வணங்கித் தேவலோகம் போய்விட்டார்கள். இந்த நிலைமையைக் கண்ட அனைவரும் நாயனாரைத் துதித்தார்கள்.

**திருவடிப் பேறு பெற்றார்**

நாயனார் தன்னை சுவாமியின் சேவடியின் கீழிருத்தும் பொருட்டுத் திருவிருத்தங்கள் பலவற்றைப் பாடிச் சிவனுடைய திருவடியை அடைந்தார்.

**திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட**
**திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்**



# திருநின்ற சருக்கம்

*23. குலச்சிறை நாயனார்*

**கவி**

கோதில்புகழ் தருமணமேற் குடியார் கோவண்
குலச்சிறையார் தென்னர்குல அமைச்சர் குன்றா
மாதவர்க ளடிபரவு மரபார் பாண்டி
மாதேவியா ரருள்வான் பயிர்க்கு வேலி
காதன்மிகு கவுணியர்கோன் வாதிற் றோற்ற
கையரைவை யைக்கரைசே கழுவி லேற்று
நீதியினா ராலவாய் நிமலர்ச் சேர்ந்த
நின்மலனா ரென்மலங்கள் நீக்கி னாரே!

**கதை**

**குலச்சிறையார்**

பாண்டிய நாட்டிலே மணமேற்குடியிலே குலச்சிறை நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். திருநீறு, உருத்திராட்சம் திருவைந்தெழுத்துடையார்களாகிய சிவனடியார்கள் எந்தக் குலத்தாராயிருப்பினும் நற்குணம், தீக்குணம் என்கிற எந்தக் குணத்தை உடையவரானாலும் அவர்களை வெறுத்தல் செய்யாமல் மேன்மையாக நினைத்து வணங்கிச் சிவனடியார்கள் எத்தனை பேர்வரினும் அவர்களை அன்பினோடு எதிர்கொண்டு அழைத்துத் திருவமுது செய்விக்கின்றவர்.

அமைச்சர்

பரமசிவனுடைய திருவடிகளை அனுதினமும் சிந்தித்துத் துதித்து வணங்குகின்றவர், நெடுமாறர் என்னும் பாண்டியருக்கு முதல் மந்திரி ஆயினவர். அந்தப் பாண்டியன் மனைவியாராகிய மங்கையர்க்கரசியார் செய்கின்ற சிவத்தொண்டுக்குத் துணை செய்கின்றவர்.

**திருநீற்றுப்பணி**

சமணர்களுடைய பொய்ச் சமயத்தைக் கெடுத்துப் பாண்டிய நாடெங்கும் திருநீற்றுத் தொண்டை வளர்க்கும் பொருட்டு பரசமய கோளரியாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய திருவடித் தாமரைகளை வணங்குகின்றவர்.

வாதிலே திருஞானசம்பந்தருக்குத் தோற்ற சமணர்களைக் கழுவிலே ஏற்றுவித்தார்.

(இவர்தம் வரலாற்றைத் திருஞானசம்பந்தர் வரலாற்றில் காண்க)

**பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கு மடியேன்**



# திருநின்ற சருக்கம்

*24. பெருமிழலைக் குறும்ப நாயனார்*

**கவி**

கொண்டல்பணி வளர்சோலை மிழலை நாட்டுக்
கோதில்புகழ் பெருமிழலைக் குறும்பனார்சீர்
அண்டர்பிரா னடியவருக் கடியா ராகும்
ஆதரவா லணுக்கவன் றொண்டர்க் காளாய்
மண்டொழுமெண் மருசித்தி வாய்ந்து ளார்தாம்
வன்றொண்டர் வடகயிலை மருவு நாண்முன்
எண்டிகழு மறைமூல நெறியூ டேகி
இலங்கொளிசேர் வடகயிலை எய்தி னாரே!

**கதை**

**சுந்தரர் தொண்டர்**

மிழலை நாட்டிலே பெருமிழலை என்னும் ஊரிலே சிவபத்தியடியார்களில் சிறந்த பெருமிழலைக் குறும்ப நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய பெருமையை அறிந்து அவருடைய திருவடிகளை மனம், வாக்கு, காயங்களினாலே சிந்தித்துத் துதித்து வணங்குதலே பரமசிவனுடைய திருவடிகளை அடைதற்கு உரியநெறியென்று அப்படிச்செய்து வந்தார்.

அதனால் அவர், அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்வி, பிராகாம்யம், ஈசத்வம், வசித்வம் என்னும் அட்டமா சித்திகளையும் அறிந்து திருஐந்தெழுத்தினை ஓதி வந்தார்.

**சுந்தரருக்குமுன் கயிலாயம்**

இப்படி நிகழும் காலத்திலே திருவஞ்சைக் களத்தில் சென்று சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பரமசிவனுடைய திருவருளினாலே உத்தர கைலாயம் கிடைக்கும் நாளைத் தம்முடைய ஊரிலிருந்து கொண்டே யோக சாதனையினால் அறிந்து, "சுந்தரமூர்த்தி சுவாமிகள் உத்தர கைலாயத்தை நாளைக்கு அடையப் போகிறார், நான் அவரை விட்டுப் பிரிந்து இங்கே வாழ மாட்டேன், இன்றைக்கே யோகத்தினாலே சிவனுடைய திருவடியை அடைவேன்," என்று துணிந்து யோக சாதனையினால் உடலினின்றும் ஆத்மா பிரிந்து திருக்கைலாயத்தில் வீற்றிருக்கின்ற சிவனுடைய திருவடியை அடைந்தார்.

**பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்**



# திருநின்ற சருக்கம்

*25. காரைக்காலம்மையார்*

**கலி**

தங்குபுகழ் காரைக்கால் வணிகன் மிக்க
தனதத்தன் தரும்புனித வதியார் மாவின்
செங்கனிக டிருவருளா லழைப்பக் கண்டு
திகழ்கணவ னதிசயித்துத் தேசம் நீங்க
அங்கஉட லிழந்துமுடி நடையா லேறி
அம்மையே யெனநாத னப்பா வென்று
பொங்குவட கயிலைபணிந் தாலங் காட்டில்
புனிதர் நடம் அனவரதம் போற்றி னாரே!

**கதை**

**புனிதவதியார்**

காரைக்காலிலே வைசியர் குலத்திலே தனதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவனுக்குப் புனிதவதியார் என்கிற புத்திரியார் பிறந்தார்.

**இல்லறம் ஏற்றல்**

அவளை நாகப்பட்டினத்திலிருந்த தனபதி என்பவன் மகனான பரமதத்தனுக்குத் திருமணம் செய்து கொடுத்துத் தனக்குப் பிள்ளை இல்லாமையால் அவனைத் தன் ஊருக்குப் போகவிடாமல் தன்வீட்டின் பக்கத்திலே ஒருவீடு கட்டி அளவிறந்த செல்வமும் கொடுத்து மகளையும் சேர்த்து அதில் வைத்தான்

மருமகனானவன் அந்தச் செல்வங்களை விருத்தி செய்து இல்லறத்தை ஒழுங்குபெற நடத்திவந்தான். இவன் மனைவியான புனிதவதியார் பரமசிவனுடைய திருவடியிலே அன்பு மேன்மேலும்பெருக இல்லறத்திற்கு வேண்டுவன வற்றை வழுவாது செய்து தன் வீட்டுக்கு வந்த சிவனடியார்களுக்கு மிகுந்தஅன்போடு அமுது செய்வித்து அவரவருக்கு வேண்டியபடிக்குப் பொன், இரத்தினம், ஆடைகள் முதலானவற்றைக் கொடுத்து வந்தார்.

**மாம்பழம் கிடைத்தது**

இப்படி நடத்துங்காலத்திலே ஒரு நாள் தன்னிடத்திலே காரியமாய் வந்தவர்கள்கொடுத்த இரண்டு மாம்பழத்தைத் தன் மனைவியாரிடத்திலே சேரும்படி ஒரு மனிதனிடத்திலே கொடுத்து அனுப்பினான். அவன் அதைக் கொண்டுவந்து கொடுக்க மனைவியார் வாங்கி வைத்தார்.

பின்பு ஒரு சிவனடியார் பசியினால் வருந்தி அவர் வீட்டிற்குச் சென்றார். புனிதவதியார் அவர் பசியை அறிந்து சாதத்தை மாத்திரம் சமைத்துப் பதார்த்தம் செய்தால் வெகுநாழிகையாய் விடும் என்று நினைத்து அவருக்குச் சாதத்தை வடித்துப் பதார்த்தத்துக்குப் பிரதியாக அந்த மாம்பழத்தில் ஒன்று கொண்டுவந்து உணவு பரிமாறினார்.

**அடியாருக்கு ஒருபழம்!**

இவர் உணவு உண்டு புனிதவதியாரைப் புகழ்ந்து, அவர் போகுமிடத்திற்குப் போயினார். பின்பு புனிதவதியார் கணவன் வீட்டுக்கு வந்து பகல் உணவு உண்ணும்போது மீதியிருந்த ஒரு மாம்பழத்தைக் கொண்டுவந்து கலத்திலே வைத்தார். அவர் அதைச் சாப்பிட்டுத் திருப்தியடையாமல் மனைவியைப் பார்த்து மற்றப் பழத்தையும் கொண்டுவந்து வை என்றார்.

**இன்னொரு பழம் எங்கே?**

மனைவியார் எடுத்துக் கொண்டுவரப் போகிறவர் போல மறையப் போய் நின்று சோகித்துப் பயந்து பரமசிவனுடைய திருவடிகளைத் தியானித்தார். உடனே சிவபெருமானின் திருவருளினாலே அதிமதுரமாகிய மாங்கனி அவர் கையில் வந்திருந்தது. அவர் அதைக்கொண்டுவந்து தன் கணவனுடைய கலத்திலே வைக்க அவன் அதைச் சாப்பிட்டு அதன் ருசி தேவாமிருதத்தைப் பார்க்கிலும் அதிகமாயிருப்பதால், "இது நான் கொடுத்த பழமல்ல, இதை எப்படிப் பெற்றாய்?" என்று மனைவியைக் கேட்க மனைவியார் திருவருளால் கிடைத்த திறத்தை வெளிப்படுத்தக் கூடாதென்றும் பொய் சொல்லக் கூடாதென்றும் ஆலோசித்துப் பின்பு நடந்ததையே சொல்லுவோம் எனத்துணிந்து "நீர் அனுப்பிய இரண்டு பழங்களில் ஒன்றை ஒரு சிவனடியாருக்குக் கொடுத்து விட்டேனே! இப்போது என்ன செய்வேன் என்று பயந்து பரமசிவனைத் தியானித்துக் கொண்டு நின்றேன். அவருடைய திருவருளினாலே இந்தப் பழம் என் கையில் வந்து இருந்தது. அதைக் கொண்டு வந்து உமக்கு வைத்தேன்," என்றார்.

**சோதனைமேல் சோதனை!**

கணவன் அதை நம்பாமல் மனைவியாரைப் பார்த்து, "இந்தப் பழம் சிவனுடைய திருவருளினால் வந்தது மெய்யானால் இன்னும் ஒரு பழம் அவருடைய திருவருளால் அழைத்து வந்து கொடு," என்றான்.

புனிதவதியார் அந்த இடத்தை விட்டுப் போய் பரமசிவனைத் தியானித்து, "இன்னும் ஒரு பழம் நீர் கொடுத்தருளாவிட்டால் அடியேனுடைய வார்த்தை பொய்யாகி விடும்" என்று சொல்ல சுவாமி ஒரு மாங்கனியை அவர் கையில் கொண்டு வந்து வைத்தார்.

அவர் அதைக்கொண்டு வந்து கணவன் கையில் கொடுக்க அவன் வியப்புற்று அதனை வாங்கினான். வாங்கிய பழம் மாயமாய்ப் போய்விட அவன் பயங்கொண்டு மனந்தடுமாறி மனைவியாரைத் தெய்வமென்று நினைத்து அவருடனே வாழ்கிறதற்குப் பயந்து வேறே சம்சாரம் பண்ண வேணுமென்று எண்ணி இதை ஒருவருடனும் சொல்லாமல் ஒரு கப்பல் செய்து சரக்குகளை வாங்கி நிறையயேற்றி, தானும் ஏறிக்கொண்டு கப்பல் ஓட்டுவார் சகிதமாய் சுபதினத்திலே பிரயாணம் செய்து இன்னொரு தேசத்தை அடைந்து சிலநாள் அங்கிருந்து பின்பு பாண்டிய நாட்டிலுள்ள ஒரு நகரத்தை அடைந்து அங்குள்ள ஒரு செட்டியார் குமாரத்தியைத் திருமணம் செய்துகொண்டு மிக்க செல்வத்தோடும் வாழ்ந்து ஒரு பெண்ணைப் பெற்று அதற்கு முதல் மனைவியின் பேரான புனிதவதி என்று பெயர் வைத்து மகா வைபவத்தோடு வாழ்ந்து கொண்டிருந்தான்.

### கணவனிடம் புனிதவதியார்

அப்படியிருக்க இங்கே காரைக்காலிலே புனிதவதியார் பதிவிரதா தர்மத்தோடே குடும்ப சம்ரட்சணை செய்துகொண்டு வந்தார். இவருடைய ஞாதிகள் வணிகத்தின் பொருட்டுச் சென்ற பரமதத்தன் பாண்டிய தேசத்திலே ஒரு நகரத்திலே வாசம் செய்கின்றான் என்று கேள்வியுற்று அவனிடத்திலே சிலரை அனுப்பி அவனுடைய நிலையை அறிந்து கவலை கொண்டு புனிதவதியாரை தாமேயிட்டுக் கொண்டு போய் விடும்படி நினைத்து அவரைப் பல்லக்கில் ஏற்றிக்கொண்டு போய் அவன் இருக்கின்ற நகரத்தை சமீபித்துத் தாம் புனிதவதியாரை இட்டுக்கொண்டுவந்த சமாசாரத்தை அவனுக்குத் தெரிவித்தார்கள்.

### கணவன் வணங்கினான்

அவன் அதைக்கேட்டுப் பயங்கொண்டு தன்னுடைய இரண்டாம் மனைவியையும் மகளையும் இட்டுக்கொண்டு புனிதவதியார் இருக்கும் இடத்துக்கு வந்து, “அடியேன்

உம்முடைய கருணையாலே வாழ்கின்றேன், நான் உம்முடைய பெயரை எந்நேரமும் நினைக்கும் பொருட்டு ஆசைகொண்டு இந்த என் பெண்ணுக்கு உம்முடைய நாமதேயத்தையே இட்டிருக்கின்றேன்" என்று சொல்லி அவருடைய பாதங்களிலே விழுந்து வணங்கினான்.

உடனே புனிதவதியார் அச்சத்தோடும் தம்முடைய ஞாதிகளிடத்திலே ஒதுங்கிநிற்க அவர்கள் வெட்கி பரமதத்தனைப் பார்த்து, "நீ உன்னுடைய மனைவியை வணங்குவது ஏன்?" என்றார்கள்.

அதற்குப் பரமதத்தன், "நான் இவரிடத்திலே ஒரு பெரிய அற்புதத்தைக் கண்டபடியால், இவர் தெய்வப் பெண்ணேயல்லாமல் மானிடப் பெண் அன்று என்று துணிந்து இவரைப் பிரிந்தேன். இவரை நான் தெய்வமாக வைத்துக்கொண்டதால் இந்த என் பெண்ணுக்கும் அந்தப் பெயரைத் தரித்தேன், ஆகையினாலே இவருடைய திருவடியை வணங்கினேன், இவரை நீங்களும் வணங்குங்கள்!" என்றான்.

ஞாதிகள் அதைக்கேட்டு இஃது என்ன ஆச்சரியம்? என்று திகைத்து நின்றார்கள். புனிதவதியார் கணவன் சொல்லிய சொல்லைக் கேட்டுப் பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்து, "சுவாமி! இனி இவருடைய செய்கை இப்படியாய் விட்டது. இனி இவர் பொருட்டு எடுத்த அழகு தங்கிய இந்தச் சரீரப் பொதியை நீக்கித் தேவரீரைத் துதிக்கின்ற பேய் வடிவை அடியேனுக்குக் கொடுத்தருள வேண்டும்," என்று பிரார்த்தித்தார்.

**பேய் வடிவம் பெற்றார்**

அந்தக் கணமே சுவாமியினுடைய அனுக்கிரகத்தினாலே சரீரத்திலுள்ள மாமிசம் முழுவதையும் உதறி எலும்பு உடம்பாயினார். ஞாதிகளெல்லாம் அதைக்கண்டு பயந்து அவரை வணங்கிப் போய் விட்டார்கள்.

**கயிலாய யாத்திரை**

புனிதவதியார் தன் உள்ளத்திலே சிவசக்தியால் பிரகாசிக்கப்பட்ட சித்சக்தி வடிவம் கொண்டு அற்புதத் திருவந்தாதியும் இரட்டைமணிமாலையும் பாடிப் பின்பு கைலாயகிரிக்குப் போக விரும்பி புறப்பட்டு வாயுவேக மனோவேகத்தைவிட அதிவேகமாக நடந்துபோய் அந்தக் கைலாயகிரியின் சமீபத்தை அடைந்து இனி காலினால் நடந்துபோவது நியாயமல்ல என்று தலையினாலே நடந்துபோய்க் கைலாயமலைமேல் ஏறினார்.

**பார்வதியார் வியந்தார்**

அப்போது உமாதேவியார் கண்டு ஆச்சரியத்தை அடைந்து அவருடைய பக்தி வலிமையைப் பரமேசுவரனுக்குத் தெரிவிக்கும் பொருட்டு எண்ணி, சுவாமியை வணங்கி நின்று, "சுவாமி! இங்கே தலையினால் நடந்து ஏறிவருகின்ற எலும்பு உடம்பை உடையவருடைய அன்பின் வலிமை என்ன அதிசயம்?" என்று சொல்ல, பரமசிவன், "இங்கே வருகின்றவள் நம்மைத் துதிக்கின்ற அம்மை என்று அறி. இந்தப் பெருமை பொருந்திய வடிவத்தையும் வேண்டிப் பெற்றாள்," என்றார்.

**அம்மையே என்றார்**

பின் புனிதவதியார் சமீபத்தில் வந்தவுடனே உலகமெல்லாம் உய்யும் பொருட்டு அவரைப் பார்த்து, "அம்மையே!" என்று அழைத்தார். புனிதவதியார் அதைக் கேட்டு "அப்பா" என்று சொல்லிக்கொண்டு அவருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கி எழுந்தார்.

சுவாமி அவரைப் பார்த்து, "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று வினாவ, புனிதவதியார் வணங்கி நின்று, "இனிப் பிறவாமையே வேண்டும், அல்லது பிறக்கினும் தேவரீரை ஒருகாலும் மறவாமை வேண்டும். இன்னும் தேவரீர் நாட்டியம் செய்யும்போது தேவரீருடைய திருவடியின் கீழே சிவானந்தத்தை உடையேனாகி தேவரீரைப் பாடிக்கொண்டிருக்க வேண்டும்," என்றார்.

**திருவாலங்காட்டில்:**

சுவாமி அவரை நோக்கி, "நீ தென் திசையிலே உள்ள ஆலங்காட்டிலே நம்முடைய நடனத்தைக் கண்டு பேரானந்தத்தோடு நம்மைப் பாடிக் கொண்டு இரு," என்று அருளிச்செய்தார். காரைக்காலம்மையார் அதைக் கேட்டுச் சுவாமியை வணங்கி அனுமதி பெற்றுக்கொண்டு திருவாலங்காட்டுக்குத் தலையினால் நடந்துபோய் சுவாமியினுடைய திருநடனத்தைத் தரிசித்து அநேக திருப்பதிகங்கள் பாடிப் பின்பு சுவாமியினுடய தூக்கிய திருவடியின்கீழே சிவானந்தத்தை அனுபவித்துக்கொண்டு எக்காலமும் இருக்கின்றார்.

**பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்**



## திருநின்ற சருக்கம்

*26. அப்பூதி நாயனார்*

**கவி**

அந்தமிளந் திங்களூர் வருமப் பூதி
அருமறையோர் திருநாவுக் கரசின் நாமம்
பந்தரிடை யெழுதக்கண் டரசு மெய்தப்
பணிந்துபரி கலநேடிப் படப்பை சேர்ந்த
மைந்தனுயி ருயர்கதலி யிலைமேற் றுஞ்சும்
வாளரவு கவரவுடன் மறைத்தல் கேட்டுச்
சிந்தைமகிழ்ந் துயர்பதிக மருந்தாற் றீர்த்துத்
திருவமுது செயவருளைச் சேர்ந்து ளாரே!

**கதை**

**அப்பூதியடிகள்**

சோழமண்டலத்திலே திங்களூரிலே அந்தணர் குலத்திலே பாபங்களை எல்லாம் நீங்கினவரும் புண்ணியங்களை எல்லாம் தாங்கினவரும் இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டவரும் சிவபக்தியிலும் அடியார் பக்தியிலும் சிறந்தவரும் ஆகிய அப்பூதி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

**அப்பர் மேல் கொண்ட பற்று**

அவர் திருநாவுக்கரசு சுவாமிகளுடைய மகிமையைக் கேள்வியுற்று அவர்மேல் மிகுதியான விருப்பம்கொண்டு, தம்முடைய வீட்டிலுள்ள அளவைகள், பிள்ளைகள்,

பசுக்கள், எருமைகள் முதலிய எல்லாவற்றிற்கும் அந்த நாயனாருடைய பெயரைச் சொல்லி வருவார். இன்னும் அவர் செய்த திருமடங்கள், தண்ணீர்ப் பந்தல்கள், குளங்கள், நந்தவனங்கள் முதலியவற்றை அந்த நாயனார் பேரினால் செய்து கொண்டிருந்தார்.

**அப்பர் வந்தார்**

அப்படிச் செய்திருக்கும் நாளிலே திருநாவுக்கரசு சுவாமிகள் சிவத் திருத்தலங்களைத் தரிசிக்கப் போகும் நாளில் அந்தத் திங்களூருக்குச் சமீபமாகிய வழியே செல்லும் பொழுது ஒரு தண்ணீர்ப் பந்தலைக் கண்டு அதை அடைந்து அதில் திருநாவுக்கரசு என்னும் பெயர் எங்கும் எழுதியிருப்பதைக் கண்டு அங்கு நின்றவரைப் பார்த்து, "இந்தத் தண்ணீர்ப் பந்தலுக்கு இந்தப் பெயரிட்டுச் செய்தவர் எவர்? " என்று கேட்க, அவர்கள் "இந்த ஊரில் அப்பூதி நாயனார் என்பவர் ஒருவர் இருக்கின்றார், அவர் இந்தப் பந்தலுக்கு மாத்திரமல்ல, அவர் செய்த தரும சத்திரம், குளம், கிணறு, நந்தவனம் எல்லாவற்றிற்கும் திருநாவுக்கரசு என்னும் பெயரையே வைத்துள்ளார், " என்று சொன்னார்கள்.

அதைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கேட்டு, "இங்ஙனம் அவர் செய்ததற்குக் காரணம் யாதே?" என்று நினைத்து அவர்களைப் பார்த்து, "அவர் எவ்விடத்தில் இருக்கின்றார்?" என்று கேட்க அவர்கள், "அவர் இவ்வூரே, இப்போதுதான் இவ்விடம் விட்டு வீட்டுக்குப் போகின்றார், அவ்வீடு இதற்குச் சமீபம்தான்" என்றார்கள்.

**அப்பூதி நாயனார் வீட்டில்**

உடனே திருநாவுக்கரசு சுவாமிகள் அப்பூதி நாயனாருடைய வீட்டுத் தலைக்கடை வாயிலில் செல்ல, உள்ளே இருந்த அப்பூதி நாயனார், சிவனடியார் ஒருவர் வாயிலில் வந்து நிற்கின்றார், என்று கேள்விப்பட்டு சீக்கிரமாய்ப் போய் அவருடைய திருவடிகளிலே வணங்க, அவரும் வணங்கினார்.

அப்பூதி நாயனார், “சுவாமி! தேவரீர் இவ்விடத்திற்கு எது பற்றி எழுந்தருளினீர்? ” என்று கேட்க, திருநாவுக்கரசு சுவாமிகள், “நாம் திருப்பழனம் என்னும் திருத்தலத்தை வணங்கிக்கொண்டு வரும்போது வழியிலே நீர் வைத்த தண்ணீர்ப்பந்தலைக் கண்டும், அப்படியே நீர் செய்திருக்கின்ற பிற தருமங்களைக் கேட்டும், உம்மேலே மிகவும் மகிழ்ந்து இங்கே வந்தோம், ” என்று சொல்லிப் பின்பு, “சிவனடியார்கள் பொருட்டு நீர் வைத்த தண்ணீர்ப்பந்தரிலே உம்முடைய பெயரை எழுதாமல் வேறொரு பெயரை எழுதியதற்குக் காரணம் யாது? ” என்று கேட்க, அப்பூதி நாயனார், “நீர் நல்ல வார்த்தையருளிச் செய்திலீர்! பாதகர்களாகிய சமணர்களோடு கூடிப் பல்லவமன்னன் செய்த இடையூறுகளைச் சிவபக்திப் பலத்தினாலே வென்ற திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருப்பெயரை நான் எழுத, நீர் இந்தக் கொடும் சொல்லை நான் கேட்டும்படிச் சொன்னீர்! கல் தோணியைக் கொண்டு கடல் கடந்த அந்த நாயனாருடைய மகிமையை இவ்வுலகத்திலே அறியாதவர் எவர்? நீர் சிவ வேடத்தோடு நின்று இவ்வார்த்தை பேசினீர்! நீர் எங்கே இருக்கின்றவர் சொல்லும் ” என்றார்.

**ஆட்கொள்ளப்பெற்ற அடியேன்**

திருநாவுக்கரசு சுவாமிகள், அந்த அப்பூதி நாயனாருடைய அன்பை அறிந்து ஆருகத சமயப் படுகுழியிலே நின்றும் ஏறும் பொருட்டு பரமசிவனால் சூலை வருவித்து ஆட்கொள்ளப்பெற்ற உணர்வில்லாத சிறியேன் நான், ” என்று சொன்னார்.

அப்பூதி நாயனார் உடனே இரண்டு கைகளும் சிரசின் மேலே குவிய கண்ணீர் சொரிய உரை தடுமாற உரோமம் சிலிர்ப்ப பூமியிலே விழுந்து திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருவடித்தாமரைகளைப் பூண்டார். திருநாவுக்கரசு சுவாமிகள் அப்பூதியடிகளை எதிர் வணங்கி எடுத்தருள அப்பூதியடிகள்

மிக்க களிப்படைந்து கூத்தாடினார், பாடினார், மகிழ்ச்சி அதிகரித்ததால் செய்வது இன்னதென்று அறியாமல் வீட்டின் உள்ளே மனைவியாருக்கும் பிள்ளைகளுக்கும் பிறபந்துக்களுக்கும் திருநாவுக்கரசு சுவாமிகள் எழுந்தருளி வந்த மகிழ்ச்சியான செய்தியைச் சொல்லி, அவர்களை அழைத்துக்கொண்டு வந்து நாயனாரை வணங்கும்படிச் செய்து, அவரை உள்ளே எழுந்தருளச் செய்து, பாத பூசை செய்து அந்தப் பாதோதகத்தை அவர்களுக்கெல்லாம் சிரசின் மேல் புரோச்சித்துக்கொண்டு அதிக மகிழ்ச்சி அடைந்தார்.

பின்பு நாயனாரை ஆசனத்தில் இருத்தி விதிப்படி அருச்சனை செய்து, "சுவாமி! தேவரீர் இங்கே திருவமுது செய்தருள வேண்டும்," என்று பிரார்த்திக்க அதற்கு அவரும் உடன்பட்டார்.

**அமுதுண்ண உடன்பட்டார்**

அப்பூதி நாயனார் திருவமுது சமைப்பித்துத் தங்கள் புத்திரனான மூத்த திருநாவுக்கரசைத் தோட்டத்தில் வாழைக் குருத்து அரிந்துகொண்டு வரும் பொருட்டு அனுப்ப, அவர் விரைந்து தோட்டத்திற்குச் சென்று வாழைக்குருத்து அரியும்போது ஒரு பாம்பு அவரைக் கையிலே தீண்டி அவரைச் சுற்றிக்கொண்டது. அவர் அதை உதறி வீழ்த்துப் பதைப்புடனே, அது கடித்த வேகத்தினாலே வீழுமுன், கொய்த குருத்தை வேகத்தோடு கொண்டோடி வந்து நஞ்சு கிரமமாக ஏறித்தலைக்கொண்ட ஏழாம் வேகத்தினாலே பல்லும் கண்ணும் சரீரமும் கருப்பை அடைந்து உரைகுழறி மயங்கிக் குருத்தைத் தாயார் கையில் நீட்டிக் கீழே விழுந்து இறந்தார்.

**பாம்பு கடித்த பாலகன்**

அதுகண்டு தந்தையாரும் தாயாரும், "ஐயோ! இது தெரிந்தால் இனி நாயனார் அமுது செய்ய மாட்டாரே!" என்று துக்கித்துச் சவத்தை வீட்டுப் பக்கத்து முற்றத்திலே பாயினால்

மறைத்து வைத்துவிட்டு, அப்ப மூர்த்தி இடத்தில் போய், "சுவாமி! எழுந்து வந்து அமுது செய்தருள வேண்டும்," என்று வேண்டிக்கொண்டார்கள்.

அப்பமூர்த்தி எழுந்து கை, கால் சுத்தி செய்து கொண்டு வேறோர் ஆசனத்திலிருந்து திருநீறணிந்து அப்பூதி நாயனாருக்கும் அவர் மனைவியாருக்கும் திருநீறு கொடுத்து அவர் தம் புத்திரர்களுக்கும் கொடுக்கும்போது, "நாம் இவர்களுக்கு முன்னே திருநீறு அணியும்படி உம்முடைய மூத்த மகனை வருவியும்" என்றார். அப்பூதி நாயனார், "அவன் இங்கே இப்போது வரமாட்டான்," என்றார்.

அப்பமூர்த்தி அதைக் கேட்டவுடனே சிவனுடைய திருவருளினாலே தம்முடைய திருவுள்ளத்திலே ஒரு தடுமாற்றம் தோன்றி, அப்பூதி நாயனாரைப் பார்த்து, "அவன் என்ன செய்கிறான்? உண்மையைச் சொல்லும்," என்றார். அப்பூதி நாயனார் பயந்து நடுக்கமுற்று வணங்கி நின்று, நடந்த சமாசாரத்தைச் சொன்னார். அப்பமூர்த்தி அதைக்கேட்டு, "நீர் செய்தது நன்றாயிருக்கிறது, நீங்களே உங்கள் பிள்ளை இறந்ததற்கு வருத்தப்படாமல் நான் சாப்பிட வேண்டுமென்று நிரம்ப வருத்தப்படுகிறீர்களே! உங்கள் மனவுறுதி என்னே! இப்படி வேறே யார் செய்வார்?" என்று எழுந்து அவ்வூரிலுள்ள சிவாலயத்துக்கு முன்சென்று சவத்தை அங்கே கொண்டு வரச் செய்து நஞ்சை நீக்கியருளும் பொருட்டுப் பரமசிவன் மேலே திருப்பதிகம் பாடினார்.

**மாண்டவன் மீண்டான்**

அந்தப் புத்திரர் உடனே உயிர் பெற்று எழுந்து அப்பமூர்த்திகளுடைய திருவடிகளிலே விழுந்து வணங்க, அப்பமூர்த்தி திருநீறு கொடுத்தருளினார். அப்பூதி நாயனாரும் அவர் மனைவியாரும் தங்கள் புத்திரர் பிழைத்தமையைக் கண்டும் அதைக்குறித்து மனமகிழ்ச்சி கொள்ளாமல் நாயனார் அமுது செய்யாமல் இருந்ததைக் குறித்துச் சிந்தை செய்தார்கள்.

**திருவமுது செய்தார்**

அப்பமூர்த்தி அதையறிந்து, அவர்களோடும் வீட்டில் போய் அப்பூதி நாயனாரோடும் அவர் புத்திரரோடும் ஒருங்கிருந்து அமுது செய்தருளினார். அப்படிச் சிலநாள் அங்கிருந்து பின்பு திருப்பழனத்திற்குப் போனார்.

அப்பூதியடிகள் சைவசமயகுரவராகிய திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருவடிகளைத் துதித்தலே தமக்குப் பெருஞ்செல்வம் எனக் கொண்டு வாழ்ந்திருந்து சில காலம் சென்றபின் பரமசிவனுடைய திருவடிகளை அடைந்தார்.

**ஒரு நம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்!**



# திருநின்ற சருக்கம்

### *27. திருநீலநக்க நாயனார்*

**கவி**

*நீதிதரு மறையோர்வாழ் சாத்த மங்கை*
*நீலநக்க ரைவந்தி நிமல மேனி*
*ஊதிவிழும் சிலம்பிகடிந் தவளைநீத் தார்க்கு*
*மியாதவிட நாதனுறு நோய் காட்டக்*
*காதன்மிகு மனைவியையு மகிழ்ந்து மேவிக்*
*காழியர்கோன் அமுதுசெயக் களித்து வாழ்ந்து*
*வேதிகையிற் பாணனார்க் கிடமும் நல்கி*
*விளங்குபெரு மணத்தரனை மேவி னாரே!*

**வசனம்**

**சிவத்தொண்டு**

சோழ மண்டலத்திலே சாத்தமங்கையிலே நீலநக்க நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சைவாகம விதிப்படிச் சிவனை அருச்சிப்பதும் சிவனடியார்களை அன்பினோடு அருச்சித்து அமுதுண்ணச் செய்வதும் இவை முதலாகிய பலவகைப் பணிவிடைகளைச் செய்வதே நன்மை என்று வேதங்களினாலே அறிந்து அவைகளைச் செய்து வந்தார்.

அப்படிச் செய்யும் காலத்திலே ஒரு திருவாதிரை நட்சத்திரத்திலே சிவபூசையை முடித்துக்கொண்டு அந்தத் திருத்தலத்திலுள்ள ஐவந்தி என்னும் ஆலயத்தில்

வீற்றிருக்கின்ற சுவாமியை அருச்சிக்க விரும்பித் தம்முடைய மனைவியார்கையில் பூசைக்கு வேண்டிய உபகரணங்களைக் குறைவில்லாமல் கொடுத்து இட்டுக்கொண்டு வேதசாரமாகிய திருஐந்தெழுத்தை ஓதிக்கொண்டிருந்தார்.

**சிலம்பியின் செயல்**

அப்போது ஒரு சிலம்பி சிவலிங்கத்தின் மேல் விழுந்தது. அதைச் சமீபத்தில் நின்ற மனைவியார் கண்டு பயந்து அது குழந்தைமேல் விழும் என்று எண்ணிப்பார்த்து சீக்கிரமாய் அது நீங்கும்படி ஊதித் துமிந்தார். திருநீலநக்க நாயனார் அதைக் கண்டு தம்முடைய கண்ணைப் புதைத்து, "அறிவில்லாதவளே! நீ இப்படிச் செய்தது ஏன்?" என்று சொல்ல, மனைவியார் "சிலம்பி விழுந்த படியினாலே ஊதித்துமிந்தேன்," என்றார்.

**இனித்தொட மாட்டேன்**

நாயனார் மனைவியாருடைய அன்பின் செய்கையை நல்லதென்று எண்ணாமல் அநுசிதம் என்று நினைத்து அவரைப் பார்த்து, "நீ சிவலிங்கத்தின் மேல் விழுந்த சிலம்பியை வேறொரு பரிசினால் நீக்காமல் வாயினாலே ஊதித் துமிந்தாய், இந்த அநுசிதத்தைச் செய்த உன்னை நான் இனித் தொடமாட்டேன், நீ அப்புறம் போய்விடு," என்றார். அப்போது சூரியன் மறைந்தது.

**கனவில் இறைவன்**

அப்போது மனைவியார், நாயனாருடைய ஆக்ஞைப்படிக்கு ஒருவழி நீங்கி ஆலயத்திலேயே இருந்தார். நாயகர் பூசையை முடித்துக்கொண்டு வீட்டிற்கு வந்து படுத்து உறங்கினார். அப்போது பரமசிவன் அவருக்குக் கனவிலே தோன்றித் தன்னுடைய திருமேனியைக் காட்டி, "உன் மனைவி அன்பினால் ஊதித்துமிந்த இடமொழிய இப்புறம் சிலம்பியின் கொப்புளம்" என்று சொல்லியருளினார்.

**மனைவியை அழைத்தார்**

நாயனார் விழித்து அஞ்சலிசெய்துகொண்டு எழுந்து கூத்தாடிப் பாடிச் சிவனுடை திருவருளை வியந்து நின்று பொழுது விடிந்தபின் ஆலயத்திற்குப் போய்ச் சுவாமியை வணங்கித் தோத்திரம் செய்து அங்கிருந்த மனைவியாரை இட்டுக்கொண்டு வீட்டுக்குத் திரும்பி வந்து, அதற்குப் பின் முன்னிலும் மிகுந்த மகிழ்ச்சியோடு சிவார்ச்சனையும் மகேசுவர பூசையும் செய்து கொண்டிருந்தார்.

**ஞானசம்பந்தர் வருகை**

அப்படி இருக்கும் நாளிலே திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளுடைய மகிமையைக் கேள்வியுற்று அவருடைய திருவடித் தாமரைகளைத் தரிசிக்க வேண்டும் என்ற பேராவலை உடையவராயிருந்தார். அப்போது திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் ஐவந்தி நகரை வணங்கும் பொருட்டுத் திருக்கூட்டத்தோடு சாத்தமங்கைக்கு வர, நீலநக்கநாயனார் கேள்விப்பட்டு மிகுந்த மகிழ்ச்சியோடு நடைப்பந்தலிட்டு வாழையும், கமுகும் நாட்டி, தோரணங்கள் கட்டி பூரண கும்பமும் தூப தீபமும் வைத்துத் தம்முடைய ஞாதிகள் முதலானவரோடும் போய் அவரை எதிர்கொண்டு வணங்கித் தம்முடைய வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய் திருவமுது செய்வித்தார்.

**பாணரும், விறலியாரும்**

அன்று இரவு திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருநீலநக்க நாயனாரை அழைப்பித்து, திருநீல கண்ட பெரும் பாணருக்கும் விறலியாருக்கும் இன்று தங்குவதற்கு ஓர் இடம் கொடு, என்று சொல்லியருள திருநீலநக்க நாயனார் வீட்டுக்கு நடுவிலிருக்கின்ற வேதிகையின் பக்கத்தில் அவர்களுக்கு

இடம் கொடுத்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணர் அந்த வேதிகையிலுள்ள நித்யாக்னியை வலம் செய்து பக்தியோடு அவ்விடத்தில் உறங்கினார்.

விடிந்தபின் சம்பந்த மூர்த்தி சுவாமிகள், திருநீல நக்க நாயனாரைச் சிறப்பித்துப் பதிகம் பாடி சில நாள் அங்கிருந்து திருநீலநக்க நாயனாரிடத்திலே விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டுப் போனார்.

பின் திருநீலநக்க நாயனார், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் மேலே விசேட அத்யந்தாபேட்சை வைத்து பயபக்தி சிரத்தையுடனே சில நாளிருந்து திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளுடைய திருமணத்தைச் சேவித்துச் சிவபதம் அடைந்தார்.

**"ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்!"**



# திருநின்ற சருக்கம்

*28. நமிநந்தியடிகள் நாயனார்*

**கவி**

நண்ணுபுகழ் மறையோர்வாழ் ஏமப் பேறூர்
நமிநந்தி யடிகடிரு விளக்கு நல்க
எண்ணியம ணர்கள் விலக்க நீரா லாரூர்
இலங்குமர நெறியாருக் கேற்று நாளில்
கண்ணமணர் கெடக்கண்பெற் றடிகள் வாழக்
காவலானி மிந்தங்கள் கட்டு வித்தே
அண்ணலரும் கண்டாரூ ரமர்ந்து தொண்டர்க்
காணியெனு மரசினரு ளடைந்து ளாரே.

**கதை**

**நமிநந்தியடிகள்**

சோழமண்டலத்திலே ஏமப்பேறூரிலே அந்தணர் குலத்திலே பரமசிவனுடைய திருவடிகளை மிகுந்த அன்போடும் ஒழியாதே அகோராத்ரம் சுகமெனக் கொண்டு நடக்கின்ற நமிநந்தியடிகள் என்பவர் ஒருவர் இருந்தார்.

**தீபமேற்ற நினைந்தார்**

அவர் பல நாளும் திருவாரூருக்குப் போய் வன்மீகநாதரை வணங்கிக் கொண்டு புறப்பட்டுத் திருமுன்றிலை அடைந்து பக்கத்தில் இருக்கின்ற அறநெறி என்னும் ஆலயத்தினுள் புகுந்து சுவாமியை வணங்கி அங்கே

செய்யவேண்டிய பல தொண்டுகளைச் செய்து இரவிலே அங்கே கணக்கில்லாத தீபம் ஏற்றுதற்கு எண்ணி எழுந்துபோய் அதன் சமீபத்திலிருந்த சமணர் வீட்டில் நுழைந்து அது சமணர் வீடென்று அறியாமல் சிவாலயத்தில் விளக்கேற்றுதற்கு நெய் தாருங்கள் என்று கேட்டார்.

**சமணர் வீட்டில்**

**அதற்கு அவர்கள்,** "கையிலேநெருப்பை வைத்துக் கொண்டிருக்கிற சிவனுக்கு விளக்கும் வேண்டுமோ? இங்கே நெய்யில்லை, தண்ணீர் மொண்டு விட்டு விளக்கு வையும்!," என்றார்கள். நமிநந்தியடிகள் அந்தச் சொல்லைப் பொறாதவராய் மிகுந்த மன வருத்தத்தோடே கோயிலில் போய், சுவாமி சந்நிதானத்தில் விழுந்து வணங்கி நின்றார். அப்பொழுது ஆகாசத்திலே, "நமிநந்தியே! நீ உன்னுடைய கவலையை நீக்கு! இதன் சமீபத்திலிருக்கின்ற குளத்துநீரைக் கொண்டுவந்து விளக்கேற்று!," என்று அசரீரி வாக்குத் தோன்றிற்று.

**தண்ணீரில் விளக்கேற்றினார்!**

நமிநந்தியடிகள் அதைக்கேட்டு மனம் மகிழ்ந்து திருவருளை வியந்துபோய் குளத்தில் இறங்கி திருஐந்தெழுத்தை உச்சரித்துத் தண்ணீரை மொண்டுக் கொண்டு வந்து அகல்களிலே இட்டுத் திரிபோட்டு விளக்கேற்றினார். அஃது எரிந்தது. அப்படியே அவ்விரவு முழுதும் நீர்குறைகிற அகல்களுக்கெல்லாம் அந்நீரையே நிறைய விட்டு விளக்கெரித்தார்.

**சமணர் அஞ்சினர்!**

சமணர்களெல்லாம் அதைக்கண்டு பயமடைந்தார்கள். அவர் அந்த இரவிலே தாமே தம்முடைய ஊருக்குப் போய் சிவார்ச்சனை செய்து அமுதுசெய்து நித்திரை கொண்டு

உதயகாலத்தில் சிவபூசை முடித்துக்கொண்டு பிரயாணப் பட்டு, திருவாரூரை அடைந்து அறநெறியென்னும் ஆலயத்தில் சென்று சுவாமி தரிசனம் செய்து பகல் முழுதும் திருத்தொண்டு செய்து இராத்திரிக்கு விளக்கேற்றுவார். இப்படி நடத்துங் காலத்திலே நமிநந்தியடிகளாலே சமணர்கள் கலக்கம் விளைந்து நாசமடைய திருவாரூர் பெருமையை அடைந்தது.

**திருவாரூரில் திருவிழா**

சோழ மகாராசன், நமிநந்தியடிகளே அத்தியட்சகராக வன்மீக நாதருக்கு வேண்டிய நிவந்தங்கள் பலவற்றையும் வேதாகம விதி விளங்க அமைத்தான். நமிநந்தியடிகள் வீதிவிடங்கப் பெருமானுக்குப் பங்குனி மாதத்திலே மகோத்சவம் நடத்துவிக்கும்போது சுவாமி ஒருநாள் திருமணலிக்கு எழுந்தருள எல்லாச் சாதியரும் கூடி சேவித்துப் போனார்கள்.

நமிநந்தியடிகளும் சேவித்துப்போய் அங்கே சுவாமியின் திருவோலக்கத்தைக் கண்டு களிப்படைந்தார். சூரியன் அத்தமனத்தில் சுவாமி கோயிலினுள்ளே புகுந்தார். நமிநந்தியடிகள், சுவாமியை வணங்கித் தன் ஊரை அடைந்து தீட்டுப்பட்டதால் வீட்டினுள் புகாமல் தெருத்திண்ணையில் படுத்தார்.

**இறைவன் திருக்கோயிலில் தீட்டு ஏது?**

மனைவியார் வந்து, "நீர் உள்ளே வந்து சிவார்ச்சனையும் அக்கினி காரியத்தையும் முடித்துக்கொண்டு பள்ளி கொள்ளும்," என்றார். நமிநந்தியடிகள், "இன்றைக்குத் திருமணலிக்குச் சுவாமி எழுந்தருளியபோது நானும் சேவிக்கப் போயிருந்தேன். அவ்விடத்தில் சகல சாதியாரும் வந்து கூடியபடியால் தீட்டு உண்டாயிற்று.

ஆகையால் நான் நீராடி, பிராயசித்தம் செய்துகொண்டு வீட்டினுள்ளே நுழைய வேண்டும். அதற்கு நீர் முதலாயின கொண்டுவா," என்று சொல்ல மனைவியார் கொண்டு வரப் போயினாள். அவர் அப்போது கொஞ்ச நேரம் நித்திரை செய்தார்.

அப்போது வீதிவிடங்கப் பெருமான், அவருக்குக் கனவிலே தோன்றி, "திருவாரூரிலே பிறந்தவர்கள் எல்லாம் நம்முடைய கணங்களே! அதனை நீ அறி," என்று சொல்லி மறைந்தருளினார்.

நமிநந்தியடிகள் விழித்தெழுந்து தான் நினைத்தது குற்றமென்று நினைத்து எழுந்துபோய்ச் சிவார்ச்சனையை முடித்து நடந்ததை மனைவியாருக்குச் சொல்லி நித்திரை செய்து விடிந்தபின் திருவாரூருக்குப் போனார்.

**எல்லாம் சிவமயம்**

போனபோது அந்தத் திருப்பதியிலே பிறந்தவர்கள் எல்லாம் சிவரூபமுள்ளவர்களாய்ப் பிரகாசிக்கக் கண்டு பூமியிலே படுத்து வணங்கி, அவர்கள் அவ்வுருவம் நீங்கி முன்போல இன்மையும் கண்டு, "அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளும்," என்று சுவாமியை வேண்டிக் கொண்டார்.

பின்பு திருவாரூரிலே குடி புகுந்து கைத்தொண்டு செய்திருந்து முடிவில் சிவபதம் அடைந்தார்.

**அருநம்பி நமிநந்தி யடியார்க்கும் அடியேன்!**



# காண்டம் இரண்டு

வம்பறா வரிவண்டுச் சருக்கம்

வார்கொண்ட சருக்கம்

பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

கறைக்கண்டன் சருக்கம்

கடல்சூழ்ந்த சருக்கம்

பத்தராய்ப் பணிவார்ச்சருக்கம்

மன்னிய சீர்ச்சருக்கம்

# வம்பறாவரிவண்டுச் சருக்கம்

## 29. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள்

**கவி**

காழிநகர் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதி யூட்டும்
ஏழிசையின் அமுதுண்டு தாளம் வாங்கி
இலங்கியநித் திலச்சிவிகை யிசைய ஏறி
வாழுமுய லகனகற்றிப் பந்த ரேய்ந்து
வளர்கிழிபெற் றாவின்விட மருகற் றீர்த்து
வீழிநகர் காசுபெற்றுக் கதவம் பிணித்து
மீனவன் மேனியின்வெப்பு விடுவித் தாரே!

ஆறெரியிட் டெடுத்தவே டவைமுன் னேற்றி
யாற்றிலிடு மேடெதிர்ப்போ யளைய வேற்றி
ஓரமணர் ஒழியாமே கழுவி லேற்றி
ஓதுதிருப் பதிகத்தால் ஓட மேற்றிக்
காருதவு மிடிபுத்தன் றலையி லேற்றி
காயாத பனையின்மீது கனிக ளேற்றி
ஈரமிலா மிலாவங்க முயிரெய்த வேற்றி
இலங்குபெரு மணத்தரனை யெய்தி னாரே!

**கதை**

**ஞானம் பிறந்தது**

சோழநாட்டிலே பிரும்மபுரம், தோணிபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம் என்கிற பெயர்களை

யுடைய சீர்காழியிலே அந்தணர் குலத்திலே வேதங்களிலே மகாபாண்டித்தியமுடைய கௌண்டின்ய கோத்திரத்திலே சிவபாதவிருதையர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மனைவியார் பெயர் பகவதியார்.

இவர் இருவரும் சிவபக்தியை முக்கியமாய் வைத்துக்கொண்டு இல்லறத்திலே சிறந்து வாழ்ந்திருக்கும் போது சிவகாருண்யமெல்லாம் திரண்டு ஒருரு எடுத்தாற் போல பிரகாசிக்கின்ற சிவபாதவிருதையர், தமிழ் நாடெங்கும் ஆருகத மதமும் பௌத்த மதமும் பரவ பராதி பரமாகிய வேதாகமோக்த சத்சமயம் குறுக, திருநீற்றுச் சாதனம் குறைதலைக் கண்டு விசனம் அடைந்து சர்வாத்மாக்களும் பிழைக்க வேண்டும் என்று திருவுளம் கொண்டு ஒரு திவ்விய புத்திரரைப் பெறல் வேண்டும் என்கிற விருப்பத்தினாலே தோணியப்பரையும் பெரியநாயகியாரையும் வணங்கி பரசமயநிராகரணம் பண்ணி சைவ சமயத்தை நிலைபெறச் செய்யவல்ல ஒரு புத்திரனைப் பெறும்படி அன்பினோடு மிகுந்த தவம் செய்தார்.

**பிள்ளையார் பிறந்தார்!**

அப்படிச் செய்யுங்காலத்திலே அந்த அம்மாள் வயிற்றிலே கருப்பம் தரித்து உலகமெல்லாம் பிழைக்கும் படிக்கும் அந்தணர் கருமமும் சைவ சமயமும் பெருகும் பொருட்டும், பரசமயம் குறுகும் பொருட்டும் நவக்கிரகங்களெல்லாம் அதியுச்சங்களிலே நிற்க, திருவாதிரை நட்சத்திரத்திலே சுப வாரத்திலே சுப முகூர்த்தத்திலே பிள்ளையார் திருஅவதாரம் செய்தருளினார். அவருக்குச் சாதக கர்மம், நாமகர்மம், அன்னப் பிராசனம், சௌளம் என்கிற கர்மங்களை அது அதுகளுக்குரிய காலங்களிலே மிகுந்த சிறப்போடு செய்தார்.

பரமசிவன் பிள்ளையாரைச் சிவபாத விருதையருக்குப் பிள்ளையாகக் கொடுத்து, அவரைப் பிரிந்ததால் மனத்தில் வியாகூலம் கொண்டு துக்கித்திருப்பார். இப்படி இருக்கும்

நாளிலே பிள்ளைக்கு மூன்றாவது வயதிலே ஒருநாள் சிவபாத விருதையர் நீராடுவதற்காக எப்போதும் போல கோயில் குளத்துக்குப் போகப் பிரயாணப்பட்டார். அதைக்கண்டு பிள்ளையும் தொடரத் தகப்பனார் விலக்க அது கேளாததினாலே "உன்செய்கை இதுவாகில் வா," என்று சொல்லி இட்டுக்கொண்டு ஆலயத்தில் போய்க் குளத்தை அடைந்து பிள்ளையாரைக் கரையின் மேலே உட்கார வைத்து தான் குளத்தினுள்ளே இறங்கி நீராடி தர்ப்பணம் செய்து அகமர்ஷண ஸ்நானம் பண்ணினார்.

### பார்வதியார் ஞானப் பாலூட்டினார்

அப்போது பிள்ளையார் கரையில் நின்று கண்களில் கண்ணீர் ததும்பும்படிக் கைகளினாலே பிசைந்து அதரம் துடிக்க சுவாமியினுடைய கோபுர சிகரத்தைப் பார்த்து, "அம்மே! அம்மே! அப்பா! அப்பா!" எனச் சொல்லி அழுதார். அப்போது சுத்தசாத்குன்ய பரிபூரணராகிய தோணியப்பர், அவருக்கு அருள் செய்வதற்குத் திருவுளம் கொண்டு பார்வதி தேவியோடும் காளைவாகனராய் எழுந்தருளி தீர்த்தக்கரையை அடைந்து பார்வதி தேவியைப் பார்த்து, "உன் முலைப் பாலைப் பொன் கிண்ணத்தில் கறந்து இவனுக்கு ஊட்டு," என்று அருளிச் செய்தார்.

அந்தப் படிக்கே ஈசுவரியானவள், தன் முலைப்பாலை பொற்கிண்ணத்தில் கறந்து சிவஞானத்தைக் குழைத்து பிள்ளையாருடைய கண்ணீரைத் துடைத்து, அந்தப் பாலைக் கையிலே கொடுத்து ஊட்ட, பிள்ளையார் அழுகை தீர்ந்து போஜித்தார். இந்த ஞானப்பாலை உண்டதால் அவர் திருஞானசம்பந்த மூர்த்தியென்னும் பெயருடையராயினார்.

சிவபாத இருதையர் தன்னுடைய நியமங்களை முடித்துக்கொண்டு கரையிலேறி பிள்ளையாரை நோக்கி, அவர் கையில் கிண்ணத்தில் பாலிருப்பதைப் பார்த்து, "உனக்கு இதைக் கொடுத்தவரைக் காட்டு," என்று சொல்லி

கையிலே ஒரு சிமிரை எடுத்துக்கொண்டு அதட்ட, பிள்ளையார் ஆனந்தக் கண்ணீரைச் சொரிய வலக்கையை நீட்டிச் சுட்டு விரலினாலே ஆகாசத்தில் உமாதேவியாரோடு காளைவாகனராய் எழுந்தருளி இருக்கின்ற பரமசிவனைக் காட்டி, உள்ளே நிறைந்து எழுந்த சத்ஞான திருமொழியினாலே தம்முடைய பரமசிவனுடைய திருச்செவியில் ஏறும் பொருட்டு, அந்தத் திருச்செவியையே சிறப்பித்துத் "தோடுடைய செவியன்" எனத் திருப்பதிகம் பாடினார்.

பின்பு, இராவணன் கைலாயத்தை எடுத்து வலி இழந்து இசைபாடி அருள் பெற்றதை எட்டாம் திருப்பாட்டிலும் பிரம்மனும் திருமாலும் வாதித்துப் பன்றியும் அன்னமுமாகிச் சுவாமியைத் தேடியும் அகப்படாது திருஐந்தெழுத்தைச் சொல்லி வணங்கியதை ஒன்பதாம் திருப்பாட்டிலும் சமண, புத்தர்களுடைய சமயங்கள் கபடமார்க்கம் என்னும் திறத்தைப் பத்தாம் திருப்பாட்டிலும் ஆகப் பாடித் திருக்கடைக் காப்பு செய்து தொழுது நின்றார்.

பரமசிவனுடைய பெருங்கருணையைக் கண்டு ஆகாயத்திலே தேவர்களெல்லோரும் மலர்மாரி பொழிந்தார்கள். கின்னர, கிம்புருடரெல்லாம் கீத ஒலி செய்ய, திருமால், பிரம்மன் முதலான தேவர்கள் எல்லாரும் சிவகண நாதர்களும், அர!, அர! என்று தோத்தரிக்க ஆகாயத்திலெழுந்தருளியிருந்த சுவாமியானவர் சம்பந்தர் மிகுந்த அன்புடனே கூட வர ஆலயத்துள் புகுந்தார்.

பின்பு அனந்தகோடி புண்ணியங்களைச் செய்த சிவபாத இருதையர் கைகுவித்து ஆனந்தக் கூத்தாடி வியப்பும் விருப்பும் அடைந்து அவர் அருளியதிருப்பதிகங்களின் பொருள் உண்மையை அறிந்தார். பிள்ளையாரின் பின்னே கோயிலுக்குச் சென்றார்.

**வியப்பினும் வியப்பு**

அங்கே நிகழ்ந்ததைக் கேள்வியுற்ற அந்தணர் முதலான அனைவரும் இதைப்போல ஆச்சரியம் எங்கேயும் கண்டதில்லை, என்று சொல்லிக்கொண்டு கோயிலின் வாயிலில் சூழ்ந்தார்கள். பிள்ளையார் திருப்பதிகங்களால் சுவாமியைச் சேவித்துக்கொண்டு வீட்டுக்கு வேகமாகப் புறப்பட்டார். அதைக் கண்ட யாவரும் எதிர்கொண்டு வந்து நின்று தோத்திரம் பண்ணிப் பூமியில் படுத்து வணங்கினார்கள்.

சிவபாத இருதையர் பிள்ளையை எடுத்துத் தோள்மேல் வைத்துக்கொண்டு மங்கல வாத்தியம் முழங்க அந்தணர் வேதவொலி செய்யச் சிவனடியார்கள் எல்லாரும் தோத்திரம் பண்ணச் சீர்காழியை வலம் செய்துகொண்டு தன்னுடைய திருமாளிகையை அடைந்தார்.

**பொற்றாளம் பெற்றார்**

பிள்ளையார் மற்றா நாள் விடியற் காலத்திலே ஆலயத்துக்குச் சென்று சுவாமியையும் அம்மனையும் தரிசனம் செய்துகொண்டு திருக்கோலக்கா என்னும் திருப்பதியை அடைந்து கோயிலை வலம்வந்து சுவாமி முன்னே நின்று கையினாலே ஒற்றறுத்துத் திருப்பதிகம் பாடத் தொடங்கினார். பாடும்போது பரமசிவனுடைய திருவருளி னாலே திருஐந்தெழுத்து எழுதிய பொன்தாளம் பிள்ளையாருடைய கையில் வந்திருந்தது. பிள்ளையார் அதைக்கண்டு திருவருளை வியந்து களி கூர்ந்து ஏழிசையும் தழைத்தோங்கத் திருப்பதிகத்தைப் பாடி முடித்து திருக்கடைக்காப்பு சாத்தி நின்றார்.

அவர் பாடும்போது விண்ணுலகம் வியக்கும்படி ஓங்கிய அதிமதுர நாதத்தைக் கேட்டு தும்புரு நாரதர் முதலான சங்கீத வித்வான்கள் தோத்திரம் செய்து மலர்மாரி பொழிந்தார்கள். பின்பு பிள்ளையார் சீர்காழிக்குப்

போகும்படி நடக்க சிவபாத விருதையர் அதைப் பார்த்து மனந்தரிக்காமல் தோளின் மேல் ஏற்றிக்கொள்ள, பிள்ளையார் சீர்காழிக் கோயிலை அடைந்து "திருப்பதிகம்" பாடி வலம் வந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு தங்கள் திருமாளிகையை அடைந்தார்.

அப்படி இருக்கும் நாளிலே அவருடைய தாயாராகிய பகவதியார் பிறந்த திருநனிபள்ளியில் இருக்கின்ற அந்தணர்களெல்லாம் இதைக்கேட்டு மகிழ்ச்சி அடைந்து சீர்காழிக்கு வந்து சேர்ந்து அவரை வணங்கி, "நாங்கள் பிழைக்கும் பொருட்டு எங்களூருக்கு வரவேண்டும்," என்று பிரார்த்தித்தார்கள். பிள்ளையார் அதற்கு இசைந்து தோணியப்பரை வணங்கி அருள்பெற்றுப் புறப்பட, சிவபாத விருதையர் வந்து எடுத்துக்கொண்டு, வந்த மனிதர்களுடன் புறப்பட்டுத் திருநனிபள்ளிக்குச் சமீபத்தில் போகும் போது பிள்ளையார், "அதோ தோப்பு தெரிகிறதே! அஃது எந்த ஊர்?" என்று கேட்க, தந்தையார் திருநனிபள்ளி என்றார். அது கேட்டுத் திருப்பதிகம் பாடிக்கொண்டு கோயிலை அடைந்து சுவாமியை வணங்கிக்கொண்டு, சில நாள் அங்கேயிருந்து பின்பு, அதைவிட்டுத் தலைச்செங்காடு, திருவலம்புரம், பல்லவனீசுவரம், சாய்க்காடு, திருவெண்காடு, திருமுல்லைவாயில், மகேந்திரப்பள்ளி, குருகாவூர் என்கிற திருத்தலங்களை அடைந்து சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடிக்கொண்டிருக்கும் நாளிலே திருநீலகண்டப் பெரும்பாணர் பிள்ளையாரைத் தரிசிக்கும் பொருட்டு யாழ்கொண்டு விறலியாரோடு சீர்காழியை அடைந்தார்.

**திருநீலகண்ட யாழ்ப்பாணர்**

இவர் வருதலைப் பிள்ளையார் கேட்டு எதிர்கொள்ள, அவர் பிள்ளையார் காலில் விழுந்து வணங்கிப் போற்றுதல் செய்தார். பிள்ளையார் அவரை அழைத்துக்கொண்டு கோயில் முன்றிலிலே சென்று கும்பிடுவித்து அவரை நோக்கி, "நீர் இங்கே சுவாமிக்கு யாழ் மீட்டும்," என்றார்.

திருநீலகண்டப் பெரும்பாணர் பிள்ளையாரை வணங்கிப் பரமசிவன் மேலுள்ளபாணியை விறலியரோடும் பாடி யாழ்மீட்ட, பிள்ளையார் அதைக் கேட்டு மகிழ்ச்சியடைந்து அவரை இட்டுக்கொண்டு போய் விருந்து செய்வித்தார்.

பின்பு திருநீலகண்ட பெரும்பாணர், பிள்ளையார் பாடிய பதிகங்களை யாழிலிட்டு வாசித்து பிள்ளையாரைப் பார்த்து, "தேவரீர் அருளிச் செய்யும் திருப்பதிகங்களை நான் யாழிலிட்டு மீட்டித் தேவரீரைப் பிரியாமல் சேவித்துக் கொண்டேயிருக்க வேண்டும்" என்று சொல்லி அழுதார்.

பிள்ளையார் அதற்குத் திருவுளமிசைந்து அவரைத் தன்கூட இருக்கச் சொல்லி வைத்துக்கொண்டார். பின்பு திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் சபாநாயகரைத் தரிசிக்க விரும்பி தகப்பனாரோடும் மக்கள் சூழ சீர்காழியை நீங்கிச் சிதம்பரத்தின் தெற்கு வாயிலை அடைந்து தன்னை எதிர்கொண்ட தில்லைவாழ் அந்தணரோடும் மற்றை அடியார் முதலான யாவருடனும் தெரு வீதியையும் கோபுரத்தையும் தொழுது உள்ளே பிரவேசித்து வலம் செய்து கனகசபையை அடைந்து ஆனந்தத் தாண்டவம் செய்கின்ற சபாநாயகரைத் தரிசித்து சிரசின்மேல் கைகளைக் கூப்பிச் சரீரம் உரோமாஞ்சிதம் கொள்ளக் கண்களில் நீர் தாரை கொள்ள சிவானந்த சாகரத்தில் அழுந்தித் திருப்பதிகம் பாடினார்.

கூடியிருக்கின்ற யாழ்ப்பாணரும், அதை யாழிலிட்டு வாசித்தார். பிறகு அவ்விடம் விட்டு திருவேட்களம், திருக்கழிப்பாலை திருக்கோயில், திருவெருக்கத்தம் புலியூர், திருமுதுகுன்றம், திருத்தூங்கானை மாடம் இந்தத் தலங்களில் பிரவேசித்து, சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடினார்.

பின்பு திருவரத்துறைக்குப் போக எண்ணித் தகப்பனார் தோளின் மேல் ஏறுவதை விட்டுக் காலினால் நடந்து வருத்தமுற்று திருஐந்தெழுத்தைத் தியானித்து மாறன்பாடி

என்னும் ஊரில் சூரியன் மறைந்தது. அன்று ராத்திரி அடியார்களோடும் அவ்விடத்தில் தங்கினார். அப்போது திருவரத்துறையில் வீற்றிருக்கின்ற கடவுள் தன் குமாரர் வருத்தத்தை அறிந்து அவருக்கு முத்துப் பல்லக்கும் முத்துக்குடையும் திருச்சின்னமும் கொடுத்தருளநினைத்தார்.

**பரமசிவன் தந்த பரிசு**

பரமசிவன் அந்தத் திருத்தலத்திருக்கின்ற அந்தணர்களுக்குக் கனவிலே தோன்றி, "சம்பந்தன் நம்மிடத்துக்கு வருகின்றான், நீங்கள் நம்முடைய முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, முத்துச் சின்னம் ஆகியவைகளை எடுத்துக்கொண்டு போய்க் கொடுங்கள்!" என்று ஆக்ஞாபித்து மறைந்தருளினார். உடனே அந்தணர்கள் விழித்தெழுந்து மிக மகிழ்ந்து அற்புதமாகிய சிந்தையோடு ஆலயத்திலே வந்து கூடி அப்போது திருப்பள்ளி எழுச்சிக் காலம் வர திருக்காப்பை நீக்கி முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, முத்துச் சின்னம் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு மங்கல வாத்தியம் முழங்கச்சிவனடியார்களோடு போனார்கள்.

அதற்குமுன், பரமசிவன் பிள்ளையாருக்குக் கனவிலே தோன்றி, "நாம் உனக்கு முத்துப் பல்லக்கும் முத்துக் குடையும் முத்துச் சின்னமும் அனுப்புகின்றோம். நீ அவைகளை ஏற்றுக்கொள்," என்று திருவாய்மலர்ந்தருளினார். பிள்ளையார் விழித்தெழுந்து தாம் கண்ட கனவைத் தந்தையாருக்கும் அடியார்களுக்கும் அருளிச் செய்ய அப்போது விடியற்காலமாக, திருநீறு தரித்து திருஐந்தெழுத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்போது அந்தணர்கள் சிவனடியார்களோடு அர, அர என்னும் சப்தத்துடனே முன் சொன்ன முத்துப் பல்லக்கு முதலியவற்றைக் கொண்டு வந்து பிள்ளையாருக்கு எதிரே வைத்து வணங்கி, "இது திருவரத்துறையிலிருக்கின்ற கடவுள் உமக்குக் கொடுத்தனுப்பினார், ஏற்றுக்கொள்ளும்," என்று சொன்னார்கள்.

பிள்ளையார் அதைக் கேட்டு அந்தக் கடவுளுடைய திருவருளைத் துதித்து திருப்பதிகம் பாடி முத்துப் பல்லக்கை வலம் வந்து விழுந்து வணங்கி எழுந்து, திருஐந்தெழுத்தை முறைப்பட சொல்லி அதில் ஏறினார். அப்போது அந்தணர் முதலான யாவரும் சிவனடியார்களும் மகிழ்ந்து ஆரவாரித்துக் கூத்தாடி முத்துக் குடையைப் பல்லக்கு மேலாகப் பிடிக்க, திருஞான சம்பந்த மூர்த்தி வந்தார் என்று திருச்சின்னம் ஊதப் பிள்ளையார் திருவரத்துறையை அடைந்து கோபுரத்தின் சமீபத்தில் போய் முத்துப்பல்லக்கை விட்டிறங்கி, கோயிலினுள்ளே போய் வலம் வந்து வணங்கித் திருப்பதிகம் பாடிச் சிலநாள் அங்கிருந்து பின்பு திருவெண்ணெய் என்னும் திருத்தலத்துக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து பின்பு சீர்காழிக்குப் போக நினைத்து பல்லக்கில் ஏறி, பத்த சமூகத்துடன் திருவரத்துறையை விட்டு, பழூவூர், விசயமங்கை, வைகா, புறம்பயம் என்னும் திருத்தலங்களை வணங்கிக்கொண்டு பின்பு திருச்சேய்ஞலூர், திருப்பனந்தாள், திருப்பந்தணைநல்லூர், ஓமாம்புலியூர், வாழ்கொளிபுத்தூர், கடம்பூர், நாரையூர், கருப்பறியலூர் இவைகளில் சென்று சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடிப் பின்பு சீர்காழிக்குச் சமீபத்தில் போக, அப்போது சீர்காழியில் இருக்கின்ற அந்தணர் அனைவரும் அவர் வருவதைக் கேள்வியுற்று மிகுந்த மகிழ்ச்சியோடு வீதிகளை அலங்காரம் செய்து அவரை எதிர்கொண்டு வணங்கிப் போற்றினார்கள்.

பிள்ளையார் அவர்களுடன் சீர்காழியை அடைந்து கோயிலில் போய்ச் சுவாமியைத் தரிசித்து திருப்பதிகம் பாடி பின்னே வந்த திருநீலகண்டப் பெரும் பாணருக்கும் மற்றவர்களுக்கும் வீட்டுக்கு போகும்படி விடை கொடுத்து பார்ப்பனிகள் தீபமும் பூரண கும்பமும் ஏந்தத் தான் தன் திருமாளிகையை அடையும் போது தாயாராகிய பகவதியார் வந்து திருநீற்றுக் காப்புச் சாத்தி வணங்கித் துதிக்கப் பிள்ளையார் அவருக்கு அருள் செய்து திருமாளிகையி னுள்ளே பிரவேசித்தார்.

நாளும் தோணியப்பரை வணங்கிப் பதிகம் பாடிக் கொண்டிருந்தார். இப்படியிருக்கும் நாளிலே அவருக்கு ஏழு வயதாக உபநயன முகூர்த்தத்துக்கு ஆரம்பித்து மங்கலவாத்திய மகா வைபோகத்துடன் பகுசனம் பந்துசனமும் கூடி சுப தினத்திலே உபநயன முகூர்த்தம் செய்தார்கள்.

பின்பு, அந்தணர்களும் வேத மந்திரத்தை உபதேசிக்க எத்தனிக்க பிள்ளையார் எண்ணிறந்த வேதங்களையும் அதற்கு அங்கமாகிய சகல சாத்திரங்களையும் எடுத்துச் சொல்லினார். அந்தணர்கள் அதைக் கேட்டுப் பரமசிவனுடைய அருள் தன்மையை அதிசயித்து பிள்ளையாரை வணங்கித் தோத்திரம் பண்ணி தாங்கள் வாசித்த வேதங்களில் தங்களுக்கு சந்தேகமானவைகளை எல்லாம் அவரிடத்தில் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள்.

பின்பு பிள்ளையார் சகல மந்திரங்களுக்கும் மூலமாகிய திருஐந்தெழுத்தை அந்த அந்தணர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரிவிக்கும் பொருட்டு நினைத்து திருஐந்தெழுத்துப் பதிகம் பாடியருளினார். அந்தணர்கள் அதைக் கேட்டு மனம் மகிழ்ந்து அவருடைய திருவருளைத் தலை மேற்கொண்டு பிழைத்திருந்தார்கள்.

**நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும்**

பிள்ளையார் நாள்தோறும் தோணியப்பரை வணங்கிப் பதிகம் பாடிக்கொண்டு அடியார்களோடும் சீர்காழியில் இருக்கும் நாளிலே, திருநாவுக்கரசு சுவாமிகள் இவருடைய மகிமையைக் கேள்விப்பட்டு இவரை வணங்கும்படிச் சீர்காழிக்குச் சமீபத்திலே வந்தருளினார். பிள்ளையார் அதைக் கேட்டுத் திருவுளம் மகிழ்ந்து அடியார் கூட்டத்தோடும் அவரை எதிர்கொள்ளப் போனார்.

அப்போது திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளை வணங்க, இவரும் அவரை வணங்கி அழைத்துக்கொண்டு போய்க் கோயிலில் சுவாமி தரிசனம் செய்வித்துத் தம்முடைய திருமாளிகைக்கும் அழைத்துக் கொண்டு போய் திருவமுது செய்வித்துச் சிலநாள் வைத்திருந்தார்.

சிலநாளான பின் திருநாவுக்கரசு சுவாமிகள் பிற **திருத்தலங்களை வணங்கும்படி எழுந்தருள திருஞானசம்பந்த** மூர்த்தி சுவாமிகள் அவரோடு திருக்கோலக்கா வரைக்கும் போய் வழி விட்டு அவரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு திரும்பிச் சீர்காழிக்கு வந்து தோணியப்பர் மேல் பலவகைப்பட்ட திருப்பதிகங்களைப் பாடிக் கொண்டிருந்தார். அதைத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் விறலியாரோடு யாழிலிட்டு வாசித்துக்கொண்டு பிள்ளையாரோடு கூட இருந்தார்.

**சித்திரக்கவிக்கோர் வித்தகர்**

அவர் பாடிய சித்திரக்கவிகள் மிகச் சிறப்புடையன.

**திருமொழிமாற்று**

காடதணி கலங்கா ரரவம் பதிகாலதனிற்
றோடதணிகுவர் சுந்தரக் காதினிற் றூச்சிலம்பர்
வேட தணிவர் விசயற் குருவம் வில்லும் கொடுப்பர்
பீடதணி மணிமாடப் பிரம புரத்தாரே!

**இதன் விபரம்**

காடது என்பதற்கு பதி, அணிகலம் என்பதற்கு - காரரவம், காலதனில் என்பதற்கு - தூச் சிலம்பர், தோட தணிகுவர் சுந்தரக் காதினில் - வேட தணிவர், உருவம் - விசயற்கு வில்லும் கொடுப்பர்.

இவ்வாறு மொழியை மாற்றி வைத்து உரை செய்வது.

**சீர்காழி திருமாலைமாற்று**

*யாமாமா நீயாமாமா - யாழிகாமா*
*காணாகா - காணாகா மாகாழியா*
*மாமாயானீமாமாயா.*

**இதன் பொருள்**

**யாமாமா** - எனது ஆத்ம போத சேட்டையும் கருவிகளின் சேட்டையும் இவைகளால் அவைகள் ஆமாறு எவ்வாறெனில்

**நீயாமாம்** - அறிவுக்கறிவாய் நிற்கின்ற நினது சேட்டை ஒழிந்து வேறொன்றற்ற சத்காரியமாயுள்ளவனே!

**மாயாழி**- மிகுதிப்பட்டு மேலாயிருந்துள்ள நாத வடிவாயிருக்கின்ற யாழை உடையானே! (அத்தன்மை மிகைப்பட்டு நலம் சிறந்துள்ள யாழை இடைவிடாமல் வாசித்தலால் மகா நல்ல வீணை தடவி என்றும் பொருள்)

**கா** - இது இடைநிலை

**மாகாணாகா** - பரமாகரசத்தைக் கீழ்ப்படுத்தப்பட்டு மலைகளுக்கெல்லாம் குலமலையாகிய திருக்கயிலாயத்தின் கண்ணே எழுந்தருளி இருப்பவனே!

**காணாகா** - என் உள்ளக் கண்ணுக்குத் தோன்றப்பட்டுள்ள திருமேனியை உடையானே!

**மாகாழியா** - ஊழிக்காலத்தின்கண்ணும் அழிவின்மை யாகிய மேன்மையைப் பொருந்தியுள்ள காழியை யுடையானே!

**மாம்** - ஈங்கு உனதருள் பெறாத பேரிழப்பை உடையமாகிய எம்மை

**ஆயானீ** - இடப வாகனத்தின் கண்ணே ஏறி வந்தெனக்குப் பொய்கைக் கரையின்கண்ணே வெளிப் பட்டவனே!

**மாமாயா** - மாமாயையாகிய குடிலையைக் கொண்ட சுத்த மாயையிலுள்ள தத்துவங்களை உண்டாக்கிக் கன்மம் பொசித்தல் காரணமாக திரோதாயி சத்தியாலே மறைத்துள்ள மயக்கமே அறிவாகப் பெத்தத்தைச் செலுத்தப்பட்டவனே! (மத்தியில் நிறுத்தின)

கா - அந்த மாயா மயக்கம் என தறிவில் சீவியாமல் ஒழித்து உன்னை எனக்குள்ளபடி தந்து என்னை நீ நிகழாமற் கொண்டு இவ்வாறு நீ இரண்டறக் கலந்து வாழ்ந்து இரட்சிப்பாயாக! என்றவாறு.

**கவி (இதுவுமது)**

நேரகழாமித யாசைழிதா ஏனை நீ
யேனைநிளாயுழி காழியுளா
நினையே நினையே
தாழிசையா தமிழாகரனே.

**இதன் பொருள்**

**நேரகழா மித யாசைழிதா** - மானைக்காட்டி மனைப் பிடிப்பது போல வென்ற பால திருமேனி கொண்டருளி என்னை ஒரு காலத்திலும் விட்டு நீங்காமல் என்னிடத்திலே மிகுதியாக சீவிக்கப்பட்ட மலத்திரயங்களாகிய குற்றங்களை அழியா நின்றுள்ளவனே!

**ஏனை நீ** - உனது பரிபூரணமான அணுவுருவ நிலையில் எனக் குண்டானதா சோக நிலையெல்லாம் நீயே.

**ஏனை நிளாயுழிகா** - என்னிடத்திலே நின்று என்னை ஒழித்துக் கோதிலா அமுதாக நீயே வாழப்பட்டு என்னைச் சிறிதும் தோன்றவிடாமல் இரட்சியா நின்றுள்ளவனே!

**காழியுளாd** - இத்தன்மையான பிரம்ம சாயுச்யத்தை அடியேற்கு பிரசாதிக்கும் பொருட்டாக காழியெனும் பதியைப் படைத்துள்ளவனே! எனதொரு விண்ணப்பத்தைக் கேட்டருள்வாயாக!

**நினையே நினையே தாழிசை** - உன்னைச் செய்யுட் கருத்தாக உடைய இம்மாலை மாற்றென்னும் பெயருடையதுமாய் விரிந்துள்ள பாடலானது.

**ஆதமிழாகரனே** - ஐயோ தமிழுக்குப் படுதுறையாகிய யான் எனது போதத்தால் பாடிய பாடலென்று உலகத்தார் உரை செய்வதே யாதலால் நீயறிய யான் பாடியதில்லை என்கிற செய்தி உனக்கே நிகழுமாதலால் இப்பாடலை ஏத்தத் தவஞ் செய்தாரும் நீயே அடிமை குலையாத சாயுச்யத்தை பெறுவார்கள் என்றவாறு.

**திருஏகபாதம்**

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்

**இதன் பொருள்**

1. **பிரமபுரத்துறை பெம்மானெம்மான்** என்பது பிரமம் ஞானாகாசமாகிய பராசத்தியை

| | | |
|---|---|---|
| புரத்து | - | அந்தப் பரிபூரணத்தை |
| உறை | - | மிகுதியாக வியக்கப்பட்ட |
| பெம்மான் | - | பெருமான் |
| எம்மான் | - | எந்தன் பெரியோன் |

**பொழிப்பு**

ஞானாகாசமாகிய பராசத்தியான பூரணத்தை மிகவும் வியந்து அந்தப் பராசத்திக்கு அதீதமாகிய சுகமே வடிவாய் முதல், நடு, இறுதி காணாத பொருள் எந்தப் பெரியோன்

**2. பிரமபுரத்துறை பெம்மானெம்மான்**

| | | |
|---|---|---|
| பிரமம் | - | மேல் |
| புரம் | - | நீலம் |
| உறை | - | நீர் |
| பெம் | - | விருப்பம் |
| மான் | - | மான் போலும் விழியையுடைய பெண் |
| எம் | - | எம்மை நீங்காத நிலைமையுடைய |
| ஆன் | - | ஆத்மா |

**பொழிப்பு**

ஆகாசத்தின் கண்ணே ஓடுகின்ற கங்கா தேவியை விரும்பித் திருமுடியிலே வைத்தவன் என்னை நீங்காத நிலைமையுடைய எனதுயிர்.

**3. பிரமபுரத்துறை பெம்மானெம்மான்**

| | | |
|---|---|---|
| பிரமம் | - | பிரமத்துவம் |
| புரம் | - | சரீரம் |
| உறை | - | எண்ணுதல் |
| பெம் | - | ஆசை |
| ஆன் | - | அமையாமை |
| எம்மான் | - | என்னை ஒத்து வந்தவன் |

**பொழிப்பு**

பிரம்ம ரூபத்திலே எண்ணப்பட்ட என்னை முக்தியிலே விடுகைக்கு அமையாத இச்சையனாகி வந்தவன் என்னையொத்த தன்மையன்.

**4. பிரமபுரத்துறை பெம்மானெம்மான்**

பிரமபுரம் என்கிர சீர்காழியிலே உறைகின்ற கருத்தாவானவன் என்னுடைய சுவாமி

**கவி - இதுவுமது**

கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை

**இதன் பொருள்**

**1. கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை**

| | | |
|---|---|---|
| கழுமல | - | மிகுப்பட்ட குற்றம் |
| அமுது | - | நீர் |
| பதிக்க | - | விளைவிக்க |
| உணியன் | - | உள்ளநீ |
| கட்டு | - | வடிவாகக் கட்டுண்டல் |
| உரை | - | தேய்தல் |

**பொழிப்பு**

மிகுதிப்பட்ட குற்றமுள்ள சுக்ல, சுரோணிதமாகிய இருநீரால் பதிந்து விளைதற்குத் தந்தம்மை குலையாமலே கண்ணும் விட்டு விளங்குகிற

**2. கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை**

| | | |
|---|---|---|
| கழும் | - | மயக்கம் |
| அலம் | - | அலக்கண் படுதல் |
| அமுது | - | அமுதம் |
| பதி | - | கருத்தா |
| க | - | சிரசு |
| உணியன் | - | உண்ணப்பட்டவன் |

**பொழிப்பு**

மாயா மயக்கத்தின்கண்ணே மயங்கி பெத்த, முத்தி இரண்டும் தெரியாமல் திண்டாடப்பட்ட மலபோதற்கு.

அமுதம் போன்ற சித்தாயுள்ளவனுமாய் விளங்காநின்ற பொன்னுருவுடையனாய்த் தோற்றத்திற்குக் கருத்தாவாகிய பிரம்மாவினது கபாலத்திலே பிச்சை கொண்டு நுகரும் கருணையாளன்.

**3. கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை**

கீழ்ச் சொன்னபதியின் கண் கவுணிய கோத்திரத்து வந்த மறையோனாகிய எனது

**4. கழுமலமுதுபதிக் கவுணியன் கட்டுரை**

| | | |
|---|---|---|
| கட்டு | - | கட்டாகிய பாடலை |
| உரை | - | உரைப்பீராக |

காட்டு என்பது கட்டு எனக் குறைந்து நின்றது.

**பொழிப்பு**

திருக்கழுமலமென்னும் மூவாப் பழங்கிழமை பன்னிரு பெயர் பெற்ற அனாதி மூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்தில் உத்பவமான நான் நிவேதிக்கப்படுகின்ற காட்டாகிய பாடலை கீழ்ச் சொன்னவற்றிலும் மலத்திரயங்களிலும் அழுந்தா நின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரை செய்வர் உயர்ந்தார்களாதலால் இப்பாடலை இடைவிடாமல் உரை செய்வீராக.

**கவி**

**திருகோழுத்திரி**

பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர்க் குறைவிலா
புகலி பூமேன்
மாமகளூர் வெங்குரு நற்றோணிபுரம் பூந்தராய்
வாய்ந்த விஞ்சி

சேமமிகு சிரபுரம் சீர்ப்புறவநிறை புகழ்ச்சண்பை
காழி கொச்சை
காமனை முன் காய்ந்த நுதற் கண்ணவனூர்
கழுமலநாங் கருதுமூரே.

**திருவெழுகூற்றிருக்கை**

**அகவல்**

ஒருரு வாயினை மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதல
மொன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை
இருவ ரோடொரு வனாகி நின்றனை
யாரால் நீழே லுன்கழ லிரண்டு
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை நாட்ட மூன்றாகக் கோட்டினை
இருநதி யரவமோ டொருமதி சூடினை
யொருதா ளீரயின் மூவிலைச் சூலம்
நாற்கால் மான்மறி மும்மதத் திருகோட்
டொருகரி யீடழித் துரித்தனை
பொருதனு விருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானில மஞ்சக் கொன்று
தலத்துற வவுணரை யறுத்தனை
யைம்புல நாலா மந்தக் கரண
முக்குண மிருவளி யொருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்து முப்போது குறை முடித்து
நான்மறை யோதி ஐவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத்தோதி
வரன்முறை பயின்றெழு வான்தனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை!
அறுபதம் முரலும் வேணுபுரம் விரும்பினை!
இகலிய மைந்துணர் புகலி யமர்ந்தனை

பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை
பாணிமூ வுலகும் புதையல் மேல் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை!
தொலையா விருநிதி வாய்ந்த பூந்தரா
யேய்ந்தனை
வரபுர மென்றுணர் சிரபுறத் துறைந்தனை
ஒருமலை யெடுத்த விருதிற லரக்கன்
விறல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை
முந்நீர்த் துயின்றோன் நான்முக னறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை
ஐயுறு மமணரும் அறுவகைத் தோரு
முழியு முணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை
யாறு பதமு மைந்தமர் கல்வியும்
மறைமுத னான்கு மூன்று காலமும்
தோன்ற நின்றனை!
இருமையி லொருமையு மொருமையில்
பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியனறியும்
அனைய தன்மையை யாதலி னின்னை
நினைய வல்லவ ரில்லை நீணிலத்தே

இந்தத் திரு எழுகூற்றிருக்கை தமிழ் வேதமாகிய தேவாரத்திலுள்ள 1600 திருப்பதிகத்தை சம்பந்தர் பிரதி தினமும் பூசை காலத்தில் பாராயணம் செய்ய முடியாதென்று நினைத்து அதைச் சுருக்கி இந்தத் திருவெழு கூற்றிருக்கை யாகச் செய்து நித்தியம் பாராயணம் பண்ணிக் கொண்டு வந்தார்.

**குறிப்பு:** ஒருவர் சொன்னார்.

**திருச்சக்கர மாற்று**

விளங்கிய சீர் பிரமனூர் வேணுபுரம் புகலி
வெங்குரு மேற் சோலை
வளங்கவரும் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரம் வண்புறவ மண்மேற்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங்
கொச்சை கழுமலமென்றின்ன
விளங்குமரன் றன்னைப் பெற்றிமையவர்
தம் பகை யேறிவித்திறைவனூரே!

**இதுவுமது**

அக்கரஞ்சேர் தருமனூர் புகலிபூந் தராய்
தோணிபுரம் மணிநீர்ப் பொய்கை
புக்கறஞ்சேர் புறவம் சீர்ச் சிலம்பனூர்ப்
புகழ்க்காழி சண்பை தொல்லூர்
மிக்கரஞ்சீர் கழுமலமே கொச்சை
வயம் வேணுபுர மயனூர் மேவிச்
சக்கரஞ் சீர்த்தமிழ் விரகன்றான் சொன்ன
தரிப்போர் தவஞ் செய்தோரே

திருச்சிற்றம்பலம்

**கதை தொடர்ச்சி**

இந்தப்படி சம்பந்தர் பதிகங்கள் பாடி சுவாமி தரிசனம் செய்துகொண்டு சீர்காழியில் சிலநாள் இருந்து பின்பு மாதா பிதாக்களையும் மற்ற அந்தணர்களையும் நோக்கி, இந்தத் தமிழ் நாட்டிலுள்ள சிவத்தலங்களிலுள்ள சுவாமிகளைத் தரிசனம் செய்து பதிகம் பாடிக்கொண்டு பின்பு இங்கே வருகிறேன், என்றார்.

**தலயாத்திரை**

தந்தையார் "நான் உம்மை அருமையாகப் பெற்றதால் உம்மைப் பிரிந்திருக்க மாட்டேன், என்று சொல்ல, பிள்ளையார் அவரை இட்டுக்கொண்டு மற்ற அடியார்களோடும் பகுசன சங்கத்துடன் தான் முத்துப் பல்லக்கின் மீதேறி அந்த முத்துப் பல்லக்கின் மேல் முத்துக் குடை நிழற்ற முத்துத் திருச்சின்னம் ஊத திருநீலகண்ட யாழ்ப்பாணரோடும் மற்றையடியார்களோடும் கண்ணார் கோயிலை வணங்கிக் கொண்டு காவேரிக்கு வடக்காக மேற்றிசையை நோக்கிப் புள்ளிருக்கு வேளூர், நின்றியூர், நீடூர், புன்கூர், மண்ணிப்படிக்கரை, குறுக்கை, அன்னியூர், பந்தணைநல்லூர்,மணஞ்சேரி, எதிர்கொள்பாடி, வேள்விக் குடி, கோடிகா, கஞ்சனூர், மங்கலக்குடி, வியலூர், திருந்துதேவன்குடி, இன்னம்பர், வடகுரங்காடுதுறை, பழனம், திருவையாறு, பெரும்புலியூர், நெய்த்தானம், மழபாடி, கானூர், அன்பிலாந்துறை, மாந்துறை என்கிற தலங்களில் சென்று சுவாமி தரிசனம் செய்து கொண்டு பின் மழ நாட்டிலே காவேரிக்கு வடகரையே சென்று பாச்சிலாச் சிராமம் என்னும் தலத்துக்குப் போகும் போது அந்த நகரத்திலிருக்கிற சைவ மதத்தினன் கொல்லி மழவன் தன்னுடைய மகளுக்கு வந்திருந்த முயலகன் என்று சொல்கிற குமரகண்ட வலி நோயினால் வருத்தப் படுதலைக் கண்டு கவலையடைந்து பல வைத்தியங்கள் செய்தும் அது நீங்காமை கண்டு அவளைக் கோயிலில் சுவாமி சன்னிதானத்தில் கொண்டு போய் வைத்தான்.

**கொல்லி மழவன் தீர்த்தல்**

திருஞான சம்பந்த சுவாமி வந்தார் என்று ஊதுகிற சின்னத்தின் ஓசையைக் கேட்டு அவன் தன் புத்திரியை விட்டு விரைந்து சென்று தன் பட்டினத்தை அலங்கரித்து சில சனங்களுடனே அவரை எதிர்கொண்டு மிகுந்த அன்பினால் அவன் முத்துப் பல்லக்கின் முன்னே போய் விழுந்து வணங்கினான்.

சம்பந்தர் அவனை, 'எழுந்திரு,' என்று அருளிச் செய்ய, கொல்லி மழவன் எழுந்து மனம் மகிழ்ந்து சிரசின் மேல் கையைக் குவித்துக்கொண்டு பிள்ளையாருடன் சென்றான். பிள்ளையார் நகரத்தை அடைந்து கோயிலின் சமீபத்தில் வந்து பல்லக்கை விட்டு இறங்கி கோயிலினுள்ளே போய் வலம் செய்து சுவாமி சன்னிதானத்தில் போனார். அப்போது அவ்விடத்தில் உணர்வற்று விழுந்து கிடக்கின்ற கன்னிகையைக் கண்டு, "இது என்ன?" என்று வினவ, கொல்லிமழவன் பிள்ளையாரை வணங்கி, "இவள் அடியேனுடைய மகள், இவள் குமரகண்ட வலியினால் மிக வருத்தப் படுதலைப் பார்த்து எந்த வைத்தியம் செய்தும் தீராமையால் இவளைச் சுவாமி சன்னிதானத்தில் கொண்டு வந்து விட்டுவிட்டேன்" என்றான்.

திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அதைக் கேட்டு அருள் சுரந்து அவ்விடத்தில் நின்றே சுவாமியை வணங்கி அவளுடைய நோயை நீக்கும் பொருட்டுத் திருப்பதிகம் பாடினார். அப்பொழுது அந்த வியாதி நீங்கி அவள் எழுந்து தன் தகப்பன் பக்கத்தில் வந்து நின்றாள். கொல்லிமழவன் அதைக் கண்டு மிகமகிழ்ந்து அவளோடும் பிள்ளையாரை விழுந்து வணங்கினான்.

**திருநீலகண்டப் பதிகம்**

பிள்ளையார் அங்கே சுவாமி தரிசனம் செய்துகொண்டு அந்தக் கிராமத்தில் சில நாளிருந்து பின்பு திருப்பைஞ்ஞீலி, ஈங்கோய்மலை, கொடிமாடச் செங்குன்றூர், திருநணா ஆகியவற்றை வணங்கி, திருநணாவில் இருக்கும்போது மழைக்காலம் நீங்கிப் பனிக்காலம் ஆயிற்று. அப்போது குளிர் மிகுந்து தம்முடைய பரிசனங்களுக்கு நோய் விளைவதைப் பிள்ளையார் கண்டு திருநீலகண்டப் பதிகம் பாடினார்.

உடனே பிள்ளையார் பரிசனங்களுக்கு நோய் தீர்ந்ததுமல்லாமல் அந்தத் தேசம் முழுவதும் பனி நீங்கிற்று. பிள்ளையார் சிலநாள் அங்கேயிருந்து பின்பு அதை விட்டுப் பாண்டிக்கொடுமுடி, வெஞ்சமாக்கூடல், கருவூர், பின் சோழ மண்டலத்திலுள்ள பராய்த்துறை, கற்குடி மலை, முற்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, ஆனைக்கா, பாற்றுறை, எறும்பியூர், நெடுங்களம், மேலைக் காட்டுப் பள்ளி, ஆலம்பொழில், பூந்துருத்தி, கண்டியூர், சோற்றுத்துறை, வேதிகுடி, வெண்ணி சக்கரப்பள்ளி, புள்ளமங்கை, பாலைத்துறை, நல்லூர், கருகாவூர், அவளிவநல்லூர், பருதி நியமம், பூவனூர், ஆவூர் என்னும் திருத்தலங்களை வணங்கி திருவலஞ்சுழி என்னும் தலத்தை அடைந்து திருப்பதிகங்கள் பாடி சுவாமி தரிசனம் பண்ணிக்கொண்டு இருந்தார்.

**முத்துப் பந்தர்**

இப்படி அங்கே இருக்கும் நாளிலே வசந்த காலம் வந்தது. அப்போது பிள்ளையார் அடியார்களோடு வலஞ்சுழியை நீங்கி திருவாரை மேற்றளி, திருச்சத்திமுற்றம் இவைகளை வணங்கிக் கொண்டு பட்டீச்சுரத்துக்குப் போகப் புறப்பட்டார். அப்போது வெய்யில் வெப்பத்தைத் தணிக்கும் பொருட்டு ஒரு சிவபூதமானது ஒரு முத்துப்பந்தரை எடுத்து வந்து "என்னைப் பட்டீசர் அனுப்பினார்" என்று சொல்லிப் பிள்ளையாருடைய திருமுடியின் மேல் முத்துப்பந்தலைப் பிடித்துக்கொண்டு வந்தது. பிள்ளையார் அதைக் கண்டு திருவருளைத் துதிதது பூமியிலே விழுந்து வணங்கினார்.

பிள்ளையாருடைய பரிசனங்கள் அந்த முத்துப்பந்தரின் கால்களைப் பிடித்துக்கொண்டு வர பிள்ளையார் பட்டீசுவரம், வடதளி, இரும்பூளை, அரதைப்பெரும்பாழி, சேறை, நாலூர் மயானம், குடவாயில், நறையூர், அரிசிற் கரைப்புத்தூர், சிவபுரம், குடமூக்கு, குடந்தைக் கீழ்க்கோட்டம், குடந்தைக் காரோணம், நாகேச்சுவரம், திருவிடைமருதூர்,

குரங்காடுதுறை என்னும் திருத்தலங்களை அடைந்து திருப்பதிகம் பாடிப் பின்பு திருவாவடுதுறையை அடைந்து சுவாமி தரிசனம் பண்ணினார். அந்த நாளிலே அப்போது சிவபாதவிருதையர், பிள்ளையாரை நோக்கி, "நான் யாகம் செய்ய வீட்டிற்குப் போக வேண்டும், திரவியம் வேண்டும்" என்றார்.

**ஆயிரம் பொன் பெற்றார்**

பிள்ளையார் அதைக் கேட்டு கோயிலினுள் பிரவேசித்துத் திரவியம் வேண்டுமென்று சுவாமியை வணங்கி திருப்பதிகம் பாட, அப்போது பரமசிவனுடைய திருவருளினாலே ஒருபூதம் விரைந்து வந்து சுவாமியின் பீடத்தின் மேல் ஆயிரம் பொன் போட்டுக் கட்டிய கிழி ஒன்றை வைத்து முன்னே நின்று, "இந்தக் கிழி பொன்னுலவாக் கிழி, இது பரமசிவன் உமக்கு அருள் செய்தது," என்று சொல்ல பிள்ளையார் திருவருளை வியந்து வணங்கி, அந்தப் பையை எடுத்து, "இதில் பொன் எடுக்க எடுக்கக் குறையமாட்டாது," என்று சொல்லித் தகப்பனாரிடத்திலே கொடுத்து ஊருக்குப் போக அனுப்பி விட்டுப் பின் அந்தத் திருவாவடுதுறையில் சிலநாளிருந்து பின்பு அதை விட்டகன்று கோழம்பம், வைகன் மாடக்கோயில், நல்லம், அழுந்தூர், துருத்தி, மாயூரம், செம்பொன்பள்ளி, விளநகர், பறியலூர், வேட்டக்குடி, என்னும் திருத்தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடியிருக்க அதன் சமீபத்திலிருக்கின்ற தருமபுரம், திருநீலகண்டப் பெரும்பாணர் தாயார் பிறந்தத் தலமாகையால் அங்குள்ள அவருடைய சுற்றத்தார்கள் எதிர்கொண்டு வந்து வணங்கித் துதித்தார்கள்.

அதுகண்டு பெரும்பாணர், பிள்ளையார் அருளிச் செய்த திருப்பதிகங்களின் இசையை யாழிலிட்டு மீட்டினார். அவர்கள் அதைக் கேட்டு, "நீர் திருப்பதிக இசையை யாழிலிட்டு வாசித்தலினால் உலகம் முழுவதிலுமே இசை விளங்குக," என்றார்கள்.

பெரும்பாணர் உடனே மனம் நடுங்கி பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கி நின்று, "சுவாமி திருப்பதிகவிசை அளவு படாத்தன்மையை இவர்களேயன்றி உலகத்திலுள்ள மற்றை யாவரும் அறிந்து உண்மையை உணர்ந்து உய்யும் பொருட்டு, தேவரீர் ஒரு திருப்பதிகம் பாடியருளுவீராகில் அடியேன் அதன் இசை யாழிலே அடங்காமையைக்காட்டப்பெறுவேன்," என்றார். அப்போது பிள்ளையார் பரமசிவனை வணங்கிக் கொண்டு திருப்பதிகத்தின் உண்மை பூமியிலுள்ளோருடைய கண்டத்திலும் வீணையிலும் இசைமுயற்சியினால் அடங்காமையைக் காட்டும் திருப்பதிகம் பாடினார்.

பின்பு பெரும்பாணர் அந்தப் பதிக இசையை தன்னுடைய யாழ் நரம்பிலே இட்டு முன்போல வாசிக்க, அஃது அதில் அடங்கவில்லை. அப்போது பெரும்பாணர் அதை விட்டு அச்சம் கொண்டு, பிள்ளையாருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்து, "சுவாமி அருளிச் செய்த திருப்பதிகத்தின் இசையை யாழிலே ஏற்பேன் என்று சொல்லப் பண்ணியது இந்த யாழல்லவா?" என்று அதை முறிக்கும்படி ஓங்கினார்.

உடனே பிள்ளையார் தடுத்தருளி, "அய்யரே! நீர் யாழை முறிப்பது ஏன்? பரமசிவனும் பார்வதியும் அருளிச் செய்த திருவருளின் பெருமையெல்லாம் இந்தக் கருவியில் அளவுபடுமா? மனத்தினாலும் அளவு படாதே! நீவிர் இந்த யாழைக் கொண்டே சுவாமியினுடைய திருப்பதிக இசையை இயன்ற அளவு இதில் அமைத்து வாசியும்" என்று சொல்லி பெரும்பாணர் கையிலே யாழைக் கொடுத்தார்.

பெரும்பாணர் பிள்ளையாரைத் தொழுது அதை வாங்கிச் சிரசு மேற்கொண்டார். சிலநாள் சென்ற பின் பிள்ளையார் தருமபுரத்தை விட்டு அகன்று திருநள்ளாற்றை அடைந்து, கோயிலில் போய்ச் சுவாமியை வணங்கித் திருப்பதிகத்தை யாழ் நரம்பிலே இசை கூடும்படிப் பாடி முடித்துப் பக்கத்திலே போய் பெரும்பாணரை நோக்கி, யாழில் இட்டுவாசிக்கும்படிக் கட்டளையிட்டு தாம் திருத்தாளம் கொண்டு பாடியருளினார்.

பின்பு, பெரும்பாணர் அந்தப் பதிக இசையை யாழில் இட்டு வாசிக்க, அது கேட்டுப் பிள்ளையார் திருவுளம் மகிழ்ந்து பின்பு திருநள்ளாற்றினின்றும் நீங்கிச் சாத்தமங்கைக்குச் சமீபித்து அதில் நின்று வந்து தம்மை எதிர்கொண்டு வணங்கிய தீருநீலநக்க நாயனாரோடு சென்று ஐவந்தி என்னும் ஆலயத்தில், போய், சுவாமி தரிசனம் செய்துகொண்டு திருநீலநக்க நாயனார் வீட்டுக்குப் போய் திருவமுது செய்திருந்து மற்ற நாள் உதயத்திலே திருநீலநக்க நாயனாரோடும் அந்த ஐவந்தியின் ஆலயத்தில் சென்று சுவாமி தரிசனம் செய்து திருநீலநக்க நாயனாரைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடிச் சிலநாள் அங்கிருந்தார்.

**சிறுத்தொண்டர் வீட்டில் அமுதுண்ணல்**

சிலநாளாயினபின் திருநீலநக்க நாயனாருக்கு விடை கொடுத்து, சாத்தமங்கையை விட்டு நாகைக் காரோணம், கீழ்வேளூர் என்கிற திருத்தலங்களை வணங்கினார். அப்போது அதன் பக்கத்திலிருக்கின்ற திருச்செங்காட்டாங்குடியில் இருக்கின்ற சிறுத்தொண்ட நாயனார் ஓடிப்போய் பிள்ளையாரை எதிர்கொண்டு தம்முடைய திருப்பதிக்கு அழைத்துக்கொண்டு போனார்.

பிள்ளையார் அந்தத் திருத்தலத்திலிருக்கிற கணபதீச்சுவரம் கோயிலை வணங்கி சிறுத்தொண்டரைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடி சிறுத்தொண்டர் வீட்டில் போய்த் திருவமுது செய்து சிலநாள் இருந்தார். திருச்செங்காட்டாங்குடியில் அப்படி இருக்கும் நாளிலே திருமருகலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து கொண்டு அங்கிருந்தார்.

**கன்னிகள் எழுவர் கதை**

அந்த நாளிலே ஒரு வணிகன் பதிகனாகி ஒரு கன்னிகையையும் இட்டுக்கொண்டு கோயிலுக்குப் புறத்திலே ஒரு மடத்தில் இராத்திரியில் உறங்கும் போது பாம்பு கடித்து இறந்தான். அந்தக் கன்னிகையானவள் அது

கண்டு தளர்ந்து அவனைத் தான் தீண்டாமல் சமீபத்திலே கீழே விழுந்து புரண்டு அழுதாள். அப்போது மருத்துவர் வந்து பரிகாரம் செய்தும் தீரவில்லை. பின்பு விடியற்காலத்திலே அந்தக் கன்னிகை மிக அயர்ந்து புலம்பிக் கோயிலின் வாசற்படியைப் பார்த்து வணங்கிச் சொல்லுவாள், "தேவர்கள் பிழைக்கும் பொருட்டு நஞ்சினை அமுதமாக்கிய கடவுளே! சாம்பலாகி நின்ற மன்மதன் உயிரை அவன் மனைவியாகிய இரதிக்கு அருளிச் செய்த கருணாநிதியே! மார்க்கண்டருக்காக எமனை உதைத்த திருவடித் தாமரைகளை உடையவரே! திருமருகலில் வீற்றிருக்கின்ற பரமசிவனே! தேவரீர் இந்தக் கொடிய நஞ்சினை நீக்கி அடியேனைத் துக்க சாகரத்தினின்றும் மீட்க வேண்டும் என்று ஓசையிட்டுத் தோத்திரம் பண்ணினாள்.

அந்த ஓசையைச் சுவாமி தரிசனம் செய்யும் பொருட்டு வருகின்ற திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் கேட்டுத் திருவுளமிரங்கி அவளுக்கு அருள் செய்யும் பொருட்டு அடியார்களோடு எழுந்தருளி வந்து நின்று அவளைப் பார்த்து, "நீ பயப்படாதே! என்ன நடந்தது சொல்," என்றார். அந்தக் கன்னிகை கண்ணீர் சொரிய பிள்ளையாருடைய திருவடியிலே விழுந்து வணங்கி எழுந்து நின்று, "நான் வைப்பூர், என் பிதாவுக்குப் புத்திரிகள் எழுவர், அவர்களில் எனக்கு மூத்த ஆறு பேரையும் தன் மருமகனாகிய இவனுக்கே திருமணம் செய்து கொடுப்பேன் என்று சொல்லிச் சொல்லிப் பிறரிடத்தில் திரவியம் வாங்கிக் கொண்டு அவர்களுக்குத் திருமணம் செய்து கொடுத்து விட்டான்.

நான் அதைக் கண்டு மனவருத்தமுற்று இவனுக்கே நான் மனைவியாக வேண்டும் என்று நினைத்து மாதாபிதாக்களை மறந்து இவனையே சார்ந்து வந்தேன். இவனும் பாம்பு தீண்டி இறந்தனன். அடியேன் கடல் நடுவில் கப்பல் கவிழ்த்து விட்டவர் போல நிற்கிறேன். தேவரீர் அடியேனுடைய துக்கமெல்லாம் நீங்க அருள் செய்வீர்!" என்றாள்.

பிள்ளையார் நஞ்சு நீங்கும் பொருட்டுச் சுவாமியை நோக்கி திருப்பதிகம் பாட, உடனே அந்த வணிகன் நஞ்சு நீங்கி எழுந்து பிள்ளையாரை வணங்கினான். திருத்தொண்டர்களெல்லாம் அதைக் கண்டு ஆரவாரித்தார்கள்.

கன்னிகை மனம் மகிழ்ந்து பிள்ளையார் பாதத்தில் விழுந்து வணங்கினாள். பிள்ளையார் அந்தக் கன்னிகையையும் வணிகனையும் மணம் புணரும் படிச் செய்து அவர்களுக்கு விடை கொடுத்து அங்கே இருந்தார். அப்படியிருக்கும் நாளிலே சிறுத்தொண்டர் வந்து வேண்டிக் கொள்ள பிள்ளையார் மறுபடியும் அடியார்களோடு அந்தத் திருமருகல் கோவிலிற் சென்று பரமசிவன் திருச்செங்காட்டாங்குடியில் தாம் இருக்கும் திருக்கோலத்தை அவருக்குக் காட்டியருளினார்.

### அப்பரும் பிள்ளையாரும்

பிள்ளையார் அது கண்டு மனம் மகிழ்ந்து திருச்செங்காட்டாங்குடி, திருமருகல் இவையிரண்டிலும் இருக்கின்ற கடவுள் பேரில் திருப்பதிகம் பாடி அங்கே சில நாளிருந்தார். பின்பு அதைவிட்டு நீங்கித் தம்மைத் தொடர்ந்த சிறுத்தொண்ட நாயனாருக்கு விடை கொடுத்துப் பல சிவத்தலங்களையும் வணங்கிக் கொண்டு திருப்புகலூருக்குச் சமீபித்து அப்பதியினின்றும் வந்து தம்மை எதிர்கொண்டு வணங்கிய முருக நாயனார் முதலிய அடியார்களோடு சென்று கோயிலை அடைந்து சுவாமி தரிசனம் செய்து முருக நாயனாருடைய திருமடத்திற்குப் போய் அவர் உபசரிக்க வீற்றிருந்தார்.

இருக்கும் நாளிலே வர்த்தமானீச்சரத்தை வணங்கி முருக நாயனாருடைய திருத்தொண்டைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடி அங்கே இருந்தார். அப்படி அங்கே இருக்கும் காலத்தில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாரூரை வணங்கிக்கொண்டு திருப்புகலூரை வணங்குதற்கு அடியார்களோடும்

எழுந்தருளும் திருவார்த்தையைக் கேட்டு அத்தியந்த ஆசையோடு அவரை எதிர்கொள்ளும் பொருட்டு, கூட்டத்தோடும் திருப்புகலூரின் எல்லையைக் கடந்து சென்றார். திருநாவுக்கரசு சுவாமிகளும் பிள்ளையாருக்கு எதிரே வந்தார்.

இருவரும் ஒருவரையொருவர் வணங்கி நல்வரவு சொல்லி மகிழ்ந்தார்கள். அப்போது பிள்ளையார் அப்ப மூர்த்தியைப் பார்த்து, "நீர் வரும் நாளிலே திருவாரூரிலே நிகழ்ந்த சிறப்பைச் சொல்லும்," என்றுகேட்க, அப்பமூர்த்தி திருவாதிரைச் சிறப்பினைத் திருப்பதிகத்தினாலே சொல்லியருளினார். பிள்ளையார் அது கேட்டு, "நான் திருவாரூருக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து கொண்டு மீண்டும் இவ்விடத்திற்கு வந்து உம்முடன் இருப்பேன்," என்று சொல்லி அப்பமூர்த்தி திருப்புகலூருக்குப் போக தாம் சென்று விற்குடியை வணங்கிப் பதிகம் பாடிய பதியில் இருந்து பின்பு அங்குள்ள அறநெறி என்னும் ஆலயத்தையும் காலந்தோறும் சென்று பணிந்தார்.

அங்கிருக்கும் நாளிலே, வலிவலம், கோளிலி, முதலிய திருத்தலங்களுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து கொண்டு திருப்பதிகம் பாடியருளினார். மறுபடியும் அந்தத் திருவாரூரிலே வந்து சிலநாளிருந்து பின்பு திருநாவுக்கரசு சுவாமிகளைக் காணுதற்கு விரும்பித் திருவாரூரை நீங்கிப் பனையூரிலே சென்று சுவாமி தரிசனம் செய்துகொண்டு திருப்பதிகம் பாடி, பின்பு திருப்புகலூரைச் சமீபித்து அவ்வூரிலிருந்து தம்மை யெதிர் கொண்ட அப்பமூர்த்தி முருகநாயனார் முதலாகிய அடியார்களோடும் போய் சுவாமி தரிசனம் செய்துகொண்டு பதிகம் பாடி முருகநாயனாருடைய திருமடத்தை அடைந்து இருந்தார்.

அங்கே இருக்கும் நாளிலே திருநீலநக்க நாயனாரும் சிறுத்தொண்ட நாயனாரும் அவ்விடத்திற்கு வந்து அவரோடு சில நாளிருந்தார்கள்.

**நானும் நடந்து வருவேன்**

பின்பு பிள்ளையாரும் அப்பமூர்த்தியும் பிற திருத்தலங்களை வணங்க விரும்பி புறப்பட்டு முருக நாயனாரிடத்தில் விடைபெற்று, சிறுத்தொண்ட நாயனாரையும் திருநீலநக்க நாயனாரையும் தங்கள் தங்கள் ஊருக்குப் போகும்படி விடை கொடுத்துவிட்டு, அப்பமூர்த்தி பிள்ளையாரைப் பார்த்து, தேவரீர் முத்துப் பல்லக்கின் மேல் எழுந்தருளும், என்று சொல்ல, பிள்ளையார் நீர் அடியாரோடும் எங்கெங்கே போவீரோ அங்கங்கே நான் உம்முடைய பின்னே வருவேன், என்றார். பின்பு அப்படியே அப்பமூர்த்தி, தேவரீர் அருளிச் செய்த படியே செய்வேன், என்று சொல்லிக்கொண்டு அன்று முதல் அவருடன் செல்லும் நாளெல்லாம் அப்படியே செல்வாராகிச் சென்று முன்னே அடியாரோடும் திருவம்பருக்குச் சென்றார்.

பிள்ளையார் முத்துப் பல்லக்கில் ஏறி, திருப்புகலூரைக் கடந்து, "அப்பமூர்த்தி எங்கே சென்றார்?" என்று வினாவிப் போய், திருவம்பரை அடைந்து மாகாளத்தில் இருக்கின்ற சுவாமியை வணங்கிப் பதிகம் பாடி சிலநாள் அங்கிருந்து பின் அதைவிட்டு அப்பமூர்த்தியோடும் திருக்கடவூர் சமீபித்து அங்கிருந்து வந்து எதிர் கொண்ட குங்கிலியக்கலய நாயனார் முதலிய அடியார்களோடும் திருவீரட்டானத்தில் சென்று சுவாமி தரிசனம் செய்து பதிகம்பாடி அந்தக் குங்கிலியக் கலய நாயனார் வீட்டில் திருவமுது செய்து திருமயானத்தையும் வணங்கிக் கொண்டு சிலநாளிருந்து பின்பு திருவீழிமிழலையை அடைந்து சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடி அந்தக் கோயிலின் பக்கத்தில் அப்பமூர்த்தி ஒரு மடத்தையும் தான் ஒரு மடத்தையுமாக அடைந்து சிலநாளிருந்து பின்பு அந்த இருவரும் பெருந்துறை, திலதப்பதி என்னும் திருத்தலங்களை அடைந்து சுவாமி தரிசனம் செய்து திருவீழிமிழலையில் வந்திருந்தார்கள்.

அங்கே இருக்கும் நாளிலே, சீர்காழி அந்தணர்கள் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளைக் காணவேண்டும் என்கிற ஆசையினாலே திருவீழிமிழலையை அடைந்து தங்களை எதிர்கொண்ட அவ்வூர் அந்தணர்களோடும் கோயிலிலே போய் சுவாமிதரிசனம் செய்துகொண்டு திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் இருக்கின்ற திருமடத்தை அடைந்து அவரை வணங்கி, "தேவரீர்! அடியார்களாகிய எங்களோடு சீர்காழிக்கு எழுந்தருளல் வேண்டும்," என்று வேண்டிக் கொண்டார்கள்.

பிள்ளையார் அதற்கு இசைந்தார். சீர்காழி அந்தணர்களுக்குத் திருவீழிமிழலை அந்தணர்கள் விருந்து செய்தார்கள்.

அன்று இரவு பரமசிவன் பிள்ளையாருக்குக் கனவிலே தோன்றி, நாம் சீர்காழியில் வீற்றிருக்கும் கோலத்தை இந்தத் திருவீழிமிழலையிலே காட்டுவோம், என்று சொல்லி மறைந்தருளினார். பிள்ளையார் விழித்தெழுந்து கோயிலிற் சென்று சீர்காழியில் தோணியில்இருக்கின்ற படியே கண்டு மகிழ்ந்து வணங்கிப் பதிகம் பாடிப் பின்பு சீர்காழி அந்தணர்களுடன் தான் கண்ட கனவையும் அந்தப்படி கோயிலில் தரிசனம் பண்ணினதையும் சொல்லி அவர்களைச் சீர்காழிக்குப் போக அனுப்பிவிட்டு அவ்விடத்தில் இருக்கும் நாளிலே, மழை இல்லாமையாலும் காவேரிப் பெருக்கு இல்லாமையாலும் கருப்பு உண்டாயிற்று.

**படிக்காசு பெறுதல்**

அதனால் சிவனடியார்களும் மற்ற உயிர்களும் வருத்தமுற்றன. அதுகண்டு பிள்ளையாரும் அப்பரும் சிவனடியார்களுக்குக் கவலை வருமோ? எனத் திருவுளமிரங்கி பரமசிவனுடைய திருவடிகளைத் துதித்து அன்று இரவு நித்திரை செய்தார்கள்.

அப்போது பரமசிவன் அந்த இருவருக்கும் கனவிலே தோன்றி உங்கள் இருவருக்கும் வருத்தம் நீங்கும் பொருட்டு இந்தப் பஞ்சம் நீங்குகிற வரைக்கும் நான் தினந்தோறும் கோயிலின் கிழக்கு வாயிற்படியிலும் மேற்குவாயிற் படியிலும் உங்களுக்கு ஒவ்வொரு காசு வைப்போம், என்று சொல்லி மறைந்தருளினார்.

பிள்ளையார் விழித்தெழுந்து திருவருளைத் துதித்து அப்பமூர்த்தியோடும் கோயிலில் சென்று புகுந்த போது கிழக்கு வாயிற்படியிலே காசு இருத்தலைக் கண்டு விருப்பத்தோடும் தொழுது அதனையெடுத்து மாற்றி, நாள்தோறும் சிவனடியார்கள் வந்து அமுது செய்யக் கடவது, என்று பறைசாற்றித் தெரிவித்துத் தம்முடைய திருமடத்திற்கு வரும் அடியார்களுக்கு நெய், பால், தயிரோடு அமுது செய்வித்தார்.

அப்பமூர்த்தி மேற்கு வாயிற்படியில் வைத்த காசை எடுத்து மாற்றி முன் சொன்னபடி அடியார்களுக்கு அமுது செய்வித்தார். இப்படிச் செய்விக்கும் நாளிலே பிள்ளையார் அப்பமூர்த்தியினுடைய திருமடத்திலே அடியார்கள் காலம் தவறாமல் திருவமுது செய்தலைக் கண்டு தம்முடைய திருமடத்து அடிசிலார்களைப் பார்த்து, “நீங்கள் காலதாமதமில்லாமல் பாகம் பண்ணி இங்கே வரும் அடியார்களுக்குக் கொடாதது என்ன காரணம்?” என்று கேட்டார்.

பாகிகள், பிள்ளையாரை வணங்கி, “தேவரீர்! கொடுத்த காசைக்கொண்டு போனால் அதற்கு வட்டம் கேட்கிறார்கள். அதனால் காலதாமதமாகிறது. அப்பமூர்த்தி கொடுத்த காசைக் கொண்டு போனால் வட்டம் கேட்காமல் எடுத்துக் கொள்ளுகிறார்கள்,” என்றார்கள்.

பிள்ளையார் அதைக்கேட்டு அப்பமூர்த்தி கைத்தொண்டு செய்தலால் அவர் பெறும் காசை வட்டமில்லாமல் எடுத்துக் கொள்ளுகிறார்கள் என்று அறிந்து

மற்றாநாள் கோயிலுக்குப் போனபோது, "இனி நீர் கொடுக்கும் காசுகளெல்லாம் வாசி தீர்த்தருளும்," என்று திருப்பதிகம் பாடிக் காசைக் கொண்டு வந்து பாகுகர்கள் கையில் கொடுக்க அதை அவர்கள் கடைத்தெருவில் கொண்டுபோய்க் காட்ட அங்குள்ளோர் இந்தக் காசு மிக நல்லது என்று வேண்டியதைக் கொடுக்க அதைப் பாகுகர்கள் வாங்கிக்கொண்டு அன்று முதல் அடியவர்களுக்கு காலம் தாழாமல் திருவமுது படைத்தார்கள்.

இப்படி இருவருடைய திருமடங்களிலும் நாள் தோறும் அளவற்ற சிவனடியார்கள் வந்து திருவமுது செய்து கொண்டிருக்கும் காலத்திலே எங்கும் மழை பெய்து தானியங்கள் விளைந்து கருப்பு நீங்கியது.

பின்பு அப்பமூர்த்தியும் சம்பந்தமூர்த்தியும், திருவீழிமிழலையை விட்டுத் திருவாஞ்சியம், தலையாலங்காடு, பெருவேளூர், கரவீரம், விளமர், திருவாரூர், காறாயில், தேவூர், நெல்லிக்கா, கச்சினம் தெங்கூர், கொள்ளிக்காடு, கோட்டூர், வெண்டுறை, தண்டலை நீணெறி, திருக்களர் முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு பதிகம் பாடிப் பின்பு வேதாரணியத்தை அடைந்து கோயிலில் பிரவேசித்து வலம் வந்து வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச் செய்த அந்நாள் முதல் இந்நாள் வரைக்கும் கதவை அடைத்திருக்கிற திருவாயிலுக்கு முன் வந்து நின்று அங்கிருந்தவர்களால் வேதங்களாலே திருக்காப்பு செய்யப்பட்ட இந்தக் கதவை அந்த வேதங்களை ஓதுகின்ற அடியார்கள் நீக்கப் பெறாமல் பக்கத்தில் வேறோர் வாயிற்படி வைத்து அந்த வழியிலே செல்கின்றார்கள் என்பதைக் கேட்டறிந்தார்கள்.

**கதவு திறக்கப் பாடியது**

அப்போது திருஞானசம்பந்தமூர்த்தி அப்பமூர்த்தியைப் பார்த்து, "அப்பரே! நாம் சுவாமியை முன்முகத் திருவாயில் வழியே சென்று தரிசிக்க வேண்டும், ஆதலால் இந்தக் கதவு

திறக்கும் பொருட்டு நீர் திருப்பதிகம் பாடும்," என்றார். அப்பமூர்த்தி கதவு திறக்கும்படி திருப்பதிகத்தைப் பாட அது திறக்காமல் தாழ்த்தது. அதுகண்டு "இரக்கம் ஒன்றிலீர்" என்று திருக்கடைக்காப்பிலே பாடி வணங்கினார்.

உடனே வேதாரணிய ஈசுவரருடைய திருவருளினால் கதவு திறந்தது. அப்பொழுது இரண்டு நாயன்மார்களும் விழுந்து வணங்கினார்கள். அடியார்கள் எல்லோரும் ஆனந்தப் பேரொலி செய்தார்கள். நாயன்மார் இருவரும் பேரின்ப வெள்ளத்தில் அழுந்தி எழுந்து உள்ளே புகுந்து சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகங்கள் பாடி வெளியில் வந்து அப்பமூர்த்தி சம்பந்தரை நோக்கி, "சுவாமியினுடைய திருவருளினாலே என்றைக்கும் இந்தக் கதவு திறக்கவும் மூடவும் இருக்கும்படித் தேவரீர் இது அடைக்கும்படி திருப்பதிகம் பாடியருளும்!" என்றார்.

திருஞானசம்பந்த மூர்த்தி திருப்பதிகம் பாடின மாத்திரத்தில் கதவு அடைக்கப்பட்டது. அது கண்டு நாயன்மார் இருவரும் திருவருளை வியந்து களிப்புற்று வணங்கினார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி தாம் எடுத்த திருப்பதிகத்தை முடித்தருளினார்கள். அன்று முதல் அந்தக் கதவு திறத்தலும் மூடலுமாகிய வழக்கம் என்றைக்கும் உண்டாயிற்று.

அதைக் கண்ட அடியார்கள் முதலான அனைவரும் ஆச்சரியம் கொண்டு மயிர்க்கூச்செரிய கண்ணீர் சொரிய நாயன்மார் பாதங்களில் விழுந்து வணங்கினார்கள்.

பின்பு நாயன்மார் இருவரும் திருமடத்தை அடைந்தபின்பு அப்பர் பரமசிவன் ஆதியிலே அருளிச்செய்த முதல் நூலாகிய வேதங்களின் தாத்பரியங்களை அமைத்து தமிழ்வேதம் செய்தருளிய சுத்த சாத்திர குண்யராகிய திருஞாந சம்பந்த மூர்த்தி சுவாமிகள் தாமே அக்கடவுளைப் போல அருள் செய்ய வல்லவர். அவர் தவிர என் போலும்

அடியார்களுக்கு இடை ஈடு பெரிதாகும். அந்த வேதங்களிலே திருக்காப்பு செய்த கதவு என்பாடலினால் அரிதில் திறக்கவும் அவர் பாடலினால் எளிதில் மூடவும் இதனால் அல்லவோ? என்று நினைத்து அருந்துயில் கொண்டார்.

அப்போது பரமசிவன் அவரிடத்திலே போய், "நாம் வாய்மூரிலே இருப்போம். அவ்விடத்திற்குத் தொடர்ந்து வா," என்று அருளிச் செய்து போக, அப்பமூர்த்தி விழித்தெழுந்து அவருக்குப்பின் தொடர்ந்து விரைந்து சென்றார். வெகுநேரம் சென்றும் அவர் சமீபத்தை அடையவில்லை.

சுவாமி சமீபத்திலே காட்சி கொடுப்பவர் போல ஒரு கோயிலை எதிரே காண்பித்து அதனுள்ளே புகுந்தார். அப்பமூர்த்தி அவ்விடத்திலே விரைந்து தொடர்ந்தார். சம்பந்தரும் அப்பமூர்த்தி திருவாய்மூருக்குப் போகிறார் என்று கேள்வியுற்று வந்து சேர்ந்தார். அப்போது பரமசிவன் பார்வதியாரோடு ஆடல் காட்ட சம்பந்தர் தரிசித்துப் பதிகம் பாடியருளிப் பின்பு அப்பமூர்த்தியோடும் திருவாய்மூருக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்து சிலநாளான பின் வேதாரணியத்துக்குத் திரும்பி வந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு திருப்பதிகம் பாடியிருந்தார்.

**சமணரைக் கழுவில் ஏற்றல்**

பாண்டிய நாட்டிலே பாண்டிய மன்னன் தான் பூர்வ பிறவியில் செய்த தீவினையினாலே சமணர்களுடைய போதனையை நிச்சயம் என நினைத்துச் சத்தியமார்க்கமாகிய சைவ சமயத்தை விட்டு அசத்திய மார்க்கமாகிய ஆறுகத மதத்தில் பிரவேசித்தான். மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி என்னும் பழமொழிப் படிக்கும் அரசன் அவ்வாறாயின மையால் குடிகளும் அவ்வாறாயினர்.

அந்தப் பாண்டிய நாடெங்கும் சமண மதத்தவரே பரவினார்கள். இப்படிப் பாண்டி நாடெங்கும் வைதிக மார்க்கமும் சைவ மார்க்கமும் குறைந்து சமண சமயமே

நிறைந்து விருத்தியாயிருந்தும் பாண்டியனுடைய மனைவியாகிய மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனாரும் ஆகிய இருவர் மட்டும் பாண்டியனுக்குத் தெரியாமல் மறைமுகமாகச் சைவர்களாகவே இருந்தார்கள்.

இப்படி இருக்கும் நாளிலே பாண்டியன் மனைவியும் மந்திரியும் உலகமெலாம் உய்யும் பொருட்டு திருவவதாரம் செய்தருளிய சமயத் தலைவராகிய திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய மகிமையையும் அவர் வேதாரண்யத்தில் வசித்துக் கொண்டிருப்பதையும் கேள்விப்பட்டு அந்தக் கணமே அளவில்லாத மகிழ்ச்சியைக் கொண்டு சிலபரிசனங்களைத் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் இருக்கின்ற இடத்துக்குப் போகும் பொருட்டு அனுப்பினார்கள்.

அந்தப் பரிசனங்கள் பாண்டிய நாட்டைக் கடந்து வேதாரணியத்தை அடைந்து தாங்கள் வந்த செய்தியை வாயில் காவலாளருக்குத் தெரிவித்தார்கள்.

அவர்கள் உள்ளே போய் நாயனாரை வணங்கி நின்று, "சுவாமி! பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரியாகிய குலச்சிறையாரும் அனுப்பி வைத்த சிலர் வந்து தேவரீர் திருவடித் தாமரைகளை வணங்குதற்கு நிற்கின்றார்கள்," என்று விண்ணப்பம் செய்தார்கள்.

பிள்ளையார் திருவருள் சுரந்து, "அவர்களை இங்கே அழையுங்கள்!," என்று அருளிச் செய்ய, வாயில் காவலர்கள் அவர்களை உள்ளே அழைத்தார்கள். அவர்கள் உள்ளே புகுந்து பிள்ளையார் பாதங்களில் விழுந்து வணங்கி எழுந்து நின்றார்கள். பிள்ளையார் அவர்களைப் பார்த்து, "மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் நலமா யிருக்கிறார்களா?" என்று கேட்க, அவர்கள், நலமாயிருக்கிறார்கள், என்று சொல்லிப் பின்பு, உலகமெலாம் பிழைத்துக் கடைத்தேறும்படித் திருவவதாரம் செய்தருளிய சைவ சமயாசாரியமூர்த்தியே! பாண்டியனும்,

பாண்டிய நாட்டாரும் சமணர்களுடைய துர்ப்போதனையினாலே சைவ சமயத்தை விட்டு ஆருகத சமயத்திலே பிரவேசித்தார்கள். மங்கையர்க்கரசியாரும், குலச்சிறை நாயனாரும் அதனால் மிகக் கவலை கொண்டிருந்தார்கள். பின்பு தேவரீருடைய மகிமையைக் கேள்விப்பட்டு அந்த சமாசாரத்தைத் தேவரீருக்குத் தெரிவிக்கும் பொருட்டு அடியார்களாகிய எங்களை அனுப்பினார்கள்," என்று கூறி வணங்கினார்கள்.

அங்கிருந்த சிவனடியார்களெல்லாம் அதைக் கேட்டு பிள்ளையாரை வணங்கி எழுந்து நின்று "சுவாமி! தேவரீர் பாண்டிய நாட்டுக்கு எழுந்தருளி எங்கள் கடவுளாகிய பரமசிவனுடைய திருவடிகளை அடையாத சமணர்களை வாதிலே வென்று வேதமாக மோக்ஷமாகிய சைவசமயத்தை நிலைநிறுத்திப் பாண்டியனை சைவசமயத்தை அடைந்து பிழைக்கும் பொருட்டுத் திருவுளங்கொண்டு எழுந்தருள வேண்டும்" என்றார்கள்.

பிள்ளையார் அவர்களுக்கு அருள்புரிந்து அப்பமூர்த்தியை இட்டுக் கொண்டு கோயிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து குலச்சிறையாரும் பாண்டிமாதேவியும் சொல்லியதைச் சுவாமியிடம் சொல்லி பாண்டிய நாட்டுக்கு எழுந்தருள எத்தனித்தார். அப்போது அப்பமூர்த்தி பிள்ளையாரைப் பார்த்து, தேவரீர்! சிறுபிள்ளையாக இருக்கின்றீர், அந்தச் சமணர்களுடைய வஞ்சனைக்கோ, ஓர் அளவில்லை. ஆதலால் "தேவரீர் அவ்விடத்திற்குச் செல்லுதல் கூடாது" என்று சொல்ல பிள்ளையார், பரமசிவன் நம்முடைய மனத்தையே கோயிலாகக் கொண்டு வீற்றிருப்பதால் நமக்குத் தீங்கு வராது, என்று சொல்லிப் பரமசிவனுடைய திருவடிகளைத் துதித்துக் கோளறு பதிகம் பாடினார்.

அந்தத் திருப்பதிகத்தைக் கேட்டுச் சம்மதிப்பட்டுத்தானும் அவரோடு கூடப் போகும்படி

எழுந்தருளினார். அப்போது பிள்ளையார் அப்பரைப் பார்த்து, "நீர் இந்தச் சோழ மண்டலத்திலேயே இருந்தருளும், என்று சொல்லிக் கைகுவித்து வணங்கித் தடுக்க அப்பமூர்த்தியும் வணங்கி அதற்கு அரை மனத்துடன் சம்மதிப்பட்டார். பின்பு பிள்ளையார் கோயிலுக்குப் போய் வேதாரணியேச்சுவரரை வணங்கிப் பாடித் துதித்து உத்தரவு பெற்றுக்கொண்டு புறப்பட்டு அப்பமூர்த்தி தடுக்காத வண்ணம் அவரை வணங்கி விடை கொடுத்து நீங்கி முத்துப் பல்லக்கில் ஏறி வேதாரணியத்தை நீங்கி அகத்தியான்பள்ளி, கோடிக் குழகர்கோயில், கடிக்குளம், இடும்பாவனம், உசாத்தானம், கொடுங்குன்றம் முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு மதுரைக்குப் போகப் புறப்பட்டார். அதுநிற்க,

எட்டுமலைகளிலும் வசிக்கின்ற சமணர்கள் எல்லாரும் கெட்ட சகுனங்களும் தீக்கனவுகளும் கண்டு மதுரையிலே வந்து ஒன்றாகக் கூடித் தாம் கண்ட கனவுகளை ஒருவருக்கொருவர் சொல்லி, பாண்டிய மன்னனுக்குத் தெரிவித்துத் தங்களுக்குத் திடமென நினைத்து உணவும் உண்ணாமல் கவலை கொண்டிருந்தார்கள்.

சைவர்களாகிய பாண்டி மாதேவியாரும் குலச்சிறை நாயனாரும் நல்ல சகுனங்களையும் நல்ல கனவுகளையும் கண்டு அதிக மகிழ்ச்சியைக் கொண்டு சமண சமயம் குறைந்து சைவ சமயம் விருத்தியடைவது உறுதி என நினைத்து மகிழ்ந்திருந்தார்கள்.

இப்படியிருக்கும்போது, திருவவதாரம் செய்தருளிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் எழுந்தருளி வருகிறார், என்று சிலர் அவர்களுக்குப் போய்ச் சொன்னார்கள். மங்கையர்க்கரசியார் அதைக் கேட்டு அந்த வார்த்தையைச் சொல்லியவர்களுக்கு அளவிறந்த திரவியங்களைக் கொடுத்துத் தம்மை வணங்கிநின்ற குலச்சிறையாரைப் பார்த்து, "எங்கள் தம்பிரானாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளை எதிர்கொள்ளும்," என்றார்.

குலச்சிறையார் அதைக்கேட்டு, பாண்டிமாதேவியாரை வணங்கி மதுரைக்குப் புறத்திலே போய்ப் பிள்ளையாரை எதிர் கொள்ளுதற்குப் போனார். தம்முடைய மக்கள் சூழ ஆலயத்தில் சென்று சொக்கநாத சுவாமியை வணங்கிப் பிள்ளையாருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டு நின்றார். அப்போது திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தோல்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி என்கிற நால்வகைக் கருவிகள் முழங்க அளவில்லாத அந்தணர்கள் உதாத்தம் அநுதாத்தம் சுவரிதம் ப்ரசயம் என்கிற நான்குவித சுரத்துடனே வேதமுழக்கம் செய்ய, அடியார்கள் அர! அர! என்கிற ஒலி முழக்கத்தினாலே எட்டு திக்குகளும் செவிடு பட செந்தமிழ் மாருதமாகிய தென்றற் காற்று எதிர் கொண்டு எங்கும் பரவ திருநீறு பூசிய திருமேனியையுடைய திருக்கூட்டம் புகழொளி கூட்டச் "சமணசமயம் தாழ சைவ சமயம் தழைத்தோங்க முத்துச் சின்னங்களெல்லாம் பரசமய கோளரி வந்தார்! பரசமய கோளரி வந்தார்!" என்று பணி மாற உரோமம் சிலிர்க்கக் கண்களிலே ஆனந்தக் கண்ணீர் சொரிய பிள்ளையார் மகிமைகளை வந்திதர்களும் அடியார்களும் பாடியாடச் சமணர்களெல்லாம் ஓட்டம் பிடிக்க அத்புத சின்மய திருவருள் வடிவாகிய முத்துப்பல்லக்கின் மேலே முத்துக்குடை நிழற்ற திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் எழுந்தருளி வந்தார்.

இப்படி வரும்போது முத்துச்சின்னம் ஊதுகின்ற ஒலியானது குலச்சிறை நாயனாருடைய திருச்செவிகளிலே திவ்வியாமிர்தம் போலப் புகுந்தது. உடனே அந்த நாயனார் பூமியிலே விழுந்து வணங்கி அளத்தற்கரிய பெருங்களிப்பினை உடையவராகி எழுந்து இரண்டு கைகளையும் சிரசின் மேல் குவித்து உரோமம் சிலிர்க்க எதிரே கடுகி நடந்து திருஞானசம்பந்த மூர்த்தியோடு வருகிற அடியார் கூட்டத்தை நெடுந்தூரத்தில் கண்டு வணங்கி அவர் சமீபத்தை அடைந்து ஆனந்தப் பரவசமாகி அடியற்ற மரம் போல பூமியில் விழுந்திருந்தார்.

அப்போது எதிரே வந்த அடியார் கூட்டம் அவர் எழுந்திருக்காமல் இருப்பதைப் பார்த்துத் திரும்பிப் போய் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளை அடைந்து வணங்கி வாய் பொத்தி நின்று, "சுவாமி பாண்டியனுடைய மந்திரியாகிய குலச்சிறையார் தாங்கள் போகும் மார்க்கத்தின் எதிரில் வந்து விழுந்து வணங்கிக் கொண்டிருக்கின்றார்," என்று விண்ணப்பம் செய்தார்கள். சர்வசீவ தயாநிதியாகிய திருஞானம்பந்த மூர்த்தி சுவாமிகள் அதைக் கேட்டு, முத்துப் பல்லக்கை விட்டிறங்கிச் சீக்கிரமாய்ச் சென்று தம்முடைய திருக்கரங்களாலே அவரை எடுக்க அவர் திருமுகமண்டலம் பொழியா நின்ற பெருங்கருணையில் முழுகிச் சரீரம் உரோமஞ்சிதம் கொண்டு எழுந்து கைகளைச் சிரசின் மேல் குவித்து நின்றார். பிள்ளையார் அவர் பால் அருட்பார்வையருளி "அன்பரே! பாண்டிமாதேவியாருக்கும் உமக்கும் நமது கடவுளாகிய பரமசிவனது திருவருள் பெருகும், நன்மையே சம்பவிக்கும்" என்று சொல்லியருள குலச்சிறை நாயனார் அந்த மதுரவாசகத்தைக் கேட்டு வணங்கி நின்று "அடியேன் செய்த தவப்பயனே அருட்குன்றே! சிவஞான தீபமே! திருஅவதாரமே! அடியேம் பூதகாலத்திலே பழுதடையாத் திறமும் பௌஷ்யகாலத்திலே வரும் சிறப்பும் இந்த வர்த்தமான காலத்திலே தேவரீர் இந்நாட்டில் எழுந்தருளினதாலே பெற்ற பேறாகும். அதனால் அடியேம் எக்காலத்திலும் திருவருளுடையோம். அஃதன்றியும் பொய்ச் சமயமாகிய சமண சமயத்தில் அமிழ்ந்திய பாண்டியன் திருநீறு தரிக்கும்படியான மேன்மை பெற்றோம். பாண்டிமா தேவியார் தேவரீர் இங்கே எழுந்தருளுதலைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி கொண்டு, எங்கள் பெருவாழ்வு எழுந்தருளி வருகிறது, நீர் போய் எதிர்கொண்டுபணிந்து அழைப்பித்துக் கொண்டு வாரும், என்று என்னை அனுப்பினார்," என்று விண்ணப்பம் செய்து மிக்க களிப்பினாலே மீளவும் பணிந்து தோத்திரம் பண்ணினார்.

பிள்ளையார் குலச்சிறை நாயனாருக்கு அருள்மொழி கூறியருளும்போது மதுராபுரி தோன்ற, பிள்ளையார்

அடியாரான குலச்சிறையாரை நோக்கி, "எங்கள் பரமசிவன் வசிக்கின்ற திருவாலவாய் எந்தப் பக்கத்தில் இருக்கின்றது," என்று கேட்டார். அந்த அடியவர் பிள்ளையாருடைய திருவடியை வணங்கித் திருமுன்னே நின்று, "இதோ கோபுரம் தோன்றுகின்றதே இதுதான் திருவாலவாய்!" என்று காண்பித்தார்.

**பாண்டிமாதேவியார் வரவேற்றார்**

பிள்ளையார் அதுகண்டு கைகுவித்து மிகுந்த அன்போடு பூமியின் மேலே விழுந்து வணங்கித் திருப்பதிகம் பாடிப் பின்பு அடியார்களோடும் மதுரையை அடைந்து கோபுரத்தை வணங்கி உள்ளே புகுந்து வலஞ்செய்து மந்திரிமாரோடு சந்நிதானத்தை அடைந்து அட்டாங்க பஞ்சாங்கமாக அநேகாவர்த்தி வணங்கிச் சரீரம் உரோமபுளகாங்கிதம் கொள்ளக் கண்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிய நின்று திருப்பதிகம் பாடினார்.

நீலமா மிடற்றால வாயிலான்
பாலதாயினார் ஞாலமாள்வரே

பின்பு திருமுன்றிலை அடைந்தார். முன்னே சுவாமி தரிசனம் செய்யும் பொருட்டுப் பிள்ளையார் உள் அணையும்போது எதிர் சொல்லாமல் ஒரு பக்கத்திலே ஒதுங்கி நின்ற பாண்டிமாதேவியார் முன்னே வர, குலச்சிறையார் பிள்ளையாரை வணங்கி நின்று, சுவாமி இங்கே சிரசின் மேல் கை குவித்துக் கொண்டு வருகின்றவரே பாண்டி மாதேவியார் என்று சொல்ல, பிள்ளையார் பெருங்களிப்போடும் விரைந்து எதிரே சென்றார்.

பாண்டிமாதேவியார் பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கினார். பிள்ளையார் திருவருள் சுரந்து அவரைத் தன் திருக்கரத்தினால் எடுத்தருளினார். பாண்டிமாதேவியார் தம்முடைய மனக்கருத்து முற்றியது. என்று நினைத்துக் கண்ணீர் சொரிய வாய் குழறி, "அடியேனும் அடியேனுடைய பதியும் செய்த தவம் என்?" என்று வணங்கினார்.

பிள்ளையார், "பரசமயங்களில் இருந்தும் சைவ நெறியிலே வாழும் அன்பரே! உம்மைக் காணுதற்கு வந்தோம்!" என்று சொல்லி அவரை விடை கொடுத்து அனுப்பிவிட்டு அடியார்கள் சூழ எழுந்தருளினார். அப்போது திருவாலவாயிலே திருத்தொண்டு செய்து கொண்டிருக்கின்ற அடியார்களெல்லாரும் வந்து பிள்ளையாரை வணங்கி, "ஞானாதித்தியராகிய சுவாமி! தேவரீர் இங்கே எழுந்தருளி வருவதற்கு அடியேங்கள் அளவிறந்த தவங்களைச் செய்தோம்! என்றார்கள். பிள்ளையார் அவர்களுக்கு அருள் செய்து புறத்தணைந்து பரிசனங்களோடும் குலச்சிறையார் காட்டிய திருமடத்திலே வீற்றிருந்தருளினார்.

**சமணர்கள் கலக்கம்**

குலச்சிறையார் பாண்டிமாதேவியாருடைய கட்டளைப்படி பிள்ளையாருக்கும் கூட வந்த பரிசனங்களுக்கும் விருந்து செய்து வைத்தார். பகலிலே பிள்ளையார் அடியார்களோடு எழுந்தருளி வரும்போது கண்ட சமணர்களெல்லாரும் மனம் கலங்கிச் சூரியன் மறைந்த பின்பு ஒன்றாய்க் கூடினார்கள். பிள்ளையார் வீற்றிருக்கின்ற திருமடத்திலே திருத்தொண்டர்கள் ஓதுகின்ற திருப்பதிக இசையின் பேரொலி, சமணர்கள் காதிலே பட அவர்கள் அது பொறாமல், "பாண்டிய மன்னனிடத்திலே போய்ச் சொல்லுவோம்," என்று புறப்பட்டுப் பாண்டியனை அடைந்தார்கள்.

**கண்டுமுட்டு கேட்டு முட்டு**

பாண்டியன் அவர்களுடைய மனத்துயரத்தைக் கண்டு, "நீங்கள் இங்ஙனம் திரண்டு வந்த காரணம் என்ன?" என்று பரிந்து வினாவ, சமணர்கள், "மன்னவா! உன்னுடைய மதுரையிலே சைவ அந்தணர்கள் வந்ததால் இன்றைக்கு நாங்கள் கண்டு முட்டு, கேட்டு முட்டு" என்றார்கள். அரசன் நானும் கேட்டு முட்டு என்று கோபித்து, "அந்தச் சிவனடியார்கள் இந்த நகரத்திற்கு வரவேண்டிய காரணம் என்ன? அவர்கள் யார்?" என்றார்.

அதற்குச் சமணர்கள் "சோழநாட்டிலே சீர்காழியிலிருக்கின்ற ஓர் அந்தணப் பையன், சிவனிடத்திலே ஞானம் பெற்றவனென்று பெயர் வைத்துக்கொண்டு முத்துப் பல்லக்கின் மேல் ஏறிக்கொண்டு எங்களை வாதில் வெல்லும் பொருட்டு அடியார்களோடு வந்திருக்கின்றான்," என்றார்கள்.

பாண்டியன் மிகவும் கோபித்து, "இதற்கு நாம் என்ன செய்வோம்?" என்று சொல்ல, சமணர்கள் "நாங்கள் அந்தணப் பிள்ளை இருக்கின்ற மடத்திலே மந்திர வித்தையினாலே அக்கினி பற்றச் செய்கிறோம். அதனால் அவன் இந்த நகரத்திலே இராமல் போய் விடுவான், என்றார்கள்.

பாண்டியன் அதைக் கேட்டு, "நீங்கள் அதி சீக்கிரத்தில் போய் அப்படியே செய்யுங்கள்," என்று சொல்லி அவர்களை அனுப்பிவிட்டு, தான் மனக்கவலையோடு சயனத்தில் போயிருந்தான். பின்பு பாண்டிமாதேவியாரும் சயனத்தில் புகுந்தார்.

பாண்டியன் ஒன்றும் பேசாதிருக்க மாதேவியார், "ஏன் என் பிராணநாதரே! நீர் உள்ள மகிழ்ச்சி இல்லாமல் முகம் புலர்ந்து இருக்கின்றீர்! உம்முடைய மனத்திலே வந்த கவலை என்ன? சொல்லியருளும்" என்றார். பாண்டியன் தேவியாரைப் பார்த்து, "என் பிராணநாயகியே! சோழ நாட்டிலே சீர்காழியில் இருக்கின்ற ஓர் அந்தணப் பாலகன் சிவனுடைய அருளைப் பெற்று எங்கள் ஆசிரியர்களை வாதிலே வெல்லும் பொருட்டு அடியார்களோடு இங்கே வந்திருக்கின்றான். நம் ஆசிரியர்கள் அவர்களைக் கண்டுமுட்டு நான் கேட்டுமுட்டு, இதுவே என் கவலைக்குரிய காரணம்," என்றார்.

மங்கையர்க்கரசியார், "என் பிராண நாயகரே! நீர் கோபிக்க வேண்டியதில்லை. இரண்டு பக்கத்தாரும் வாது செய்தால் வென்றவர் பக்கம் சேர்ந்து அவர் அனுசரிக்கின்ற சமயத்தை நாம் அனுசரித்தால் உறுதியாகும்," என்று சொல்லிப் பெருமகிழ்ச்சியோடு தம்முடைய இடத்தில் போயிருந்தார்.

அப்போது குலச்சிறையார் அங்கே வர அவருடன் பாண்டி மாதேவியார் இந்தச் சமாசாரத்தைச் சொன்னார். குலச்சிறையார் கை குவித்து நின்று, "இன்றைக்குத் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் இங்கே எழுந்தருளி வரப்பெற்றோம். இனிச் சமணர்கள் செய்யும் வஞ்சனையை அறியேன்," என்றார். பாண்டி மாதேவியாரும் பயந்து "இச்சமணர்கள் தீத்தொழிலைச் செய்ய வல்லவர்கள், என்ன செய்வோம்?" என்று நினைந்து, "திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளுக்கு ஏதாவது இடையூறு வந்தால் நாம் உயிர் துறந்து விடுவோம்," என்றார்.

**சமணர் இட்டத் தீ**

சமணர்கள், பிள்ளையார் இருக்கின்ற திருமடத்திலே அக்கினி பற்றும்படி மந்திரங்களை ஓதினார்கள். திருஐந்தெழுத்து ஓதப்பட்ட மகான்கள் இருக்கப்பட்ட மடத்தில் தீ பற்றுமா? பற்றாது. ஆகையால் பற்றவில்லை. இதைச் சமணர்கள் கண்டு மனந்தளர்ந்து, "பாண்டியன் இதை அறிந்தால் நம்மைச் சிறிதும் மதியான், நம்முடைய விருத்தியையும் ஒழித்துவிடுவான்," என்று நினைந்து பயந்து அக்கினியைக் கொண்டு போய்த் திருமடத்தின் பக்கத்திலே வைத்துக் கொளுத்தினார்கள். அப்போது அச்செயல் வெளிப்படையாகத் தெரிந்துவிட்டது. பரிசனத்தவர்கள் மறுகி பதைப்புடனே தீயைச்சிதைத்து நீக்கி அது செய்தவர்கள் சமணர் என்று அறிந்து, பிள்ளையாரை வணங்கி நின்று சமணர்கள் செய்த தீங்கை விண்ணப்பம் செய்தார்கள்.

உடனே பிள்ளையார், "சிவனடியார்கள் துயில்கின்ற இந்த திருமடத்திலே பாவிகள் பழுது செய்யலாமோ?" என்று பரிந்தருளி, "அவர்கள் என் பொருட்டுச் செய்த தீங்கானாலும் சிவனடியார்களுக்கு இப்படி வருமோ?" என்று பின்னும் அச்சமுற்று மகாகோபம் கொண்டு இந்தத் தீங்கு அரசனால் வந்ததென்று திருவுளத்தில் நினைத்துத் திருப்பதிகம் பாடினார்.

பாடின உடனே அந்த அக்கினியின் வெப்பமானது போய்ப் பாண்டியனை அடைந்தது. சூரியனும் உதயமாயினான்

பின்பு பாண்டிமாதேவியார் இரவிலே சமணர்கள் செய்த தீங்கைக் குலச்சிறையாரிடம் கேள்வியுற்றுத் திருஞான சம்பந்தப் பிள்ளையாரை இந்த நாட்டிற்கு வரவழைத்த நாங்கள் இறப்பதே நிச்சயம் என்று மயங்கி அச்சுற்றுப் பதைத்தார்கள். பின்பு திருமடத்திலே அக்கினியினால் குற்றம் சம்பவிக்கவில்லை என்று தெளிந்து, இந்தத் தீங்கு செய்தவர்கள் கதி எப்படி முடியுமோ? என்று நினைக்கும் போது அரசனுக்கு வெப்பநோய் வந்ததென்று கஞ்சுகிகள் வந்து சொல்ல மாதேவியாரும் குலச்சிறையாரும் பதை பதைத்துச் சீக்கிரமாய்ப் பாண்டியனிடத்தில் சென்றார்கள்.

பாண்டியன் வெப்பு நோயினாலே மிகவும் துன்புற்று மருத்துவர்கள் பல்வேறு மருத்துவங்கள் செய்தும் அந்த நோய் கொஞ்சமும் நீங்காமல் அதிகப்பட, பாண்டியன் உணர்வு இழந்து பேச்சில்லாமல் அசத்தம் அடைந்து கிடந்தான்.

சமணர்கள் அதைக் கேள்விப்பட்டுப் பெருமூச்சு விட்டு ஓடி வந்து அந்த நோயின் மூலம் இன்னதென்று அறியாமல் தங்கள் மந்திரங்களைச் சொல்லி மயிற்பீலியினாலே தடவ பீலிகள் பிரம்பினோடு தீய்ந்து விழுந்தன. பின்பு கமண்டலத்திலுள்ள நீரை, "அருகரே காவாய்! அருகரே காவாய்!" என்று பாண்டியன் மேலே தெளிக்க, அந்த நீர் அதிகமாகச் சுடர் விட்டெரிக்கின்ற அக்கினியிலே விட்ட நெய்போலாகி அதிக வெப்பத்தைக் கொடுத்தது. அதனால் பாண்டியன் மிகவும் வருத்தப்பட்டு சமணர்களைப் பார்த்து, "நீங்கள் ஒருவரும் இங்கே இராமல் போய்விடுங்கள்," என்று சொல்லி அறிவு சோர்ந்தான்.

பாண்டிமாதேவியார் பயத்தை அடைந்து குலச்சிறை நாயனாரைப் பார்த்து, "இரவு திருஞான சம்பந்த

சுவாமிகளுக்குச் சமணர்கள் செய்த தீங்கு இப்படி முடிந்ததோ?" என்று சொல்லக் குலச்சிறையார் வணங்கி நின்று, "அசுரர்களுடைய முப்புரங்களையும் எரித்த பரம சிவனுடைய அடியாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமி களுக்கு இவர்கள் செய்த தீங்கே அரசனுக்குப் பலித்தது, இவர் கள் அதைத் தீர்க்கப் போனால் முதிர்வேயாகும்" என்றார்.

மாதேவியாரும் மந்திரியாரும் பாண்டியனை வணங்கி நின்று, "திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளுக்குச் சமணர்கள் செய்த தீங்கினாலேயே உமக்கு இந்த வெப்பு நோய் வந்தது. ஆதலால் இவர்கள் செய்யும் மாயம் இந்த வெப்பு நோயை வளர்ப்பதே அல்லாமல் தீர்ப்பதில்லை. அந்தத் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருவுளமிரங்கி மன்னித்து அருளுவாராயின் இந்த வெப்பு நோய் மாத்திரமா நீங்கும்? எவராலும் நீக்குதற்கரிய பிறவி நோயும் நீங்கி விடும், இது சத்தியம்," என்றார்கள்.

இந்தச் செய்தி பாண்டியன் காதிலே நுழைந்தவுடனே சோகம் நீங்கி "இந்தச் சமணர்கள் செய்யும் செய்கைகள் எல்லாம் இந்த நோய் அதிகரிப்பதற்கே ஏதுவாகும்," எனப் பாண்டியன் நினைத்து, அந்த இரண்டு பேரையும் பார்த்து, "அந்தத் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளை இங்கே அழையுங்கள்! என்னுடைய நோயை எவர் நீக்குவரோ அவர் பக்கம் சேர்வேன்," என்றான்.

மங்கையர்க்கரசியார் அம்மொழியைக் கேட்டுப் பெரும்களிப்பை அடைந்து, சிவிகையிலேறிப் பெண்கள் புடைசூழக் குலச்சிறை நாயனார் குதிரையில் ஏறிக்கொண்டு முன்னே செல்லத் தான் பின்னே போய்த் திருமடத்தை அடைந்தார்.

குலச்சிறை நாயனார் குதிரையை விட்டிறங்கி, "பரிசனங்களைப் பார்த்து, அடியவர்களாகிய நாங்கள் வந்து நிற்றலை சுவாமிக்கு விண்ணப்பம் செய்யுங்கள்" என்றார்.

**பிள்ளையாரை வணங்கினர்**

அவர்கள் உள்ளே புகுந்து திருஞானசம்பந்த மூர்த்திகளை வணங்கி நின்று, "சுவாமி, பாண்டிமா தேவியாருடன் குலச்சிறை நாயனாரும் வாயிலில் வந்து நிற்கின்றார்," என்று விண்ணப்பம் செய்தார்கள். பிள்ளையார், "அவர்களை இங்கே அழையுங்கள்," என்று அருளிச் செய்ய பரிசனங்கள் போய் அழைக்க, அவர்கள் இருவரும் உள்ளே பிரவேசித்து திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளைக் கண்டு அவலக் கண்ணீர் வடித்து, அவர் திருவடிகளின் கீழே விழுந்தார்கள். அப்போது அவர்களுக்கு உரை குழற உடல் நடுங்க ஒன்றும் அறியாதவராய் நிலத்திலே புரண்டு அயர்ந்து திருவடிகளைப் பற்றிக்கொண்டு கவலைக் கடலில் அழுந்திக் கிடந்தார்கள். பிள்ளையார் அதுகண்டு, அந்தஇரண்டு பேரையும் திருக்கரத்தினாலே, எடுத்தருளித் தேற்றவும், அவர்கள் தெளியாததினாலே அவர்களைப் பார்த்து, "அன்பர்களே! உங்களிடத்திலே ஏதாவது தீங்கு உண்டா?" என்று கேட்டருளினார்.

அதற்கு அவர்கள், "அடியவர்களாகிய நாங்கள், சமணர்கள், முன்செய்த வஞ்சனைக்கு மிகவும் பயப்பட்டு வருத்தமடைந்தோம்! அது திருமேனிக்கு அடாது என்று உணர்ந்து அதைத் தீர்த்தோம். அவர்கள் செய்த தீத்தொழில் வெப்பு நோயாகி அரசனை அடைந்து மிகவருத்துகின்றது. ஆதலால் தேவரீர் அந்த அரசன் முன், அவர்களை வென்றால் அரசனுயிரும் எங்களுயிரும் பிழைக்கும்," என்று விண்ணப்பம் செய்தார்கள். கருணாகரராகிய பிள்ளையார் அதைக் கேட்டு, "நீங்கள் சிறிதும் அஞ்ச வேண்டாம், நாம் அவர்களை இன்றைக்கு நீங்களும் மற்றவர்களும் கண்டு மகிழும்படி வாதம் செய்து வென்று பாண்டியனுக்குத் திருநீறு அணிவிப்போம்," என்று சொல்லி அருளினார்.

அவ்விருவரும் அதைக்கேட்டு, "நீங்கள் இவ்விடத்துக்கு வர என்ன பேறு பெற்றோம்," என்று சொல்லி வணங்கினார்கள். பிள்ளையார் வாது செய்தற்கு எண்ணி எழுந்து திருமடத்தை விட்டு நீங்கித் திருக்கூட்டம் சூழ கோயிலில் போய் திருப்பதிகம் பாடி, சுவாமியை வணங்கித் திருவருள் பெற்று திருவுளம் மகிழ்ந்து விடை பெற்றுக்கொண்டு கோபுர வாயிற்படியைக் கடந்து முத்துப் பல்லக்கின் மேல் ஏறி முத்துக்குடை நிழற்ற அடியார்கள் சூழ நாலாவித வாத்தியங்கள் தொனிக்க முத்துச் சின்னங்கள் ஊத மங்கையர்க்கரசியார் சிவிகை மேலேறிப் பின்னாகவர குலச்சிறையார் அடியார் கூட்டத்தில் முன்னே செல்ல பாண்டியனுடைய அரண்மனைக்கு எழுந்தருளினார்.

குலச்சிறை நாயனார் சீக்கிரமாய் முன்னே போய் பாண்டியனை அடைந்து, "திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் வருகிறார்," என்று சொல்லப் பாண்டியன் கொஞ்சம் துயரம் நீங்கித் தன் சிம்மாசனத்தின் பக்கத்தில் இரத்தினாசனம் அமைத்துக் குலச்சிறை நாயனாரைப் பின்னும் எதிர் செல்லும் பொருட்டு அனுப்பினார். குலச்சிறை மகிழ்ந்து எதிர்கொள்ளப் போனார்.

**வஞ்சகச் சமணர்**

அரசனுடைய தன்மையைக் கண்டு, "மன்னவரே! நம்முடைய சமயத்தை நிலைநிறுத்தும் நெறியிதுவோ?" என்று சொல்லி, பின்னும் "உம்முடைய தரும நெறியை நீரே காத்தருளல் வேண்டும், ஆயின் நீர் அவரை இங்கே அழைத்தீர், உம்முடைய நோயை அவரும் நாங்களும் ஒருங்கு தீர்க்கும்படிச் சொல்லி, முழுமையும் அவராலே தீர்ந்தாலும் எங்களாலும் தீர்ந்ததாகச் சொல்லும்," என்றார்கள்.

அரசன் அதைக்கேட்டு, சமணர்களைப் பார்த்து, "நீங்கள் இரண்டு பட்சத்தாரும் உங்கள் தெய்வச்சார்பினாலே தீருங்கள்! நான் வஞ்சகம் பேசேன்," என்றான்.

அதைக்கேட்ட சமணர்கள், "என்ன செய்வோம்!" என்று கவலை கொண்டிருந்தார்கள். அப்பொழுது திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள், அரண்மனை வாயிலுள் அணைந்து முத்துப் பல்லக்கை விட்டிறங்கிக் குலச்சிறையார் முன்னே போக பாண்டி மாதேவியாரும் சிவிகையினின்றும் இறங்கிவர உள்ளே எழுந்தருளினார்.

பாண்டியன் பிள்ளையாரைக் கண்டவுடனே அஞ்சலி செய்தவராகி, அவர் சமீபத்தில் வர அவரைப் பார்த்துத் தன் முடிவின் பக்கத்திலிருக்கின்ற இரத்தினாசனத்தைக் காட்ட அவர் அதிலே வீற்றிருந்தருளினார். சமணர்கள் எல்லாரும் அதைப் பார்த்து அச்சம்கொண்டார்கள். பாண்டியன் பிள்ளையாருடைய திருமேனியைத் தரிசித்ததினால் வெப்புநோய் சிறிது நீங்கி, "சுவாமி! தேவரீருடைய ஊர் யாது?" என்று கேட்க, பிள்ளையார் திருப்பதிகத்தினாலே தன் ஊர் பேரைச் சொன்னார்.

பிள்ளையார் இரத்தினாசனத்தில் வீற்றிருந்த பின்பு சமீபத்திலிருந்த சமணர்கள் எல்லாரும் அதிக கோபத்தைக் கொண்டு தங்கள் சமய நூல்களை எடுத்துச் சொல்லிக் குரைத்தார்கள். பிள்ளையார் அதைக்கேட்டு, "உங்கள் சமய சாத்திரத்தில் நிலைத்த தன்மையை முறையாகச் சொல்லுங்கள், என்று சொல்லியருள, சமணர்கள் எல்லாரும் அதைக் கேட்டுத் துள்ளியெழுந்து பதறிக் கதறினார்கள்.

பாண்டிமாதேவியார் அதைக்கண்டு பொறாராகி மனம் நடுங்கிப் பாண்டியனை நோக்கி, "இந்தச் சுவாமிகள் சிறுபாலர், இந்தச் சமணர்களோ கணக்கில்லாதவர், என் பிராண நாயாகரே! எங்கள் சுவாமிகள் உம்முடைய நோயை நீக்குக! பின்பு இந்தச் சமணர்கள் பேச வல்லவர்களானால் பேசுக!" என்றார்.

பாண்டியன் தேவியாரை நோக்கி,“ நீ வருந்தாதே!” என்று சொல்லி, சமணர்களை நோக்கி, “நீங்களும் இந்தச் சிவபக்தரும் என்னுடைய வெப்பு நோயை நீக்குதலினாலே உங்கள் மெய்ம்மையைத் தெரிவியுங்கள்,” என்றான்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாண்டிமா தேவியாரை நோக்கி, “மாதேவியே! என்னை நீர் பாலன் (அறியாதவன்) என்று பயப்படவேண்டாம். திருவாலவாய் அரன் துணை நிற்க நான் சமணர்களுக்கு எளியேன் அல்லேன்,” என்னும் கருத்தினையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார். அரசன் அதைக்கேட்டுப் பிள்ளையாரையும் சமணர்களையும் நோக்கி “என்னுடைய நோயைத் தீர்த்தவர் எவரோ? அவரே வாதில் வென்றவர்,” என்று சொல்ல, சமணர்கள் அரசனைப் பார்த்து, “மன்னவரே! எங்கள் மந்திர பலத்தினாலே உம்முடைய இடப் பாகத்து நோயைத் தீர்க்கிறோம், அவர் வலப் பாகத்து நோயைத் தீர்க்கட்டும்,” என்று சொல்லித் தங்கள் பீலியினாலே அரசனுடைய இடப்பாகத்தைத் தடவினார்கள்.

தடவின மாத்திரத்தில், வெப்பு நோய் மிகுதியாயிற்று. பாண்டியன் அதைப் பொறுக்காமல் பிள்ளையாரைப் பார்த்தான். பிள்ளையார் அரசனுடைய நோக்கத்தைக் கண்டு திருநீற்றுப் பதிகம் பாடி, அரசனது வலப் பாகத்தை திருநீறு கொண்டு தடவ அந்த வலப் பாகத்திலுள்ள வெப்பு நீங்கிப் பனிபோல குளிர்ந்தது.

இடப் பாகத்து வெப்பு நோய் முன்னையிலும் இருமடங்காய்மிகுந்து பொங்கச் சமணர்கள் மனம் நடுக்கமுற்று மயிற்பீலி தீய அந்த வெப்புத் தீ தம்மேலும் தாவச்சரீரமும் குன்றிச்செருக்கழிந்து எழுந்து போய் தூரத்தில் நின்றார்கள்.

பாண்டியன் சமணர்களைப் பார்த்து, "நீங்கள் தோற்றுப் போனீர்கள், என்னைவிட்டு நீங்கிப் போய் விடுங்கள்," என்று சொல்லி, பின்பு பிள்ளையாரைப் பார்த்து, "சுவாமி, இடப் பக்கத்து வெப்பையும் தேவரீரே நீக்கியருளும்," என்று மனத்தினாலே வணங்கிப் பிரார்த்தித்தான். பிள்ளையார் இடப் பாகத்தையும் முன்போல திருநீறு கொண்டு தடவியருள இடப் பாகத்து நோயும் நீங்கிற்று.

பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் அதைக்கண்டு பிள்ளையாருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி, "எங்கள் அரசர் பிறவா மேன்மை பெற்றனர்." என்று மகிழ்ச்சி அடைந்தனர். பாண்டியன் படுக்கையை விட்டு எழுந்து இரண்டு கைகளையும் சிரசின் மேல் ஏறக்குவித்து பொய்யராகிய சமணர்கள் முன், அடியேனுடைய நோயை நீக்கியருளிய திருஞான சம்பந்த சுவாமியுடைய திருவடிகளை அடைந்து "பிழைத்தேன்," என்றார்.

**வெல்லுதல் இயலுமோ?**

சமணர்கள் பிள்ளையாருடைய சொல் வெற்றியை அவர் தமிழ்ப் பதிகத்தினாலே பாண்டியனுடைய வெப்பு நோயை நீக்கியமையால் "தருக்கம் பேசி அவரை வெல்லக்கூடாது. நெருப்பினாலும் நீரினாலும் வெல்லவேண்டும்," என்று தங்களுக்குள்ளே சிந்தித்தார்கள்.

பிள்ளையார் சமணர்களைப் பார்த்து, "இனி உங்கள் சமய சாத்திரத்தின் நிச்சயத்தைப் பேசுங்கள்," என்று அருளிச் செய்ய, சமணர்கள், "நாங்கள் தருக்கம் பேசி வெல்லவேண்டிய தில்லை. இருபட்சத்தும் எங்கள் சமயச் சாத்திரத்தின் உண்மையை உள்ளபடி கண்கூடாகக் காட்டி வெல்லுவோம்," என்று கூறினார்கள்.

அப்போது பாண்டிய மன்னன், "என்னுடைய வெப்பு நோயை நீங்கள் தீர்க்கவில்லையே! உங்களுக்கு என்னவாது?" என்று சொல்ல, சமணர்கள், "மன்னவரே! உங்களுக்கு இரு பக்கத்தாரும் எங்கள் எங்கள் சமயக்கருத்தை ஏட்டிலே எழுதி நெருப்பிலே போடுகிறோம். வேகாமல் இருக்கிற ஏடு யாருடையதோ அவருக்கே வெற்றி," என்றனர்.

பிள்ளையார் அரசன் முன்னே, "அப்படியே செய்வோம்," என்று சம்மதித்தார். பிள்ளையாருடைய ஆணையால் வேலைக்காரராலே அரசன் முன்னே நெருப்பை வளர்க்கச் சொல்லிப் பிள்ளையார் அதன் சமீபத்தில் வந்து பரமசிவனையேமெய்ப்பொருள் என்று தாம் பாடிய தமிழ் வேதத் திருமுறையைத் தோத்திரம் செய்து, எங்கள் பரமசிவனே பரம்பொருள், என்று சொல்லி வணங்கித் திருக்கரத்தினால் எடுத்து சிரசின் மேல் கொண்டு திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ்த்து அத்திருமுறையே தம் திருக்கரத்தினாலே திருநள்ளாற்றுக் கடவுளின் மேல் பதிகம் பாடி எழுதிய ஏட்டைக் கையிலே எடுத்து அனைவரும் பார்க்க நெருப்பிலே போட்டார்.அந்த ஏடு வேகாமல் அப்படியே இருந்தது சமணர்கள் பின்பு தங்களுடைய சாத்திரார்த்தத்தை ஓர் ஏட்டில் எழுதி, இது வேகாமலிருக்குமா என்ற கவலையோடு நடுநடுங்கி நெருப்பிலே போட்டார்கள். அது வெந்துபோனதைக் கண்டு பயமடைந்து மனம் சோர்ந்து நின்றார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் தாம் நெருப்பிலே போட்ட ஏட்டைக் கையினாலே எடுத்தார். அஃது அதிலுள்ள அழுக்குகள் போய்ப் பரிசுத்தமாக இருந்தது. அது கண்டு எல்லாரும் அதிசயமடைந்தார்கள். பிள்ளையார் அந்த ஏட்டைச் சபை முன்னே காட்டித் திருமுறையிலே முன் போலக் கோத்தருளினார்.

பாண்டியன் உள்ளூர ஆச்சரியமடைந்து சமணர்களை நோக்கி, "நீங்கள் போட்ட ஏட்டைக் காட்டுங்கள்," என்றார். சமணர்கள் தாங்கள் போட்ட ஏட்டை எடுக்கும்படி

நெருப்பைச் சேர அந்த நெருப்பு மிகவும் கொழுந்து விட்டெறிந்து அச்சமணர் பக்கமே திரும்பிற்று. அவர்களும் திரும்பி விட்டார்கள். மன்னன் அதைக்கண்டு நீரினாலே அந்த நெருப்பைத் தணித்தான்.

சமணர்கள் அதில் ஏட்டைக் காணாமல் செய்வதொன்றும் அறியாது திகைத்து அந்தச் சாம்பலைக் கையினாலே பிசைந்து தூற்றிப்பார்த்தார்கள். அரசர் அதைக்கண்டு சிரித்து "ஏட்டை இன்னும் அரித்துப் பாருங்கள். பொய் நெறியையே மெய் நெறியாகக் கொண்டு அலைகின்றவர்களே! போமின்! முன், நான் வெப்பமாகிய தீயினின்றும் பிழைக்க, நீங்கள் அப்பொழுது தோற்றீர்கள். நெருப்பில் இடப்பட்ட ஏடு வெந்ததினாலே இப்போதும் தோற்றீர்கள்," என்றார்.

சமணர்கள், "இன்னும் ஒரு தரம் வாது செய்ய வேண்டும், மூன்று தரத்தில் ஒரு தரமாயினும் வெற்றி பெறுவோம்," என்றார்கள். பாண்டியன் "இது என்ன வார்த்தை," என்று மறுக்கப் பிள்ளையார் சமணர்களை நோக்கி, "இனி என்ன வாது செய்வோம்?" என்று கேட்டார். சமணர்கள், "நாம் இருபட்சத்தாரும் சமய சாத்திர உண்மையை ஏட்டில் எழுதி வையையாற்றின் நீரிலே விடுவோம், எவர்தம் ஏடு எதிர்த்துப் போகிறதோ அவர்கள் மெய்யான மதத்தர்," என்று சொன்னார்கள்.

பிள்ளையாரும் "அப்படியே செய்வோம்," என்று அருளினார். அப்போது குலச்சிறை நாயனார் பக்கத்திலே வந்து "இனி செய்யப் போகும் வாதிலே தோற்றவர்களுக்கு என்ன தண்டனை?" என்றார். சமணர்கள் அதைக் கேட்டு அவர் மேல் கோபம் கொண்டு பொறாமை காரணமாகத் தங்கள் வாய் சோர்ந்து, "நாங்கள் இனிச் செய்யப் போகிற வாதிலே தோற்றோமாகில் எங்களை இந்த அரசர் கழுவிலேற்ற வேண்டியது," என்றார்கள்.

அரசர் அதைக் கேட்டு, "நாம் யாவரும் வையையாற்றுக்குப் போவோம்," என்று சொல்ல, திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் இரத்தினாசனத்தை விட்டு இறங்கி முத்துப் பல்லக்கின் மேல் ஏறி வையை ஆற்றுக்குப் போனார். அவர் பின்னே பாண்டியன் குதிரைமேல் ஏறிக்கொண்டு போனார். பின்பு சமணர்கள் கவலையுடனே போனார்கள்.

இப்படிக்குப் போய் வையை ஆற்றின் கரையை அடைந்தவுடனே பாண்டியன், "இரண்டு பட்சத்தாரும் தங்கள் தங்கள் சமய உண்மையை ஏட்டில் எழுதி அதை இந்த ஆற்று நீரிலே போடுங்கள்," என்றான்

**வெற்றி யாருக்கு?**

சமணர்கள் "அஸ்தி நாஸ்தி," என்று ஏட்டில் எழுதி அதை, நீரிலே போட்டார்கள். அது கடலை நோக்கிப் போயிற்று. சமணர்கள் அதை எடுக்கும்படிக் கரைமேலே சீக்கிரமாய் ஓட அந்த ஏடு நீரின் வேகத்தினாலே நூறு விரல்கடைக்கு அப்பால் போயிற்று. சமணர்கள் அதைக்கண்டு கவலையுற்றுத் தங்களுக்கு நாசகாலம் வந்ததென்று பயந்து நடுநடுங்கி அரசனுக்கெதிரே வந்து நின்று சம்பந்தரைப் பார்த்து, "உம்முடைய ஏட்டை இட்டால் அறியலாம்," என்றார்கள்.

பாண்டிய மன்னர் அவர்களை விட்டுச் சம்பந்தருடைய திருக்குறிப்பையுடைய முகத்தைப் பார்க்க, தம்மையடைந்த அன்பர்களுக்கு பிறப்பு, இறப்புகளுக்கு ஏதுவாயிருக்கின்ற மலமாயாகருமங்களை நீக்கியருளுகின்ற தேசிகோத்தமராகிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம் பாடி ஏட்டில் எழுதி வையையாற்று நீரிலே போட்டார். அந்த ஏடு நீரின் மேல் மிதந்து எதிர்ந்து சென்றது. அந்த ஏட்டில் "வேந்தனும் வெல்க!" என்று பாடியருளிய படியால் பாண்டிய மன்னனுடைய கூனும் நிமிர்ந்தது. அந்த ஏடு நீரில் எதிர்ந்து செல்லும் பொழுது தேவர்கள் எல்லாரும் தோத்திரம் செய்து மலர்மாரி பொழிந்தார்கள். பாண்டியர் வியப்படைந்து நின்றார்.

சமணர்கள் எல்லாரும் அஞ்சிப் பதைபதைத்து நின்றார்கள். குலச்சிறை நாயனார் குதிரைமேலேறி அந்த ஏட்டைத் தொடர்ந்து வாயுவேகத்தைப் போலப் போயினார். சம்பந்த மூர்த்தியார் அந்த ஏடு நிற்கும் பொருட்டு திருப்பதிகம் பாடியருள அது நின்றது.

பின்பு குலச்சிறை நாயனார் சிவாலயத்துக்குப் பக்கத்தில் இருக்கின்ற நீரிலே புகுந்து அந்த ஏட்டை எடுத்து சிரசின் மேல் ஒத்திக்கொண்டு மகிழ்ச்சியோடு கரைமேல் ஏறி திருவேடகத்தில் வீற்றிருக்கின்ற கடவுளை வணங்கித் துதித்து பாண்டியர் முன்னே கொண்டு வந்து அனைவருக்கும் காட்ட அடியார்கள் எல்லாரும் அர! அர! சிவ சிவ! என்று சப்தித்தார்கள். பாண்டிய மன்னன் அதைக்கண்டு குலச்சிறையாரைப் பார்த்து, "இந்தச் சமணர்கள் சொல்லியபடியே இவர்களைக் கழுவிலே ஏற்றும்," என்றான்.

**கழுவிலே சமணர்கள்**

திருஞான சம்பந்த சுவாமிகள் அதைக்கேட்டு, அந்தச் சமணர்கள் மேல் பகையில் வாதிட்டிருந்தும் அவர்கள், தாம் இருந்த திருமடத்திலே நெருப்பு வைத்ததினால் அவர்கள் மேல் கோபித்துப் பாண்டியன் சொன்ன சொல்லை விலக்காதிருந்தார்.

பின்பு குலச்சிறை நாயனார் கழுத்தறிகளை வரிசையாக நாட்டி வைத்து அவைகளில் ஏற்ற எண்ணாயிரம் பேரும் கழுவில் ஏறினார்கள். பிள்ளையார் பாண்டிய மன்னனுக்குத் திருநீறு அளிக்க, அவன் திருஞான சம்பந்தருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கி எழுந்து நின்று திருநீற்றை வாங்கிஅணிந்து கொண்டான்.

அப்போது சமண சமயம் பாழ் ஆகி சைவ சமயம் தழைத்தோங்கிற்று. திருஞானசம்பந்த மூர்த்தியுடைய கீர்த்தி எங்கும் பரவிற்று. சம்பந்த மூர்த்தி சுவாமிகள் சொக்க நாயகரைத் தரிசிக்கும்படி முத்துப் பல்லக்கு மேலேறிக் கோயிலுக்குப் போனார். பாண்டியரும் மங்கையர்க்கரசியாரும் அவரை வணக்கம் செய்துகொண்டு பின்னே போனார்கள்.

அடியார் முதலான எல்லாரும் பெருமகிழ்ச்சியடைந்து சம்பந்த மூர்த்தியைத் துதித்துக் கொண்டு போனார்கள். சம்பந்தமூர்த்தி சுவாமிகள் கோயிலைச் சமீபித்து, முத்துச் சிவிகையை விட்டிறங்கி, பாண்டியரும் பாண்டிமா தேவியாரும் மந்திரியாரும் அடியார்களும் மற்றவரும் வணக்கம் செய்து கொண்டு தன்னுடன் வர, கோயிலில் புகுந்து வலம் வந்து சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

பாண்டியர், சொக்கநாத சுவாமியை வணங்கி, நின்று, "திருவாலவாயிலே வீற்றிருக்கின்ற கடவுளே! சமணர்களுடைய மாயையினாலே மயங்கித் தேவரீரை அறியாதிருந்த சிறியேனைப் பிறப்பு, இறப்புத் துன்பங்களை நீக்கி ஆட்கொள்ளும் பொருட்டு திருஞானசம்பந்த சுவாமிகளைத் தந்தருளிய பெருங்கருணையை என்னென்று சொல்லுவேன்?" என்று சொல்லி தோத்திரம் பண்ணினார். பின்னர் சம்பந்தமூர்த்தி சுவாமி, சுவாமியை வணங்கி அருள்பெற்று, அவ்விடத்தை விட்டு நீங்கி திருமடத்தில் வீற்றிருந் தருளினார். பாண்டியரும் அவர் மனைவியாரும் சம்பந்தமூர்த்தியை வணங்கி அனுமதி பெற்றுக்கொண்டு தங்கள் மாளிகைக்குப் போனார்கள்.

சம்பந்த மூர்த்தியார், திருவியமகத்தில் திருநீலகண்டப் பெரும்பாணருக்கு அருளிய திறத்தைத் துதித்து அவரோடும் அளவளாவியிருந்தார். பாண்டியனும் மாதேவியாரும் குலச்சிறையாரும் நாள்தோறும் வந்து பிள்ளையாருடைய

திருவடிகளை வணங்கித் துதித்தும் கோயிலில் போய்ச் சொக்கநாத சுவாமியை வணங்கித் துதித்தும் - இப்படியாக இருக்கும் நாளிலே பிள்ளையாருடைய தகப்பனார், இவ்விடத்தில் வாது நடந்த சங்கதிகளை அறியும் பொருட்டு சீர்காழியை விட்டு மதுரையை அடைந்து கோயிலில் போய்ச் சொக்கநாத சுவாமியை வணங்கிக் கொண்டு சம்பந்த மூர்த்தியிருக்கின்ற திருமடத்தை அடைந்தார்.

**மீண்டும் தலயாத்திரை**

சம்பந்தமூர்த்தி, தன் தகப்பனார் வருவதை அடியார்கள் சொல்லக்கேட்டு, திருவுளம் மகிழ்ந்து எழுந்து எதிர்கொண்டு வணங்கித் தனக்குச் சிவஞானம் அருளிய திருத்தோணி யப்பரை நினைத்து சீர்காழிக் கடவுளின் மேல் திருப்பதிகம் பாடினார்.

பின்பு சிலநாள் அங்கிருந்து பிற திருத்தலங்களை வணங்கும்பொருட்டு, புறப்பட்டு பாண்டியரும் மாதேவியாரும் குலச்சிறையாரும் பிரிய மனம் வராமல் உடன் செல்லப் போய், திருப்பரங்குன்றம், ஆப்பனூர், திருப்புத்தூர், திருப்பூவணம், கானப்பேர், திருச்சுழியல், திருக்குற்றாலம், குறும்பலா, திருநெல்வேலி இவைகளை அடைந்து சுவாமியை தரிசனம் செய்து பதிகம்பாடி, அங்கிருந்தே ஈழமண்டலத்திலுள்ள திருக்கோணமலை, திருக்கேதீச்சுவரம் என்னும் தலங்களை வணங்கிப் பதிகம் பாடி சிலநாளிருந்து, பின்பு இராமேச்சுவரத்தை நீங்கி திருஆடானை, திருப்புனவாயில் என்னும் தலங்களை வணங்கிப் பதிகம்பாடி, பின்பு குலச்சிறை நாயனாருடைய ஊராகிய மதுரையை அடைந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு சில்நாள் அங்கிருந்து, பின்பு சோழநாட்டுக்குப் போகும்படி திருவுளங் கொள்ள பாண்டியரும், மாதேவியாரும், குலச்சிறையாரும் அதைக் கேட்டு அவருடன் போக பிரயாணப்பட்டார்கள்.

சம்பந்தர், அதையறிந்து அவர்களைப் பார்த்து, "அன்பர்களே! நீங்கள் நம்முடைய சொல்லைத் தடுக்காமல் இங்கேதானே இருங்கள்!" என்று சொல்லி அருளிச் செய்தார்.

அவர்கள் சம்பந்தருடைய ஆணையைத் தடுப்பதற்குப் பயப்பட்டு அவருடைய திருவடிகளை வணங்கி அனுமதி பெற்றுக்கொண்டு அவரை எப்பொழுதும் தியானித்துக் கொண்டு சிவ சமயத்தைப் பரிபாலித்துக் கொண்டு அங்கே இருந்தார்கள்.

சம்பந்த மூர்த்தியார் திருக்கூட்டத்தோடும் பாண்டி நாட்டைக் கடந்து சோழ நாட்டை அடைந்து திருக்களர், பாதாளீச்சுவரம் முதலிய திருத்தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடிப் பின்பு முள்ளிவாய்க் கரையை அடைந்தார். அங்கே ஆற்றில் வெள்ளம் பெருகியதால் நீர் வாணர் ஓடக்கோல் நிலைக்காமையைப் பற்றி ஓடங்களை கரையிலே நிறுத்திப் போய் விட்டார்கள்.

சம்பந்தர் அது கண்டு கரையிலே எழுந்து நிற்கும் போது கொள்ளம்பூதூர் எதிரே தோன்ற அங்கே சென்று சுவாமி தரிசனம் செய்வதற்குத் திருவுளம் கொண்டு அதிசீக்கிரமாக ஓடத்தின் கட்டை அவிழ்த்து சிவனடியார்களை அதில் ஏற்றி நாவலமே கோலாக அதன் மேல் நின்று திருப்பதிகம் பாடின அளவில், பரமசிவனுடைய திருவருளினால் ஓடம் போய் எதிர்க் கரையை அடைந்தது. பிள்ளையார் அடியார்களுடனே இறங்கிக் கோயிலை அடைந்து சுவாமி தரிசனம் செய்து சிலநாள் அங்கிருந்து பின்பு வாதிலே, நெருப்பிலே வேவாத திருப்பதிகத்தையுடைய கடவுளை வணங்க விரும்பி கொள்ளம் பூதூரை நீங்கித் திருநள்ளாற்றை அடைந்து சுவாமி தரிசனம் செய்து பதிகம் பாடிச் சிலநாள் அங்கிருந்தார்.

பின்பு திருத்தெளிச்சேரியை அடைந்து சுவாமி தரிசனம் செய்து திருப்பதிகம் பாடி பின்பு போகும் போது பௌத்தர்கள் இருக்கின்ற போதிகை மங்கை சமீபிக்க அதனையறிந்த அடியார்களெல்லாரும் சங்கம், தாரை முதலிய பலவகைப்பட்ட வாத்தியங்களையும் முழங்கி ஆரவாரித்தார்கள். முத்துச் சின்னங்கள் எல்லாம் பரசமய கோளரி வந்தார் என்று ஊதின.

பௌத்தர்கள் ஒருங்கு கூடிச் சம்பந்தர் தங்கள் எல்லையில் எழுந்தருளும் போது, அடியார்கள் எடுத்த ஆரவாரத்தினாலும் திருச்சின்ன ஓசையினாலும் பொறாமை கொண்டு தங்கள் சமய நூலிலே மகா பாண்டித்தியம் உள்ள புத்தநந்தி முதலியோருக்குச் சொன்னார்கள்.

அவர்களுடைய சொல்லும் அடியார்களுடைய ஆரவாரமும் சம்பந்தர் முன் ஊதுகின்ற திருச்சின்ன ஒலியும் காதினுள்ளே புகுத்திய நாராசம்போலப் புகுந்தபோது புத்தநந்தி மிகவும் கோபித்து எழுந்து பௌத்தர் கூட்டம் சூழச் சென்று அடியார்களைச் சேர்ந்து, "நீங்கள் எங்களைத் தருக்கத்தில் வென்றல்லவோ வெற்றிச் சின்னம் ஊத வேண்டும்," என்று கோபம் கொண்டு விலக்கினார்கள்.

அப்பொழுது திருத்தொண்டர்கள் மிகவும் கோபித்து "இந்தக் கொடுஞ் செயலுக்கு இவர்களைக் கொல்லாமல் பொறுக்காமல் இவர்கள் தங்கள் நிலையெடுப்பார்கள்," என்று முத்துப் பல்லக்கின் மேல் வீற்றிருக்கின்ற திருஞான சம்பந்தரை அடைந்து வணங்கி விண்ணப்பம் செய்தார்கள்.

**புத்தநந்தியின் தலை**

சம்பந்தர் "நாம் வருமிடத்தில் இது நமக்கு அழகியதாயிருக்கின்றது. புத்தநந்தி மற்றவர்கள் தங்களுடைய சமய நூல் பொருள் நிலையை மாறாதவண்ணம் வாது செய்யப் புகுமிடத்து அவனுடைய பொய் மேற்கோளை அறிகின்றோம்" என்று அருளிச் செய்தார்.

அதற்கு முன்னே தேவாரத் திருமுறை எழுதும் அடியவர் பொறாமல் ஆளுடைய பிள்ளையார் தம் திருவாக்காலே "இடி இடித்துவிழ இந்தப் புத்தனுடைய சிரம் விழக்கடவது," என்று சொல்லியருளினார்.

அந்த வாக்கின்படி இடியிடித்துப் புத்த நந்தியினுடைய சரீரத்தையும் தலையையும் வேறாக்க, பௌத்தர் கூட்டம் பயந்து குலைந்தோடிற்று. இந்தச் சங்கதிகளையெல்லாம் அடியார்கள் போய் பிள்ளையாருக்கு விண்ணப்பம் செய்தார்கள். பிள்ளையார், "அங்ஙனம் எதிர்ந்த விலக்கை நீக்கும் முறை அதுவேயாம், நீங்கள் எல்லாமே அர! அர! என்று சப்தியுங்கள்," என்று அருளிச்செய்ய அப்படியே செய்தார்கள்.

**வாது செய்ய வருக!**

அப்போது பயந்து ஓடிய பௌத்தர்கள் எல்லாரும் ஆச்சரியம் அடைந்து ஒன்றாய்க் கூடி, "இச்செய்கை வஞ்சனையோ? அவர்கள் சைவ சமயத்து உண்மையோ?" எனப் பிரமித்து, "நீங்கள் எங்களோடு மந்திரவாதம் செய்யாமல் எதிர்த்து தருக்கம் பேச வாருங்கள்!" என்று தங்களுக்குள்ளே தலைவனாகிய சாரிபுத்தனையே முன் கொண்டு பின்பும் வந்தார்கள். பிள்ளையார் அதைக் கேட்டுத் திருவுளம் மிக மகிழ்ந்து சீக்கிரமாய்ப் போய் முத்துப் பல்லக்கை விட்டிறங்கி ஒரு சத்திர மண்டபத்தின் மேலேறி சைவர்கள் சூழவீற்றிருந்து தன் எதிரே நின்ற சில அடியார்களைப் பார்த்து, "தருக்கம் பேச விரும்பிய பௌத்தர்களை இங்கே அழையுங்கள்!" என்று ஆக்ஞாபித்தருளினார்.

**வாதம் செய்தார்கள்!**

அந்த அடியார்கள், அந்த ஆக்ஞையைச் சிரசின் மேல் ஏற்றுப் பௌத்தர் கூட்டத்தை அடைந்து "வேதாகமாதி சமத்த

சாத்திரங்களையும் ஓதாதுணர்ந்த எங்கள் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள், உங்கள் விருப்பத்தின்படி வாது செய்வதற்கு உங்களை அழைக்கின்றார், வாருங்கள்!" என்றார்.

சாரிபுத்தன் அதைக்கேட்டு பௌத்தர்களோடு வந்து மண்டபத்திலே சம்பந்த மூர்த்தியின் பக்கத்திலே வந்து நின்றான். அப்போது திருச்சின்னத்தைத் தடுத்த புத்த நந்தியினுடைய சிரசைப் பொடிபடுத்திய தமிழ் வேதலோகர் சம்பந்தருடைய திருவடிகளை வணங்கித் துதித்துச் சாரிபுத்தனுடனே வாது செய்து பௌத்த சமயத்தை நிராகரணம் பண்ணி அவனை வென்று பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கினார்.

பௌத்தர் தோற்றுத் தங்கள் சமயம் பொய் வழியென்று கண்டு பிள்ளையாரை விழுந்து வணங்கினார்கள். பிள்ளையார், சைவ சமயமே சத்சமயம் என்பதை அவர்களுக்குச் சந்தேகமறத் தெரிவித்தருள, அவர்கள் அதை இனிதுணர்ந்து அவரை வணங்கிச் சைவர்களானார்கள்.

பிள்ளையார் அதைவிட்டு நீங்கி, திருக்கடவூருக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்துகொண்டு அங்கே சிலநாள் இருந்தார். பின்பு திருநாவுக்கரசு சுவாமிகள் பூந்துருத்தியில் இருப்பதைக் கேள்விப்பட்டு அவரைக்காண விரும்பிப் புறப்பட்டுச் சென்று பூந்துருத்தியைச் சமீபித்தார்.

**அப்பர் பல்லக்குச் சுமந்தார்**

அதைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கேட்டு மனம் மகிழ்ந்து அவரை எதிர்கொண்டு வணங்கும்படிச் சென்று அவர் வந்த இடத்தை அடைந்து திருச்சின்னத்தின் ஓசையைக் கேட்டு அவரைத் தரிசிக்கும்படிச் சூழ்ந்த மக்களுடைய நெருக்கத்தினாலே தம்மை ஒருவரும் காணாதபடி உள்ளே

புகுந்து அவர் ஏறி வரப்பட்ட முத்துப் பல்லக்கைத் தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கிக்கொண்டு வந்தார். பிள்ளையார் திருப்பூந்துருத்திக்கு மிகச் சமீபித்தவுடனே "அப்பர் எங்கே இருக்கின்றார்?" என்றுகேட்க, அப்பமூர்த்தி அதைக் கேட்டு, "அடியேன் தேவரீரைத் தாங்கி வரும் பெரு வாழ்வைப் பெற்று இங்குற்றேன்," என்றார். உடனே பிள்ளையார் பல்லக்கை விட்டிறங்கி மனப்பதைப்போடும் அப்பமூர்த்தியை வணங்க அப்பமூர்த்தியும் அவரை வணங்க அது கண்ட அடியார்களெல்லாரும் வணங்கி ஆனந்தப் பேரொலி எழுப்பினார்கள்.

பிள்ளையார் அப்பமூர்த்தியோடும் பூந்துருத்திக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து கொண்டு இருந்தார். பிள்ளையார், தான் பாண்டி நாட்டில் சென்று சமணர்களை வாதில் வென்றதையும் பாண்டியனுடைய கூனை நிமிர்த்ததையும் அந்த நாடெங்கும் சைவத்தை வளர்த்ததையும் மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் இவர்களுடைய பெருமையையும் அப்பமூர்த்திக்குச் சொல்லியருளினார்.

அப்பமூர்த்தி தாம் தொண்டை நாட்டில் போய் அங்குள்ள சிவத்தலங்களை வணங்கியதைப் பிள்ளையாருக்குச் சொல்லியருளி விடை பெற்றுக்கொண்டு பாண்டிய நாட்டுக்குப் புறப்பட்ட பிள்ளையாரும் அப்பரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு அடியார்களோடு புறப்பட்டு நெய்த்தானம், திருவையாறு, திருப்பழனம் முதலிய திருத்தலங்களை வணங்கிக்கொண்டு சீர்காழியைஅடைந்து சுவாமி தரிசனம் செய்து பதிகம் பாடிக்கொண்டிருந்து பகு நாள் சென்றபின் சம்பந்தர் தொண்டை மண்டலத்துக்கு யாத்திரை செய்யத் திருவுளங் கொண்டு தோணியப்பரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு அடியார்களோடு புறப்பட்டுத் தம்மோடு கூட வருவதற்குப் பிரயாணப்பட்ட தன் தகப்பனாரைப் பார்த்து, "நீர் இங்கே தானே யாகம் செய்து சிவ தரிசனம் பண்ணிக்கொண்டு இரும்," என்று சொல்லி நிறுத்திவிட்டுத் தாம் தினைநகர், மாணிகுழி,

பாதிரிப்புலியூர், வடுகூர், வக்கரை, இரும்பைமாகாளம், திருவதிகை, ஆமாத்தூர், கோவலூர், அறையணிநல்லூர் திருவண்ணாமலை என்னும் திருத்தலங்களை வணங்கி, திருப்பதிகம் பாடிக்கொண்டு தொண்டை நாட்டை அடைந்து அங்கே திருவோத்தூரில் போய் சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தார்.

**ஆண்பனை காய்த்தல்**

அப்படி இருக்கும் நாளிலே அந்தத் திருத்தலத்திலேயுள்ள சிவனடியார் ஒருவர் வந்து பிள்ளையாரை வணங்கி நின்று, "பரசமயங்களைக் காப்பாற்றிச்சைவசமயத்தை நிலை நிறுத்தம் சுவாமி! மெய்க் கடவுளாகிய பரமசிவனுக்கு அடியேனாகிய நான் வைத்து வளர்த்த பனை மரங்களெல்லாம் நிரம்பவும் உயரமாக வளர்ந்து ஆண் பனைகளாகி காய்க்காதிருக்கின்றன.

அதைக் கண்ட சமணர்களெல்லாரும் என்னைப் பார்த்து, 'நீர் வளர்த்த ஆண்பனைகள் எல்லாவற்றையும் காய்க்கப் பண்ணுதல் கூடுமோ?' என்று நகைத்து இகழ்ந்து சொன்னார்கள். தேவரீர் அருள் செய்ய வேண்டும், " என்று விண்ணப்பம் செய்தார்.

பிள்ளையார் அதுகேட்டுப் பரிந்தருளி எழுந்து சீக்கிரமாய்க் கோயிலில் போய் சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடியருள, அந்த ஆண்பனைகளெல்லாம் குரும்பைக் குலையை அடைந்து காய்த்துப் பெண் பனைகளாயின.அதைக் கண்டவர்களெல்லாரும் ஆச்சரியம் கொண்டார்கள். பிள்ளையார் சாமி தரிசனம் செய்துகொண்டு அங்கேயிருந்தார்.

சமணர்கள் சிலர் சம்பந்தருடைய செய்கையைக் கண்டு அந்த நாட்டை விட்டு ஓடிப் போனார்கள். சிலர் பரமசிவனே மெய்க்கடவுள் என்று சைவ சமயத்தைச் சார்ந்தார்கள். பிள்ளையாருடைய திருவாக்கிலே பிறத்தலால் அந்தப் பனை மரங்களெல்லாம் தங்கள் தங்கள் காலத்தைக் கழித்து ஒழியாப் பிறவியை ஒழித்து சிவத்தை அடைந்தன.

பின்பு சம்பந்தமூர்த்தி நாயனார், சிலநாள் ஆனபின் அந்தத் திருத்தலத்தை விட்டு நீங்கி மாகறல், குரங்கணி முட்டம், கச்சியேகம்பம், கச்சிநெறிக் காரைக்காடு, அநேக தங்காவதம், கச்சியேகம்பம், மால்பேறு, வல்லம், இலம் பயங்கோட்டூர், திருவிற்கோலம், திருவூறல் முதலாகிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு பதிகம் பாடி பழையனூர் திருவாலங்காட்டுக்குச் சமீபத்தில் போய், அது காரைக்காலம்மையார் தலையினாலே நடந்த திருப்பதி யாதலால் அதை மிதிக்க அஞ்சி அதன் சமீபத்திலுள்ள ஓர் ஊரிலே அன்று இரவு பள்ளி கொண்டார்.

அப்போது திருவாலங்காட்டில் வீற்றிருக்கின்ற கடவுள், அவருக்குக் கனவிலே தோன்றி, "நம்மைப் பாடுதற்கு மறந்தாயோ?" என்று அருளிச் செய்ய, பிள்ளையார் உடனே விழித்து எழுந்து திருவருளைத் துதித்துத் திருப்பதிகம் பாடியருளினார். மற்ற நாள் உதயத்திலே திருக்கூட்டம் தம்மைச் சார்ந்த பொழுது இரவிலே நிகழ்ந்ததை அவர்களுக்கு சொல்லியருளினார்.

பின்பு பாசூர், வெண்பாக்கம், காரிக்கரை முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டு திருக்காளத்தி மலைக்குச் சமீபித்து அதன் மேலிருக்கின்ற கண்ணப்ப நாயனாருடைய திருத்தொண்டைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடிக்கொண்டு போய் மலைமேல் ஏறி சந்நிதானத்தை அடைந்து, சுவாமியை வணங்கிப் பதிகம் பாடிப் பின், அந்த வணக்கத்தால் பெற்ற பலனைக் காண்பவர் போல அன்புருவமாகிய கண்ணப்ப நாயனாரைக் கண்டு கண்களில் ஆனந்த அருவி சொரிய விழுந்து வணங்கி மலையை விட்டிறங்கி ஒரு திருமடத்தில் இருந்து கொண்டு காலந்தோறும் காளத்தி நாதரை வணங்கிக்கொண்டு இருந்தார்.

அப்படியிருக்கும் நாளிலே வடதிசையிலும் மேற்குத் திசையிலும் தமிழ் மொழி வழக்கம் இல்லாமையால் உத்திர கைலாசம் திருக்கேதாரம், கோகர்ணம், திருப்பருப்பதம், இந்திரநீலப்பருப்பதம் முதலிய சிவத்தலங்களை அங்கிருந்தே வணங்கி திருப்பதிகம் பாடி சில நாளிருந்து பின் காளத்தியை விட்டு வேற்காடு, வலிதாயம் முதலிய திருத்தலங்களை வணங்கிக்கொண்டு திருவொற்றியூரை அடைந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு இருந்தார். (அது நிற்க)

**சிவநேசர்**

மயிலாப்பூரிலே வைசியர் குலத்திலே சிவபக்தி அடியார்பக்தியில் சிறந்தவராயும் அதிக தனத்தை உடையவராயும் உள்ள சிவநேசர் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஞானப்பால் உண்டதையும், உலகம் பிழைக்கும் பொருட்டு அன்னிய சமயங்களை வென்றதையும் கேள்விப்பட்டு மனம் மகிழ்ந்து அவருடைய திருவடிகளிலே பேரன்பையுடையவராகி அகோராத்ரமும் அவருடைய திருவருளின் திறங்களைப் போசக் கேட்டலாகிய தொழிலினராயினார்.

**பூம்பாவை**

அவர் மிக்க செல்வமும் புகழும் உடையவராயினும் பிள்ளையில்லாமையால் மிகக் கவலையுற்று சிவபூசை, அடியார் பூசை ஆகியவற்றைச் செய்து ஒரு பெண் பிள்ளையைப் பெற்றார். அதற்குப் பூம்பாவை என்னும் பெயரிட்டு வளர்க்க, அவளுக்குப் பெதும்பைப் பருவம் வந்தபின் தந்தையார் அவளுடைய குணாதிசயங்களைக் கண்டு ஆச்சரியமடைந்து மனம் மகிழ்ந்து “இவளைத் திருமணம் செய்து கொள்பவரே என்னுடைய செல்வங்களுக்கெல்லாம் உரியவர்” என்றார்.

அந்த நாளிலே திருஞானசம்பந்த சுவாமிகள் பாண்டி நாட்டில் சென்று செய்தருளிய திருவருள் திறங்களையெல்லாம் அறிந்தவர்கள் வந்து சிவநேசருக்குச் சொல்ல சிவநேசர் அதைக் கேட்டு மனம் மகிழ்ந்து அவர்கள் எல்லோருக்கும் அளவிறந்த செல்வங்களைக் கொடுத்து சம்பந்தரைத் திக்கு நோக்கி வணங்கி எழுந்து நின்று தன்னுடைய பந்துக்கள் அனைவரும் அறியும்படி "அடியேன் என்னுடைய திருமகளாகிய பூம்பாவையையும் செல்வங்களையும் என்னையும் சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குக் கொடுத்துவிட்டேன்," என்று சொல்லி அத்யந்தானந்தம் அடைந்தார். அப்படியிருக்க........

ஒருநாள் பூம்பாவை, தோழியரோடு கன்னி மாடத்துக்குப் பக்கத்திலிருக்கின்ற பூஞ்சோலையில் போய் பூக் கொய்யும் பொழுது ஒரு பாம்பு மாதவிப் பந்தலிலே மறைந்து வந்து அவளுடைய விரலிலே காளி, காளத்திரி, யமன், யமதூதி என்கிற நான்கு பற்களும் எலும்பிலே பாயும்படிக் கடித்து நஞ்சை உதிர்த்துப் படத்தை விரித்து ஆடி அடங்கிற்று. பூம்பாவை மயங்கி விழத் தோழியர் அச்சுற்று அவளைத் தாங்கிக் கன்னி மாடத்துள்ளே கொண்டு போனார்கள்.

சிவநேசர் மனம் கலங்கிச் சுற்றத்தாரோடு அழுதார். விடவைத்தியர்கள் தனித்தனியே மந்திர தியான பாவகங்கள் செய்தும் அளவில்லாத ஔடதங்களைப் பிரயோகப் படுத்தியும் நஞ்சு நீங்காமல் ஏழுவேகமும் முறையே பொங்கி நஞ்சு தலைக்கொண்டு மரணகாலம் நேரிட மருத்துவர்களும் கைவிட்டார்கள்.

சுற்றத்தார்கள், அவர் மேல் விழுந்து அழுதார்கள். சிவநேசர் ஒருவாறு தெளிந்து, "இந்த நஞ்சினை நீக்கினவர்களுக்கு என்னுடைய செல்வம் முழுவதையும் கொடுப்பேன் என்று பறையறைவித்தார். மூன்று நாள் அளவும் அரசரிடத்துள்ளவர் முதலாகிய மந்திரவாதிகள் அனைவரும் வந்து தங்கள் செய்கையினாலே தீர்த்தும் அது தீராமையால் திரும்பிப் போய்விட்டார்கள்.

சிவநேசர் அதுகண்டு மயங்கி, “இவளைச் சம்பந்தருக்கு என்று சொல்லியபடியால் நான் துன்பப்பட வேண்டிய தில்லை,” என்று துன்பம் நீங்கி அவளைத் தகனம் செய்து அந்த எலும்பையும் சாம்பலையும் எடுத்து ஒரு புதுக் குடத்தில் வைத்துப் புத்தாடை சார்த்தி ஆபரணம் அணிந்து பஞ்சணை மெத்தை மேல் வைத்துத் தினந்தோறும் சந்தனம், மலர்மாலை, நீர், அன்னம், தீபம் முதலியவைகளை வைத்து வந்தார். அதைக் கண்டவர்களெல்லாரும் வியப்புற்றனர்.

இப்படி நடத்தும் நாளிலே சம்பந்த மூர்த்தியார் திருக்கூட்டத்தோடு திருவொற்றியூரில் வந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு இருக்கிறார் என்று அவ்வூரார் வந்து சிவநேசருக்குச் சொன்னார்கள். அவர் வந்தவர்கள் எல்லாருக்கும் ஆடை தானமும், பொன் தானமும் செய்து பெருங்களிப்பை உடையவராகி தங்களூர் முதல் திருவொற்றியூர் வரைக்கும் நடைப்பந்தல் இட்டு ஆடைகளால் விதானித்துப் பாக்கு மரங்களும் வாழை மரங்களும் நாட்டி, தோரணங்கள் நிறைத்து கொடிகள் கட்டி மாலைகள் தூக்கி அலங்கரிப்பித்து சம்பந்தரை வணங்கும் பொருட்டு மயிலாப்பூரிலிருக்கின்ற சிவனடியார்களோடு திருவொற்றியூரைச் சமீபித்தார்.

அப்போது சம்பந்தமூர்த்தி சுவாமிகளும், மயிலாப்பூருக்குப் போகும்படி நினைத்து அடியார் கூட்டத்தோடு திருவொற்றியூரை நீங்கி எழுந்தருளி எதிரே வந்தார். போன சிவநேசரும் சிவனடியார்களும் அடியார் திருக்கூட்டத்தைத் தூரத்திலே கண்டு திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் எழுந்தருளி வருகிறார் என்று அளவில்லாத மகிழ்ச்சி கொண்டு விழுந்து வணங்கினார்கள். சம்பந்தமூர்த்தி அவர்களை எதிர்தொழுது சிவநேசருடைய செய்கையை அடியார் சொல்லக்கேட்டு மயிலாப்பூரை அடைந்தார்.

சிவநேசரிடத்தில் நடந்ததைத் திருவுள்ளத்தில் வைத்து அவருடைய கருத்தை முடித்தற்குத் திருவுளங் கொண்டு கபாலீசுவரர் ஆலயத்தில் பிரவேசித்துப் பரமசிவனை வணங்கி தோத்திரம் செய்துகொண்டு கோயில் பக்கத்திலே வந்து சிவநேசரைப் பார்த்து, "உம்முடைய மகளின் எலும்பை நிறைத்த குடத்தைக் கோயில் பக்கத்தின் மதில் வாயிற்படியிலே கொண்டு வாரும்" என்று அருளிச் செய்தார்.

சிவநேசர் பெருங்களிப்பை அடைந்து விழுந்து வணங்கித் தன் வீட்டை அடைந்து கன்னி மாடத்திலே புகுந்து முன்னே எலும்பு போட்டு வைத்த குடத்தை எடுத்து இரத்தின பல்லக்கின்மேல் வைத்து தோழியர் சூழ எடுத்துக்கொண்டு வந்து கோபுரத்துக்கு எதிரே பல்லக்கையும் நிறுத்தி அந்தக் குடத்தை எடுத்து சுவாமியின் எதிரே வைத்து வணக்கம் பண்ணினார்.

மயிலாப்பூரில் இருக்கின்றவர்களும் மற்ற சகல சாதியாரும் அதைப் பார்க்கும் பொருட்டு பக்கத்திலே வந்து சூழ்ந்தார்கள். தேவர்கள் முதலானவர்கள் ஆகாயத்திலே வந்து நெருங்கினார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் சர்வாத்துமாக்களுக்கும் உறுதி பயத்தல் பொருட்டு அடியார் திருக்கூட்டம் பக்கத்திலே தம்மைச் சூழ்ந்து வரும்படி கோபுர வாயிற்படியின் நேரே வந்து பூம்பாவையினுடைய எலும்பு இருக்கின்ற மண் குடத்தைக் கண்டு சுத்த சாத்குண்ணிய சுயரூபியாகிய பரமசிவனுடைய திருவருளின் பெருமையைச் சிந்தித்து "பூம்பாவாய்" என்று கூப்பிட்டு "பூமியிலே மனிதப் பிறவி எடுத்தவர்கள் பெறும்பயன் அன்புடனே பரமசிவனுடையஅடியார்களை அமுது செய்வித்தலும் சைவாகமப்படி செய்கின்ற அவருடைய திருவிழாவைத் தரிசித்து ஆனந்தம் அடைதலுமே என்பது சாத்தியமாகில் நீ இவ்வுலகர் முன் வருவாய்," என்று திருப்பதிகம் பாடினார்.

**எலும்பு பெண் உருக்கொண்டது!**

முதல் கவி பாடிய அளவில் அந்தக் கவியின் திருவாக்காகிய அமிழ்தம் அந்தச் சரீரத்திலே பொருந்த அது குடத்தினுள்ளே சரீரமாய்ப் பரிணமித்தது.

இரண்டாவது திருப்பாட்டு பாடிய அளவில் பூம்பாவை பன்னிரண்டு வயதை அடைந்து குடத்தின் உள்ளிருந்தது.

பத்தாவது திருப்பாட்டை அருளிச் செய்த மாத்திரத்தில் பூம்பாவை தன் கை வெளியே தோன்ற, குடம் உடைந்து எழுந்தாள். அங்ஙனம் எழுந்து நின்ற பூம்பாவையைக் கண்டவர்கள் எல்லாரும் அற்புதம் அடைந்தார்கள். சிவனடியார்களெல்லாரும் அர! அர! என்று ஆனந்தப் பேரொலி எழுப்பினார்கள். தேவர்களும் முனிவர்களும் திருவருட் சிறப்பை நோக்கி மலர்மாரி பொழிந்தார்கள். பூமியில் உள்ளவர்கள் இஃது எங்கள் பரமசிவனுடைய பெருங்கருணையே என்று கைகளைச் சிரசின் மேல் குவித்து ஆனந்த பாராயணராய் வீழ்ந்தார்கள்.

அந்த அற்புதத்தைக் கண்ட சமணர் முதலான புறச் சமயர்களெல்லாரும் ஏங்கித் தள்ளாடி விழுந்தார்கள். சிவநேசர், பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கினார். பூம்பாவை பரமசிவனை வணங்கி பின்பு சம்பந்தரையும் வணங்கிப் போற்றி எழுந்து நின்றார்.

சம்பந்தர் சிவநேசரைப் பார்த்து, "இனி உம்முடைய மகளை வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போம்!" என்று திருவாய் மலர்ந்தருளினார். சிவநேசர், பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கித் துதித்து, "சுவாமி! அடியேன் அருமையாகப் பெற்ற இந்தப் பெண்ணை தேவரீர் திருமணம் செய்தருள வேண்டும்" என்று வேண்டிக்கொள்ள, சம்பந்தர்

அவரைப் பார்த்து, "நீ பெற்ற பெண் நஞ்சினாலே இறந்த பின், நாம் பரமசிவனுடைய அருளினால் உற்பத்தி செய்ததால் இவ்வார்த்தை தகாது," என்று மறுத்தருளினார்.

சிவநேசரும் அவர் பந்துக்களும் அதைக் கேட்டு மயங்கி சம்பந்தமூர்த்தியினுடைய திருவடிகளிலே வீழ்ந்து அழ, சம்பந்தர் அவர்தம் பெருந்துயரம் தணியும் பொருட்டு வேதாகமத் துணிவை எடுத்து அவர்களுக்குப் போதித்தருளினார். சிவநேசரும் பந்துக்களும் அதைக் கேட்டு கவலை நீங்கினார்கள். சம்பந்த மூர்த்தியார் கோயிலிலுள்ளே எழுந்தருளினார்.

சிவநேசர் பூம்பாவையை வேறொருவருக்குத் திருமணம் செய்து கொடுப்பதில்லை என்று கொண்டு போய் கன்னி மாடத்தில் வைத்தார். அவள் சிவத்தை அடைந்தாள். கோயிலுள்ளே போன சம்பந்தமூர்த்தியார், சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடி திருமடத்தில் சிலநாளிருந்து பின்பு மயிலாப்பூரை விட்டு அங்குள்ள திருத்தொண்டர்கள் விடைபெற்றுக் கொள்ள, சிவநேசருக்கு வருத்தம் நீங்கும்படி இனிய மொழியருளி விடை கொடுத்துப் போய், வான்மியூர், இடைச்சுரம், திருக்கழுக்குன்று, அச்சிறுபாக்கம், அரசிலி, புறவார்பனங்காட்டூர் இவை முதலான திருத்தலங்களை வணங்கிக்கொண்டு சிதம்பரத்தை அடைந்து காலந்தோறும் சபாநாயகரைத் தரிசனம் செய்துகொண்டு இருந்தார்.

அப்படியிருக்கும் நாளிலே இவர் தகப்பனாரான சிவபாத இருதயரும் சீர்காழியிலுள்ள மற்ற அந்தணர்களும் அடியார்களும் சம்பந்தமூர்த்தி சிதம்பரத்திலே இருக்கிறாரென்று கேள்விப்பட்டு வந்தார்கள். சம்பந்த மூர்த்தியார் சபாநாயகரை வணங்கி விடைபெற்று பரிசனங்களோடு வந்தவர்களுடன் கூடி முத்துப் பல்லக்கில் ஏறிச் சிதம்பரத்தை நீங்கிச் சீர்காழியை அடைந்து காலந்தோறும் தோணியப்பரை வணங்கிக் கொண்டு

இருந்தார். அப்படி இருக்கும் நாளிலே முருக நாயனார் திருநீலநக்க நாயனார் முதலாகிய திருத்தொண்டர்கள் சுற்றத்தாரோடு சீர்காழியில் வந்து சம்பந்த மூர்த்தியைச் சேவித்துக் கொண்டு இருந்தார்கள்.

அப்படியிருக்கப்பட்ட காலத்திலே சிவபாத விருதயரும் அவர் பந்துக்களும் கூடி திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குத் திருமணம் செய்வதற்கு இதுவே பருவம் என்று எண்ணி சம்பந்த மூர்த்தியை அடைந்து, "சுவாமி! தேவரீர் வைதிக கிரமத்தை பிறருக்குக் காட்டும் பொருட்டு ஒரு கன்னிகையைத் திருமணம் செய்து அருள வேண்டும்," என்று விண்ணப்பம் செய்தார்கள். சம்பந்தமூர்த்தி, "அது கூடாது," என்று தடுக்க, அந்தணர்கள் பின்னும் கைதொழுது, "தேவரீர் இந்தப் பூமியினிடத்திலே வேதநெறியை நிலைநிறுத்த அவதரித்தீர்! ஆகையால் வேதவிதிப்படித் திருமணம் செய்தருளுதற்குத் திருவுளம் செய்தல் வேண்டும்," என்றார்கள். சம்பந்தமூர்த்தி அதற்குச் சம்மதித்தார். பின்பு அதைக் கண்ட தாயாரும் தகப்பனாரும் மற்ற அந்தணர்களும் "இது பரமசிவனுடைய திருவருள்" என்று உருகி மனம் மகிழ்ந்து திருநல்லூரில் இருக்கின்ற அந்தணர்களுள் நம்பியாண்டார் நம்பி என்பவருடைய மகளே இந்தத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாருக்கு பத்தினியாதற்குத் தகுதியுடையவளென்று ஆலோசித்து இவர் தகப்பனாரும் அந்தணர்களும் திருத்தொண்டர்களும் திருமணம் பேசுவதற்குத் திருநல்லூரைச் சமீபித்து அங்கிருந்த பந்துக்களோடு தம்மை எதிர்கொண்டு வணங்கிய நம்பியாண்டார் நம்பியொடு அவர் வீட்டை அடைந்தார்.

நம்பியாண்டார் நம்பி சிவபாத விருதயரையும் மற்ற அந்தணர்களையும் சத்காரம் செய்து, "நீங்கள் இங்கே எழுந்தருளி வந்தது என்ன?" வென்று கேட்க, அவர்கள் நம்பியாண்டார் நம்பியைப் பார்த்து, "நாங்கள் திருஞான சம்பந்த மூர்த்தியாருக்கு உம்முடைய மகளை விவாகம் பேச வந்தோம்," என்று சொல்ல, நம்பியாண்டார் நம்பிகள்

பெருங்களிப்பை அடைந்து சிவபாதவிருதயரை நோக்கி, “சுவாமி! தேவரீருடைய பெருந்தவத்தினாலே திருஅவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தியாருக்கு அடியேன் என் குலம் உய்யும் பொருட்டு என் குலக்கொழுந்தைத் திருமணம் செய்து கொடுப்பதற்கு என்ன தவம் செய்தேனோ?” என்றார்.

தந்தையார் அது கேட்டுத் தன் கூட வந்த அந்தணரோடு சீர்காழியை அடைந்து சம்பந்தருக்கு அதைத் தெரிவித்து சோதிடர்களைக் கொண்டு சுபதினத்திலே சுபமுகூர்த்தம் நியமித்து பந்துக்களுக்கும் நண்பர்களுக்கும் திருமண அழைப்பு அனுப்பி, அழைப்பித்து திருமணத்திற்கு வேண்டிய பொருள் முதலிய முன்னேற்பாடுகளைச் செய்து திருமண நாளுக்கு முதல் நாளிலே சம்பந்தருக்குச் சமாவர்த்தனமும் ரட்சாபந்தனமும் செய்து மறுநாள் காலையில் யாவரும் நித்திய கருமங்களைச் செய்துகொண்டு தோணியப்பரை வணங்கிச் சம்பந்தர் முத்துப்பல்லக்கின் மேலேறி திருக்கலியாணம் பார்க்க வந்த அனைவரும் சூழ சதுர்வித மங்கல வாத்தியங்கள் ஒலிக்க குடைகள், சாமரம், ஆலவட்டம், முதலியவை நெருங்க முத்துக் குடை நிழற்ற மகா அலங்காரத்தோடு சீர்காழியை விட்டு திருநல்லூரைச் சமீபித்து அங்கிருந்து வந்து எதிர்கொண்ட பெருமக்களோடு போய் அங்குள்ள திருப்பெருமணம் என்னும் ஆலயத்தில் பிரவேசித்து சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு கோயிலுக்குச் சமீபத்தில் இருக்கின்ற ஒரு திருமடத்தில் பிரவேசித்து வீற்றிருந்து அருளினார்.

அந்தணர்கள் பிள்ளையாருக்குப் பத்து துவரையும் ஓமாலிகை முப்பத்தியிரண்டும் விரை ஐந்தும் ஆகிய இருவகை வாசனைத் திரவியங்களையும் வெவ்வேறாய்ச் சேர்த்து அரைத்துத் திருமேனியில் பூசி மஞ்சன நீர் ஆட்டி விலைமதிப்பில்லாத ஆடை அணிகலன்களினாலே அலங்கரித்துக் கோலம் செய்தார்கள்.

பின்பு சம்பந்த மூர்த்தியார் பரமசிவனுடைய திருக்கண்ணில் நின்று உதிக்கும் திருவருள் குறியாகிய உருத்திராட்ச மாலையை எடுத்துத் தரித்து பசுமலத்தினால் உண்டான திருவெண்ணீற்றை ஐந்தெழுத்தோதித் தரித்துக் கொண்டு மிக அலங்கரிக்கப்பட்ட வீதியிலே எழுந்தருளி வந்து பரமசிவனை வணங்கி முத்துப் பல்லக்கின் மேலேறியருளினார். அப்பொழுது பலவகைப்பட்ட வாத்தியங்களும் சப்தித்தன. ஆகாயத்தில் தேவர்கள் கற்பகப் பூமாரி பெய்தார்கள். அந்தணர்கள் வேத ஒலிசெய்தார்கள்.

சம்பந்த மூர்த்தியார் முத்துக் குடை நிழற்ற முத்துச் சின்னங்களெல்லாம் தம்முடைய திருநாமங்களையெடுத்து ஊத எழுந்தருளி கல்யாணப் பூம்பந்தலுக்கு முன் வந்து முத்துப் பல்லக்கை விட்டிறங்கிப் பூக்களும் பொற்சுண்ணமும் பரந்த பாவாடை மேல் நடந்து திருக்கலியாண மண்டபத்திலே போய் இரத்தினாசனத்தின் மேல் வீற்றிருந்தருளினார்.

அப்பொழுது நம்பியாண்டார் நம்பி, தம்முடைய மனைவியார் பசுப்பாலும் தூய நீரும் கையில் ஏந்திப் பின்வர வந்து சம்பந்தரைப் பரமசிவனாகப் பாவித்துத் தம்முடைய மனைவியார் கரக நீரை வார்க்க நம்பியாண்டார் நம்பி அவருடைய திருவடிகளைக் கழுவி அந்த பாதோதகத்தைத் தங்களுடைய சிரசின் மேல் புரோட்சித்து உள்ளம் பூரித்து பந்துக்கள் மேலும் தெளித்தார். பின்பு சம்பந்தருடைய திருக்கரத்திலே நீரை வார்த்து தம்முடைய கோத்திரத்தைச் சொல்லி "என்னுடைய மகளாரை திருஞானசம்பந்த சுவாமிகளுக்குக் கொடுத்தேன், என்றார்." விவாக முகூர்த்தம் வந்தவுடனே தம்முடைய மகளைக் கொண்டுவந்து சம்பந்தருடைய வலப்பக்கத்திலே உட்கார வைத்தார்கள்.

திருநீல கண்ட நாயனார், திருஞான சம்பந்தர் முன்னே பரமசிவனைத் தியானித்துக் கொண்டு வேதவிதிப்படி

கிரியைகளைச் செய்து வேதம் ஒலிக்க திருஞான சம்பந்த மூர்த்தியார் திருமாங்கல்யத்தைச் சாத்தி பாணிக்கிரஹணம் செய்து பொரியை நெருப்பில் இட்டு பரமசிவனைத் துதித்து அக்கினியை வலம் வரவேண்டி, அக்கினியைப் பரமசிவனென்று திருவுளங்கொண்டு திருப்பெருமணம் என்னும் சிவாலயத்தில் போக எண்ணி வேத விதிப்படி வளர்க்கப்பட்ட அக்கினியை வலம் வந்து "இந்தசம்சார நடத்தை வந்து சம்பவித்ததே, நான் இவளுடனே பரமசிவனுடைய திருவடியை அடைவேன்," என்று நினைத்து அனைவரும் சூழும்படி மனைவியரோடு அந்தச் சிவாலயத்தில் பிரவேசித்துத் தம்முடைய திருமணத்தைத் தரிசித்தவர்களுடைய பாசத்தை நீக்கத் திருவுளம்கொண்டு "திருநல்லூர்ப் பெருமணத்தில் வீற்றிருக்கின்ற கடவுளே! அடியேன் தேவரீருடைய திருவடிகளை அடையும் பதம் இது" என்று நல்லூர்ப் பெருமணம் என்னும் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

அப்பொழுது கருணாநிதியாகிய பரமசிவன், "நீயும் உன் மனைவியும் திருமணத்தைப் பார்க்க வந்த அனைவரும் இந்த சோதியினுள்ளே வந்து நம்மை அடையுங்கள்," என்று அருளிச்செய்து சுத்த சோதி ரூபமாகிக் கோயிலுட்பட மேலோங்கும் தன்மையால் அந்த சோதிக்கு ஒரு வாயிலை உண்டாக்கிக் காட்டியருளினார்.

கருணைக் கடலாகிய திருஞானசம்பந்த சுவாமி, சோதி ரூபமாய் நின்ற கடவுளை வணங்கித் தோத்திரம் செய்து உலகம் உய்யும் பொருட்டு அதை அடையும் நெறியை அருளிச் செய்யத் திருவுளங்கொண்டு "ஞானமெய் நெறி நமசிவாய" திருப்பதிகத்தை அனைவரும் கேட்க அருளிச் செய்தார்.

அப்போது, "கடவுள், கல்யாணம் காண வந்த யாவரும் உங்கள் பிறவி நோய் தீரும் பொருட்டு இந்த சோதியுள்ளே பிரவேசியுங்கள்," என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பிறவிக்கடலில் அழுந்தி மயங்குகின்றவர்கள் சம்பந்தருடைய திருமணத்தைக்காணப்பெற்றமையால் அந்த சோதியினுள்ளே புகுந்தார்கள். திருநீல நக்க நாயனார், முருக நாயனார், சிவபாதவிருதயர், நம்பியாண்டார் நம்பி, திருநீலகண்டப் பெரும்பாணர் இவர்கள் முதலான திருத்தொண்டர்கள் தங்கள் தங்கள் மனைவியரோடும் பந்துக்களோடும் அந்த சோதியினுள்ளே புகுந்தார்கள் . சம்பந்தருடைய முத்துப் பல்லக்கைத் தாங்குகின்றவர்களும் மற்ற பரிசனங்களும் தொழுது புகுந்தார்கள்.

சைவர், பாசுபதர், மகாவிருதர், காளாமுகர், வாமர், பைரவர், என்னும் அறுவகை உட்சமையிகளும் வைதிக சைவர்களும் சைவசித்தாந்திகளும் ஆகிய அனைவரும் அந்த சுத்த சோதியினுள்ளே நுழைந்த பின் சர்வாத்மாக்களையும் பிழைப்பிக்கும் பொருட்டு திருவவதாரம் செய்தருளிய சைவசித்தாந்த சமயாசார்யாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் மனைவியாரைக் கையில் பிடித்துக்கொண்டு அந்த சோதியை வலம் செய்து அதனுள்ளே புகுந்து சிவ சாயுச்யம் அடைந்தார்.

அதன்பின் அந்த சோதி மறைய திருப்பெருமணமாகிய கோயில் தோன்றவும் உலகத்திலே பேறில்லாதவர்கள் எல்லாரும் கவலை கொண்டார்கள்.

சம்பந்தர் சோதியில் நுழைந்ததை தூரத்தில் அணுகப் பெறாத அரி, அயன் முதலான தேவர்களும், முனிவர்களும் கவலை நீங்க தோத்திரம் செய்தார்கள்.

**வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்**
**மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா**
**எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்.**



# வம்பறாவரிவண்டுச் சருக்கம்

### 30. ஏயர்கோன் கலிக்காம நாயனார்

**கவி**

ஏதமில்வே ளாளர்பெரு மங்க லத்துள்
    ஏயர்கோன் கலிக்காமர் இறையை நேரே
தூதுகொளு மவனணுகி லென்னா மென்னும்
    துணிவினர்பா லிறைவனரும் சூலை யேவி
வேதனைவன் றொண்டன்வரின் நீங்கு மென்ன
    வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேய நாவற்
போதகமு முடலிகழ வெழுந்து தாழ்ந்து
    போற்றியது விலக்கியருள் பொருந்தி னாரே!

**கதை**

**ஏயர்குடியார்**

சோழ நாட்டிலே திருப்பெருமங்கலத்திலே வேளாளர் குலத்திலே சோழ மன்னர்களிடத்தில் பரம்பரையாக சேனாதிபதி உத்தியோகம் செய்கின்ற ஏயர்குடியிலே கலிக்காம நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் குரு இலிங்கம், சங்கமம் என்கிற மூன்றின்மேல் மிகுந்த பக்தியுள்ளவர். திருப்புன்கூரிலுள்ள சிவாலயத்தில் அநேகம் திருப்பணிகள் செய்தவர்.

**நாயனார் மீது வெறுப்பு**

அத்தகு இயல்புடைய கலிக்காம நாயனாரானவர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், பரமசிவனைப் பரவையா ரிடத்திற்குத் தூதாக அனுப்பிய சமாசாரத்தைக் கேள்விப்பட்டு

வெம்பி மிகக் கோபித்து, "நாயகனை அடியான் ஏவுங்காரியம் மிக நன்று, இப்படிச் செய்பவன் தொண்டனாம், இது என்ன பாவம். பொறுக்க வொண்ணாத இந்தப் பெரும் பாதகத்தைக் கேட்டு உயிரோடு இருக்கின்றேனே" என்றார்.

"ஒருவன் பெண்ணாசை மேலீட்டினால் ஏவ ஒப்பில்லாத கடவுள் தூதராய் ஓர் இரவு முழுவதும் போக்குவரவு செய்து உழன்றாராம். அயன், அரி முதலான தேவர்களாலும் அறியப்படாத கடவுள்சம்மதித்தாலும் அவன் அவரை ஏவலாமா? இதற்கு மனம் நடுங்காமல் பெண் பொருட்டுக் கடவுளை இரவிலே தூதனுப்பிய பாதகனைக் கண்டால் என்ன சம்பவிக்குமோ?" என்று சொல்லி அதிகக் கோபம் கொண்டு இருந்தார்.

**சினம் கொண்டவரின் வருத்தம்**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இதனைக் கேள்விப்பட்டு இதைப் பரமசிவனுக்கு விண்ணப்பம் செய்ய, பரமசிவன் இருவரையும் கூட்டுவிப்பதற்குத் திருவுளங் கொண்டு கலிக்காம நாயனாரிடத்திலே சூலைநோயை ஏவ, அது நெருப்பில் காய்ச்சிய வேல் குடைதல் போல மிகவும் வேதனை செய்ய அதனால் கலிக்காமர் மிகவும் வருத்தமடைந்து வீழ்ந்து பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்துத் துதித்தார்.

**இறைவன் அருள் செய்தல்**

அப்பொழுது பரமசிவன் அவரிடத்திலே எழுந்தருளி வந்து சுந்தரனால் அல்லாது மற்றவர்களால் இந்த நோய் தீராது, என்று அருளிச்செய்ய, "சுவாமி என்னை வருத்துகின்ற அந்தச் சூலை நோய் சுந்தரனால் தீர்வதைவிட தீராமல் என்னை வருத்தப்படுத்துவதே நன்று, தேவரீர் செய்யும் பெருமையை அறிந்தவர் எவர்? வன்தொண்டனுக்கு வேண்டிய உறுதியைச் செய்வீர்," என்றார்.

உடனே பரமசிவன், அவர் முன்னே மறைந்து சுந்தரமூர்த்தியிடத்தில் போய் "உன்னைக் கலிக்காமன் வணங்கும் பொருட்டு அவனுக்கு நான் சூலை நோயை ஏவி, அவனுக்கு நாம் பிரசன்னமாய்த் தோன்றி, 'இந்த நோய் சுந்தரனால் அல்லாது மற்றவரால் தீராது' என்று சொல்லிவிட்டு வந்தோம், நீ போய் அந்த நோயைத் தீர்ப்பாய்!" என்று அருளினார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதைக் கேட்டுத் திருவுளம் மகிழ்ந்து கலிக்காம நாயனாரிடத்துக்குப் போகும்படி சில அடியார்களுடன் பிரயாணப்பட்டு தான் சூலை தீர்க்கும்படி வரப்பட்ட சமாசாரத்தை அவருக்குத் தெரியும்படி முன்னே ஆள் அனுப்பினார்.

**வேண்டவே வேண்டாம்!**

கலிக்காம நாயனார், அந்த ஆளினாலே சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய வரவை அறிந்து, "எங்கள் கடவுளைத் தூதனுப்பினவன் சூலை நோய் தீர்ப்பதற்கு வந்தால் நான் செய்வது என்ன? அவன் இங்கே வந்து தீர்ப்பதற்கு முன்னே இந்தச் சூலை நோயை வயிற்றினோடும் கிழிப்பேன்," என்று உடைவாளினாலே தன் வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்து போனார்.

அவர் மனைவியார் அதையறிந்து தானும் உடன் கட்டை ஏற யத்தனப்பட்டார். அப்போது சுந்தரமூர்த்தி சுவாமிகள் சமீபத்தில் வந்துவிட்டார் என்று முன்னே வந்தவர் சொல்ல அவர் மனைவியார், "ஒருவரும் அழாதிருங்கள்," என்று சொல்லி,பின்பு தம்முடைய நாயகர் செய்கையை மறைத்து, சுந்தரமூர்த்தி சுவாமிகளை எதிர்கொள்ளும் பொருட்டு தங்கள் பந்துக்களை அனுப்ப அவர்கள் போய் எதிர்கொண்டு வணங்கினார்கள்.

**பின்னையார் வந்தார்**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர்களுக்கு அருள் செய்து கலிக்காம நாயனார் வீட்டில் நுழைந்து தனக்குச் செய்த அருச்சனைகளை அங்கீகரித்து, "கலிக்காம நாயனாருடைய சூலையை நீக்காமல் அவருடன் இருப்பதற்கு மிகவும் வருந்துகின்றேன்," என்றார். அப்பொழுது மனைவியாருடைய ஏவலால் வீட்டு வேலைக்காரர் அவரை வணங்கி நின்று, "சுவாமி! அவருக்குத் தீங்கு ஒன்றும் இல்லை, உள்ளே படுத்துக்கொண்டிருக்கின்றார்," என்று சொல்லச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் "தீங்கு ஒன்றும் இல்லை என்றீர்! ஆயினும் என் மனம் தெளியவில்லை. ஆதலால் நான் அவரைக் காண வேண்டும்," என்றார்.

அவர்கள், அதுகேட்டு, கலிக்காம நாயனாரைக் காட்டச் சுந்தரமூர்த்தி சுவாமிகள், இரத்தம் சோரக் குடல் சரிந்து உயிர் போய்க் கிடந்தவரைக் கண்டு, இவ்விடத்தில் நான் வந்ததே நல்லது, இனி இவர் போல நானும் இறந்து போவேன், என்று சொல்லி உடைவாளை எடுத்தார்.

உடனே பரமசிவனுடைய திருவருளால் கலிக்காம நாயனார் உயிர்பெற்று எழுந்து, அவர் கையில் பிடித்த வாளைப் பிடித்துக்கொள்ள அவர் விழுந்து வணங்கினார். கலிக்காம நாயனாரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளை வணங்கினார். அப்பால் இருவரும் அதிக விருப்பமுள்ளவராகி திருப்புன்கூருக்குப் போய் சுவாமி தரிசனம் செய்து சிலநாள் அங்கிருந்து பின்பு திருவாரூரை அடைந்தார்கள்.

கலிக்காம நாயனார் சிலநாள் அங்கே சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்து பின்பு சுந்தரமூர்த்தியிடத்திலே அனுமதி பெற்றுத் தம்முடைய ஊருக்குத் திரும்பி வந்து திருத்தொண்டு செய்து கொண்டிருந்து சிவபதம் அடைந்தார்.

**ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்**



# வம்பறாவரிவண்டுச் சருக்கம்

*31. திருமூல நாயனார்*

**கலி**

*கயிலாசத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்*
*காவிரிசூழ் சாத்தனூர்க் கருது மூலன்*
*பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும்*
*பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்து போத*
*வயலாகப் பண்டையுட லருளான் மேவி*
*யாவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக்*
*குயிலாரு மரசடியி லிருந்து கூறிக்*
*கோதிலா வடகயிலை குறுகி னாரே!*

**சிவயோகியார் வருகை**

திருக் கைலாசத்திலே பரமசிவனுடைய ஆலயத்துக்கு முதல் நாயகராகிய திருநந்தி தேவருடைய மாணாக்கர் களாகிய சிவயோகிகளில் ஒருவர், அகத்திய மகாமுனிவரிடத்தில் பொருந்திய விருப்பத்தினாலே அவருடன் சில நாள் இருப்பதற்கு, அவர் வீற்றிருக்கின்ற பொதிய மலையை அடையும் பொருட்டு, திருக்கைலாயத்தை விட்டு வழிகொண்டு திருக்கேதாரம், பசுபதிநேபாளம், காசி, காளத்தி, திருவாலங்காடு, திருக்காஞ்சிபுரம், திருவதிகை, சிதம்பரம் என்கிற திருத்தலங்களை வணங்கிக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்து சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தார்.

**மூலன் இறந்து கிடந்தான்!**

அப்போது ஒருநாள் அந்தத் திருத்தலத்தை அகன்று போகும் போது காவிரியாற்றங்கரையிலுள்ள புறவிலே பசுக்கூட்டங்கள் அழுதலை எதிரே கண்டார். அவ்விடத்திலே சாத்தனூரில் இருக்கின்ற மூலன் என்னும் பெயரையுடைய இடையன், அவைகளை மேய்க்கின்ற அவன், அந்தத் தினத்திலே அவ்விடத்திலே இறந்து கிடந்தான்.

**பசுக்களின் கதறல்**

அந்தப் பசுக்கூட்டங்கள் அவனுடைய சரீரத்தை அணைந்து சுற்றிக்கொண்டு மிகவும் கதறி அவனையே முகந்து கொண்டிருந்தது. அதைச் சிவயோகியார் கண்டு பரமசிவனுடைய திருவருளினாலே இந்தப் பசுக்களுடைய துயரத்தை நீக்க வேண்டும் என்று ஆலோசித்து இந்த இடையன் உயிர்பெற்று எழுந்திருக்காவிட்டால் இந்தப் பசுக்கள் துயரம் நீங்காது என்று திருவுளங்கொண்டு தம்முடைய சரீரத்துக்கு அரண் செய்து, தான் அந்த இடையனுடைய சரீரத்தினுள்ளே பிரவேசித்துத் திருமூலராய் எழுந்தார்.

**மூலன் திருமூலரானார்**

இவர் எழுந்திருந்தபின்பு இவரை நக்கி மோந்து கனைத்து மிகுந்த களைப்பினாலே வாலெடுத்துத் துள்ளிப்போய் மேய்ந்தது. திருமூல நாயனார் அது கண்டு திருவுளம் மகிழ்ந்து, அவைகளை நன்றாக மேய்த்தார். சூரியன் மறைகிற சமயத்தில் பசுக்கள் தங்கள் தங்கள் கன்றுகளை நினைத்து தாமே சீக்கிரமாய் நடந்து சாத்தனூரை அடைந்தன. சிவயோகியாகிய திருமூலர் அந்தப் பசுக்களின் பின் போய் அவைகளெல்லாம் வீடுகள் தோறும் புகுந்தபின் தான் தன் வீட்டில் போய் நின்றார்.

**மூலன் மனைவியார்**

பின்பு மூலனுடைய மனைவி, நாயகர் இன்றைக்கு மிகத்தாழ்ந்தார் என்று பயங்கொண்டு, அவர் சமீபத்தில் சென்று இவருக்குக் குறை அடுத்தது போலிருக்கிறது என்று எண்ணி அவருடைய சரீரத்தைத் தீண்ட அதற்கு அவர் சம்மதிப்படாதவரானார். அவள் அதைக் கண்டு அச்சுற்று மயங்கி என்ன செய்தீர் என்று தளர, திருமூல நாயனார், "உனக்கு என்னோடு யாதொரு சம்பந்தமும் இல்லை," என்று தடுத்துப் போய் ஒரு மடத்தினுள்ளே நுழைந்து சிவயோகத்திலிருந்தார்.

**மனைவியார் துயரம்**

அவர் மனைவியார் அன்று இரவு முழுதும் உறக்கம் கொள்ளாமல் கவலை கொண்டிருந்து மற்ற நாள் அதைப் பல விவேகிகளுக்குத் தெரிவிக்க அவர்கள் வந்து அவரைப் பார்த்து, "இது பைத்தியம் அன்று, வேறு சார்பும் அன்று, இவர் கருத்து சிவயோகத்தில் இருக்கின்றது. இனி இவர் உங்கள் சுற்றவியல்போடு கூடார், என்று அவர் மனைவியாரிடம் சொன்னார்கள். அவள் அதைக் கேட்டுத் துயரம் அடைந்து மயங்க அவர்கள் அவளைக் கொண்டு அகன்றார்கள்.

**திருமூலம் பிறந்தது**

சிவயோகத்திலிருந்த திருமூல நாயனார் எழுந்திருந்து முதல் நாளிலே பசுக்கள் வந்த வழியே போய் தான் சேமித்து வைத்த சரீரத்தைப் பார்க்க, அஃது இல்லாமையால், அதை மெய்ஞ்ஞானத்தால் ஆராய்ந்து பரமசிவன் ஆதிகாலத்தில் தன்னுடைய பஞ்சவர்க்கத்தினின்றும் தோன்றிய காமிகம் முதலாகிய சைவாகமங்களில் பேசப்பட்ட மெய்ப் பொருளைத் தமிழ் நாட்டில் உள்ளவர்களுக்கு

உபயோகமாகும் பொருட்டு, தம்மைக் கொண்டு தமிழினால் ஒரு நூல் செய்வித்தற்பொருட்டு அந்த சரீரத்தை மறைத்தருளினார் என்று தெளிந்து திருவருளைத் துதித்து திருவாவடுதுறையை அடைந்து அங்குள்ள சிவாலயத்தில் பிரவேசித்துப் பரமசிவனை வணங்கி அதற்குப் புறக்கடைப் பக்கத்திலே இருக்கின்ற அரசமரத்தின் கீழே போய் அவ்விடத்தில் மூவாயிரம் ஆண்டளவும் சிவயோகத்தி லிருந்து ஒவ்வோர் ஆண்டிற்கும் ஒவ்வோர் திருப்பாட்டாக மூவாயிரம் திருப்பாட்டினால் சைவாகமங்களிலே பிரதி பாதிக்கப்பட்ட சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் பேசுகின்ற திருமந்திரம் என்னும் தமிழ் நூலைப் பாடியருளிய பின்பு கைலாசத்தை அடைந்தார்.

**நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்!**





## வம்பறாவரிவண்டுச் சருக்கம்

*32. தண்டியடிகள் நாயனார்.*

**கவி**

திருவாரூர் வருந்தண்டி யடிகள் காட்சி
சேராதார் குளந்தொட்டற் கமணர் சீறிக்
குருடா நீ முன்செவிடுங் கூடிற் றென்று
குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத் தங்கண்
அருளாலே விழித் தெவரும் அந்தக ராக
அமணர்கலக் கம்பலகண் டவர்கள் பாழிப்
பருவான்கற் பறித்தாவிக் கரையுங் கூட்டிப்
பரனருளா லமருலகம் பற்றி னாரே!

**கதை**

**தண்டியடிகள்**

சோழ நாட்டிலே திருவாரூரிலே தண்டியகள் நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பிறவிக் குருடர். அவர் தம்முடைய அகக் கண்ணினாலே பரமசிவனைத் தரிசித்துத் தோத்திரம் பண்ணுகின்றவர். எப்பொழுதும் திரு ஐந் தெழுத்தை மிகுந்த அன்பினோடு செபிக்கின்றவர். அந்தத் திருப்பதியிலுள்ள கோயிலை நாள்தோறும் மூன்று காலமும் வலம்செய்கின்றவர்.

**குளம் தொட்டார்**

இப்படியிருக்கும் நாளிலே ஆலயத்துக்கு மேற்குத் திக்கில் இருக்கின்ற திருக்குளம் பக்கம் எங்கும் சமணர்களுடைய பாழிகளாகி இடமில்லாததினால் அந்தக் குளம் சிறிதாயிருப்பதால் தண்டியடிகள் நாயனார் அதனைப் பெருகக் கல்லல் வேண்டும் என்று நினைத்து அவ்விடத்தில் போய் குளத்தினுள்ளே கல்லும் இடத்தில் மரம் நட்டு அதில் கயிறு கட்டி மண்வெட்டியையும், கூடையையும் எடுத்துக்கொண்டு கரைமேல் நட்டமரத்தில் கட்டிய கயிற்றிலே தடவிக்கொண்டு போய் மண்ணைக் கவ்வி கூடையில் எடுத்துக்கொண்டு பின்பு அந்தக் கயிற்றைத் தடவிக் கொண்டே போய் கரையிலே அந்த மண்ணைப் போடுவார்.

**சமணர்கள் பொறாமை**

இந்தப்படி தினந்தோறும் மிகுந்த விருப்பத்துடன் திருக்குளம் வெட்டும் பொழுது, சமணர்கள் பொறாமை கொண்டு அவரைச் சேர்ந்து "மண்ணைக் கல்லில் பிராணிகள் இறந்து போகும், அதை வருத்தல் வேண்டாம்," என்று சொல்ல, தண்டியடிகள் "இது மெய்க்கடவுளராகிய பரமசிவனுக்குச் செய்யும் குற்றமற்ற புண்ணியம், இதன் அருமை உங்களுக்குத் தெரியுமா?" என்றார்.

**கேள்விக்குப் பதில்**

சமணர்கள் அதைக் கேட்டு, "நாம் சொன்ன தரும முறையை நீ கேட்கவில்லை, நீ கண்ணில்லாததும் தவிர காதையும் இழந்தனையோ?" என்றார்கள். தண்டியடிகள் "மந்தபுத்தியும் காணாக் கண்ணும் கேளாச் செவியும் உங்களுக்கே உள்ளது," என்று சொல்லி "திரிபுரதகனம் செய்த கடவுளுடைய திருவடிகளே அல்லாமல் வேறொன்றையும் நான் காணேன், அதை அறிதற்கு நீங்கள் யார்? அந்தக் கடவுளுடைய திருவருளினால் உலகமெல்லாம் அறியும்படி என் கண் தெரியவும் உங்கள் கண் குருடாகவும் பெற்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்றார்.

**அடாச் செயல் செய்தனர்**

"நீ உன் கடவுளுடைய அருளினால் கண் பெற்றாயாகில் நாங்கள் இந்த ஊரைவிட்டு ஓடிப் போகிறோம்," என்று சொல்லி அவருடைய மண் வெட்டியையும் குறித்தறிகளையும் பிடுங்கி எறிந்தார்கள். அப்போது தண்டியடிகள் மிகவும் கோபித்து கோயில் வாயிலிலே போய் வணங்கி, "சுவாமி! இன்றைக்குத் தேவரீரை நிந்தனை செய்கின்ற சமணர்கள் திருக்குளம் கல்லுதலாகிய சிவபுண்ணியத்தையும் அதைச் செய்கின்ற அடியேனையும் அவமானம்செய்ததால் அடியேன் அது பொறாமல் மிக வருந்துகின்றேன். சர்வசாமர்த்தியம் உள்ள தேவரீர் இந்த வருத்தத்தை நீக்கியருள வேண்டும்" என்று பிரார்த்தித்து வணக்கம் செய்து தன்னுடைய திருமடத்தில் போய் அழுது கொண்டிருந்தார்.

**இறைவன் அருள்**

அன்று இரவு அவர் உறங்கும் பொழுது பரமசிவன் அவருக்குக் கனவிலே தோன்றி "தண்டியே! நீ உன் கவலையை ஒழி, நாளைக்கு உன் கண் தெரியவும், அந்தச் சமணர்களுடைய கண்கள் மறையவும் அருள் செய்வோம், பயப்படாதே!," என்று அருளிச் செய்து, சோழ மன்னருக்கும் கனவிலே தோன்றி," தண்டியென்பவன் நமக்குக் குளம் கல்ல எத்தனித்தான், சமணர்கள் அது கண்டு பொறாமல் அந்த வேலைக்கு விக்னம் செய்தார்கள். நீ அவனிடத்தில் போய் அவன் கருத்தை முடி," என்று கட்டளையிட்டு மறைந்தருளினார்.

**முறையீடு**

சோழ மன்னன் விழித்தெழுந்து பரமசிவனை வணங்கி மற்றாநாள் காலமே தண்டியடிகளை அடைந்து தான் கண்ட கனவைச் சொல்ல, தண்டியடிகள், "மன்னவரே! நான் திருக்குளம் கல்லும் போது சமணர்கள் வந்து அது தருமம்

அல்லவென்று பல சொல்லி நான் நட்ட குறித்தறிகளைப் பிடுங்கி, என்னை வலி செய்து, மண்வெட்டியைப் பறித்துக் கொண்டார்கள். இன்னும் நீ கண் கெட்டதுமல்லாமல் காதும் கெட்டதோ?'' என்றார்கள்.

**மன்னவன் வந்தான்**

அதற்கு நான், “எங்கள் பரமசிவனுடைய திருவருளினாலே என் கண் தெரியவும் உங்கள் கண்கள் மறையவும் பெற்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்? என்று கேட்க, அதற்கு அவர்கள் இந்த ஊரில் இரோம், என்று ஒட்டினார்கள். இனி நீர் நிகழ்வதைக் கண்டு இந்த வழக்கை முடித்தல் வேண்டும்,'' என்றார்.

அப்பொழுது அரசன் சமணர்களை அங்கே அழைத்துக் கேட்க, அவர்கள் அதற்கு உடன்பட்டார்கள். தண்டியடிகள் அது கண்டு முன்போக, அரசன் பின்னே போய் திருக்குளக் கரையில் நின்று, தண்டியடிகளைப் பார்த்து, “சிவபக்தரே! நீர் பரமசிவனுடைய திருவருளினாலே கண்பெறுதலைக் காட்டும்“ என்று சொல்ல, “தண்டியடிகள், பரமசிவனே மெய்க்கடவுளாயும் சிறியேன் அவருக்கு அடியானுமாகில் இந்தஅரசருக்கு முன்னே நான் கண் பெற்று சமணர்கள் கண் இழப்பர்,'' என்று சொல்லி திருஐந்தெழுத்தை உச்சரித்துக் கொண்டு திருக்குளத்திலே முழுகி எழுந்தார். அப்போது அவருடைய கண் தெரிந்தது. சமணர்கள் கண் இழந்து தடுமாறினார்கள்.

**சமணர் பட்டபாடு**

அரசன் அதைக் கண்டு ஏவலாளரை நோக்கி “தண்டியடிகளுடனே ஒட்டி, கெட்ட சமணர்களைத் திருவாரூரை விட்டு நீங்கிப் போகும்படித் துரத்துங்கள்,'' என்று ஆணையிட, அவர்கள் அந்தப்படிக்குத் துரத்தவும் சமணர்கள் கண் தெரியாமையால் மனம் கலங்கிப் பள்ளங்களிலே விழுவார்கள். கோலும் இல்லையே

என்பார்கள். இது வழி என்று தூற்றை அடைவார்கள். பொய்ப் பொருளை மெய்ப்பொருள் என்று கொண்டு அழிந்தோம் என்பார்கள். பாய்களை இழப்பார்கள், பீலிகளைத் தடவிக் காணாமல் திரும்புவார்கள். மயங்கி நிற்பார்கள்,கலும் கையும் முறிய கற்களின் மேல் இடறி விழுவார்கள். மிக நெருங்கி ஒருவரை ஒருவர் முட்டிக் கொள்வார்கள். ஓடுகிறதற்கு வழி அறியாமல் மயங்குவார்கள்.

இந்தப் பிரகாரம் சமணர்கள் கலக்கங் கொண்டு ஓடிய பின்பு சோழ மன்னர் சமணர்களுடைய பாழிகளையும் பள்ளிகளையும் பறித்துத் திருக்குளத்துக்குக் கரை கட்டி மனமகிழ்ந்து தண்டியடிகளை வணங்கிக்கொண்டு போயினார்.

பின்பு தண்டியடிகள் பரமசிவனைத் தியானித்து திருஐந்தெழுத்தை உச்சரித்து திருத்தொண்டு செய்து கொண்டிருந்து முடிவில் சிவபதம் அடைந்தார்.

**நாட்டமிகு தண்டிக்கும் அடியேன்!**

# வம்பறாவரிவண்டுச் சருக்கம்

*33. மூர்க்க நாயனார்*

**கலி**

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட் டூர்வாழ்
தொல்லுழவர் நற்சூதர் சூது வென்று
கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுத ளிக்கும்
கொள்கையினால் திருக்குடந்தை குறுகி யுள்ளார்
விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்பு நாமம்
எண்டிசையும் மிகவுடையார் அன்பர் போற்றும்
ஏழுலகும் உடனாளும் இயல்பி னாரே.

**கதை**

**சிவனடியார் தொண்டு**

தொண்டை நாட்டிலே திருவேற்காட்டிலே வேளாளர் குலத்திலே தலைமை பெற்ற ஒருவர், தினந்தோறும் சிவனடியார்களைச் சிவனென்ன வணங்கித் துதித்து அமுது செய்வித்து பின்புதான் உண்பார். மேலும் அவர்கள் விரும்பும் பொருளைக் கொடுப்பவராய் ஒருவர் இருந்தார்.

அவர் இப்படிச் செய்துவரும் நாளிலே அடியார்கள் அநேகர் வருகின்றதால் அவர் தம்மிடத்திலுள்ள திரவியங்களெல்லாம் செலவாகிவிட அடிமை நிலம் முதலியவற்றை விற்று மாகேசுவர பூசையை வழுவாது மனமகிழ்ச்சியோடு செய்து வந்தார்.

**மாகேசுவர பூசை**

அதன் பின்பு மாகேசுவர பூசை செய்வதற்குச் செலவுக்குப் பொருள் இல்லாமையால் கவலை கொண்டு தான் முன்னே கற்றுக் கொண்ட சூதினாலே சம்பாதிக்க நினைத்து அந்த ஊரிலே சூதாடப் பட்டவர்கள் இல்லாமையாலே அந்த ஊரை விட்டு சிவத்தலந்தோறும் போய் சுவாமி தரிசனம் செய்து சூதாடி அதனால் வரப்பட்ட திரவியத்தைக் கொண்டு முன்போல மாகேசுவர பூசை நடப்பித்துச் சில நாளிலே கும்பகோணத்தை அடைந்தார். அங்கே சூதாடி பொருள் தேடி மாகேசுவர பூசை செய்தார்.

**சூதாட்டத்தில்**

சூதிலே முதல் ஆட்டத்திலே தான் தோற்றுப் பின் ஆட்டங்களிலெல்லாம் தானே வென்று அதனாலே பொருளாக்கிச் சூதிலே தடுத்தவர்களை உடைவாளை உருவி குத்தி நம் சூதர், மூர்க்கர் என்னும் பெயர்களைப் பெற்றார். சூதினாலே வரப்பட்ட பொருளை திருவமுது ஆக்குவோர்கள் கொள்ள தாம் தீண்டார்.

அடியார்கள் அமுது செய்த பின்தான் கடைப் பந்தியிலே அமுது செய்வார். இவர் இப்படிச் சில காலம் மாகேசுவர பூசை கொண்டிருந்து அந்த மகத்தாகிய சிவ புண்ணியத்தினாலே சிவபதம் அடைந்தார்.

**மூர்க்கர்க்கும் அடியேன்!**



# வம்பறா வரிவண்டுச் சருக்கம்

*34. சோமாசி மாற நாயனார்*

**கவி**

அம்பர்நகர் அந்தணர்சோ மாசி மாறர்
அன்பர்களாம் யாவர்க்கு மன்பினமு தளிப்பார்
உம்பர்நிகழ் வகையாகம் பலவுஞ் செய்யும்
உண்மையினா ரைந்தெழுத்து மோவா நாவார்
நம்பர்திகழ் திருவாரூர் நயந்து போற்று
நாவலர்கோ னடிபரவு நன்மை யாலே
இம்பர்தொழ வும்பர்பணிந் தேத்த மேலை
யேழுலகு முடனாளும் இயல்பி னாரே.

**கதை**

**மாறனார்**

சோழ மண்டலத்திலே திருவம்பரிலே அந்தணர் குலத்தில் சோமாசி மாற நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருஐந்தெழுத்தை மிகுந்த அன்பினோடு செபித்தலையே நித்திய நியமம் எனக் கொண்டவர்.

எந்தக் குலத்தாரானாலும் எந்தக் குணத்தாரானாலும் பரமசிவன் மேல் அன்புள்ளவராகில் அவர்களே நம்மை ஆள்பவர் என்னும் மெய்யறிவினை உடையவர். அந்த அன்பர்கள் தன் வீட்டுக்கு வந்தால் அவர்களை எதிக்கொண்டு வணங்கித் திருவமுது செய்விப்பார்.

பரமசிவனுக்கு விருப்பந்தரும் செயலாகிய யாகங்களைப் புகழ் பயன் முதலியன கருதாது வேதவிதிப்படி செய்பவர். அவர் திருவாரூரில் போய் சைவசமய ஆசார்யாராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை அடைந்து அவருடைய திருவடிகளிலே பக்தி பண்ணி அதனாலே சிவபதத்தைப் பெற்றார்.

**அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்!**



# வார்கொண்ட சருக்கம்

*35. சாக்கிய நாயனார்*

**கவி**

*சங்கமங்கை வருவேளாண் தலைவர் காஞ்சிச்*
*சாக்கியரோ டியைந்தவர்தந் தவறும் சைவத்*
*துங்கமலி பொருளுமுணர்ந் தந்த வேடந்*
*துறவாதே சிவலிங்கம் தொழுவோர் கண்டோர்*
*அங்கன்மலர்த் திருமேனி யழுந்தச் சாத்தி*
*யமருநாண் மறந்தொருநா ளருந்தாதோடிச்*
*செங்கலெறிந் திடுமளவின் மகிழ்ந்த நாதன்*
*திருவருளா லமருலகம் சேர்ந்து ளாரே!*

**கதை**

**பிறவி நீங்க**

திருச்சங்க மங்கையிலே வேளாளர் குலத்திலே உதித்த ஒருவர் பிறப்பு, இறப்புத்துன்பங்களை நினைத்துக் கவலை கொண்டு அவைகளில் நின்று நீங்கும் வழி எதுவென்று ஆராய்வாராயினார்.

அந்த நாளிலே காஞ்சிபுரத்தை அடைந்து பௌத்தர்களைச் சேர்ந்து அந்தப் பௌத்த சமயத்திலே பிரவேசித்து அந்தச் சமய சாத்திரங்களை வாசித்து அதன் பொருளை ஆராய்ந்தார்.

**தத்துவ ஞானம்**

அப்போது அந்தச் சமயம், சத்சமயம் அல்ல என்று அவருக்குத் தெரிந்து, மற்ற சமய நூல்களையும் ஆராய்ந்து அவைகளும் மெய்யல்ல என்று தெரிந்து, பரமசிவனுடைய திருவருள் கூடுதலால் அறிவிக்க அறியும் சித்தாகிய ஆத்மாக்களும் அந்த ஆத்மாக்களாலே செய்யப்படும் புண்ணியம், பாவம் என்னும் கருமங்களும் அந்தக் கருமங்களாலே பெறுகின்ற சுகம், துக்கம் என்கிற பலன்களும், அந்தப் பலன்களைக் கொடுக்கின்ற தானே அறியும் சித்தாகிய பதியும் எனப் பொருள்கள் நான்கு என்றும் அவைகளைப் பூர்வோத்திர விரோதமில்லாமல் யதார்த்தமாக உணர்த்தும் நூல் சைவசமய நூலே என்றும் அந்த நூல் உணர்த்தும் பதி, பரமசிவனே என்றும் அறிந்து கொண்டார்.

எந்த நிலையிலே நின்றாலும் எந்த வேடத்தை எடுத்தாலும் பரமசிவனுடைய திருவடிகளை மறவாதிருப்பதே பொருள் என்று கருதி தான் எடுத்த வேடத்தைத் துறவாமல் பரமசிவனை மிகுந்த அன்பினோடு இடைவிடாது தியானம் செய்வாராயினார்

**பஞ்ச சாதாக்கியம்**

சிசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்தரு சாதாக்கியம், கர்ம சாதாக்கியம் என்கிற பஞ்ச சாதாக்கியங்களுள் கர்ம சாதாக்கியமாகிய சிவலிங்கத்தின் மகிமையை உணர்ந்து தினந்தோறும் சிவலிங்க தரிசனம் செய்து கொண்டு பின்பு உணவு உண்ண வேண்டும் என விரும்பி நினைத்துச் சமீபத்தில் ஒரு வெள்ளிடையி லிருக்கின்ற சிவலிங்கத்தைத் தரிசித்து அத்யந்தம் ஆனந்தம் உள்ளவராகித் தாம் செய்யும் செயல் இஃது என அறியாமல் அருகிலே கிடந்த ஒரு செங்கல்லைக் கண்டு அதைப் பதைப்புடனே எடுத்து அந்தச் சிவலிங்கத்தின் மேலே எறிந்தார்.

**கல்லும் மலராயிற்று**

சிறு பிள்ளைகள் செய்யும் இகழ்வாகிய செய்கைகளும் தாய் தகப்பனுக்குப் பிரீதியாவது போல அந்தச் சாக்கிய நாயனாருடைய செய்கை பரமசிவனுக்குப் பிரீதியாயிற்று. அந்த நாயனார் அன்று போய் மற்றை நாள் அந்த நியமத்தை முடிப்பதற்கு அணைந்த பொழுது முதல் நாளிலே தான் சிவலிங்கத்தின் மேல் கல்லெறிந்த குறிப்பை நின்று ஆலோசித்து, நேற்று எனக்கு இந்த எண்ணம் வந்தது பரமசிவனுடைய திருவருளே என்று துணிந்து அதனையே திருத்தொண்டாக நினைத்து எப்போதும் அப்படியே செய்யக் கருதினார்.

எல்லாச் செயல்களும் சிவன் செயலே என்று தெரிந்தமையால் அந்த நியதியைத் தினந்தோறும் தவறாமல் அன்பினுடன் செய்ய அஃது ஆத்மாக்கள் தோறும் வியாபித்திருந்து எல்லாவற்றையும் அறியும் பரமசிவனுக்குச் சிறந்த திருத்தொண்டாகி முடிந்தது.

**ஒரு நாள்**

ஒரு நாள் அந்த நாயனார், திருவருளினாலே, மறந்து உணவு உண்ணப்புகும்பொழுது "இன்றைக்கு எங்கள் சுவாமியைக் கல் எறியாமல் மறந்து விட்டேன்," என்று எழுந்து அத்யந்த ஆசையுடன் மிகச் சீக்கிரமாகப் புறப்பட்டுச் சிவலிங்கத்தைச் சேர்ந்து ஒரு கல்லை எடுத்து அதன் மேல் எறிய, பக்திவலையிற் படுபவராகிய பரமசிவன், உமாதேவியோடு காளை வாகனராய் ஆகாயத்திலே தோன்றி அவரைத் தன்னுடைய திருவடியிலே சேர்த்தருளினார்.

**வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே**
**மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்.**



# வார்கொண்ட சருக்கம்

*36. சிறப்புலி நாயனார்*

**கதை**

திருவாக்கூ ரருமறையோ ருலக மேத்தும்
சிறப்புலியார் மறப்புலியா ருரிமேற் செங்கண்
அரவார்த்து தருமமேற் றார்க் கன்ப ரானார்க்
கமுதளிப்பார் ஒளிவெண்ணீ றணிந்த மார்பர்
பெருவரக்கான் மறைபரவி யாகம்போற்றும்
பெற்றியினா ரைந்தெழுத்தும் பிறழா தோதிக்
கருவாக்கா லிறைவன்றா ளிணைகள் சேர்ந்த
கருத்தினா ரெனையாவும் திருத்தி னாரே.

**கதை**

**பொன்னும் பொருளும் கொடுப்பார்**

சோழ நாட்டிலே திருவாக்கூரிலே அந்தணர் குலத்திலே சிறப்புலி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்கள் வந்த போது அவர்களை வணங்கிப் பிரிய வசனம் சொல்லி அமுது செய்வித்து அவர்களுக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுக்கின்றவர்.

**சிவாய நம**

திருஐந்தெழுத்தை அன்போடும் ஓதுபவர், மேலும் பரமசிவனைக் குறித்து யாகங்கள் செய்கின்றவர், அவர் இன்னும் பல சிவ புண்ணியங்களைச் செய்து கொண்டிருந்து சிவபதமடைந்தார்.

**சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்**



## வார்கொண்ட சருக்கம்

*37. சிறுத்தொண்ட நாயனார்*

**கலி**

பல்குமருத் துவரதிபர் செங்காட்டாங் குடிவாழ்
படைத்தலைவர் அமுதளிக்கும் பரஞ்சோதி யார்மெய்ச்
செல்வமிகு சிறுத்தொண்டர் சீர்காழி நாடன்
திருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன் தன்னை
நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைத் திடப்பின்
நன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப்
புல்கவரும் வயிரவர்தாம் மகிழ்ந்து மக வருளப்
போற்றியவர் சிவனருளே பொருந்தி னாரே.

**வசனம்**

**அமைச்சர் குடியினர்**

சோழ மண்டலத்திலே செங்காட்டாங்குடியிலே மந்திரிக் குலத்திலே பரஞ்சோதியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஆயுள் வேதங்களிலும் படைக்கலத் தொழில்களிலும், குதிரை ஏற்றம், யானை ஏற்றங்களிலும் மிகத் தேர்ந்தவர்.

**கலைகளிற் சிறந்தார்**

வேதாகமங்களையும் மெய்ப்பொருளையும் அறிதல் வேண்டும் என்னும் அவாவினோடு திருவருளை முன்னிட் டுப் பரீட்சித்து, பரமசிவனே மெய்க்கடவுளென்றும்

அவருடைய திருவடிகளை அடைதலே மோட்சத்துக்கு வழியென்றும் தெளிந்து அந்தத் திருவடிகளை அகோராத்திரம் இடைவிடாமல் தியானிப்பவர். சிவனடியார்களுக்கு எந்தக் காலமும் திருத்தொண்டு செய்பவர்.

**படைத்தலைவரானார்**

அவர் அரசனிடத்தில் அணுக்கராகி அவன் பொருட்டு யானை செலுத்திக்கொண்டு போய், அவனுக்குப் பகையாகிய அரசர்களையெல்லாம் வென்று அவர்கள் தேசங்களைக் கைக் கொண்டு அவனால் மதிக்கப் பெற்றவர்.

**வாதாவி வெற்றி**

இத்தகைய செய்கையையுடைய பரஞ்சோதி யாரானவர், ஒருமுறை உத்தர தேசத்திலே வாதாவி என்னும் நகரத்தில் போய் அந்நகரத்து அரசனை வென்று அங்குள்ள பலவகை இரத்தினங்களையும் திரவியங்களையும் யானைக் கூட்டம், குதிரைக் கூட்டம் இவைகளையும் கொண்டு வந்து தன் அரசன் முன் நிறைத்தார்.

அரசன் அவற்றைக் கண்டு அவருடைய யானை ஏற்றத்தின் வலிமையை அதிசயித்துப் புகழ்ந்து பேச, அதை அறிந்த மந்திரிகள் அரசனைப் பார்த்து, "மன்னர் மன்னவா! இவர் பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்கையால் இந்த உலகத்திலே இவருக்குச் சமமானவர்கள் ஒருவரும் இல்லை," என்றார்கள்.

அரசன் அதைக் கேட்டு பயந்து நடுநடுங்கி இரண்டு கண்களிலிருந்து அவலக் கண்ணீர் சொரிய, "இவர் எங்கள் பரமசிவனுடைய திருத்தொண்டர் என்பதை நான் அறியாமல் கொடிய போர் முனையிலே விட்டிருந்தேன். ஐயையோ!

இஃது எவ்வளவு கொடிய பாவம்?" என்று சொல்லி வருத்தம் அடைந்து பின்பு பரஞ்சோதியாரைப் பார்த்து, "சுவாமி! நான் செய்த இந்தக் குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்து வணங்கினான்.

அரசன் தன்னை வணங்குவதற்கு முன், தாம் அவனை வணங்கி "மன்னர் மன்னரே! நான் என் உரிமைத் தொழிலுக்கு உண்டாகிய செயலைச் செய்தேன். அதனாலே என்ன தீங்கு?" என்றார்.

**சிவத்தொண்டு செய்வீர்**

அரசன் அவருக்கு மிகுந்த நிதிக் கும்பல்களையும் விருத்திகளையும் கொடுத்து, "நீவிர், உம்முடைய நிலைமையை நான் அறியாததனால் நடத்திக்கொண்டு வந்தீர்! இனி என் மனக் கருத்தின்படி இசைந்து எனக்குப் பணி செய்வதை விட்டு நீவிர் விரும்பியபடி சிவனுக்கும் சிவனடியார்களுக்கும் திருத்தொண்டு செய்யும்," என்று உத்திரவு கொடுத்தான்.

பரஞ்சோதியார் அரசனிடத்தில் விடை பெற்றுக் கொண்டு தம்முடைய திருப்பதியில் போய்க் கணபதீச்சுவரத்தில் வீற்றிருக்கின்ற கடவுளை வணங்கி அவருக்குத் திருத்தொண்டுகளைச் செய்வாராயினார்.

**இல்லறம்**

திருவெண்காட்டு நங்கையென்னும் மனைவியாரோடு கூடி இல்லறத்தில் வாழ்ந்திருந்து நாள்தோறும் முன்னே சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்துப் பின்பு தான் உண்பார். சிவனடியார்களை மிக்க அன்பினோடு வழிபட்டு அவர் திருமுன்பே மிகச் சிறியராய் நடக்கின்றமையால் அவருக்குச் 'சிறுத்தொண்டர்' என்னும் பெயர் கொடுக்கப்பட்டது.

**மகப்பேறு**

கணபதீச்சுவரருடைய திருவருளினாலே அவருக்குத் திருவெண்காட்டு நங்கையாரிடத்தில் சீராளதேவர் என்னும் புத்திரர் அவதரித்தார். அந்தப் பிள்ளைக்கு ஐந்து வயதிலே வித்தியாரம்பம் செய்வித்தார். அந்த நாளிலே அந்தத் திருத்தலத்திற்கு எழுந்தருளி வந்த திருஞானசம்பந்த மூர்த்தியை எதிர்கொண்டு அழைத்து அவரை வணங்கித் துதித்து அவருடைய திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப் பெற்றார்.

**இறைவன் சோதனை**

பின்பு பரமசிவனானவர் சிறுத் தொண்ட நாயனாருடைய மெய்யன்பை அறிவதற்குத் திருவுளம் கொண்டு, உள் சமயங்கள் ஆறனுள் ஒன்றாகிய பைரவ வேடம் கொண்டு திருக்கைலாயத்தை விட்டு திருச்செங் காட்டாங்குடியை அடைந்து சிறுத்தொண்ட நாயனார் தம் வீட்டு வாயிற்படியில் போய், "சிறுத்தொண்டர் வீட்டில் இருக்கின்றாரா?" என்று கேட்டார்.

**பைரவர் வந்தார்**

தாதியாகிய சந்தன நங்கையார் முன் வந்து வணங்கி, "சுவாமி! அவர் சிவனடியார்களைத் தேடிக்கொண்டு போனார். தேவரீர் உள்ளே எழுந்தருளும்," என்றார். அதற்குப் பைரவர், "பெண்கள் இருக்கின்ற இடத்திலே நாம் தனியே வரமாட்டோம்," என்று அருளிச் செய்ய, திருவெண்காட்டு நங்கையார் அதைக்கேட்டு, இந்த அடியவர் போய் விடுவார்போல் இருக்கிறதே என்று பயந்து சீக்கிரமாய் வந்து, "சுவாமி! அடியேனுடைய நாயகர் எப்பொழுதும் சிவனடியாரை அமுது செய்விப்பவர், இன்றைக்கு ஒருவரையும் காணாமையால் தேடிப் போயினார், தேவரீருடைய திருவேடத்தைக் கண்டாரானால் மிகமகிழ்வார், இனித் தாழார், இப்பொழுதே வந்துவிடுவார்,

இவ்விடத்திலே எழுந்தருளி இரும்," என்று விண்ணப்பம் செய்ய, பைரவர், "நாம் உத்திர தேசத்திலே இருக்கப்பட்டவர், சிறுத்தொண்டரைக் காண வந்தோம், அவர் இல்லாததினால் நாம் இங்கே இருக்கமாட்டோம், கணபதீச்சுவரத்திலுள்ள திருவாத்தி மரத்தின் கீழே இருக்கின்றோம், அவர் வந்த மாத்திரத்தே அவருக்குத் தெரிவியுங்கள்," என்று சொல்லித் திருவாத்தி மரத்தின் கீழ் இருந்தருளினார்.

**எங்கும் தேடினார்**

சிறுத்தொண்ட நாயனார் சிவனடியார்களைத் தேடி எங்கும் காணாமல் வீட்டுக்குத் திரும்பி வந்து மனைவியாருக்குச் சொல்லித் துக்கித்தார். மனைவியார் "உத்தர தேச வாசியாகிய ஒரு பைரவர் இங்கே வந்தார், அவரை நாங்கள் இங்கே எழுந்தருளி இருக்கும்படிச் சொன்னோம். அவர் அதைக் கேளாமல் கணபதீச்சுவரத்திலுள்ள திருவாத்தி மரத்தின் கீழே போய் இருக்கின்றோம் என்றார்," எனக் கூறினார்.

உடனே சிறுத்தொண்டர் மிகுந்த விருப்பத்தினோடு சீக்கிரமாய்ப்போய் அவரைக் கண்டு வணங்கி நிற்க அவர் "பெரிய சிறுத்தொண்டர் நீரோ?" என்று திருவாய் மலர்ந்தருளினார். சிறுத்தொண்டர் அவரை வணங்கி, "சுவாமி! சிவனடியார்கள் தங்கள் கருணை மேலீட்டினாலே அடியேனையே அப்படி அருளிச் செய்வார்கள். அது நிற்க - இன்றைக்குத் திருவமுது செய்வித்தற்குச் சிவனடியார்களைத் தேடியும் காணேன், இப்போது அடியேன் செய்த புண்ணியத்தினாலே தேவரீரைக் கண்டேன், தேவரீர் அடியேன் வீட்டுக்கு எழுந்தருளி வந்து திருவமுது செய்யவேண்டும்," என்று விண்ணப்பம் செய்ய, பைரவர், "அன்பரே! நாம் உத்தரதேசத்தில் வாசம், உம்மைக் காண வந்தோம், நம்மை அமுது செய்வித்தல் உம்மால் இயலாது. அதுமிக அருமை," என்றார்.

**பிள்ளைக்கறி வேண்டும்**

சிறுத்தொண்டர் "தேவரீர், அமுது செய்யும் இயல்பை அருளிச் செய்யும், சீக்கிரமாகப் பாகம் பண்ணுவிப்பேன்!" என்று சொல்ல, பைரவர் "நாம் ஆறுமாதத்துக்கு ஒரு தரம் பசுவைக் கொன்று உண்போம். அதற்கு உரிய நாளும் இன்றைய தினம்தான். அப்படியூட்டுதல் உம்மால் நடவாது," என்றார். சிறுத்தொண்டர் "மிக நன்று. அடியேன் அநேகம் பசுக்களை வைத்திருக்கின்றேன், தேவரீருக்குப் பிரீதியாகிய பசு இன்னதென்று அருளிச் செய்வீராகில் அடியேன் விரைந்து சென்று பாகம் செய்வித்துச் சீக்கிரத்தில் வருவேன்," என்று சொல்ல, பைரவர், "நாம் உண்பது நர பசு. அது ஐந்து வயதினை உடையதாகவும் அங்கக் குறைவு இல்லாததாயும், ஒரு குடிக்குத் தான் ஒரே பிள்ளையாயும் இப்படியிருக்க வேண்டும். அப்படிப் பட்ட சிறுவனை மனமகிழ்ச்சியோடு தாய்பிடிக்க, தகப்பன் அரிய வேண்டும். இப்படிச் சமைக்கப் பட்ட கறியே நாம் இட்டு உண்போம்," என்றார்.

**தாயும் உடன்பட்டார்**

சிறுத்தொண்டர், "தேவரீர் அமுது செய்வீராகில், அடியேனுக்கு இதுவும் அரிது அன்று," என்று சொல்லி அவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குப் போனார். சிறுத்தொண்டரை எதிர்பார்த்திருந்த அவர் மனைவியார், அவருடைய மலர்ந்த முகத்தைப் பார்த்து அவரை வணங்கி, அடியாருடைய செய்கையைக் கேட்க, அவர் மனைவியாரைப் பார்த்து, "ஒரு குடிக்கு ஒரே சிறுவனாகி, ஐந்து வயதை உடையவனாய், அவயவப் பழுதில்லாதவனுமாய் இருக்கின்ற பிள்ளையை மகிழ்ச்சியுடனே தாய் பிடிக்க, தகப்பன் அரிந்து சமைத்தால் அமுது செய்வதற்கு உடன்படுவேன் என்றார். அதற்கு நான் இசைந்து வந்தேன்" என்றார்.

அப்பொழுது மனைவியார், "அந்த அடியவர் விருப்பப்படி அமுது செய்விப்பதற்கு ஒரு குடிக்கு ஒரு பிள்ளையாய் ஐந்து வயதுடைய சிறுவன் எங்கே

அகப்படுவான்?" என்று சொல்ல, சிறுத்தொண்டர், "என் பிராண நாயகியே! வேண்டிய மிகுந்த திரவியங்களைக் கொடுத்தால் அப்பேர்ப்பட்ட பிள்ளையைக் கொடுக்கிறவர்கள் இருந்த போதிலும் எதிரே நின்று அந்தச் சிறுவனை அரியத் துணிகின்ற தகப்பன், தாயார், இல்லை. இனித் தாழாமல் நாம் பெற்ற சிறுவனையே அழைப்போம்" என்றார்.

மனைவியார் அதற்கு இசைந்து, "நம்முடைய பிள்ளையைப் பள்ளிக்கூடத்துக்குப் போய் அழைத்து வாரும்," என்று சொல்ல, சிறுத்தொண்டர் மனமகிழ்ச்சியோடு சீக்கிரமாய்ப் பள்ளிக் கூடத்தில் போய் தம் மகனாகிய சீராள தேவரை எடுத்துத் தோள் மேல் வைத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பி வந்தார்.

**பிள்ளைக்கறி சமைத்தார்**

மனைவியார் எதிரே வந்து புத்திரனை வாங்கி நீராட்டுச் செய்வித்து அலங்கரித்து நாயகர் கையில் கொடுத்தார். நாயகர் இதர மனிதர்களுக்குத் தெரியாதிருக்கும்படி ஒரு மறைவான இடத்தில் கொண்டு போனார். அப்போது மனைவியார் பாத்திரங்களைக் கழுவிக்கொண்டு போனார்.

தகப்பனார் அந்தப் பிள்ளையின் தலையைப் பிடிக்க, தாயார் அந்தப் பிள்ளையின் இரண்டு கால்களையும் தன்னுடைய மடியிலே இடுக்கி, அந்தப் பிள்ளையின் இரண்டு கைகளையும் தன் கைகளினாலே பிடிக்க, அப்போது அந்தப் பிள்ளை தன் தாயாரும் தகப்பனாரும் மிகவும் மகிழ்ச்சியடைகிறாரென்று சிரிக்க, தகப்பனார் மனமகிழ்ச்சியோடு ஆயுதத்தினாலே அந்தப் பிள்ளையின் தலையை அரிந்தார்.

அந்தத் தலை இறைச்சி திருவமுதுக்கு ஆகாது என்று கழித்து, அதை மறைத்து நீக்கும் பொருட்டுத் தாதியான சந்தன நங்கையார் கையில் கொடுத்து மற்றையுறுப்புகளின் இறைச்சிகளையெல்லாம் அறுத்துக் கொடுக்க, தாம் அதைப் பாகம் பண்ணி மற்ற மரக்கறிகளும் சாதமும் சமைத்து நாயகருக்குத் தெரிவித்தார்.

நாயகராகிய சிறுத்தொண்டர் பெருங்களிப்பை அடைந்து விரைந்து சென்று திருவாத்தி மரத்தின் கிழிருந்த பைரவரை வணங்கி, "சுவாமி! தேவரீர் அருளிச் செய்தபடி பாகம் பண்ணுவித்தேன், எழுந்தருளி வந்து திருவமுது செய்தருளல் வேண்டும்," என்று விண்ணப்பம் செய்து, அவரை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய் ஆசனத்தில் இருத்தி அவருடைய திருவடிகளைத் தூய நீரினால் கழுவி அந்த நீரினைத் தங்கள் சிரசின் மேல் தெளித்துத் தங்கள் வீடெங்கும் தெளித்து அவரை உபசாரத்துடன் அருச்சித்து வணங்கினார்.

மனைவியாகிய திருவெண்காட்டு நங்கையார் பரிகலம் திருத்தி அன்னமும் திருவமுதும் படைத்தார். பைரவர் அதைப் பார்த்து, "நாம் சொல்லியபடி பசுவினுடைய உறுப்புகள் எல்லாவற்றையும் பாகம் பண்ணினீரா?" என்று கேட்க திருவெண்காட்டு நங்கையார் "தலை இறைச்சி மாத்திரம் திருவமுதுக்கு ஆகாது என்று தள்ளி விட்டோம்," என்றார். பைரவர் "அதுவும் நாம் உண்பது," என்றார். சிறுத்தொண்டர் அதைக் கேட்டு மனைவியாரைப் பார்த்துத் திகைத்து சோர, சந்தன நங்கையார் அதையறிந்து, "நான் அந்தத் தலை இறைச்சியையும் பாகம் பண்ணி வைத்தேன்," என்று எடுத்துக் கொடுக்க திருவெண்காட்டு நங்கையார் முகம் மலர்ந்து அதை வாங்கிப் படைத்தார்.

**நாம் தனியே உண்ணோம்!**

அதன்பின் பைரவர், சிறுத்தொண்டரைப் பார்த்து, "நாம் தனியே உணவு உண்ணமாட்டோம், சிவனடியாரைக் கொண்டு வாரும்!" என்று அருளிச்செய்ய, சிறுத்தொண்டர் ஏங்கி "ஐயோ அடியவர் திருவமுது செய்வதற்கு இடையூறு இதுவோ?" என்று நினைந்து வீட்டுக்குப் பக்கத்திலே சிவனடியார்களைத் தேடி, காணாது துக்கத்தோடு திரும்பி வந்து பைரவரை வணங்கி, "சுவாமி! சிவனடியார்களைத் தேடியும் காணேன். அடியேன் திருநீறு இடுவாரைக் கண்டு அன்னம் கொடுப்பேன்," என்று சொல்ல பைரவர் சிறுத்தொண்டரைப் பார்த்து, "உம்மைப் போல திருநீறு இட்டவர் இருக்கின்றாரோ? நீர் இருந்து உண்ணும்," என்று சொல்லி, பின்பு திருவெண்காட்டு நங்கையரைப் பார்த்து, "இவருக்குச் சோறும் கறியும் படை," என்று அருளிச் செய்ய அவரும் அப்படியே படைத்தார்.

**உன் மகன் எங்கே?**

சிறுத்தொண்டர் பைரவருக்கு ஊட்ட வேண்டித் தான் சாப்பிடுவதற்குப் பிரவேசித்த மாத்திரத்தில் பைரவர் தடுத்து "ஆறு மாதத்துக்கு ஒரு தரம் சாப்பிடுகின்ற நான் சாப்பிடுமளவும் பொறுக்காமல் எப்போதும் சாப்பிடுகின்ற நீர் முன் சாப்பிடுவது ஏன்? உம்முடன் சாப்பிடும் பொருட்டு உமக்குப் புத்திரன் இருந்தால் அழையும்," என்றார். சிறுத்தொண்டர். "இப்போது அவன் வரமாட்டான்," என்று சொல்ல, "அவன் வந்தால்தான் நாம் திருவமுது கொள்ளுவோம், தேடி அழையும்" என்று பைரவர் சொன்னார்.

சிறுத்தொண்டர் எழுந்து மனைவியாரோடு வீட்டுக்குப் பக்கத்திலே போய், "புதல்வனே! வா" என்று அழைக்க,

மனைவி யாரும் நாயகருடைய உத்தரவின் படி நின்று, "சீராளனே சிவனடியார் அடியேங்கள் பிழைத்துக் கடைத்தேறும் பொருட்டு, கூட அமுது செய்ய உன்னை அழைக்கின்றார் வா," என்று அழைத்தார்.

அப்பொழுது அந்தச் சீராள தேவன், பரமசிவனுடைய திருவருளினாலே பள்ளிக்கூடத்திலிருந்து ஓடி வந்தார். தாயார் அவரை எடுத்துத் தழுவி நாயகர் கையில் கொடுக்க, அவர் "இனி சிவனடியார் அமுது செய்யப் பெற்றோம்" என்று மனமகிழ்ந்து அந்தப் பிள்ளையைச் சீக்கிரமாக எடுத்துக்கொண்டு அடியவரைத் திருவமுது செய்விப்பதற்கு உள்ளே வந்தார்.

**பைரவர் மறைந்தார்**

அதற்கு முன் பைரவர் மறைத்தருள சிறுத்தொண்டர் அவரைக் காணாமல் மனம் கலங்கித் திகைத்து விழுந்தார். கலத்திலே இறைச்சிக் கறியமுதைக் காணாமையால் அச்சமுற்றார். "பைரவர் அடியேங்கள் பிழைக்கும் பொருட்டுத் திருவமுது செய்யாமல் எங்கே ஒளித்தாரோ!," என்று தேடி மயக்கம் கொண்டு புறத்திலே செல்ல, அந்தச் சிறுத்தொண்டர் செய்தது நிசேதானுட்டமாயினும் அவர் சிவானந்தானுபவம் மேலிட்டு நிற்கையால் கருவி கரணங்கள் தத்போத சீவிப்பாய் எழுந்து செய்தமை பற்றி அதனை விகிதானுட்டானமாகவே கொண்டருளிய பரமசிவன் அயன், அரி முதலான தேவர்கள், முனிவர்கள் முதலானவர்கள் சேவிக்க உமாதேவியாரோடும் சுப்பிரமணியரோடும் இடபாரூடராய் ஆகாயத்திலே தோன்றியருளினார்.

சிறுத்தொண்டரும் மனைவியாரும் பிள்ளையும் தாதியாரும் அவர்களைத் தரிசித்து ஆனந்த அருவி சொறிய

எலும்பும் மனமும் நெக்குநெக்குருகப் பரவசமாய் விழுந்து வணங்கி எழுந்து கூப்பிய கரங்களை உடையராய் நின்று தோத்திரம் பண்ணினார்கள்.

பின்பு பரமசிவனும் பார்வதியம்மையும் சுப்பிரமணிய சுவாமியும் அவர்கள் நால்வரையும் தங்களை எக்காலமும் வணங்கிப் பிரியாமல் பேரின்பத்தை அனுபவித்துக் கொண்டு இருக்கும் பொருட்டு இட்டுக்கொண்டு திருக்கைலாயத்தை அடைந்தார்கள்.

**செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்!**



## வார்கொண்ட சருக்கம்

*38. சேரமான் பெருமாள் நாயனார்*

**கவி**

காவலர்ம கோதையார் கொடுங்கோளூர்க் கோக்
கழறியவை யறிந்தகோச் சிலம்போசை கருத்தார்
நாவலர்கோ னண்பரடிச் சேரனென்றே
நவின்றுவரும் வண்ணானை நயந்த கோநற்
பாவலர்கோப் பாணபத்திரனால் வாய்ந்த
பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின்
மேவியகோ வானைக்குக் குதிரை வைத்த
வீரர்கோ வெனையாளும் சேரர் கோவே.

**கதை**

மலை நாட்டின் தலைநகராகிய கோதை என்னும் பெயருடைய கொடுங்கோளூரிலே சேரர் குடியிலே பெருமாக் கோதையார் என்னும் பெயரையுடைய ஒரு சத்புத்திரர் சைவநெறி வாழும்படி அவதரித்தார்.

**வைராக்கியம் பத்து**

அவர் பால்ய திசையிலே தானே வியாதி பீடையினால் வரப்பட்ட சனன வைராக்கியம், தன்னுடைய தேக தோடத்தைக் கண்டு வரப்பட்ட தேகவைராக்கியம், சகல சம்பத்துக்களையும் குறைவில்லாமல் அனுபவித்து இனிப்போதும் என்று வரும் ஐசுவரிய வைராக்கியம், பௌதிகங்களினாலே வருகின்ற பிரபஞ்ச வைராக்கியம், திரவியத்தைத் தேடுவதினாலும் அதை இரட்சித்தலினாலும்

அதைத் திருடர் கொண்டு போதலினாலும் உண்டாகும் துக்கம் பற்றி வரும் திரவிய வைராக்கியம், மாதா பிதா, களத்திர, புத்திர ட்ட பந்து சிநேகித இவர்களைப் பிரிந்த துக்கத்தினாலே கூட்டமெல்லாம் பிரிந்த காலத்திலே துக்கத்துக்கு ஏது என்று வரும் சங்க வைராக்கியம் காமுகனாய் இருக்கின்றவன் தான் மோகித்த பெண்ணிடத்திலே குணத்திலாயினும் தேகத்தி லாயினும் வைராக்கிய ஏதுவாகிய ஒரு தோடத்தைக் கண்டபோது வரும் பெண் வைராக்கியம், அன்ன பாநாதிகள் ஒரு பொழுது இல்லாதிருப்பினும் தேகம் நில்லாது எத்தனை நாள் எத்தனை வகையாகப் புசித்தாலும் திருப்தி அடையாது என்று வரும் போசன வைராக்கியம், தானத்துக்குப் போய்த் தள்ளுண்டதனால் வரும் பிரதிக் கிருக வைராக்கியம், இகத்திலே இப்படிப்பட்ட ஓர் ஏதுவும் இல்லாமல் பூர்வ ஜென்ம சிவ பூசா புண்ணிய பலத்தினாலே தேகாதியாகிய சர்வ பொருட்களிலும் வரும் வைராக்கியம் பத்து. வைராக்கியங் களுள் கடைசியில் சொல்லிய நிர்கேதுகமாகிய உத்தம வைராக்கியத்தை உடையவராகி பரமசிவனுடைய திருவடியை அடைதல் வேண்டும் என்று நினைத்து அரசர்களுக்குரிய தொழில்களை விட்டு திருவஞ்சைக்களம் என்னும் திருத்தலத்தை அடைந்து பரமசிவன் சுவதந்திரர், நாம் பரதந்திரர் என்று அறிந்து சுவாதீனமாய் நின்று தினந்தோறும் பிரும்ம முகூர்த்தம் என்கிற சூர்யோதயத்தில் எழுந்து நீராடி அனுட்டானம் செய்துகொண்டு திருநந்தவனம் வைத்தல், பூக்கள் பறித்தல், திருமாலை கட்டல், திருவலகிடல், திருமெழுகிடல், திருப்பாட்டுப் பாடல் முதலிய திருத்தொண்டுகளைச் செய்வாராயினர்.

**செங்கோல் பொறையன்**

இப்படி நடத்தும் காலத்திலே செங்கோல் பொறையன் என்கிற சேரமன்னனுக்கு இது நித்தியம், இது அநித்தியம் என்கிற பகுத்தறிவும் அநித்தியமாகிய இம்மை மறுமை இன்பங்களில் வெறுப்பும் பிறவித் துன்பங்களும் அவன் செய்த புண்ணிய பலத்தினாலே தோன்றின. அவை

தோன்றவே நித்தியமாகிய மோட்சத்திலே ஆசை உண்டாயிற்று. அதனால் அவன் பிறவிக்குக் காரணமாகிய வீண் முயற்சிகளை விட்டு மோட்சத்துக்குக் காரணமாகிய யோக முயற்சியைச் செய்ய வேண்டும் என்று தெளிந்து அரசு செய்வதை விட்டுத் தவம் செய்யும் பொருட்டு தபோவனத்தை அடைந்தான்.

மந்திரிமார்கள் சில நாள் ஆலோசித்துத் தெளிந்து திருவஞ்சைக் களத்திலே திருத்தொண்டு செய்து கொண்டிருக்கின்ற அந்தச் சேர மரபிற்கு முதல்வராகிய பெருமாக் கோதையாரிடத்திலே போய் அவரை வணங்கி நின்று, இந்த மலை நாட்டை நீரே முடிசூடி அரசியற்றல் வேண்டும், என்று விண்ணப்பம் செய்ய பெருமாக் கோதையார், "இவர்கள் வார்த்தை இன்பமயமாகிய திருத்தொண்டுக்கு இடையூறாயிருக்கின்றது, சிவபக்தியிலே சிறிதும் வழுவாமல் அரசியற்றுதற்கும் திருவருள் உளதாயின் இதனைச் சுவாமிக்கு விண்ணப்பம் செய்து அறிவேன்," என்று ஆலயத்தினுள் பிரவேசித்து, சுவாமியை வணங்கி விண்ணப்பம் செய்து அவருடைய திருவருளினாலே அவரிடத்தில் வைத்த பக்தி வழுவாது அரசியற்றும் சக்தியையும் அவர்கள் சொல்லியதையும் அறியும் அறிவையும் மகா பராக்கிரமத்தையும் , பெருங் கொடையையும் அரசருக்குரிய படைவாகனம் முதலிய எல்லாவற்றையும் சுவாமியிடத்தில் பெற்று அவரை வணங்கிக் கொண்டு பக்கத்திலே போய் மந்திரிமார்கள் வேண்டுகோளுக்கு உடன்பட்டார்.

**மன்னரானார்**

அமைச்சர்கள், பெருங்களிப்புடையவர்களாகி அவரை வணங்கினார்கள். கழறிற்றறிவாராகிய அந்த பெருமாக் கோதையார், ஆத்மாக்களெல்லாம் உய்யும் பொருட்டு சுபதினத்திலே முடிசூடி சிவாலயத்தை வலம் செய்து சந்நிதானத்திலே விழுந்து வணங்கி எழுந்து யானைமேலேறி கொற்றக் குடையும் வெண்சாமரமும் முதலாகிய மகா அலங்காரத்துடனே நகரியை வலம் செய்தார்.

**திருநீற்று வண்ணான்**

அப்போது ஒரு வண்ணானானவன் தோளிலே உப்புப்பொதி சுமந்து கொண்டு தமக்கு முன்னே வரக்கண்டு அவனுடைய சரீரம் மழையினாலே கரைந்த உப்பு ஊறப் பெற்று வெளுத்திருந்ததால் விபூதியைத் தூளனம் செய்த சிவனடியாருடைய திருவேடம் போலிருப்பது என்று அறிந்து அந்தக் கணமே தானே யானையை விட்டிறங்கி அத்தியந்த ஆசையுடனே சீக்கிரமாய்ப் போய் அவனுடைய கால்களிலே விழுந்து வணங்கினார்.

உடனே அந்த வண்ணான், மனங்கலங்கி அவர் வணங்குவதற்கு முன்னமே வணங்கி, "அடியேனை யார் என்று கொண்டது? அடியேன் அடிவண்ணான்," என்று சொல்ல சேரமான் பெருமானாயனாரும் "அடியேன் அடிசேரன், தேவரீர் திருநீற்று வேடத்தை நினைப்பித்தீர், வருத்தப்படாதே போ," என்று சொல்லி வணங்கினார்.

மந்திரிமார் முதலான அனைவரும் சேரமான் பெருமாள் நாயனாருடைய சங்கம பத்தி மேலீட்டைக் கண்டு ஆச்சரியமடைந்து சிரசின் மேலே அஞ்சலி செய்து தோத்திரம் பண்ணினார்கள்.

சேரமான் பெருமாள் நாயனார் யானை மேலேறி நகரியை வலங்கொண்டு மாளிகை வாயிலிலே நுழைந்து யானையினின்றும் இங்கி மண்டபத்தை அடைந்து இரத்தின சிம்மாசனத்திலே ஏறி வெண் கொற்றக் குடை நிழற்ற வெண்சாமரம் வீச அரசர்கள் மலர் தூவி வணங்கித் துதிக்க வீற்றிருந்தருளினார். இங்ஙனம் இருந்து மனுநீதி நெறியை நடத்தி எண்ணிறந்த அரசர்கள் கப்பம் கொண்டு வந்து செலுத்த அகத்தும் புறத்தும் பகையை அறுத்து சைவசமயம் அபிவிருத்தியாகும்படி அரசியற்றினார்.

சிதம்பரத்திலுள்ள சிற்றம்பலத்திலே ஆனந்தத் தாண்டவம் செய்தருளுகின்ற சபாநாயகருடைய திருவடியே தாம் தேடும் பொருளும் தமக்குரிய பெருந்துணையும் என்று தெளிந்த மெய்யறிவினாலே அந்தத் திருவடியை மிகுந்த அன்பினோடு சைவாகம விதிப்படி எந்த நாளும் அருச்சிப்பார். அருச்சனை முடிவிலே சபாநாயகர் தன்னுடைய திருச்சிலம்பொலியை அவருக்குக் கேட்கும்படி அனுக்கிரகிப்பார்.

சேரமான் பெருமாள் நாயனார் சிவனடியார்களுக்கும் தரித்திரர்களுக்கும் கனகமாரி பொழிந்து பரமசிவனுக்கு உரிய பல யாகங்களைச் செய்தார்.

**பாணபத்திரருக்குப் பரிசு**

இப்படி நடத்தும் காலத்திலே பாண்டிய நாட்டிலே மதுரையில் வீற்றிருக்கின்ற சொக்கநாத சுவாமியானவர், தம்மை அன்பினோடும் இசைப்பாட்டினாலே துதிக்கின்ற பாணபத்திரருக்குப் பெருஞ் செல்வத்தைக் கொடுத்தருளு தற்குத் திருவுளங் கொண்டு இராத்திரியிலே அவருக்குக் கனவிலே தோன்றி "உனக்குப் பொன், இரத்தினம், பட்டாடை முதலானவைகள் எல்லாம் நீர் வேண்டியபடிக் குறைவில்லாமல் தரும் பொருட்டு நம்மேல் எப்போதும் அன்புடைவனாகிய சேரனுக்கு ஓலை தருவோம், போய் வா" என்று அருளிச் செய்து

**அகவல்**

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதி மிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில் பொழி லாய வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்

குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்கும் சேரலன் காண்க!
பண்பாலி யாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் தன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

என்னும் திருப்பாசுரத்தை எழுதி அந்தத் திருமுகத்தை பாணபத்திரர் கையில் கொடுத்தருளினார். பாணபத்திரர் அதைச் சிரசின் மேல் வகித்துக்கொண்டு அப்போதே புறப்பட்டுப் போய் கொடுங்கோளூரை அடைந்து மாளிகைக்கு முன் வந்து சேரமான் பெருமாள் நாயனாருக்குத் தெரிவித்தார்.

அவர் உடனே சிரசின் மேல் கைகுவித்து அன்பினோடு கண்ணீர் சொரிய எழுந்து மாளிகைக்குப் புறத்தில் வந்து பாணபத்திரரை அநேகந்தரம் வணங்கி, "சுவாமி! தேவரீர் அடியேனை ஒரு பொருளாகயெண்ணி திருமுகம் கொண்டு வந்தீரே," என்றான்.

**சேரனின் திருக்கொடை**

அப்பொழுது பாணபத்திரர், சுவாமி கொடுத்த திருமுகத்தைக் கையில் கொடுத்து வணங்க, சேரமான் பெருமாள் நாயனார் அதை முடிமேல் வைத்துக்கொண்டு கூத்தாடி மொழி குழற ஆனந்த அருவி சொரியபரவசமாய்ப் பூமியிலே பலமுறை விழுந்தார். திருமுகத்தைப் பலதரம் வணங்கி அதனை வாசித்துத் திருவருளைத் துதித்து மாளிகையினுள்ளே புகுந்து மந்திரிமார்களைப் பார்த்து, "நம்முடைய மாளிகையிலிருக்கின்ற பண்டாரம் முழுவதையும் பொதி செய்து ஆளின் மேலேற்றிக்கொண்டு வாருங்கள்," என்று ஆக்ஞாபிக்க, அவர்கள் அப்படியே ஏற்றிக்கொண்டு வந்து வணங்கினார்கள்.

**பாணபத்திரர் பண்பு**

சேரமான் பெருமாள் நாயனார் பாணபத்திரருக்கு அந்தத் தனங்களை வெவ்வேறாகக் காட்டி, "சுவாமி! தேவரீர்! இவைகளையும் யானை, குதிரை, தேர், காலாள் என்னும் சதுரங்கங்களையும், அடியேனுடைய அரசையும் கைக்கொண்டருளும்," என்று சொல்ல பாணபத்திரர், தமக்குச் சேரமான் பெருமாள் நாயனார் கொடுத்த தனங்கள், எல்லாவற்றையும் கண்டு மனம் மகிழ்ந்து அதிசயித்து அவரைப் பார்த்து "சுவாமி! அடியேன் எனக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் கொள்ளும் பொருட்டே சிவாக்ஞை, அரசையும் அரசுறுப்பையும் தேவரீரே கைக்கொண்டருளும்," என்று சொல்லி வணங்கினார்.

சேரமான் பெருமாள் நாயனாரும் சிவாக்ஞையைத் தடுத்தற்குப் பயந்து அதற்கு உடன்பட்டார். அதற்குப் பாணபத்திரர் தனங்களையெல்லாம் யானை, குதிரை உள்ளிட்டனவற்றுள் வேண்டுவனவற்றையும் கொண்டு ஒரு யானை மேல் ஏறிப் போனார். பாணபத்திரருக்குப் ,பின் கண்ணீர் சொரிய கை தொழுது கொண்டு போன சேரமான் பெருமாள் நாயனாரிடம் பாணபத்திரர் நகர்ப்புறத்தில் விடைபெற்றுக் கொண்டு போய் மதுரையை அடைந்தார்.

**சிலம்பொலி ஏன் இல்லை?**

சேரமான் பெருமாள் நாயனார் ஒருநாள் முன்போல பூசையின் கடைசியில் சபாநாயகருடைய சிலம்பொலி தனக்குக் கேளாதிருக்க மனம்மயங்கி, அடியேன் என்ன பிழை செய்தேனோ? என்று பெருமூச்சு விட்டு, இனி இந்தத் தேகத்தினால் அடையப்பட்ட சுகம் ஏதுவென்று உடைவாளையுருவி தன்னுடைய மார்பிலே நாட்ட சபாநாயகர் விரைந்து திருச்சிலம்பொலியை அவருக்குக் கேட்பித்தார்.

உடனே நாயனார் உடைவாளை எடுத்து விட்டு வணக்கம் செய்து தோத்திரம் செய்து, "சுவாமி! இந்தத் திருவருளை முன் செய்யாதிருந்தது ஏன்?" என்றார். அப்பொழுது சபாநாயகர், "சைவ சமயாசார்யாராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை நினைப்பிக்கும் பொருட்டு எதிர் நின்றருளாது வன்றொண்டராகிய சுந்தரன் கனகசபை யினிடத்தில் நம்முடைய ஆனந்த நிருத்தத்தை வந்து வணங்கிப் பதிகம் பாடுதலால் நாம் நின்று அதைக் கேட்டு வரக் காலம் தாழ்த்தோம்," என்று திருவாக்கையருளிச் செய்தார்.

**சிதம்பரம் சென்றார்**

சேரமான் பெருமாள் நாயனார், அடியார்களுக்கு இவர் அருங்கருணை இருந்தவாறு என்? என்று கனகசபையையும் சுந்தரரையும் வணங்க வேண்டும் என்று விரும்பிச் சுபதினத்திலே திருவஞ்சைக்களத்திலே வீற்றிருக்கின்ற கடவுளை விரும்பிச் சேனைகளோடு புறப்பட்டுப் போய்ச் சிதம்பரத்தை அடைந்து சபாநாயகரை வணங்கிச் சிவானந்தக் கடலுள் அழுந்தி பொன் வண்ணத் தந்தாதி பாடியருளினார்.

சபாநாயகர், அதற்குப் பரிசிலாக தன்னுடைய குஞ்சிதபாதத்தினுடைய திருச்சிலம்பின் ஓசையை எதிரே கேட்கச் செய்தார். சேரமான் பெருமாள் நாயனார் காலந்தோறும் சபாநாயகரைத் தரிசனம் செய்துகொண்டு அங்கே சிலநாள் இருந்தார். பின்பு சில நாளாயின பின் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தரிசித்து வணங்குவதற்குத் திருவாரூருக்குப் போக விரும்பி பிரயாணப்பட்டு மத்தியிலுள்ள சிவத்தலங்களை யெல்லாம் வணங்கித் திருவாரூரையடைந்து தம்மை எதிர்கொண்ட சுந்தரமூர்த்தி சுவாமிகளை வணங்கி அவரோடு கோயிலில் போய் வன்மீக நாதரை வணங்கி திருமும்மணிக் கோவை பாடி பரவையார் வீட்டிலே போய் சுந்தரமூர்த்தி சுவாமிகளோடும் சில நாள் இருந்தார்.

பின்பு சுந்தரமூர்த்தி சுவாமிகளோடு திருவாரூரை அகன்று வேதாரணியத்தை அடைந்து சுவாமி தரிசனம் செய்து திருவந்தாதி பாடினார். அதன்பின் பாண்டிய நாட்டில் சென்று அங்குள்ள மதுரை முதலாகிய திருப்பதிகளை வணங்கிக்கொண்டு சுந்தரமூர்த்தியோடும் திருவாரூருக்குத் திரும்பி வந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டு வெகுநாளிருந்தார்.

பிறகு சுந்தரமூர்த்தியைத் தம்முடைய ஊருக்கு வரும்படி பிரார்த்தித்து அழைத்துக் கொண்டு போய்த் தம்முடைய கொடுங்கோளூரை அடைந்து அவரோடும் இருந்தார்.

அப்படி இருக்கின்ற நாளையிலே ஒரு நாள் சுந்தரமூர்த்தி சுவாமி வன்மீகநாதரை நினைந்து உருகி திருவாரூருக்குப் போகும்படி எழுந்து போக, சேரமான் பெருமாள் நாயனார் பிரிவாற்றாதவராகி எழுந்து அவரைப் பின் தொடர்ந்து போகாதபடித் தடுக்க அவர் அதற்கு உடன்படாமை கண்டு மந்திரிகளைப் பார்த்துத் தம்முடைய மாளிகையிலிருக்கின்ற திரவியம் முழுவதையும் பொதி செய்து ஆள்களின் மேல் ஏற்றுவித்துச் சுதரமூர்த்தி சுவாமிகளுக்கு முன்னே போகும்படியனுப்பிச் சுந்தர சுவாமிகளை விழுந்து வணங்கினார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், சேரமான் பெருமாள் நாயனாரைத் தழுவி விடை கொடுத்துப் போய் திருவாரூரை அடைந்தார். பின்பு சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளை எப்போதும் தியானித்துக் கொண்டு அந்தக் கொடுங்கோளூரிலே அரசு செய்து கொண்டிருந்தார்.

அப்பால் வெகு நாளைக்குப் பிற்பாடு சுந்தரமூர்த்தி சுவாமிகள் மறுபடியும் கொடுங்கேளூருக்கு வந்து சேரமான் பெருமான் நாயனாரோடு பலநாளிருந்தார்.

**வெள்ளை யானை மேல் கயிலாயம்**

அப்போது ஒரு நாள் சேரமான் பெருமாள் நாயனார், நீராடும் போது, சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக் களத்துக்குப் போய், சுவாமி தரிசனம் செய்து திருக்கைலாயத்திலிருந்து பரமசிவனால் அனுப்பப்பட்ட வெள்ளை யானையின் மேலேறித் தம்முடைய தோழராகிய சேரமான் பெருமாள் நாயனாரை நினைத்துக் கொண்டு போனார். சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய செயலை அறிந்து அந்தக் கணமே பக்கத்திலிருந்த ஒருகுதிரையின் மேலேறிக்கொண்டு திருவஞ்சைக் களத்துக்குப் போய் வெள்ளை யானை மேல் ஆகாசத்தில் போகின்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கண்டு தான் ஏறிய குதிரையின் காதிலே திருஐந்தெழுத்தை ஓதியருளினார்.

**சேரமானும் பின் தொடர்ந்தார்**

உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்திலே பாய்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய வெள்ளை யானையை அடைந்து அதை வலம் செய்து அதற்கு முன்னாகப் போயிற்று. சேரமான் பெருமாள் நாயனார் தம் படை வீரர்கள் குதிரை மேல் போகின்ற அந்த நாயனாரைத் தங்கள் கண்ணுக்குத் தெரிகிற வரையில் ஆகாயத்தில் கண்டு பின் காணாமையால்மிகுந்த திடபக்தியினாலே உடைவாளை உருவித் தங்கள் தங்கள் தேகத்தை வெட்டி வீழச் செய்து வீரயாக்கையைப் பெற்றுப் போய் சேரமான் பெருமாள் நாயனாருக்கு முன்னே வந்து அவரைச் சேவித்துக் கொண்டு போனார்கள்.

சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான் பெருமாள் நாயனாரும் திருக்கைலாயத்தின் தெற்கு வாயிலுக்கு முன்னே போனவுடனே குதிரையை விட்டும் யானையை விட்டும் இறங்கி அநேக வாயிற் படிகளையும் தாண்டி திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்கள். அங்கே சேரமான் பெருமாள்

நாயனார் தடைப்பட்டு நிற்க சுந்தரமூர்த்தி சுவாமிகள் உள்ளே போய் சுவாமி சன்னிதானத்திலே விழுந்து வணங்கி எழுந்து தோத்திரம் பண்ணி, "சுவாமி! தேவரீருடைய திருவடியை அடையும் பொருட்டுச் சேரமான் பெருமாள் திருவணுக்கன் வாயிலின் பக்கத்திலே வந்து நிற்கின்றார்," என்று விண்ணப்பம் செய்ய பரமசிவன் சேரமான் பெருமாள் நாயனாரை உள்ளே அழைப்பிக்க அவர் சுருக்காய் வந்து சன்னிதானத்திலே வணங்கித் தோத்திரம் பண்ணினார்.

பரமசிவன் திருநகை செய்து, "இங்கே நாம் அழையாதிருக்க நீ வந்தது ஏன்? " என்று அருளிச் செய்ய சேரமான் பெருமாள் நாயனார் அஞ்சலி செய்து நின்று, "சுவாமி! சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருவடிகளைத் துதித்து அவர் ஏறிய வெள்ளை யானைக்கு முன் அவரைச் சேவித்துக்கொண்டு வந்தேன், தேவரீர் பொழிகின்ற பெருங்கருணை வெள்ளம் முன்கொண்டு புகுதலால் திருமுன்பு வரப்பெற்றேன். இனியொரு விண்ணப்பம் உண்டு. அயன் அரி முதலாய தேவர்களாலும் முனிவர்களாலும், வேதங்களாலும் துதிக்கப்படுதற்கரிய பெருமையையுடைய தேவரீர் மேல் அன்பினாலே தேவரீருடைய திருவருள் கொண்டு திருவுலாப் பாடினேன். அதனைத் தேவரீர் கேட்டருளல் வேண்டும்," என்று விண்ணப்பம் செய்தார்.

**இறைவன் முன் உலா**

அப்பொழுது பரமசிவன், "பஞ்சபாதகத்தடை நீங்கும் படி வன்றொண்டனை அடைந்த சேரனே! அந்த உலாவைச் சொல் " என்று திருவாய் மலர்ந்தருள, சேரமான் பெருமாள் நாயனாரும் அதனைச் சொன்னார். பரமசிவன் அதற்கு அருள் செய்து "நம்முடைய கணங்களுக்கு நாதராய் இரு, " என்று சொல்லியருளினார்.

சேரமான் பெருமாள் நாயனார் சிவகணநாதராகி சுவாமியைச் சேவிப்பாராயினார். அவர் அருளிச் செய்த திருக்கைலாய ஞான உலாவைக் கைலாசத்திலே அன்று கேட்ட மாசாத்தரானவர் அதனைத் தரித்து அந்த தமிழ் நாட்டில் உள்ள திருக்கடவூரிலே வெளிப்படச் சொல்லி இந்தப் பூமியில் விளங்கும் பொருட்டு நாட்டியருளினார்.

சேரமான் பெருமாள் நாயனார், கழறிற்றறிவார் நாயனார் என்றும் அழைக்கப் பெறுவார். கழறினதை எல்லாம் அறிதலால் கழறிற்றறிவார் என்று பெயர். கழறல் - சொல்லுதல்.

**கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கும் அடியேன்!**



# வார்கொண்ட சருக்கம்

*39. கணநாத நாயனார்*

**கவி**

கந்தமலி வயற்காழி மறையோ ரேத்துங்
கணநாதர் திருத்தோணி கடவு ளார்க்கு
நந்தவனம் பலவமைத்து மலரும் கொய்து
நற்றாமஞ் சொற்றாமம் நயந்து சாற்றி
வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள் பூட்டி
வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்தி
புந்திமகிழ்ந் தரனருளால் கயிலை மேவிப்
பொருவில்கணத் தவர் காவல் பொருந்தினாரே.

**கதை**

**கணநாதர்**

சீர்காழியிலே அந்தணர் குலத்திலே கணநாத நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தச் சீர்காழியிலே இருக்கப்பட்ட திருத்தோணியப்பருக்கு மிகுந்த ஆசையோடு தினந்தோறும் திருப்பணிகளைச் செய்பவர்.

**தொண்டு செய்யும் அடியார்**

அவர் தம்மை விரும்பி வந்து அடைபவர்களை நந்தவனம் வைத்தல், பூக்கொய்தல், திருமாலை கட்டல்,

திருமஞ்சனம் எடுத்தல், திருவலகிடுதல், திருமெழுகிடுதல், திருவிளக்கேற்றல், திருமுறையெழுதல், திருமுறை வாசித்தல் இது முதலாகிய திருத்தொண்டுகளுள் அவரவருக்கு ஏற்ற திருத்தொண்டுகளிலே பயில்வித்து அவர்களைச் சிவனடியார்களாக்குவார்.

**கணநாதரானார்**

இல்லற நெறியிலிருந்து சிவனடியார்களை வழிபடுவார். சமயாச்சார்யாராகிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளைத் தினந்தோறும் மூன்று காலமும் அத்தியந்த ஆசையோடு விதிப்படி பூசை செய்து அந்தப் பூசை பலத்தினாலே திருக்கைலாய மலையை அடைந்து சிவகணங்களுக்கு நாதரானார்.

**கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்!**



# வார்கொண்ட சருக்கம்

*40. கூற்றுவ நாயனார்*

**கவி**

குன்றாத புகழாளர் களந்தை வேந்தர்
கூற்றுவனார் மாற்றலர்மண் கொண்டு சூடப்
பொன்றாழு மூடிவேண்டப் புலியூர் வாழும்
பூசரர்கள் கொடாதகலப் புனித னீந்த
மன்றாடும் திருவடியே மூடியாச் சூடி
மானிலங்காத் திறைவனுறை மாடக் கோயிற்
சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து
திருவருளா லமருலகஞ் சேர்ந்து ளாரே.

**வசனம்**

**களந்தை வேந்து**

களந்தை வேந்தராகிய கூற்றுவ நாயனார் என்பர் ஒருவர் இருந்தார். அவர் திருஐந்தெழுத்தை விதிப்படி உச்சரிப்பவர். சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு செய்பவர்.

அவர் திருவருளினாலே மிகுதியான செல்வங்களை உடையவராகி, ரத, கச, துரக, பதாதி என்னும் சதுரங்கங்கள் நிறைந்த வீரச் செருக்கில் மேலாயினார்.

**ஒன்று மட்டும் இல்லை!**

அவர் பல அரசர்களோடு யுத்தம் செய்து அவர்களை வென்று அவர்களுடைய நாடுகள் எல்லாவற்றையும் கிரகித்து அரசர் முடி ஒன்று தவிர மற்றவைகள் எல்லாவற்றையும் உடையவராயினார்.

**தில்லைவாழ் அந்தணர் மறுப்பு**

உலகத்தை ஆளுதற்குத் தனக்கு முடி சூட்டும் பொருட்டு தில்லை வாழ் அந்தணர்களை வேண்ட அவர்கள் நாங்கள் சோழ குலத்தாருக்கல்லாமல் மற்றவர்களுக்கு முடிசூட்ட மாட்டோம் என்று தடுத்துத் தங்களுள் ஒரு குடியை, முடியைக் கொள்ளும்படி இருத்தி சேர மண்டலத்துக்குப் போயினார்கள்.

**இறைவன் அருள்**

கூற்றுவ நாயனார் மனம் தளர்ந்து சபாநாயகரைப் பணிந்து அன்றைய இரவிலே, அடியேனுக்குத் திருவடியையே முடியாகக் கொடுத்தருளல் வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு நித்திரை செய்ய, சபாநாயகர் அவருக்குக் கனவிலே தோன்றித் தன்னுடைய திருவடிகளைக் கொடுத்தருளினார்.

கூற்றுவ நாயனார் அவைகளையே முடியாகச் சூடி பூமி முழுவதையும் அரசாட்சி செய்து பரமசிவன் வீற்றிருக்கின்ற முக்கிய திருத்தலங்களுக்கெல்லாம் போய் வணங்கித் திருப்பணிகள் செய்து அந்தியத்தில் சிவபதம் அடைந்தார்.

**ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்!**



# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

## *41. பொய்யடிமை இல்லாத புலவர்*

**கவி**

*பொய்யறியாக் கபிலரொடு பரணராதி புலவோர்*
*பொற்பார் கலைகள் பல பொருந்த வோதிச்*
*செய்யுளிடை வளராசு மதுர நல்ல*
*சித்திரவித் தாரமெனத் தெரிக்கும் செம்மை*
*மெய்யுடைய தொடைகளெல்லா மன்று ளாடன்*
*மேவிய கோ னிருதாளில் விரவச் சாத்திக்*
*கையுடையஞ் சலியின ராயருளான் மேலைக்*
*கருதரிய வமருலகம் கைக்கொண் டாரே!*

**கதை**

**சங்கப் புலவர்**

பாண்டிய நாட்டிலே இருக்கின்ற துவாத சாந்தபுரமாகிய மதுராபுரியிலே சொக்கநாத சுவாமியிடத்திலே சதுரமாய் இரண்டு சாண் அளவாகி மெய்ப்புலவர்களுக்கு முழம் வளர்ந்து இருப்பதற்கு இடம் கொடுக்கின்ற சங்கப் பலகையைப் பெற்று அதிலிருந்து தமிழ் மொழியை வளர்த்த கடைச் சங்கப் புலவர்கள் கபிலர், பரணர், நக்கீரர் முதலான நாற்பத்தொன்பதின்மர்.

**பரமசிவனைப் பாடினார்**

அவர்கள் திருநீறு, உருத்திராக்க தாரணர்களாய் திருஐந்தெழுத்தை உச்சரிப்பவர்களாகி அகத்தியம், தொல்காப்பியம் என்கிற இலக்கண விதிப்படி ஆசு, மதுரம் சித்திரம், வித்தாரம் என்கிற நான்கு வகைக் கவிகளால் அத்யந்த பக்தியோடு பரமசிவனையே பாடி பொய்யடிமை இல்லாத புலவர்கள் என்று பெயர் பெற்றுச் சிவபதம் அடைந்தார்கள்.

**பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்!**



# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

*42. புகழ்ச்சோழ நாயனார்*

**கவி**

பொழின்மருவும் கருவூர்வாழ் புகழார் சோழர்
போதகம்போ லென்னுயிரும் போக்கு மென்றே
அழலவிர்வாள் கொடுத்தபிரா னதிகை மான்மேல்
அடர்ந்த பெரும் படையேவ அவர்கொண் டேய்ந்த
தழல்விழிகொ டலைகாண்பார் கண்ட தோர்புன்
சடைத்தலையை முடித்தலையாற் றாழ்ந்து வாங்கிக்
கழல்பரவி யதுசிரத்தி னேந்தி வாய்ந்த
கனன்மூழ்கி யிறைவனடி கைக்கொண் டாரே!

**வசனம்**

**புகழ்ச் சோழர்**

சோழநாட்டிலே உறையூரிலே புகழ்ச்சோழ நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மற்றையரசர்கள் பணி கேட்க உலகம் தன்னுடைய செங்கோலின் முறை நிற்க சைவசமயந் தழைக்க அரசாட்சி செய்தார்.

அவர் சிவாலயங்களிளெல்லாம் நித்திய நைமித்தியங்களை எல்லாம் தவறாமல் நடத்துவிப்பார். சிவனடியார்களுக்கு வேண்டியதைக் குறிப்பறிந்து கொடுப்பார்.

**கருவூர் சேறல்**

இப்படியிருக்கும் நாளிலே கொங்கு, குடகு முதலிய தேசங்களில் அரசர்கள் கொடுக்கின்ற பகுதிப் பணத்தை வாங்கும் பொருட்டுத் தங்கள் குலத்தார்களுக்குரிய கருவூர் என்கிற தலைநகரிலே அரசுரிமை சுற்றத்தோடு வந்தணைந்தார். அங்குள்ள ஆநிலை என்னும் கோயிலில் இருக்கின்ற பரமசிவனை வணங்கி மாளிகையிலே நுழைந்து அத்தாணி மண்டபத்திலே சிம்மாசனத்தில் வீற்றிருந்து குடகு தேசத்து அரசர்கள் கொண்டு வந்த கப்பப் பணங்களை கண்டு அருள் புரிந்து மந்திரிமாரை நோக்கி," நம்முடைய ஆணைக்கு அடங்காத அரசர்கள் இருக்கின்ற தேசங்கள் உண்டாயிருந்தால் சொல்லுங்கள்," என்றார்.

**சிவகாமியாண்டார்**

இப்படி நிகழும் நாளிலே சிவகாமியாண்டார் கொண்டுவந்த மலர்களை இறைத்த தம்முடைய யானையையும் பாகர்களையும் கொன்ற எறிபத்த நாயனாரை அடைந்து என்னையும் கொன்றருளும், என்று தன்னுடைய வாளைக் கொடுத்துத் திருத்தொண்டிலே மிகவும் சிறந்து விளங்கினார்.

மந்திரிகள் புகழ்ச் சோழ நாயனாரை வணங்கி பகுதி கொண்டு வந்து கட்டாத அரசன் ஒருவன் இருக்கின்றான் என்று சொல்ல புகழ்ச் சோழர் அதிசயப்பட்டு புன்சிரிப்புக் கொண்டு "அவன் எவன்?" என்று கேட்டார். மந்திரிமார் "அவன் பெயர் அதிகன், அவன் மலையாளத்துள்ளே இருக்கின்றான்," என்றார்கள்.

புகழ்ச்சோழர் அதைக்கேட்டு, "நீங்கள் படை எடுத்துக்கொண்டு போய் அந்த தேசத்தைத் தூளாக்கிப் பற்றறுத்து வாருங்கள்!" என்று ஆணையிட, மந்திரிமார் சேனையோடுபுறப்பட்டுப் போய் அந்த மலை நாட்டைப் பொடி செய்து அதிகனுடைய சேனைகளை வதைத்தார்கள்.

அதிகன் பயந்து ஓடிப்போய்ச் சுரத்தில் ஒளிந்து கொண்டான். புகழ்ச் சோழருடைய படைவீரர்களில் பலர் அதிகனுடைய படைவீரர்களின் தலைகளையும் மற்றவர்களுடைய செல்வக் குவியல்களையும் யானை, குதிரைகளையும் கொண்டு கருவூரில் வந்து புகழ்ச் சோழர் முன்னே வைத்தார்கள்.

புகழ்ச் சோழர் அதைப் பார்க்கும் போது அந்தத் தலைகளின் நடுவில் ஒரு புன்சடையைக் கண்டார். கண்டபோதே நடுங்கி மனங் கலங்கி கைதொழுது பெரும்பயத்துடனே எதிர் சென்று அந்தத் தலையில் சடையைத் தெரியப் பார்த்து கண்ணீர் சொரிய அழுது, "நான் சைவ நெறியைப் பரிபாலித்து அரசாட்சி செய்தது மிக நன்றாயிருக்கிறது. சடை முடியைத் தரித்துப் பரமசிவன் மெய்ந் நெறியைக் கண்டவருடைய சடைத்தலையை எடுத்துக்கொண்டு வரக்கண்ட அதிபாதகனாகிய நான் பூமியைத் தாங்குவதற்கு இருந்தேனே", என்று சொல்லி மந்திரிமாரைப் பார்த்து, "பூமியை அரசாட்சி செய்து பரமசிவனுக்கு வழித்தொண்டு செய்யும் பொருட்டு என்னுடைய மகனுக்கு முடிசூட்டுங்கள்," என்று சொல்லி விதித்து, அதைக் கேட்டு சோரும் மந்திரிகளைத் தேற்றி அக்கினி வளர்த்து, விபூதி தூளனம் செய்து அந்தச் சடை சிரசை ஒரு பொன் தட்டில் வைத்து தலைமேல் வைத்துக்கொண்டு அந்த அக்கினியை வலம் வந்து திருஐந்தெழுத்தை உச்சரித்து அதனுள்ளே புகுந்து பரமசிவனுடைய திருவடி நிழலை அடைந்தார்.

**பொழிற் கருவூர்த் துஞ்சிய புகழ்ச் சோழற்கடியேன்!**



# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

*43. நரசிங்க முனையரைய நாயனார்*

**கலி**

நாடுபுகழ் முனைப்பாடி நாடு மேய
நரசிங்க முனையர்புவி நயந்து மன்றுள்
ஆடுமவர் ஆதிரைநா ளடியார்க் கம்பொன்
அமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்து தூர்த்த
வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொ னீந்து
விடுத்தழகா ராலயங்கள் விளங்கச் செய்து
தோடலர்தா ருடையபிரா னருளை யாளத்
தோன்றினா ரெனையருளி னூன்றி னாரே.

**வசனம்**

திருமுனைப் பாடி நாட்டிலே நரசிங்க முனையரைய நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருவடியை அடைதலே தனக்குப் பெரும் பேறு எனத் துணிந்தவர். அநித்தியமும் துக்கமும் ஆகிய அரசியற்கையில் வைத்த விருப்பத்தால் அல்லாமல் சர்வாத்மாக்களும் சத்சமயமாகிய சைவத்தைக் கைக்கொண்டு முத்திசுகத்தை அடைய வேண்டும் என்கிற பெருங்கருணையாலே பல சத்துருக்களையெல்லாம் வென்று சைவ நெறி வாழும்படி திருவருளை முன்னிட்டு நின்று அரசாள்வார்.

சிவாலயங்கள் தோறும் நித்திய, நைமித்திகங்களை ஒழுங்கு பெற நடத்துவிப்பார். திருவாதிரை நட்சத்திரம் தோறும் விசேட பூசை செய்வித்து, தன்னிடத்தில் வரப்பட்ட சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்து அவர்களுக்குத் தனித்தனியாக நூறுபொன் கொடுப்பார்.

இப்படியாகச் செய்து கொண்டுவரும் நாளில் ஒரு திருவாதிரை நட்சத்திரத்திலே அப்படியே அடியார்களுக்குப் பொன் கொடுக்கும் போது தூர்த்த வேடமுள்ள ஒருவர் திருநீறு அணிந்து கொண்டு வந்து நின்றார்.

அவரைப் பக்கத்திலுள்ளவர்கள் கண்டு இகழ்ச்சி செய்து ஒதுங்க, நரசிங்க முனையர் அதைக்கண்டு அவரெதிரே போய் வணங்கி அழைத்துக்கொண்டு போய் நிரம்பவும் உபசரித்து அவருக்கு இரு நூறு பொன் கொடுத்து அவரை வணங்கித் தன்னைத் தாழ்மையாகப் பேசி அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

இந்தப் பிரகாரம் அருமையாகிய பல திருத்தொண்டுகள் செய்து சிவபத பிராப்தியானார்.

**மெய்யாடியான் நரசிங்க முனையரையற் கடியேன்**



# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

*44. அதிபத்த நாயனார்*

**கவி**

*அலையாருங் கடனாகை நகருள் வாழும்*
*அதிபத்தர் பரதவர்கள் அதிபர் வேலை*
*வலைவாரி வருமீனில் தலைமீ னீசன்*
*வார்கழற்கே யென்றுவிடு மரபார் பன்னாள்*
*தலையான தொருமீனே சார நாளும்*
*தந்தொழிலால் விடுத்துமிடிச் சாரச்செம்பொன்*
*நிலையாரு மணிநயந்த மீனொன் றெய்த*
*நீத்தருளா லிறைவனடி நேர்ந்து ளாரே.*

**வசனம்**

சோழ மண்டலத்திலே நாகப்பட்டினத்திலே சமுத்திர தீரத்திலே உள்ள நுளைப்பாடியிலே பரதவர்கள் குலத்திலே அதிபத்த நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரதவர்களுக்குத் தலைவராகி, அவர்கள் வலைபோட்டுப் பிடித்து வரப்பட்ட மீன் கும்பல்களைப் பெற்று சிவபக்தியுற்று வாழ்பவர்.

அவர் சிவபத்தியிலே மிகுந்தவராதலால் அகப்பட்ட மீன்களிலே ஒரு பெரிய மீனை இது பரமசிவனுக்கென்று மிகுந்த அன்பினோடு எப்போதும் கடலில் விடுவார். ஒரு மீனே அகப்பட்டாலும் அதையும் விட்டுவிடுவார்.

அவர் அப்படி விட்டு வரப்பட்ட நாளிலே ஆதாயங்கள் நின்று போய் விட்டதால் தம்முடைய சுற்றத்தார் உணவுக்கு இல்லாமல் வருத்தப்படவும் தான் வருத்தப்படாமல் நாள்தோறும் அகப்படுகின்ற ஒரு மீனையும் பரமசிவனுக்கென்று சமுத்திரத்தில் விட்டு மகிழ்ந்தார்.

இப்படிப் பலநாட்கள் உணவு இல்லாமையினாலே திருமேனி தளரவும் தம்முடைய தொழிலிலே நிலை நின்றமையைப் பரமசிவன் அறிந்து அவருடைய அன்பாகிய அமுதை உண்பாராயினார். இப்படி நடக்கும் நாளிலே ஒருநாள் பரதவர்கள் அந்த ஒரு மீனையும் அந்தப்படியே விட்டு விலை மதிப்பில்லாத மகாதிவ்ய பிரகாசம் கொண்ட நவரத்தின மயமாகிய அற்புதமாகிய ஒரு பொன் மீனை வலையில் பிடித்துக் கரையிலேறினார்.

அப்போது அந்த மீன் சூரியன் உதயமானால் போல் உலகமெல்லாம் மிகப் பிரகாசிக்கக் கண்டு அதை எடுத்துக்கொண்டு வந்து அதிபத்த நாயனார் கையில் கொடுத்தார்கள். அதை அவர் பார்த்து, இது இரத்தினமாகிய பொன் மீன், ஆதலால் இது என்னை ஆண்டருளிய பரமசிவனுக்கென்று சமுத்திரத்தில் விட்டார்.

அப்போது பரமசிவன் உமாதேவி சகிதமாய் காளைவாகனராய் ஆகாசத்திலே தோன்றியருள, அதிபத்த நாயனார் ஆனந்த அருவி சொரிய மனம் கசிந்துருகி வணங்கி சிரசின் மேல் அஞ்சலி செய்தார்.

சுவாமி தன்னுடைய உலகத்திலே அடியார்களோடு இருக்கும்படி அவருக்கு அருள் செய்தார்.

**விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற் கடியேன்**




# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

*45. கலிக்கம்ப நாயனார்*

**கவி**

கடவுளருட் கண்ணார்கள் பயிலும் தொல்லைக்
கடந்தைநகர் வணிகர்கலிக் கம்ப ரன்பர்க்
கடிமையுற வமுதளிப்பா ரடியார் நீங்கி
யருளுருவா யன்பருட னணைய வேத்தி
இடையிலவர் அடியினையும் விளக்கா நிற்ப
இகழ்மனைவி கரகமலி யிரண்டு கையும்
படியில் விழ வெறிந்தவள்செய் பணியுந் தாமே
பரிந்துபுரிந் தரனருளே பற்றி னாரே.

**கதை**

சோழ மண்டலத்திலே பெண்ணாகடத்திலே வைசியர் குலத்திலே கலிக்கம்ப நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அந்தத் திருப்பதியிலுள்ள தூங்கானை மாடம் என்னும் கோயிலில் வீற்றிருக்கின்ற பரமசிவனுக்குத் தொண்டு செய்வார். சிவலிங்கத்தை வழிபடினும் சிவனடியார்களை வழிபடாவிட்டால்அந்த வழிபாடு பயனற்றது என்று சிவாகமம் சொல்லுதலால் தினந்தோறும் சிவனடியார்களை அத்தியந்த ஆசையோடு திருவமுது செய்வித்து அவர்களுக்கு வேண்டிய திரவியங்களையெல்லாம் கொடுப்பவர்.

இவர் இப்படி நடத்தும் நாளிலே ஒருநாள் தன் வீட்டில் அமுது செய்ய வந்த சிவனடியார்கள் எல்லாருக்கும் அமுது செய்யத் தொடங்குவித்தற்கு அவர்களை முன் அழைத்துத் தன் மனைவியார் கரகநீர் வார்க்க அவர்களுடைய திருவடிகளை விளக்கும் போது முன்பு தமக்குப் பணிவிடைக்காரராயிருந்து வெறுத்துப் போய் சிவ வேடம் தரித்த ஒருவருடைய திருவடிகளை விளக்கப் போக, அப்போது மனைவியார் இவர் எங்களிடத்தில் பணிவிடைக்காரராயிருந்து போனவர் போல இருக்கின்றது என்று நினைத்துக் கரக நீரை வார்க்கக் கரகத்தைத் தாழ்த்த கலிக்கம்ப நாயனார் அதையறிந்து இவள் இந்தச் சிவனடியாருடைய முந்திய நிலையைக் குறித்து வெள்கி நீர்வார்க்காமல் இருந்தாள் என்று துணிந்து வாளை எடுத்து தன்மனைவி கையிலிருந்து கரகத்தை வாங்கி அவள் கையைத் தறித்து அந்தக் கரகநீரைத் தானே விட்டு அவருடைய பாதத்தைக் கழுவி அத்யந்த ஆசையோடு தானே வேண்டிய உபசாரங்களைச் செய்து அந்த அடியாருக்கு அமுது செய்வித்தார்.

பின்னும் சில காலம் அந்த நாயனார் திருத்தொண்டின் வழியில் நின்று சிவபதம் அடைந்தார்.

**கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பர்க் கடியேன்!**



# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

*46. கலிய நாயனார்*

**கவி**

தடமதில்சூ ழொற்றியூர் நகரில் வாழும்
சக்கரப்பா டியர்குலமெய்த் தவமா யுள்ளார்
படர்புகழார் கலியனார் நலியுங் கூற்றைப்
பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவான் மற்றோர்
உடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவு நேரா
துயர்மனைவி யைக்கொள்வா ளருமின்றி
மிடறுதிர மகனிறைய வரிய நாதன்
வியன்கை கொடு பிகுப்பவருண் மேவினாரே.

**வசனம்**

தொண்டை மண்டலத்திலே திருவொற்றியூரிலேயுள்ள சக்கரப்பாடியிலே செக்கார் குலத்திலே கலியனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பெருஞ் செல்வராகி செல்வம் நிலையாமையையும் சரீரம் நிலையாமையையும் அறிந்து சிவ புண்ணியம் செய்ய வேண்டும் என்று தெளிந்து அந்தத் திருப்பதியிலுள்ள சிவாலயத்தில் உள்ளும் புறமும் அல்லும் பகலும் அளவில்லாத திருவிளக்கு ஏற்றுவாராயினார்.

பரமசிவன், நெடுங்காலம் இந்தத் தொண்டு செய்துவரப்பட்ட அந்த அடியாருடைய பக்திப் பலத்தை பிறர்க்குத் தெரிவிக்கும் பொருட்டு அவரிடத்திலுள்ள

செல்வமெல்லாம் குறையும் படிச்செய்தார். அவர் தான் தரித்திரமடைந்தும் கூலிக்குத் தன் குலத்தார் கொடுத்த எண்ணெயை வாங்கி விற்றுக் கொண்டு தான் செய்கின்ற திருத்தொண்டைத் தப்பாமல் செய்து வந்தார்.

சிலநாளான பின் அவர்கள் எண்ணெய் கொடுக்காமல் விட அவர் மனம் தளர்ந்து கூலிக்குச் செக்கில் எண்ணெய் ஆட்டிக் கொடுத்து கூலி வாங்கித் திரு விளக்கிட்டார்.

பின்பு அநேகம் பேர் கூலிக்கு எண்ணெய் ஆட்டிக் கொடுக்க வருதலால் அந்த வேலையும் ஒருநாள் தனக்குக் கிடைக்காதிருக்க அவர் கவலை அடைந்து தன் மனைவியை விற்பதற்கு அந்த நகரெல்லாம் விலை கூறியும், ஒருவரும் வாங்காமையால் மனந்தளர்ந்து ஆலயத்தை அடைந்து திருவிளக்கேற்றும் சமயத்திலே "திருவிளக்குப் பணி மாறில் நான் இறந்து விடுவேன்", என்று துணிவு கொண்டு அகல்களில் திரியை வைத்து எண்ணெய்க்குப் பதிலாக இரத்தத்தை வார்க்கும் பொருட்டு ஆயுதத்தினாலே தன் கழுத்தை அரிந்தார்.

அப்பொழுது கிருபாசமுத்திரமாகிய பரமசிவன் எதிரே வந்து அவருடைய கையைப் பிடித்து இடபாரூடராய்த் தோன்றியருள அவர் தனக்குற்ற வருத்தம் நீங்கிச் சிரசின்மேல் கைகுவித்துக் கொண்டு நின்றார்.

அப்போது சுவாமி அவரைத் தன்னுடைய திருவடியிலே சேர்த்தருளினார்.

**கலியனுக்கு அடியேன்!**



# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

*47. சக்தி நாயனார்*

**கவி**

விரிதருகா விரிநாட்டு விரிஞ்சி யூர்வாழ்
வேளாளர் சத்தியார் விமலர் பாதத்
துரியவர்க ளடிபரவு மொருமை யார்நா
ஓவாமே ஐந்தெழுத்து முரைக்கு நீரார்
இருளின்மிட றுடைய பிரா னடியார் தம்மை
யிகழ்வார்த்தண் டாயத்திடுக்கி வாங்கி
அரியுமது திருத்தொழிலா வுடையார் மன்றுள்
ஆடியசே வடிநீழல் அடைந்து ளாரே!

**கதை**

சோழ நாட்டிலே விரிஞ்சியூரிலே வேளாளர் குலத்திலே பரமசிவனுடைய திருவடிகளைச் சிறிதும் மறக்காத பெரும் பக்தர் ஒருவர் இருந்தார்.

அவர் சிவனடியார்களை இகழ்ந்து பேசப்பட்ட அதிபாதகர்களுடைய நாக்கைத் தண்டாயுதத்தால் இடுக்கித் தன் கையிலிருக்கிற சத்தியாயுதத்தினால் அரிதலாகிய அருமை பெருமை திருத்தொண்டை வெகுகாலம் அன்பினோடு செய்துகொண்டிருந்து சத்தி நாயனார் என்னும் பெயரைப் பெற்று பரமசிவனுடைய திருவடி நிழலை அடைந்தார்.

**கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்!**



# பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம்

*48. ஐயடிகள்காடவர்கோனாயனார்*

**கவி**

வையநிகழ் பல்லவர்தங் குலத்து வந்த
மாமணி மா நிலமுழுதும் மகிழ்ந்து காக்கும்
ஐயடிகள் காடவர் கோனருளா னூல்கள்
அறிந்தரசு புரிந்திடுத லமையு மென்றே
பொய்யனையு வுடல்வாழ்வு கழியு மாறு
பொருந்தியிடும் புகழ்வெண்பா புலியூர்மேவும்
செய்யதிரு வடிமுதலாப் பதிக டோறும்
செப்பினாரென் வினைகள் தப்பி னாரே.

**கதை**

தொண்டை மண்டலத்திலே காஞ்சிபுரத்திலே பல்லவர் குலத்திலே சைவத் திருநெறி வாழும்படி அரசியற்றும் ஐயடிகள் காடவர்கோன் நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் எவ்வுயிர்களும் இம்மை மறுமை இன்பங்களையும் முத்தியையும் அடையவேண்டும் என விரும்பிப் பிறதேசங்களையும் தனக்கு ஆதீனப்படுத்திச் சைவம் தழைத்தோங்க அரசர்களும் பணி செய்ய அரசு செய்தார்.

சிலகாலம் சென்ற பின் அரசாட்சியானது துன்பம் என்று நினைத்து அதை வெறுத்துத் தம்முடைய மகனுக்குப் பட்டம் கட்டி அரசு கொடுத்துப் பூமியிலுள்ள சிவத்தலங்களுக் கெல்லாம் போய் சுவாமி தரிசனமும் திருப்பணியும் செய்து ஒவ்வொரு திருவெண்பா பாடினார்.

இந்தப் பிரகாரம் வெகுகாலம் திருத்தொண்டு செய்து கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

**ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்!**



## *கறைக்கண்டன் சருக்கம்*

*49. கணம் புல்ல நாயனார்*

**கவி**

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால் வாழும்
இருக்குவே ளூரதிபர் எழிலார் சென்னிக்
கலைநிலவா ரடிபரவுங்கணம் புல்லர் தில்லைக்
கருதுபுலீச் சரத்தாற்குக் கரதற் றீப
நிலைதரத்தா மிடமிடியாலொரு நாட் புல்லா
வீடுவிளக்கிடவதுவு நேராதாகத்
தலைமயிரி னெரிகொளுவு மளவி னாதன்
தாவாத வாழ்வருளும் தன்மையாரே.

**கதை**

வடவெள்ளாற்றுக்குத் தென்கரையிலேயுள்ள இருக்குவேளூரிலே சிவபத்தியில் சிறந்தவராயும் அதிக தனமுடையவராயும் ஆகிய ஒருவர் இருந்தார். அவர் செல்வம் பெற்றதனால் அடையும் பயன் இதுவே என்று சிவாலயத்தினுள்ளே திருவிளக்கேற்றித் தோத்திரம் பண்ணுவாராயினார்.

இப்படி வெகுகாலம் சென்றபின் வறுமையை அடைந்து சிதம்பரத்தில் போய் சபாநாயகரைத் தரிசனம் செய்துகொண்டு தம்முடைய வீட்டில் உள்ள பொருள்களை விற்று அங்குள்ள திருப்புலீச்சரம் என்கிற ஆலயத்தில் திருவிளக்கேற்றி வந்தார்.

இப்படி நடத்தும் நாளிலே வீட்டிலுள்ள பொருள்களும் செலவாகிவிட கணம்புல்லுகளை அரிந்து கொண்டு வந்து விற்று நெய்வாங்கித் திருவிளக்கேற்றி வந்தார். அதனால் அவருக்குக் கணம்புல்ல நாயனார் என்ற பெயருண்டாயிற்று.

அவர் ஒருநாள் முன்போல தான் அரிந்து கொண்டு வந்த புல்லு விலை போகாமலிருக்க தம்முடைய பணி தவறாது அந்தப் புல்லையே போட்டு விளக்கெரித்தார்.

முன்பு விளக்கெரிய வேண்டிய யாமமளவும் எரிப்பதற்கு அந்தப் புல்லு போதாமையால் அந்த விளக்கிலே தன்னுடைய திருமுடியைக் காட்டி எரித்தார்.

அப்பொழுது பரமசிவன் பெருங்கருணை செய்தருள கணம்புல்ல நாயனார் சிவலோகத்தை அடைந்தார்.

**கறைக்கண்டன் கழலடியே காப்புக் கொண்டிருந்த**
**கணம்புல்ல நம்பிக்கு அடியேன்!**



## கறைக்கண்டன் சருக்கம்

*50. காரி நாயனார்*

**கவி**

திருக்கடவூர் வருமுறவோர் காரி யாராந்
திகழ்தொண்டர் வண்டமிழ்நூ றிருந்த வோதி
விருப்பொடுதம் பெயராற்பா விளம்பி மும்மை
வேந்தரையு முறைமுறையே மேவி யங்கண்
உரைத்தவுரை நயமாக்கி யவர்பா லேய்ந்த
ஒண் பொருளா லாலயங்கள் ஓங்கச்செய்து
தரைக்குளருந் தவர்க்கே வறகமுன் போற்றுந்
தன்மையா லருள்சேர்ந்த நன்மை யாரே.

**வசனம்**

திருக்கடவூரிலே தமிழ் மொழியிலே மகா பாண்டித்தியம் உள்ள காரி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர்தம் பெயரால் தமிழ்க்கோவை பாடி தமிழ்நாட்டு மூன்று வேந்தரிடத்தும் போய் அவர்கள் மகிழும்படி உரைத்த உரைகளை நயமாக்கி அவர்களிடத்தில் பெற்ற திரவியங்களைக் கொண்டு சிவாலயங்கள் பலவாகக் கட்டுவித்தும் சிவனடியார்களுக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்தும் திருக்கயிலாய மலையை எப்போதும் நினைத்துக் கொண்டு உலகமெங்கும் தன்னுடைய சிவகீர்த்தியை நிறுத்திப் பரமசிவனுடைய திருவருளைப் பெற்று மனம்போல உடம்போடு கைலாயமலையை அடைந்தார்.

**காரிக்கும் அடியேன்!**



# கறைக்கண்டன் சருக்கம்

*51. நின்றசீர் நெடுமாற நாயனார்*

**கவி**

கன்னன்மலி நெல்வேலிக் கவினார் மாறர்
கவுரியர்கோ னமணருறு கலக்க மெல்லாம்
பொன்னெயில்சூழ் சிரபுரக்கோ னணைய மாற்றி
புனிதமிகு நீறணிந்து போற்றிசெய்து
மன்னுபுகழ் மங்கையருக் கரசி யாரா
மலர்மாது மணிமார்ப மகிழ்ந்து மாற்றார்
வெந்நிடுதல் கண்டரசு புரந்து காழி
வேந்தரருள் சேர்ந்தபெரு விறலினாரே!

**வசனம்**

பாண்டி நாட்டிலே மதுரா புரியிலே கூன் பாண்டியர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சமணர்களுடைய துர்ப்போதனையினால் ஆருகத மதத்திலே பிரவேசித்தும் சோழ மன்னனின் மகளாகிய மங்கையர்க்கரசியாரை மனைவியாகவும் குலச்சிறை நாயனாரை அமைச்சராகவும் பெற்றிருந்தமையால் சைவ சமயாச்சார்யாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருக்கரத்தினாலே திருநீறு அணியப் பெற்று கூன் நிமிர்ந்து நெடுமாற நாயனார் என்று பெயர் பெற்றார்.

தம்மோடு எதிர்ந்த வட புலத் தரசர்களுடனே திருநெல்வேலிப் போர்க்களத்தில் யுத்தம் செய்துவென்று சைவ சமயம் விருத்தியாகும்படி நெடுங்காலம் அரசு செய்திருந்தது சிவபதம் அடைந்தார்.

**நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்!**



# கறைக்கண்டன் சருக்கம்

*52. வாயிலார் நாயனார்*

**கலி**

ஞாயிலார் மதிற்றொண்டை நாட்டுமேன்மை
நண்ணுமயி லாபுரியின் வேளாண் டொன்மை
வாயிலார் மலைவில்லா னடியே போற்றி
மறவாமை தலைநின்ற மனமே செம்பொற்
கோயிலா வுயர்ஞானம் விளக்கா நீராக்
குலவியவா நந்தமன்பே யமுதாக் கொண்டு
தாயிலா னிருசரணம் நிகழ வேத்தும்
தன்மையா ரருள்சேர்ந்த நன்மையாரே.

**வசனம்**

தொண்டை நாட்டிலே மயிலாப்பூரிலே வேளாளர் குலத்திலே வாயிலார் நாயனார் என்று ஒருவர் இருந்தார்.

அவர் பரமசிவனைத் தம் மனமாகிய ஆலயத்துள் இருத்தி ஞானமாகிய திருவிளக்கை ஏற்றி ஆனந்தமாகிய திருமஞ்சனம் ஆட்டி அன்பாகிய அமிழ்தத்தை நைவேத்தியம் பண்ணி தியானித்து எப்போதும் தோத்திரம் செய்வார்.

இந்தப் படியாக ஞானபூசையை வெகுகாலம் செய்து கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

**துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றும் சோதித்**
**தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்.**



## கறைக்கண்டன் சருக்கம்

*53. முனையடுவார் நாயனார்*

**கவி**

பொன்னிவளந் தருநாட்டுப் புகழு நீடூர்ப்
 பொருவிறிரு மலிவேளாண் டொன்மை மிக்கார்
முன்னியவர் முனையடுவா ரிகலார் போரின்
 முரணழிவார் தமக்காக மொழிந்து கூலி
மன்னுநிதி கொண்டு செயம் கொடுத்து வந்த
 வளர்பொருளா லிறைவனடி வழுவா வன்பர்க்(கு)
அன்னமவர் நசையின்மிக மிசைய நல்கும்
 அன்பர் துன்ப மலை யாவு மகன்று ளாரே.

**கதை**

சோழ நாட்டிலே திருநீடூரிலே வேளாளர் குலத்திலே சிவனடியார்களிடத்தில் மிகுந்த பக்தியுள்ள ஒரு பெரியவர் இருந்தார்.

அவர் பகைவருடைய போர் முனையிலே தோற்றவர்கள், தம்மிடத்திலே வந்து கூலி பேசினால் அவர்களுக்காகப் போய்ப் போர் செய்து வென்று கூலி வாங்கிச் சிவனடியார்களுக்கு வேண்டியபடி அதிகமாய்க் கொடுத்து அவர்களுக்குத் திருவமுது செய்து கொண்டிருந்தார்.

அதனால் அவருக்கு முனையடுவார் என்று பெயர் உண்டாயிற்று. அவர் அப்படியே வெகுகாலம் அந்த அருமையாகிய திருத்தொண்டை செய்து கொண்டிருந்து சிவபதம் அடைந்தார்.

**அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன்!**



# கடல் சூழ்ந்த சருக்கம்

*54. கழற்சிங்க நாயனார்*

**கவி**

காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர்
காதன்மிகு தேவியுடன் காவ லாரூர்
ஆடவல பெருமானைப் பணிவா ரங்கோர்
அகன்றமலர் தனைமோந்த அரிவை மூக்கைச்
சேடுடைய செருத்துணையார் அரியக்கேட்டுத்
திறலரசர் மலரெடுத்த செங்கை யன்றே
சூடகமுன் கைதடிந்து ஞாலங் காத்த
தூய்மையார் அருள்சேர்ந்த வாய்மை யாரே!

**வசனம்**

காடவர் குலத்திலே பரமசிவனுடைய திருவடிகளையே அல்லாமல் மற்றொன்றையும் அறியாத கழற் சிங்கநாயனார் என்று ஒருவர் இருந்தார்.

அவர் பரமசிவனுடைய திருவருள் வலிமையினால் வடபுலத்தரசர்களைப் போரிலே வென்று அவர்கள் தேசங்களைக் கைக்கொண்டு எங்கும் சைவசமயம் தழைத் தோங்கும்படி அரசாண்டார்.

இப்படி நடத்தும் நாளிலே தன்மனைவியாரோடு சிவத்தலங்களிலெல்லாம் போய் சுவாமி தரிசனம் பண்ணித் திருத்தொண்டு செய்து திருவாரூரை அடைந்து கோவிலில் பிரவேசித்துச் சுவாமியை வணங்கினார்.

அப்பொழுது அவருடைய மாதேவியார் கோயிலை வலம் செய்து அங்குள்ள அதிசயங்களையெல்லாம் தனித்தனியே பார்த்துக்கொண்டு வந்து, திருமாலை கட்டுகின்ற மண்டபத்தின் பக்கத்திலே விழுந்து கிடந்த ஒரு புதுப்பூவை எடுத்து மோந்தார்.

உடனே செருத்துணை நாயனார், இதை மலர் மண்டபத்துள் எடுத்து மோந்தான் எனறு கருதி வேகமாய் ஓடிவந்து அவளைத் தலைமயிரைப் பிடித்து இழுத்துக் கீழே வீழ்த்தி அவள் மூக்கைப் பிடித்துக் கத்தியினாலே அரிந்தார். அரியவே அவள் சோர்ந்து புலம்பினாள்.

அப்பொழுது கழற்சிங்க நாயனார், சுவாமி தரிசனம் செய்து கொண்டு அவளுக்குச் சமீபத்தில் வந்து அவளைப் பார்த்து நிரம்பவும் கோபித்துச் சிறிதும் அஞ்சாமல் "இந்தக் கொடுஞ் செய்கையைச் செய்தவர் எவர்" என்று கேட்க, செருத்துணை நாயனார், "இவள் சுவாமிக்குச் சாத்தும்படியான மலரை எடுத்து மோந்தாள். ஆகையால் நான் இப்படிச் செய்தேன்," என்றார்.

அப்பொழுது கழற்சிங்க நாயனார் அவரைப் பார்த்து மலரை எடுத்த கையை அல்லவோ முன்னே அரிய வேண்டும், என்று சொல்லித் தன் உடைவாளையுருவித் தன் பெண் சாதியின் மலரெடுத்த கையைத் துண்டித்தார்.

அதைக் கண்டு தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். பின்பு அவர் வெகுகாலம் அரசாண்டிருந்து சிவபதம் அடைந்தார்.

**கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்**
**காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்!**



# கடல் சூழ்ந்த சருக்கம்

*55. இடங்கழிநாயனார்*

**கவி**

கோனாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும் வேளிர்
குலத்தலைவர் இடங்கழியார் கொங்கிற் செம்பொன்
ஆனேற்றார் மன்றின்முக டம்பொன் வேய்ந்த
ஆதித்தன் மரபோநெற் கவர்ந்தோ ரன்பர்
போநாப்பணி ருளின்கட் காவ லாளர்
புரவலர் முன் கொணரவவர் புகலக் கேட்டு
மானேற்றா ரடியாரே கொள்க வென்று
வழங்கியர சாண்டருளின் மன்னி னாரே.

**கதை**

கோனாட்டிலே கொம்பாளூரிலே வேளிர் குலத்திலே கனக சபையின் முகட்டைக் கொங்கிற் செம்பொன்னால் செய்த ஆதித்தன் குடியிலே இடங்கழி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் சைவ நெறியும் வைதிக நெறியும் தழைக்க சிவாலயங்களிளெல்லாம் நித்திய, நைமித்திகங்கள் சிவாகம விதிப்படி நடக்க அரசியற்றுங் காலத்திலே சிவனடியார் களுக்குத் திருவமுது செய்விக்கின்ற ஓர் அடியவர் ஒரு நாள் திருவமுது செய்விப்பதற்குப் பொருள் எங்கும் அகப்படாமையால் மனம் தளர்ந்து மாகேசுவர பூசை மேல் வைத்த அத்தியந்த ஆசையினால் நள்ளிரவிலே அந்த இடங்கழி நாயனாருடைய பண்டாரத்திலிருக்கிற நெல் குதிரிலே புகுந்து எடுத்தார்.

காவலாளர்கள் அதைக் கண்டு அவரைப் பிடித்து இடங்கழி நாயனாராகிய அரசர் முன் கொண்டு வந்தார்கள். அந்த இடங்கழிநாயனார், அந்த அடியாரைப் பார்த்து, "நீர் ஏன் நம்முடைய நெல் பண்டாரத்தை எடுத்தீர்?" என்று கேட்க அந்த அடியவர், "நான் சிவனடியார்களுக்கு அமுது செய்விப்பதற்குப் பொருள் இல்லாமையால் இப்படிச் செய்தேன்," என்றார்.

இடங்கழி நாயனார் அதைக் கேட்டு மிகவும் மனம் இரங்கி, "இவர் தாம் பண்டாரம்," என்று சொல்லிச் "சிவனடியார்கள் எல்லாரும் என்னுடைய நெல் பண்டாரம் தவிர நிதி பண்டாரங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள்," என்று பறை சாற்றி அறிவித்தார்.

பின்பு வெகுகாலம் சைவநெறி தழைக்கும்படி மிகுந்த கருணையுடனே அரசாட்சி செய்து கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

**மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் அடியேன்!**



## கடல் சூழ்ந்த சருக்கம்

*56. செருத்துணை நாயனார்*

**கவி**

இரைத்தணையார் புனற்பொன்னி மருத நன்னாட்(டு)
எழிலாரும் தஞ்சைநகர் உழவ ரேத்தும்
செருத்துணையார் திருவாரூர் சேர்ந்து வாழ்வார்
செல்வமிகு பல்லவர்கோன் தேவி வீழ்ந்த
மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு
வளமலி பூங் கத்தியால் வண்மூக் கீர்ந்த
கருத்துணையார் விறற்றிருத்தொண் டினையே செய்து
கருதலரு மமருலகங் கைக் கொண் டாரே.

**கதை**

சோழ மண்டலத்திலே மருத நாட்டிலே தஞ்சாவூரிலே வேளாளர் குலத்திலே சைவ சிரோன்மணியாகிய செருத்துணை நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் திருவாரூரை அடைந்து காலந்தோறும் வன்மீக நாதரை வணங்கித் திருத்தொண்டு செய்து கொண்டிருந்தார்.

அப்படியிருக்கும் நாளிலே அங்கே சுவாமி தரிசனம் செய்ய வந்த கழற்சிங்க நாயனாருடைய மாதேவி, பூமாலை கட்டுகிற மண்டபத்தின் பக்கத்திலே விழுந்து கிடந்த ஒரு பூவையெடுத்து மோந்ததைக் கண்டு அந்த மண்டபத்திலிருந்த பூவையெடுத்து மோந்தாள் என்று நினைத்து அவள் மூக்கை அரிந்தார்.

பின்பு வெகுகாலம் திருத்தொண்டின் வழியிலே நின்று சிவபதத்தை அடைந்தார்.

**தஞ்சை மன்னவனாம் செருத்துணைதன்**
**அடியார்க்கும் அடியேன்!**



# கடல் சூழ்ந்த சருக்கம்

## 57. புகழ்த்துணை நாயனார்

### கவி

புண்ணியர்கள் புகழழகார் திருப்புத் தூர்வாழ்
புகழ்த்துணையார் அகத்தடிமைப் புனிதர் சின்னாள்
மண்ணிகழ மழை பொழியா வற்கா லத்தால்
வருந்துடல நடுங்கிடவு மணிநீ ரேந்தி
அண்ணல்முடி பொழிகலச முடிமேல் வீழ
அயர்ந் தொருநாள் புலம்புவான் அருளால் ஈந்த
நண்ணவரும் ஒருகாசுப் படியால் வாழ்ந்து
நலமலிசீர் அமருலகம் நண்ணி னாரே.

### வசனம்

செருவிலிபுத்தூரிலே ஆதிசைவர் குலத்திலே புகழ்த்துணை நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் சிவாகம முறைப்படி முக்காலமும் பரமசிவனைப் பூசை செய்து வருங் காலத்திலே கரிப்புக் காலம் ஒருதரம் உண்டாயிற்று. அதனால் அவர் அதிக பசியை அடைந்திருந்தும் சிவபூசையை விட மாட்டேன், என்று தொடர்ந்து பூசித்து வந்தார்.

ஒரு நாள் திருமஞ்சனம் ஆட்டும் போது மிகுந்த பசியினால் கை சோர்ந்து கலசம் திருமுடி மேல் விழத் தான் திருவடியிலே சோர்ந்து விழுந்து நித்திரையை அடைந்தார்.

அப்பொழுது பரமசிவன், அவருக்கு கனவிலே தோன்றி இந்தக் கரிப்புக் காலம் நீங்கும் வரைக்கும் உனக்குத் தினந்தோறும் இங்கே ஒவ்வொரு பொன் காசு வைக்கின்றோம், என்று அருளிச் செய்தார்.

புகழ்த் துணை நாயனார் விழித்தெழுந்து பீடத்தின் கீழே ஒரு காசு இருக்கக் கண்டு அதைக் கைக்கொண்டு வாழ்ந்தார்.

இந்தப்படியே அந்தக் கரிப்பு நீங்குகிற வரையில் தினந்தோறும் காசு பெற்றுப் பஞ்சம் நீங்கிய பின்பு வெகுகாலம் மெய்யடிமைத் தொழில் செய்து பரமசிவனுடைய திருவடி நிழலை அடைந்தார்.

**புடைசூழ்ந்த புலிதயண்மே லரவாட ஆடி**
**பொன்னடிக்கே மனம் வைத்த புகழ்த்துணைக்கும்**
**அடியேன்!**



# கடல் சூழ்ந்த சருக்கம்

*58. கோட்புலிநாயனார்*

**கவி**

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவே ளாளர்
கோட்புலியார் குவித்துயர்ந்த செந்நெற் கூடு
நிலவணிவார்க் கமைத்தானை நிறுத்தி யொன்றார்
நேர்மலைவார் திருவானை நினையா தேநெற்
சிலமிடியா லழித்தபடி யறிந்து வாளாற்
சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதறவீசி
இலகுமொரு குழவியையு மெறிந்து நாதன்
எண்ணரிய கருணை நிழல் எய்தினாரே.

**வசனம்**

சோழநாட்டிலே நாட்டியத்தான் குடியிலே வேளாளர் குலத்திலே சிவபக்தியில் மிகுந்து சிறந்த கோட்புலி நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அரசனிடத்தில் சேனாபதி உத்தியோகம் செய்து அதனாலே தமக்குக் கிடைத்த தரத்தைக் கொண்டு சிவாலயங்களுக்கு திருவமுதுக்கு நெல்லு வாங்கிக் கட்டுதலாகிய திருப்பணியை வெகுகாலம் செய்து வந்தார்.

இப்படிச் செய்து வரும் நாளிலே அரசனுடைய ஏவலினால் போர் முனையில் போக வேண்டி சுவாமிக்குத் திருவமுதுக்குத் தாம் திரும்பி வரும் வரை வேண்டிய

நெல்லை வாங்கிக் கட்டித் தன்னுடைய சுற்றத்தார்கள் எல்லாருக்கும் தனித்தனியே அதில் எடுக்காதிருக்கும்படிக்கு ஆணையிட்டுச் சேனைகளைக் கூட்டிக் கொண்டு சண்டைக்குப் போயினார்.

அவர் போன சிலநாளைக்குக் கரிப்புக் காலம் வந்ததால் அவர் சுற்றத்தார்கள் இந்த நெல்லை எடுத்துக்கொண்டு பிழைத்துப் பின்பு கொடுப்போம் என்று எண்ணிக் கொண்டு அந்த நெல் கூண்டைத் திறந்து நெல்லை எடுத்துச் செலவழித்தார்கள்.

கோட்புலி நாயனார் போனவிடத்தில் சத்துருக்களை வென்று அவனிடத்திலே நிதிக் கும்பல் பெற்றுத் தம்முடைய ஊரை அடைந்து தன் சுற்றத்தார்கள் நெல்களையெல்லாம் எடுத்துச் சாப்பிட்டதை அறிந்து தன் வீட்டில் நுழைந்து அதிலிருந்த தாய், தந்தை உடன் பிறந்தார், சுற்றத்தார், பணிவிடைக்காரர் முதலாகிய எல்லாரையும் வாளினாலே அரிந்தார். அப்போது அங்கே தன்மனிதர் அங்கே பிழைத்து இருந்த ஓர் ஆண் பிள்ளையைப் பார்த்து, "இந்தப் பிள்ளை அந்த அன்னத்தைச் சாப்பிட்டதல்லவா? இது இந்தக் குடிக்கு ஒரே பிள்ளை, இதைக் கொல்லாதருள் செய்யும்," என்று வேண்ட கோட்புலி நாயனார் "இது இந்த நெல்லைச் சாப்பிட்டவருடைய முலைப்பாலை உண்டது தானே," என்று அதையும், உயர எடுத்து எறிந்து வாளினாலே அரிந்தார்.

உடனே பரமசிவன் கோட்புலி நாயனாருக்குத் தோன்றி "அன்பனே! உன் கைவாளினாலே தங்கள் பாவத்தினின்றும் நீங்கிய உன் சுற்றத்தார்கள் சுவர்க்கத்தையடைய, நீ இந்தப்படியே நம்முடன் வருவாய்," என்று கருணை செய்து எழுந்தருளினார்.

**அடல் சூழ்ந்த வேல் நம்பி கோட்புலிக்கும் அடியேன்!**



## பத்தராய்ப் பணிவார் சருக்கம்

*59. பத்தராய்ப்பணிவார்*

**கலி**

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்தல் அழகார்
துளங்கியவர்ச் சனைபுரிதல் தொகுதிநிய மங்கள்
கொண்டபணி திருவடிக்கே கொடுத்த லீசன்
குணமருவு மருங்கதையைக் குலவிக்கேட்டு
பண்டிவிழி துளும்பன்மயிர் சிலம்ப லுன்னன்
மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி
உண்டிகொளா தொழிதலென இவையோ ரெட்டும்
உடையரவர் பத்தரென உரைத்துள் ளாரே.

**வசனம்**

சிவனடியார்களைக் கண்டால் அவர்களுடைய சாதியை விசாரியாமல் அவர்களைச் சிவனாகப் பாவித்து வணங்கிக் குதிகுதித்துக் கொண்டாடிமனம் மகிழ்ந்து அத்தியந்த ஆசையுடன் பசுவுக்குப் பின் கன்று அணைதல் போல் அவர்களுடன்பேசுங்காலத்தில் அவர்களைப்பேசுகின்ற பூச்ய வசனமும் தன்னைப் பேசுகின்ற நைச்சிய வசனமும் தப்புமோ என்னும் கூச்சத்துடனே பேசி அவர்களுக்கு வேண்டிய கருமமே தங்களுக்கு வேண்டும் கருமமாகச் செய்தலும் பரமசிவனை மிகுந்த அன்பினோடு எவ்விடத்திலும் யாவர்களும் விதிப்படி பூசிப்பதைக் கண்டால் மனம்

மகிழ்தலும் பரமசிவனையும் அவனுடைய அடியார்க ளையும் தெவிட்டாத விருப்பத்தோடு சைவாகம விதிப்படி பூசித்தலும் தங்கள் உடம்பினாலே செய்யப்பட்ட புண்ணியங்களையெல்லாம் பரமசிவனுடைய திருவடிக்கே கொடுத்தலும் சிவசரித்திரங்களையே அன்பினோடு கேட்டலும் பரமசிவனை வணங்கி மனம் நெக்கு நெக்குருகிச் சரீரம் நடுக்குற்று உரோம புளகிதம் உண்டாக மதகினில் புறப்படுகின்ற வெள்ளம்போல் ஆனந்தக் கண்ணீர் பொழிய நிர்த்தும்பப் பரவசமடைதலும் நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் உண்டாலும் துயின்றாலும் விழித்தாலும் பரமசிவனை ஒருபோதும் மறவாதிருத்தலும் சிவவேடம் தரித்துத் திருத்தொண்டர் போல நடித்து அதனால் சீவனம் செய்யாமையும் ஆகிய இந்த எட்டினையும் உடையவர்களே பத்தராய்ப் பணிவார் என்று சொல்லப்படுவார்கள்.

**பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்!**



## பத்தராய்ப் பணிவார் சருக்கம்

*60. பரமனையே பாடுவார்*

**கலி**

அருந்தமிழால் வடகலையால் அருளா லொன்றால்
அறிவுநெறி மருவுமருங் கவிகள் யாவும்
திருந்தியவா னவர்பணிய மன்று ளாடும்
தேவர்பிரான் கழலிணையே சேரவோதி
விருந்திடுநா வுடையபயன் மேவி னார்தாம்
மேலானோ மெனமகிழ்ந்து விழிநீர் சோரப்
பரிந்தருளாற்பரமனையே பாடவல்ல
பான்மையா ரெமையாளு மேன்மையாரே.

**வசனம்**

வடமொழி, தமிழ், என்கிற மொழிகளைக் கற்று அவைகளுக்குரிய இலக்கணங்களிலே மகா பாண்டித்தியம் உடையவர்களாகி, பிறப்பு இறப்புகளிற் பட்டு உழலுகின்ற பசுக்களாகிய அயன், அரிமுதலான தேவர்களையும் மக்களையும் மதித்து அவர்களுக்கே கர்மாநுகுணமாகக் கிடைத்த அநித்தியமும் துக்கமும் ஆகிய வாழ்வை மெய்யென்று நினைத்து அவர்களைப் பாடி வாழ்நாளை வீணாளாகப் போக்கடிக்காமல் பதியாகிய பரமசிவனுடைய

மகிமையை வேதாகம புராண வழியால் உள்ளபடி யறிந்து அவருடைய திருவடிகளையடைந்து மனம் கசிந்துருக உரோமம் சிலிர்ப்ப ஆனந்த அருவி சொரிய அவரையே மெய்யன்போடு பாடி, "நாம் சுவந்தரராகிய சிவபெருமானுக்கே ஆளாயினோம்.

பரதந்த்ரராகிய மற்றுள்ளோர்களில் ஒருவருக்குங் குடியல்லேம்! அவர்கள் எல்லோருக்கும். மேலானோம், " என்னும் இறுமாப்படைந்து திரிகின்றவர்களே பரமனையே பாடுவார் என்று சொல்லப்படுவார்கள்.

**பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்!**



## *பத்தராய்ப் பணிவார் சருக்கம்*

*61. சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்*

**கவி**

பாரணவும் புலனந்தக் கரண மொன்றும்
பட ராமே நடுநாடி பயிலு நாதங்
காரணபங் கயன்முதலா மைவர் வாழ்வும்
கழியுநெறி வழிபடவும் கருதி மேலைப்
பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப்
புணர்ந்தசிவானுபவ போக மேவும்
சீரணவு மலரன்றோ வெம்மை யாளும்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே.

**வசனம்**

உச்வாசம், நிச்வாசம் இரண்டையும் அடக்கி சுழுமுனா மார்க்கத்திலே பிராணவாயுவை நிறுத்தி விடயங்களின் வழியில் மனத்தைப் போகவொட்டாமல் திருப்பி ஒரு குறிப்பிலே நிறுத்தி, மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்கிற ஆறு ஆதாரங்களின் அந்தர் மாத்திரிகாக்ரமத்தை அறிந்து அந்தந்த ஆதாரங்களின் அதிதேவதைகளைத் தியானித்து அந்த ஆறு ஆதாரங்களினும் அசபாசக்தி சிவாத்மிகையாய் நிற்கிற முறைமையைப் பார்த்து மூலாதாரம் தொடங்கி விநாயகர் முதலாகிய தேவதைகளைப் பொருந்தி அபிமுகம்

பண்ணிக்கொண்டு ஆறு ஆதாரத்துக்கும் மேலாகிய பிரும்மரந்த்ரமளவும் அசபையுடன் சென்றணைந்து அந்த பிரும்மரந்த்ரத்திலே அதோ முகமாய் சகத்திரதளமாயிருக்கிற தாமரை மொக்கை சோதி சோதிபதோச் சாரணத்தாலே உதிக்கின்ற சிவார்கனாலே மலரச் செய்து அந்தத் தாமரைப் பூவின் கேசராக்ரத்திலேயுள்ள சந்திர மண்டலத்தை ஆகுஞ்சனம் செய்தலினாலே மூலாக்னியை அக்னி பீசாக்ர உச்சாரனத்தினாலே எழுப்பி நாடிச்சக்கரத்தைப் பேதித்து அந்த அக்னியினாலே சந்திரமண்டலத்தை இளசுப்பண்ணி அந்த அமிருதத்தைச்சர்வநாடி வழியாக நிரப்பி அந்த இடத்தில் உண்டாகிய சுகோதயத்தில் அந்த மயமான ஞானாம்ருத வசுதையை அடைந்து நின்று சோமசூர்யாக்னி பிரகாசாதிகளாகிய பிரத்யேக பிரகாசங்களெல்லாம் சூர்யோதயத்திலே நட்சத்ராதி பிரகாசங்கள் அடங்கினால் போல் தன்னிடத்தடங்க சர்வதோமுகமாய் சுவயம்பிரகாசமாய் இருக்கின்ற பூர்ண பிரகாசத்தைப் பாவிக்கின்றவர்களே சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் என்று சொல்லப்படுவார்கள்.

**சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்!**



## பத்தராய்ப் பணிவார் சருக்கம்

### 62. திருவாரூர்ப் பிறந்தவர்

**கவி**

பொங்கிமா கவமுடையார் வருண நான்கிற்
பொருந்தினர்க ளல்லாத புகழி னுள்ளார்
சங்கையிலா வருந்தவமுன் புரிந்தா ரிங்குச்
சார்விலா ரிறைவனருள் சார்த லாலே
கங்கைவாழ் சடைமுடியா னருளை நீங்காக்
கணநாத ரெனவாழும் கருத்தர் கன்னிச்
செங்கண்வரால் வளர்வாவி திகழு மாரூர்ச்
சிறந்துள்ளா ரெமையாளப் பிறந்து ளாரே.

**வசனம்**

முன்னைப் பிறவியிலே செய்த புண்ணியத்தினாலே திருவாரூர் என்கிற சிவத்தலத்திலே சைவமரபினராய்ப் பிறந்தவர்கள் பிரும்ம, சத்திரிய, வைசிய, சூத்திர, பஞ்சம என்கிற ஐந்தின் எந்தக் குலத்தாரானாலும் பரமசிவனுடைய திருவருளை அடைதலால் சிவகணநாதர்களாயிருப்பார்கள்.

இதற்குச் சான்றாக, திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லோரும் சிவகணநாதர்கள் என்று நமிநந்தியடிகள் நாயனாருக்குச் சிவன் அருளிச் செய்தார்.

அதை அந்த நாயனார் கேட்டுத் திருவாரூரிலே போய்ப் பார்க்க எல்லாரும் சிவகணநாத வடிவாய்த் தோன்றக் கண்டார்.

**திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்!**



## பத்தராய்ப் பணிவார் சருக்கம்

*63. முப்போதுந் திருமேனி தீண்டுவார்*

**கவி**

செப்பலருந் தவமுடைய செம்மை யாளர்
சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி
ஒப்பிறிரு நீறணிந்து நியதி யாற்றி
யோவாமே ஐந்தெழுத்து முரைத்து மேன்மை
தப்பில்சிவா கமவிதியா லின்பா லன்பாந்
தன்மையா னன்மையாந் தகையா ரென்று
முப்பொழுதுந் திருமேனி தீண்ட வல்ல
முறைமையார் பிறவிதெறுந் திறமை யாரே.

**வசனம்**

உலகத் தோற்ற காலத்திலே அனாதி சைவராகிய சதாசிவ மூர்த்தியினுடைய சத்யோசாதம், வாமதேவம், அகோரம், தத்புருடம், ஈசாநம் என்கிற பஞ்சமுகத்தில் தோன்றிய கௌசிகர், காசியபர், பாரத்வாசர், கௌதம், அகத்தியர் என்கிற பஞ்ச ரிசி கோத்திரத்திலே பிறந்த சிவபிராமணர்கள் ஆதிசைவர் என்று சொல்லப்படுவார்கள்.

அவர்களுள் சமய தீட்சை, விசேட தீட்சை, நிர்வாண தீட்சை, ஆசார்யாபிடேகங்களைப் பெற்றவர்களே சர்வாதிகாரிகள் என்றும் உத்தமோத்தம சிவாசாரியார்களென்றும் சிவாகமங்கள் சொல்லும்.

பரார்த்த பிரதிட்டை, பரார்த்த பூசைகள் செய்வதற்கு அவர்களே உரியவர்கள். மற்றவர்கள் உரியவர்களல்லர்.

அதனால் அவர்களே சிவாகம வித்பன்னர்களாகி கிருத கிருத்யராய் மூன்று காலத்திலும் சிவலிங்கத்தைப் பூசை செய்வார்கள்.

ஆகையால் அவர்களே முப்பொழுதும் திருமேனி தீண்டுவார் என்று சொல்லப்படுவார்கள்.

**முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்!**



## பத்தராய்ப் பணிவார் சருக்கம்

*64. முழுநீறு பூசிய முனிவர்*

**கவி**

கற்பமது கற்பமுப கற்ப மென்றிக்
கடனணைந்த திருநீறுங் கனற்கணிலும்
பொற்புடைய வரனாசானங்கி யாறு
பொல்லாத பூமியெதிர் புனைத லாகா
அற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி
யகிலாங்கந் தீபமிகு மழகார் வட்ட
முற்பொலிய வுடலணியு முறையா ரன்றோ
முழுநீறு பூசவல்ல முனிவர் தாமே.

**கதை**

உற்பத்தியினாலே கல்பம், அநுகல்பம், உபகல்பம் என்கிற மூவகைப் படுகின்ற விபூதியையாவது நித்யாக்னியில் எடுத்த விபூதியையாவது சிவன் முன்னும் அக்கினி முன்னும் குரு முன்னும் அசுத்த பூமியிலும் வழி நடக்கும்போதும் தரிக்காமல் மற்ற இடங்களிலிருந்து தூளகம், திருபுண்டரம், அர்த்த சந்திரகாரம், திரிகோணம், விருத்தம் இந்த விதங்களாக சிவாகம விதிப்படிக்கு அன்போடு அணிகின்றவர்கள் முழுநீறு பூசிய முனிவர் என்று சொல்லப்படுவார்கள்.

**முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்!**



## பத்தராய்ப் பணிவார் சருக்கம்

*65. அப்பாலும் அடிசார்ந்தார்*

**கவி**

தாராகு மூவேந்தர் பயிலுந் தொல்லைத்
தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணஞ் சார்ந்த
சீராருந் தொண்டர்களு மண்ட ரேத்தும்
திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங் காலத்
தேராருந் தொடையிலுறாதிப்பா லப்பால்
எந்தைபிரா னடியடைந்த இயல்பி னோரும்
ஆராத காதலுடை யவர்க ளன்றோ
அப்பாலும் அடிசார்ந்த வடியார் தாமே!

**வசனம்**

சேர, சோழ, பாண்டியர் என்கிற மூன்று வேந்தருக்கும் உரிய தமிழ் நாட்டுக்கு அப்புறத்திலே பரமசிவனுடைய திருவடிகளை அடைந்தவர்களும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருத்தொண்டத் தொகையிலே சொல்லப்பட்ட திருத்தொண்டர்களுடைய காலத்துக்கு முன்னும் பின்னும் பரமசிவனுடைய திருவடிகளை அடைந்தவர்களும் அப்பாலும் அடிசார்ந்தார் என்றும் சொல்லப்படுவார்கள்.

**அப்பாலும் அடிசார்ந்த அடியார்க்கும் அடியேன்!**



## மன்னிய சீர்ச் சருக்கம்

*66. பூசலார் நாயனார்*

**கவி**

பொருவருந்தண் டகநாட்டு நின்ற வூர்வாழ்
பூசுரர்கோப் பூசலார் புந்தி யாலே
இருநிதியந் தேடியா லயமு மாக்கி
யெழுந்தருளப் பண்ணுவதா யெண்ணுங் காலை
அரனதனைக் காடவர்கோற் கருள மன்னன்
அந்நகர மணைந்தவ் வாறறிந்து தாழ
விரவுமனக் கோயிலுற விருத்தி யங்கண்
வேண்டுவ கொண் டிறைஞ்சியருள் மேவி னாரே.

**வசனம்**

**உள்ளக்கோயில்**

தொண்டை மண்டலத்திலே திருநின்றவூரிலே அந்தணர் குலத்திலேபூசலார் நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களுக்கு வேண்டியவற்றை எப்படியும் தேடிக்கொடுத்துப் பரமசிவனுக்கு ஒரு கோயில் கட்டுவதற்கு எண்ணி எங்கேயும் போய்த்தேடி வருத்தப்பட்டும் பொருள் கொஞ்சமும் அகப்படாததினால் மனம் நைந்து, "இதற்கு என்ன செய்வேன்?" என்று ஆலோசித்து மனோபாவனையினாலே கோயில் கட்ட உறுதி செய்து மனதினாலே அதற்கு வேண்டிய செல்வங்களையும்

துணைக் கருவிகளையும் சிற்பிகளையும் தேடி நல்ல சுபதினத்திலே சுபமுகூர்த்தத்திலே அடிநிலை பாரித்து இரவில் உறங்குவதையும் விட்டு எந்நேரமும் அதுவே வேலையாக வெகுநாளாய்க் கோயில் கட்டி அதற்குக் கோபுரமும் ஸ்தூபி பிரகாரங்களும் மகாமண்டபங்களும் முடித்துப் பிரதிட்டை செய்வதற்குரிய ஒரு நல்லநாளைக் குறித்து அதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

**காடவர்கோன் கட்டிய கோயில்**

அப்படி அவர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் போது காடவர்கோன் காஞ்சிபுரத்திலே ஒரு சிவாலயம் கட்டி அதில் சிவலிங்க பிரதிட்டை செய்வதற்குப் பூசலார் நாயனார் வைத்த சுபதினத்திலே தானும் முகூர்த்தம் வைத்தான்

அப்போது பரமசிவன் அந்தத் தினத்துக்கு முதல் நாளில் காடவர்கோன் கனவிலே தோன்றி, "திருநின்றவூரிலிருக்கும் பூசலன் என்பவன் நமக்கு ஒரு கோயில் கட்டியிருக்கின்றான். அதிலே நாளைக்கு நாம் போவோம், ஆதலால் நீ பிரதிட்டைக்கு வைத்த தினத்தை நாளைக்கு மாற்றிப் பின்பு வைத்துக்கொள்," என்று அருளிச் செய்து மறைந்தருளினார்.

அப்போது காடவர்கோன் விழித்து எழுந்து அந்தப் பூசலார் நாயனாரை வணங்குவதற்கு விரும்பி அந்த நின்றவூரை அடைந்து அங்கு வந்த சிலரைப் பார்த்து, "பூசலார் நாயனார் கட்டிய கோயில் எங்கே இருக்கின்றது?" என்று கேட்க, அவர்கள், "அவர் இங்கே கோயில் கட்டவில்லை," என்றார்கள். உடனே காடவர்கோன், அந்த அந்தணர்களை அழைப்பித்து, "பூசலார் நாயனார் என்பவர் யார்?" என்று கேட்க, அவர்கள் எல்லோரும், "அவர் அந்தணர், இந்த ஊர் தான்," என்று சொல்லி அவரை அழைப்பதற்குப் புறப்பட்டார்கள்.

அப்பொழுது காடவர்கோன், அவரை அழைக்க வொட்டாமல் தானே அவரிடத்தில் போய் அவரை வணங்கி, "சுவாமி! நீர் ஒரு சிவாலயம் கட்டியிருக்கின்றீர் என்றும் அதில் சிவலிங்க பிரதிட்டை இன்று என்றும் பரமசிவனால் அறிந்து உம்மைக் கண்டு வணங்குதற்கு வந்தேன். அந்தக் கோயில் எது?" என்று விண்ணப்பம் செய்ய, பூசலார் நாயனார் மயங்கிப் பார்த்து, "பரமசிவன் என்னை ஒரு பொருளாகக் கொண்டு அருளிச் செய்தது, நான் திரவியம் இல்லாமையால் மனோபாவனையிலே கட்டிய கோயிலையே", என்று நினைந்து நடந்ததை எடுத்துச் சொன்னார்.

**காடவர்கோன் வியப்பு**

காடவர்கோன் அதைக் கேட்டு அதிசயித்து, அவரைச் சாட்டாங்கமாக வணங்கித் தோத்திரம் செய்து அனுமதி பெற்றுக்கொண்டு தன்னுடைய ஊராகிய காஞ்சிபுரத்துக்குப் போகும்படித் திரும்பிவிட்டார்.

பூசலார் நாயனார் தன் மனத்திலே கட்டிய கோயிலிலே சுபமுகூர்த்தத்திலே பரமசிவனைப் பிரதிட்டை செய்து வெகுகாலம் பூசை செய்து கொண்டிருந்து சிவபாதத்தை அடைந்தார்.

**மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசலுக்கும் அடியேன்!**



## *மன்னியசீர்ச் சருக்கம்*

*67. மங்கையர்க்கரசியார்*

**கவி**

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக் கொழுந்து
மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார் மண்
சங்கைகெட லமண்சமயம் சாட வல்ல
சைவசிகா மணிஞானத் தமிழிற் கோத்த
பொங்குதிரு வருளுடைய போத வல்லி
பொருவினெடு மாறனார் புயமேல் வாழும்
செங்கலச முலையாடன் அருளா லின்பம்
சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்த வாறே.

**கதை**

மதுரையில் இருந்த நெடுமாற நாயனாருக்கு மனைவியாராகிய மங்கையர்க்கரசியாரானவர், சமயாச் சார்யாராகிய திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளால் திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப் பெற்றார்.

அந்தப் பரமாச்சார்யாருடைய திருவருளினாலே வெகுகாலம் தன்னுடைய நாதருக்குச் சைவ வழித்துணையாகி பாண்டிய நாடெல்லாம் சைவத்திருநெறியைப் பரிபாலனம் செய்து கொண்டிருந்து தன் நாயகருடனே சிவபதத்தை அடைந்தார்.

**வரிவளையாள் மானிக்கும் அடியேன்!**



# மன்னியசீர்ச் சருக்கம்

*68. நேச நாயனார்*

**கவி**

சாலியர்கோக் காம்பீலித் தலைவர் மேன்மை
தாவாத புகழ்நேசர் தஞ்சொ லென்றும்
கோலியவைந் தெழுத்தோதிச் சிந்தை யுன்னிக்
கொண்டபொரு ளன்பர் கொளக் கொடுத்துவாழ்வார்
சீலமிகு திருத்தொண்டர்க் குடையுங் கீளுந்
திருந்தியவெண் கோவணமும் சேர வீந்து
பாலனைய வொளிநீற்றான் பாத மேத்திப்
பரலோக முழுதாண்ட பான்மை யாரே

**கதை**

காம்பிலி நகரத்திலே சாலியர் குலத்துக்குத் தலைவராகிய நேச நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார்.

அவர் தம்முடைய மனத்தின் செய்கையைப் பரமசிவனுடைய திருவடிக்கு ஆக்கி வாக்கின் செய்கையை திருஐந்தெழுத்துக்கு ஆக்கிக் கையின் செய்கையைச் சிவனடியார்களுக்கு ஆக்குவாராகி ஆடைகளும் கீளும் கோவணமும் நெய்து தன் இடத்தில் வரப்பட்ட சிவனடியார்களுக்கு இடையறாது கொடுத்து நாள்தோறும் அவர்களை வணங்கித் துதித்துக் கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

**நேசனுக்கும் அடியேன்**



## மன்னியசீர்ச் சருக்கம்

*69. கோச்செங்கட் சோழ நாயனார்*

**கவி**

வெண்ணாவ லிறைக்கொள்நூற் பந்தர் செய்த
வியன்சிலம்பி யதுவழித்த வெள்ளா னைக்கை
யுண்ணாடிக் கடித்துவுட லொழியச் சோழன்
உயர்குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும்
பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச் செங்கண்
பெருமானாய்த் தென்னவராய்ப் பெருங்கோவில் பலவும்
கண்ணார்வித் துயர்தில்லை மறையவர்க்கு முறையுள்
கனகமய மாக்கியருள் கைக்கொண் டாரே.

**கதை**

சோழ மண்டலத்திலே சந்திர தீர்த்தத்தின் பக்கத்திலே ஒரு தோப்பு இருந்தது. அதிலே இருந்த ஒரு வெள்ளை நாவல் மரத்தின் கீழ் ஒரு சிவலிங்கம் வெளிப்படலும் ஒரு வெள்ளை யானை அதைக் கண்டு தினந்தோரும் தன் தும்பிக்கையினால் தீர்த்தம் கொண்டு வந்து அதற்குப் பூசை செய்து மலர்கள் சாத்தி வணங்கி வரும்

அதனால் அந்தத் திருத்தலத்துக்கு திருவானைக்கா என்று பெயராயிற்று. அறிவினையுடைய ஒரு சிலந்திப் பூச்சி அந்தச் சிவலிங்கத்தின் மேல் சருகு உதிராதிருக்கும்படி தன்வாய் நூலினாலே பந்தரிட்டாற் போல் செய்தது.

சிவலிங்கத்தை வணங்க வந்த வெள்ளை யானை அதைக் கண்டு அநுசிதம் என்று நினைத்து அதை அகற்ற சிலந்திப்பூச்சி மறுபடியும் முன்போல் கட்டிற்று.

வெள்ளையானை மற்றா நாள் அதையும் அழித்தது. சிலந்திப்பூச்சி அதைக்கண்டு, "எங்கள் சுவாமி மேலே சருகு உதிராதிருக்கும் படியாக நான் வருத்தப்பட்டுச் செய்த மேற்கட்டியை இது அழிக்கலாமா?" என்று கோபித்து வெள்ளை யானையினுடைய தும்பிக்கையுள்ளே புகுந்து கடிக்க, வெள்ளை யானை கையைப் பூமியிலே மோதிக் கொண்டு விழுந்து இறந்தது.

முன் தன் தும்பிக்கையை மோதிய போது அதனுள்ளே நுழைந்திருந்த சிலந்திப் பூச்சியும் இறந்தது.

சோழ மாமன்னன் தன் மனைவியாகிய கமலாவதியுடன் சிதம்பரத்தை அடைந்து சபாநாயகரை உபாசனை செய்து கொண்டு இருக்கிற நாளிலே கலாவதிக்கு மகப்பேறு இல்லாமையால் வரம் வேண்ட அந்தச் சிலந்திப் பூச்சி, திருவருளினாலே அவளுடைய வயிற்றிலே பிள்ளையாக வந்தடைந்தது.

கமலாவதிக்குப் பிரசவ காலம் அடுத்த போது சோதிடர்கள், "இந்தப் பிள்ளை இன்னும் ஒரு நாழிகை பொறுத்துப் பிறந்தால் மூன்று புவனங்களும் அரசாளும்," என்றார்கள்.

கமலவதி, "என் பிள்ளை இப்போது பிறவாமல் ஒரு நாழிகை பொறுத்து பிறக்கும் படிக்கு தலை கீழாகத் தூக்குங்கள், என்று சொல்ல, அங்கே இருந்தவர்கள், அப்படியே கட்டித் தூக்கிச் சோதிடர் சொன்ன காலம் வந்தவுடன் கட்டை அவிழ்த்து விட்டார்கள்.

கமலவதி, "நான் இறவாதிருந்து பெற்றெடுத்தேன் கோச்செங்கண்ணானோனோ?" என்று சொல்லி பிள்ளையைப் பெற்று இறந்தாள். சுகதேவன் அந்தப் பிள்ளையை வளர்த்து முடி சூட்டி அரசை அவரிடத்தில் கொடுத்து விட்டுத் தான் தவம் செய்து சிவலோகத்தை அடைந்தார்.

இவர் பிள்ளையான கோச்செங்கட் சோழர், பரமசிவனுடைய திருவருளினாலே பழம்பிறவித் தெளிவோடு பிறந்து சைவமார்க்கம் விருத்தியாக அரசாட்சி செய்பவராகி பல சிவாலயங்களைக் கட்டி வைக்கத் தொடங்கினார்.

திருவானைக்காவிலே தாம் முன்னே அருள் பெற்றதை அறிந்து அங்கே வெள்ளை நாவலுடன் பரமசிவனுக்குக் கோயில் கட்டி வைத்தார்.

பின்பு அமைச்சர்களை ஏவி சோழ நாட்டில் வெவ்வேறிடங்களில் சிவாலயங்கள் கட்டுவித்து அந்த ஆலயங்கள் தோறும் நிவந்தங்கள் அமைத்தார்.

பின்பு, சிதம்பர திருத்தலத்தை அடைந்து சபாநாயகரைத் தரிசித்து வணங்கி தில்லை வாழ் அந்தணர்களுக்குத் திருமாளிகைகள் கட்டுவித்து பின்பு பல திருத்தொண்டுகளைச் செய்துகொண்டிருந்து சபாநாயகருடைய திருவடி நிழலை அடைந்தார்.

**தென்னவனாய் உலகாண்ட செங்கணாற் கடியேன்!**



## மன்னியசீர்ச் சருக்கம்

### 70. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

**கவி**

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பேர்யாழ்
பேணுதிரு நீலகண்டப் பெரும்பா ணனார்சீர்
நிறந்தருசெம் பொற்பலகை யால வாயின்
நிமலன்பாற் பெற்றாரூர் நேர்ந்துசிவன் வாயில்
திறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித்
திருஞான சம்பந்தர் திருத்தாள் போற்றி
அறந்திகழுந் திருப்பதிகம் யாழி லேற்றி
ஆசிறிருப் பெருமணஞ்சேர்ந் தருள்பெற் றாரே.

**கதை**

சோழ நாட்டிலே திருவெருக்கத்தம்புலியூரிலே திருநீலகண்ட யாழ்ப்பானநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனுடைய திருப்புகழை வீணையிலிட்டுப் பாடுவாராகி சோழ நாட்டிலுள்ள சிவத்தலங்களை வணங்கிக் கொண்டு போய் பாண்டிய நாட்டில் சேர்ந்து மதுரையில் இருக்கின்ற சொக்கநாத சுவாமியினுடைய கோயில் வாயிற்படியை அடைந்து நின்று பரமசிவன் மேலவாகிய பதிகம், பதம் ஆகியவைகளை வீணையிலிட்டு வாசித்தார்.

சொக்கநாத சுவாமி அதைத் திருவுள்ளத்தில் நிறைத்துக் கொண்டு அன்றைய இரவிலே தம்முடைய அடியார்கள் எல்லாருக்கும் கனவிலே தோன்றி ஆக்ஞாபிக்க, அவர்கள் மற்ற நாள் திருநீலகண்டப் பெரும்பாணரைச் சுவாமியின் திருசன்னதியின் முன்பு அழைத்துக் கொண்டு வந்தார்கள்.

திருநீலகண்டப் பெரும்பாணர் அது சுவாமியினுடைய ஆக்ஞை என்று அறிந்து சன்னதி முன்பே இருந்து வீணை வாசித்தார்.

அப்பொழுது, "இந்தப் பாணர் அன்பினோடு பாடுகின்ற வீணை, பூமியிலுள்ள சீதம் பட்டால் வீக்கு அழியும். ஆதலால் இவருக்குப் பொன்பலகை இடுங்கள்," என்று ஆகாயத்திலிருந்து ஓர் அசரீரி வாக்கு எழுந்தது.

அடியார்கள் அதைக் கேட்டுப் பொன் பலகையை இட திருநீலகண்டப் பெரும்பாணர் அதில் ஏறி வீணை வாசித்தார். பின்பு பல திருத்தலங்களையும் வணங்கிக் கொண்டு திருவாரூரில் சேர்ந்து கோயில் வாயிலை அடைந்து வீணை வாசிக்க, பரமசிவன் வடக்குத் திசையிலே ஒரு வாயிற்படி செய்ய திருநீலகண்டப் பெரும்பாணர் அதனுள் நுழைந்து போய் வன்மீக நாதரை வணங்கினார்.

பின்பு அவ்விடத்தில் வெகு நாளிலிருந்து அதை விட்டு நீங்கிச் சீர்காழியில் வீற்றிருக்கின்ற சைவ சமயகுரவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய திருவடிகளை அடைந்து வழிபட்டு அவரை விட்டுப் பிரியாமல் அவருடனே கூட இருந்து கொண்டு அவர் பாடியருளுகின்ற திருப்பதிகங்களை வீணையிலிட்டு வாசித்து பெரும் பேற்றைப் பெற்றுப் பின்பு திருநல்லூர் பெருமணத்திலே அவருடனே சிவபதத்தை அடைந்தார்.

**திருநீல கண்டத்துப் பாணனார்க்கடியேன்!**



## மன்னியசீர்ச் சருக்கம்

*71. சடைய நாயனார்*

**கவி**

சங்கையிலா வரன்மறையோர் நாவ லூர்வாழ்
தவரதிபர் தம்பிரான் றோழராய
எங்கள்பிரான் தவநெறிக்கோ ரிலக்கு வாய்த்த
இசைஞானி யார்தநய ரெண்ணார் சிங்க
மங்கையர்கள் தொழும்பரவை மணவாள நம்பி
வந்துதிக்க மாதவங்கள் வருந்திச் செய்தார்
வெங்கணரா விளங்குமிளம் பிறைசேர் சென்னி
விடையினா ரருள்சேர்ந்த சடைய னாரே.

**வசனம்**

திருநாவலூரிலே ஆதிசைவர் குலத்திலே சடைய நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் உலகமெல்லாம் மெய்யான ஒளியைப் பெற்றுப் பிழைக்கும்படி சைவசமயகுரவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் புத்திரராகப் பெற்ற பெரும் பேற்றை உடையவர்.



## *மன்னியசீர்ச் சருக்கம்*

*72. இசைஞானியார்*

**கவி**

நாவற்றிருப் பதிக்கோர் செல்வச் சைவ
நாயகமாம் சடையனார் நயந்த வின்பப்
பூவைக்குல மடந்தை பொற்பார் கொம்பு
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே
யாவிற்றிக ழுந்தலைவன் வலிய வாண்ட
ஆரூரர் அவதரிக்க வருந்தவங்கள் புரிந்தார்
யாவர்க்கு மொட்டத விசைந்த வின்ப
இசைஞானி யெனஞானம் எளிதாமன்றே.

**கதை**

திருவாரூரிலே ஆதிசைவர் குலத்திலே பிறந்த சடைய நாயனாருடைய மனைவியார் இசைஞானியார் என்பவராவர்

எங்கள் பரமசிவனுக்குத் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பெற்றருளிய அவருடைய பெரும் புகழை சிறியேனுடைய புன்மொழியால் சொல்ல முடியுமோ? முடியாது.

என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்

**திருத்தொண்டர் புராணம் முற்றிற்று**



# மாணிக்கவாசகர் வரலாறு

### கடவுள் வணக்கம்

### விநாயகர் வணக்கம்

(நேரிசை வெண்பா)

அஞ்சு தலையொருமூன் றைந்து விழி யோனளித்த
அஞ்சுதலை நீக்கிவிடு மைங்கரன் தன் - அஞ்சாணம்
அஞ்சு தலையோ டனு தினமு மர்ச்சித்து
அஞ்சுதலை யொழிப்பே னற.

### முருகன், சிவன், திருமால், திருமகள் கலைமகள் விருத்தம்

**வேலுடையா** னடியிணையை யனுதினமு மன்புகொண்டு
வேண்டி **யானைத்**
**தோலுடையா** னடியிணையு முமையினது திருவடியுந்
தொழுது **ஆலின்**
**மேலுடையா** னடியிணையுந் திருமாதி னடியிணையும்
**வெண்கஞ்சப்பூ**
**மேலுடையா** ளடியிணையும் அநவர தந் துதித்தேற்றி
மேவி வாழ்வோம்.

**வேலுடையான்** - முருகன், **யானைத் தோலுடையான்** - சிவன், **ஆலின் மேலுடையான்** - திருமால், **திருமாது** - திருமகள், **கஞ்சப்பூ மேலுடையாள்** - கலைமகள்

**சமயக்குரவர் நால்வர்**

திருநாவுக் கரசரெனு மப்பரது திருவடியைத்
தினமும் போற்றி
திருவைநிகர் பரவையர்தோள் சேர்ந்திடுஞ்சுந் தரமூர்த்தி
திருத்தாள் போற்றி!
திருஞான சம்பந்தன் திருவடியை அனுதினமும்
சிரமேற் கொண்டு
திருவாத வூரரெனு மாணிக்க வாசகரின்
செழுந்தாள் போற்றி!

**மற்ற திருத்தொண்டர்**
**வாழ்த்து**
(நேரிசை வெண்பா)

மற்றதிருத் தொண்டர் மலரடியைப் போற்றிசெய்து
நற்றிருவெ ழுத்துசொல் நற்பொருள்கள் - உற்ற
கவியலங் காரமிவை கற்றநல் லோரைச்
செவையுடனே சிந்திப்பேன் யான்.

# மாணிக்கவாசக சுவாமிகள்

*கள்ளப்புலியூர் சஞ்சீவி ஐயர்*

**கதை**

**நன்மகனார்**

தென்திசையிலே வையையாறு மிகுந்த வளப்பங்கள் பெற்ற பாண்டிய நாட்டிலே வையையாற்றங் கரையிலுள்ள திருவாதவூரிலே ஆமாத்தியர் என்கிற அந்தணர் குலத்திலே சைவசமயந் தழைத்து அபிவிருத்தியாகும் பொருட்டு ஒரு நன்மகனார் திருஅவதாரம் செய்தருளினார்.

**வாதவூரர்**

தகப்பனார் இவருக்கு உரிய பருவத்திலே சோதிடர் சொல்லிய காலத்தில் மகா சிறப்புடனே மங்கல வாத்தியம் முழங்க திருவாதவூரர் என்று பெயரிட்டுச் சாதககர்மம், நாம கர்மம், அன்னப்பிராசனம், சௌளம், எழுத்துப் பயிற்சி உபநயனம் இவைகள் செய்து வேதாகமம் முதலிய சாத்திரங்களையும் பிற சாத்திரங்களையும் கற்பிக்க அவர் பதினாறு வயதுக்குள்ளே சந்தேகம் அறக் கற்றறிந்து அதிக சாமர்த்தியராயினார்.

அப்போது மதுரையிலிருந்துகொண்டு அந்தப் பாண்டிய தேசத்தை ஆளுகின்ற அரிமர்த்தன பாண்டிய மன்னனானவன் இந்தத் திருவாதவூரருடைய சாமர்த்தியத்தைப் பெரியோர்கள் சொல்லக்கேட்டு உடனடியாகச் சேவகரை அனுப்பி வாதவூரரை வருவித்து அவர்தம் குணாதிசயங்களை

யெல்லாம் பரீட்சித்து அவர் சாமர்த்தியத்தை அறிந்து மனம் மகிழ்ந்து அவரிடம் அதிக விருப்புற்று அவருக்கு மேன்மையான சிறப்புகள் செய்து தென்னவன் பிரமராயன் என்று பெயரிட்டு அமைச்சர் பதவி கொடுத்துத் தனக்கு முதல் மந்திரியாக வைத்துக்கொண்டான்.

அவர் அரசனால் மிக விரும்பத்தக்கவராகவும், சிவபக்தி, அடியார் பக்திகளில் மிகுந்தவராகியும் ஆதி மகா நீதியோடு அமைச்சர் பணி ஏற்று நடத்திவருங் காலத்திலே அந்தத் திருவாதவூரருக்கு அந்த மண்ணுலகமும் விண்ணுலகமும் அநித்தியங்கள் என்கிற விவேகம் தோன்ற சுகங்களை வெறுத்துப் பேரின்ப வீட்டுக்கு ஏதுவாகிய தத்துவ ஞானத்தைப் போதிக்கும் படியான ஆசிரியரைக் காண வேண்டுமென்று மிகவும் ஆசை கொண்டிருந்தார்.

அப்படி அவரிருக்கையில் சோழ தேசத்திலே கடற்கரையிலே ஆரிய தேசத்தார் குதிரைகள் விற்கக் கொண்டு வந்தார்கள்.

அதை அரிமர்த்தன பாண்டியனிடத்திலுள்ள தூதர்களிற் சிலர் போய்ப் பார்த்துவந்து பாண்டியனை வணங்கி, "சுவாமி சோழ தேசத்திலே கடற்கரை ஓரத்திலே ஆரிய தேசத்தார் விற்பனை செய்யக் குதிரைகள் கொண்டு வந்திருக்கின்றார்கள்," என்று சொன்னார்கள்.

அப்போது பாண்டிய மன்னன் திருவாதவூரர் முகத்தைப் பார்த்து, "நீர் போய் நல்ல குதிரைகளாய் வாங்கிக் கொண்டு வாரும்!" என்று சொல்லி நாற்பத்தொன்பது கோடி பொன் கொடுத்தான். திருவாதவூரர் அதை வாங்கிக்கொண்டு சேர, சோழ, பாண்டியர் தம் சேனைகளும் மற்ற அரசர்கள் சேனைகளும் அநேகமாக ரத, கஜ, துரக, பதாதிகளும் கொங்கண, கலிங்க, கொங்கு, துளுவ, சிங்கள, ஒட்டிய, தெலுங்கு, சீன, மாளவ, மலையாளம் என்கிற இந்தத்

தேசத்தார்களும் தம்முடைய பரிசனங்களும் சூழ தோல் கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி என்கிற நான்கு வாத்தியங்களும் தாம்தாம் என்று முழங்க பெண்கள் இருபக்கத்திலும் சாமரம் வீச மேலே சந்திர வட்டக் குடை பிடிக்க பேரிகை, சின்னம், சங்கு இவைகளும் முழங்கப் போடகர்கள் போற்றிக் கொண்டு பக்கத்திலே வர எதிரில் நாட்டியப் பெண்கள் நாட்டியஞ் செய்ய மீனக்கொடி பிடிக்க ஆகிய இந்த வைபோகத்துடனே நல்ல நாளிலே சுப லக்கினத்திலே தன்னுடைய திருமாளிகையை விட்டு நீங்கிக் கோயிலை அடைந்து வலம் செய்து சொக்கநாதரையும், மீனாட்சியம்மனையும் தரிசனம் செய்துகொண்டு பின்பு பாண்டிய மன்னனுடைய அரண்மனையை அடைந்து அவன் அருள்பெற்று உத்தரவு வாங்கிக்கொண்டு இரத்தினச் சிவிகையின் மேலேறி மதுராபுரியை விட்டு நீங்கி வழிகொண்டு அநேகமான நாடுகளும் நகர்களும் மலைகளும் கடந்து அநேக காதம் வழிகளையும் கடந்து வழியிலிருக்கின்ற திருப்பெருந்துறையென்னும் திருத்தலத்தின் சமீபத்தை அடைந்தார்.

**திருப்பெருந்துறை**

மோட்சத்தில் ஏறுவதற்கு அது பெரிய படித்துறையாக இருப்பதால் அந்தத் திருத்தலத்துக்குத் திருப்பெருந்துறை என்று பெயர் ஆயிற்று. திருவாதவூரர், திருப்பெருந் துறையைச் சமீபிக்கும்முன் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்கிற ஐந்து தொழிலை நடத்துகின்ற பரமசிவனானவர் திருவாதவூரருடைய இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்தினி பாதமும் பார்த்து அவருக்குத் திருவருள் செய்து அடிமையாக்கிக் கொள்ள விரும்பி ஆசார்யமூர்த்தம் கொண்டு அடியார்களையும் கணநாதர் களையும் பூமியிலுள்ள மனிதரைப்போல் ஆக்கி கூட அழைத்துக்கொண்டு எழுந்தருளி கைலாய மலையை விட்டு நீங்கி அவர் வரும் வழியில் மிகுந்த வளப்பமுள்ள திருப்பெருந்துறையை அடைந்து அதன் பக்கத்திலே புன்னை

மரம், சந்தன மரம், சண்பக மரம், நாரத்தை மரம், செருந்தி மரம், கோங்கு மரம், பாதிரி மரம், பலா மரம், பாக்கு மரம், தென்னை மரம், குரா மரம், மா மரம், முருக்க மரம், மகிழ மரம், மந்தாரை மரம் இது முதலாகிய மரங்களால் நிறைந்து மயில், குயில், அன்னம், வண்டு, குரங்கு இவைகளும் நிறைந்து மிகுந்த செழிப்புள்ள பூஞ்சோலையின் பக்கத்திலே மகா அலங்காரத்தோடு கூடிச் செழுமையுள்ள குருந்த மரத்தின் நிழலில் அடியார்கள் கூட்டத்தின் மத்தியிலே அந்தச் சிவனடியார்களுக்குச் சிவாகமங்களைப் போதித்துக் கொண்டு திருவாதவூரருடைய பாசத்தை நீக்கி அவருக்கு ஞான உபதேசம் செய்யும் காலம் பார்த்துக் கொண்டிருந்தார்.

**இது என்ன ஒலி?**

அப்படியிருக்கும் போது முன்னே திருப்பெருந் துறையின் சமீபத்தை அடைந்த திருவாதவூரரானவர் அந்தச் சிவாகமங்கள் ஓதப்பட்ட ஒலியைக் காதில் கேட்டு தூதர்களைப் பார்த்து, "இஃது என்ன ஒலி? இதை நீங்கள் போய் அறிந்து வாருங்கள்," என்று சொல்லியனுப்ப, அந்தத் தூதரில் சிலர் போய்ப் பார்த்து வந்து திருவாதவூரரை வணங்கி நின்று, "சுவாமி! பெருத்த பூஞ்சோலையின் மத்தியிலே ஒரு குருந்த மரத்தின் நிழலிலே அநேகம் அடியார்கள் சூழ்ந்திருக்க அவர்கள் மத்தியிலே பரமசிவனுக்குச் சமானமான ஒரு பெரியவர் இருந்து கொண்டு அந்த அடியார்களுக்குச் சிவாகம சாத்திரங்களைப் போதித்துக் கொண்டிருக்கிறார். அந்த ஒலி தான் இது," என்று சொன்னார்கள்.

திருவாதவூரரானவர் அதைக் கேட்டவுடனே, அவரைச் சேரவேண்டுமென்று மிக்க ஆசை கொண்டு தான் ஏறி இருந்த இரத்தின பல்லக்கை விட்டிறங்கி அதிசீக்கிரத்தில் நடந்து போய் பத்தாயிரம் சிவனடியாருடன் அந்தப் பரமசிவன் வீற்றிருக்கின்ற அந்தத் தெய்வச் சபையை அடைந்து அழகிய உருத்திராக்கம் தரித்து விளங்குகின்ற செவியும், மார்பும், ஒளியுள்ள சிரசு, நெற்றி, கழுத்து, கை, மார்பு இவைகளில்

திருபுண்டரிகமாகத் தரித்த திருநீற்று அழகையும் அக்கினிக் கண்ணை மறைத்ததையும் பொன் போன்று பிரகாசித்த திருமேனியும் ஆகிய இந்த அலங்காரத்தோடே கூடிய பரமசிவனை அந்தச் சிவகணங்களின் மத்தியில் கண்ட மாத்திரத்திலே,

**அகவல்**

வெங்கொடுஞ் சுரத்து வெயிலிடை வருந்தியோன்
தண்மலர்த் தருவைத் தன்னெதிர் கண்டென
விரைந்துசெல் வேட்கைப் பொருந்தின ராகி
மெய்ம்மலர் சிலிர்ப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அழலிடைப் பட்ட மெழுகென உருகி
அழுத கண்ணும் தொழுத கையுமாய்

**கதை**

இவ்விதமான செய்கையை அடைந்து அந்த ஞானாசிரியருடை திருவடிகளிலே விழுந்து வணங்கி எழுந்து அவரைப் பார்த்து, "ஐயா! தங்களுடைய கையிலிருக்கின்ற புத்தகம் என்ன?" என்று கேட்டார். அதற்கு ஞானாசிரியரானவர், "இது சிவஞானபோதம்," என்று அருளிச் செய்ய, உடனே திருவாதவூரர், "சிவம் ஆவது என்ன? ஞானமாவது என்ன? போதமாவது என்ன? இவற்றை எனக்குத் தெரியச் சொல்லுவீரேயானால் அந்நாளில் கல்லால மரத்தின் கீழே வீற்றிருந்து சனகர், சநந்தர், சனத்குமாரர், நாரதர் என்கிற நால்வருக்கும் உபதேசித்த கடவுள் நீரே. அடியேனும் உமக்கு அடியேனே," என்று சொன்னார்.

**சிவஞான போதமாவது யாது?**

அதற்கு ஞானாசிரியர், "சிவம் என்பது மெய்ப்பொருள், ஞானம் என்பது அந்த மெய்ப்பொருளை அறிதல், போதம் என்பது முன் அறிந்ததைத் தெளிதல்" என்று அருளிச்செய்ய, உடனே திருவாதவூரரானவர் மனமகிழ்ச்சியடைந்து அழகிய

பொன்னம்பலத்திலே திருக்கூத்தாடுகின்ற சபாநாயகரே தன்னை ஆட்கொள்ளும்பொருட்டு குருவடிவாகி வந்தாரென்று நெஞ்சத்திலே நினைத்து "சுவாமி! மின்னலைப் போல நிலையில்லாததாயும் அதிக துக்கத்தைத் தருகின்றதாயுமுள்ளதாகிய பொருள்களையெல்லாம் நான் விரும்ப மாட்டேன். உன்னுடைய திருவடியைச் சேர்ந்து அடியேன் அடைந்த பிறவியை நீக்கல் வேண்டும். என்னை இன்றைக்கே அடிமையாக்கிக் கொள்வீராக, என்னுயிருக்கு இறைவனே!" என்று சொல்லி கைகூப்பி வணங்கிக் கொண்டு நின்றார்.

**ஆண்டவனின் அடிமையானார்**

அப்போது அடியார்களில் ஒருவர் "இவர் வீடுபேற்றின்மேல் விருப்பம்கொண்டு அதிதீவிர பக்குவத்தை அடைந்தார்," என்று அறிந்து எழுந்து அந்தஞானாசிரியரை வணங்கி "சுவாமி! இவருடைய தீவினையை நீக்கி அருள் பாலித்தல் வேண்டும்," என்று விண்ணப்பம் செய்ய பரமசிவனான ஞானாசிரியர் திருவாதவூரர்மேல் கிருபை வைத்து அந்த வேண்டுகோளுக்கு இசைந்து திருவாதவூரரைப் பார்த்து, "நீ முற்பிறவியில் செய்த தவவலிமையினாலே உம்மை நாம் அடிமையாக்கிக் கொள்ளும் பொருட்டு இந்தத் திருப்பெருந்துறைக்கு எழுந்தருளி வந்தோம். இனி நீ சஞ்சலப் படாதே," என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பின்பு அடியாரில் ஒருவரைப் பார்த்து, "உபதேசத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேர்க்கக் கடவது," என்றுஅருளிச் செய்தார். அதைக்கேட்டுச் சிவனடியாரில் ஒருவர் எழுந்து உபதேசத்துக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் சேர்த்து அந்தத் தோப்பில் நவரத்தின சகிதமாகிய பலவகைப் பட்டுகளாலே ஒரு கோயில் செய்து ஞானாசிரியருக்குத் தெரிவித்தார்.

**திருவமுது செய்வித்தார்**

அப்போது பகற்காலம் போய் இரவுக் காலம் வந்தது. அந்த இரவு பதினைந்து நாழிகையில் ஆசிரியரானவர் திருவாதவூரரை அடிமையாக்கிக் கொள்ள விரும்பி எழுந்து மங்கல வாத்தியத்துடன் தெய்வசபையை விட்டு நீங்கி திருமஞ்சனச் சாலையை அடைந்து குங்குமம், கத்தூரி, புனுகு, சந்தனம் குழைத்துத் தேகமுழுவதும் பூசி கங்கா தீர்த்தத்தாலும் நல்ல வாசனை கலந்த பன்னீராலும் நீராடல் செய்து திருமேனியில் பொருந்திய நீரை திருவொற்றாடையால் ஒற்றி விலைமதிக்கப்படாத சிவந்த பட்டாடை உடுத்தி முன் செய்த கோயிலில் நின்று ஆசனத்தின்மேல் தெற்கு முகமாக வீற்றிருந்தார்.

**உபதேசித்தார்**

பின்பு திருவாதவூரரானவர் நீராடி வெள்ளை ஆடை உடுத்தி உடல் முழுவதும் திருநீறுபூசி அந்தக் கோயிலில் புகுந்து ஆசிரியர் முன்னே நின்று அந்த ஆசிரியருடைய திருவடிக்கு அபிடேகம் செய்து திருநீறு, சந்தனம் தரித்து மலர்களை அர்ச்சனை செய்து ஆசிரியர் தேகம் முழுவதிலும் பனிநீர் கலந்த சந்தனக் குழம்பைப் பூசி மணமுள்ள மலர்மாலை தரித்துக் கண்களால் ஆசை தீரக் கண்டு பின்பு பருப்பு, தேங்காய்த் துருவல் சர்க்கரை இவை கூட்டிப் பாலிலே சமைத்த திவ்வியமாகிய திருவமுதை அவர் எதிரில் பொன் நாற்காலி வைத்து அதில் சாதித்து நெய், வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம், இவைகளையும் வைத்து தூப தீபங்கொடுத்து நைவேத்தியம் செய்து, "அயன், அரிமுதலான தேவர்களாலும் அறியப்படாத கடவுளே! திருவமுதை உண்டருள்வீராக," என்று மிகுந்த மகிழ்ச்சியோடும் அன்போடும் வேண்டிக் கொள்ள, கடவுளானவர் திருவமுதை உண்டு பன்னீரினால் கையை அலம்பிய பின்பு திருவாதவூரரானவர்கடவுளுக்குத் தாம்பூலம் கொடுத்து கண்ணாடி காண்பித்து பட்டுக் குடை பிடித்து

ஆலவட்டமும் சாமரையும் எடுத்து வீசி பக்கத்தில் அடியார்கள் சூழ மலர்களைக் கையில் எடுத்துக்கொண்டு நிற்க, ஞானதேசிகோத்தமரானவர் அவருக்கு உபதேசிக்கும் படிக்குத் திருவுளங்கொண்டு திருஐந்தெழுத்தில் சிவத்தை முன்னதாக மாறி திருவாதவூரருடைய வலது காதிலே திருவாய் மலர்ந்து உபதேசித் தருளினார்.

பின்பு, திருவாதவூரரானவர், பூமியில் படிய வீழ்ந்தார். அப்போது கடவுளானவர் தன் திருவடிகளை திருவாதவூரர் தலைமேலே சூட்ட அதைத் திருவாதவூரரானவர் அன்புடன் இரண்டு கைகளால் எடுத்துத் தன்னுடைய இரண்டு கண்களிலும் மார்பிலும் படிய ஒற்றிப் பின்பு தன் கைகளைக் கூப்பிக்கொண்டு நின்று, "அயன் அரிமுதலான தேவர்களாலும் அறிவதற்கரிதானவரே போற்றி, என் கண்ணுக்குள் இருக்கும் மணியே போற்றி! என்று அநேக விதமாக அநேக போற்றிகள் செய்தார். அப்போது சூரியனானவன் உதயகிரியை அடைய பகற்காலம் வந்து பரவியது.

**சிவாகம போதனை**

அப்போது கடவுளானவர் திருவாதவூரருக்குச் சிவாகமத்தைப் போதிக்க விரும்பி அவரைத் தனியே அழைத்துக்கொண்டு போய், "கேளும் திருவாதவூரரே! இருள் வடிவமாகிய மலமானது களிம்பு படிந்த செம்பைப்போல் அனாதியே உன்னைப்பொருந்தியிருக்கும், எதிரிட்ட வண்ணங்களைப் பற்றுகின்ற படிகத்தைப்போல உன்னுடைய குணமானது மலத்தில் பொருந்தியிருந்ததால் நீ அநேக தேகங்களெடுத்து வருந்தி உழன்றாய்! புவனங்கள் தோறும் உன்னுடைய வினைப் பயன்கள் வருகிற கிரமத்தின் வழியே அளவை செய்து நாம் நியதிசெய்ய நீ அதனைப் புசிக்குமிடத்து ஞானத்தால் ஆகாம்ய வினையைச் செய்து கொண்டு திரிந்தாய்!

வினைகளைச் செய்த ஆத்மாக்களுக்கு அவ்வினைப் பயனை ஒருவர் மத்தியில் நின்று சேர்க்க வேண்டியதில்லை, ஏனெனில் நீ சிற்றறிவை உடையவனாகையால் இனிமேல் வருவது இன்னதென்றும் புசிப்பது இன்னதென்றும் தெரிந்து சேரமாட்டாய்.

வினைதானே அறிந்து சேருமோ வென்றால் சடமாதலின் அறியாது, பிழைத்தலாகிய நல்வழியை அறியாத உன்னையும் உன்வினைப் பயனையும் அறிந்து உன்னை அடைந்த மலத்தை நீக்கி வீடுபேற்றைத் தருவோம்.

மேலும் யாவர்க்கும் இந்த மலத்தை நீக்காமலிருப்பது ஏனென்றால் துன்பத்தைக் கொண்ட பிறவி சம்பந்தமாயிருக்கிற இருவினைகளும் ஒரு தராசுக்கோலில் வைத்து சமமாய் நிறுத்த பொருளைப் போல ஒத்தால் அவர்களுக்கு மாத்திரம் நம்முடைய பதத்தைக் கொடுத்து அவர் பிறவித்துன்பத்தை நீக்குவோம். முன் சொன்னபடி இருவினை ஒவ்வாதவர்கள் அவ்வளவு நாளும் பிறவிக் கடலில் வீழ்ந்தலைவார்கள்.

பதியாகிய நம்மையும் பசுவாகிய தம்மையும் விசாரியார்கள். இந்தப் பருவம் என்றைக்குக் கூடுமென்றால் நாமிருக்கப்பட்ட திருத்தலங்கள் தோறும் போய் நம்மைத் தரிசனம் செய்து சிவத்தலத்தில் வசித்தல் முதலான பத்து சிவ புண்ணியத்தையும் செய்தால் அந்த இரண்டு வினையும் சமமாக ஒத்துவரும்.

மேலும் நம்முடைய சுயரூபமானது அருவம், அருவுருவம், உருவம் என்று மூன்று விதமாயிருக்கும். அதன் விவரம் யாதெனில், உனக்கு அறியும்படியாய் உபதேசித்த இந்த குருவடிவமே உருவம், இலிங்க ரூபமே அருவுருவம், கோடி சூரியப் பிரகாசமாய் எல்லா உயிரினுக்கும் உயிராய் முடிவும் முதலும் கண்டு நிர்மலமாயிருப்பதே அருவம்.

**சரியை என்றால் என்ன?**

இனி சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேள். சரியையாவது ஆசையினாலே நமக்கு ஆகும்படியான மலர் மரங்களை வைத்தல், அந்த மலர்களைப் பறித்து அநேக மாலைகள் கட்டல், நம்முடைய கீர்த்தியைச் சொல்லுதல், நாமிருக்கின்ற கோயிலைத் திருவலகிடுதல், திருமெழுகிடுதல், திருவிளக்கிடுதல், நம்முடைய அடியார்களுடைய ஏவல் பணிகளைச் செய்தல் ஆகிய இந்த சரியைத் தொழிலைச் செய்தவர்களுக்கு நம்முடைய சிவலோகத்தில் வாழ்ந் திருப்பதாகிய சாலோக பதவியைத் தருவோம்.

**கிரியை என்றால் என்ன?**

கிரியையாவது வாசனையுள்ள திரவியங்களும் தூபங்களும் தீபங்களும் பரிசுத்தமாகிய திருமஞ்சனம், மலர் பஞ்சகவ்யம், பஞ்சாமிர்தம் இது முதலாகப் பூசைக்குரிய திரவியங்களைச் சேர்த்துக்கொண்டு நிர்மலமான மனத்துடன் பூதசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, ஆத்துமசுத்தி, லிங்கசுத்தி எனகிற பஞ்ச சுத்திகளும் செய்து உள்ளிலும், புறத்திலும் நம்மைப் பூசித்து அக்கினி காரியமும் செய்து சிவாகமப் பிரகாரம் இந்தப்படி நம்மைப் பூசிப்பதாகிய கிரியைத் தொழிலைச் செய்தவர்களுக்கு நம்முடைய பக்கத்திலே இருப்பதான சாரூப பதவியைக் கொடுப்போம்.

**யோகம் என்றால் என்ன?**

யோகமாவது சத்துவம், இராசசம், தாமசம் என்னும் மூன்று குணங்களையும் பஞ்சேந்திரியங்களையும் அடக்கி பிராண வாயுவை எழுப்புகின்ற இடகலை, பிங்கலை நாடிகளை அடைத்து சுழிமுனை வழியைத் திறந்து நடன சிலம்போசையுடனே சென்று ஐந்தெழுத்தும் ஓரெழுத்துரு வாகிய தன்மையைக் கண்டு அருளைத் தருகின்ற பரவெளியிற் புகுந்து அழுந்துவதாகிய யோகத் தொழிலைச் செய்தவர்கள் நம்முடைய உருவத்தை அடைதலாகிய சாரூப்ய பதவியை அடைவார்கள்.

**ஞானம் என்றால் என்ன?**

ஞானமாவது, கலைஞானம், ஆகம நூல் இவைகள் யாவையும் மற்ற பல சமய சாத்திரங்களையும் நன்றாய் ஆராய்ந்தறிந்து அதிலுள்ள பசு, பதி, பாசம் என்கிற மூன்றின் செய்திகளை உண்மையென்று நம்பி முன் செய்த கருமத்துக்கீடாக வந்த சிற்றறிவைக் கெடுத்துப் பேரறிவாகிய சிவஞானம் விரிந்து தோன்றுகின்ற மனத்தையுடைய ஞானிகளுக்கு நம்முடைய சாயுச்ய பதத்தைக் கொடுத்தருளுவோம்.

மேலும் பொல்லாத ரூபமுடையவரானாலும் தாழ்ந்த குலத்தவரானாலும் நல்ல ஒழுக்கமில்லாதவரானாலும் அவர்கள் திருநீறு, உருத்திராக்கம் தரித்தவர்களாயிருந்தால் அவர்களைக் கண்டவுடனே மிகுந்த அன்புடனே பிரிய வசனம் சொல்லி அவர்களுக்கு அறுசுவை பதார்த்தத்துடன் திருவமுது செய்வித்து அடியாருக்கு அடியாராக இருக்கப் பட்டவர்கள், நான் என்ற ஆணவத்தை நீக்குவார்கள். நாம் உன்னை நம்முடைய கண்ணினாலே பார்த்த மாத்திரத்திலே உன்னுடைய சஞ்சித வினைகள் போயின.

நீ இந்தப் பிறவியில் அனுபவிக்கும்படி யெடுத்த பழவினைகள் இந்தத் தேகத்துடனே போம். இனி நம்முடைய திருவருளானது உன்னுடைய ஆகாம்ய வினையை ஏறவொட்டாமல் அழிக்கும். உன்னுடைய பொருளும் உயிரும் உடம்பும் உன்னுடையதல்ல, நம்முடையதாகும். இப்போது நாம் எடுத்த மானிட வடிவத்தை உன் மனத்தில் இருத்தி வை. இதுவே பொருள்," என்று அருளிச் செய்தார்.

**எளியோர்க்குக் கொடு**

இந்த உபதேச மொழிகளைக் கேட்ட திருவாதவூரரானவர் அந்தக் கடவுளைப் பணிந்து, "அடியேன் சீவன் முத்தனாக வழிகாட்டினீர்!," என்று கூறி, மனமகிழ்ந்து வணங்கித் தான் அணிந்திருந்த ஆடை ஆபரணங்களையும் குதிரை வாங்கும்படிக் கொண்டு வந்த திரவியத்தையும் அந்தக் குருவின் முன்னே வைத்து வணங்கினார். கடவுளானவர்

சிவனடியாருள் ஒருவரைப் பார்த்து, "இவற்றையெல்லாம் எடுத்துக் கொண்டு போய் சிவாலயத் திருப்பணிக்கும் தவம் செய்வார்க்கும் தரித்திரருக்கும் கொடு," என்று சொல்லியருளினார்.

**பித்தம் பிடித்ததோ?**

பின்பு மாணிக்கவாசகர் உடல் முழுவதும் திருநீறு பூசி, கோவணமும் குடுமிவிரிந்த சிரசும் ஆனந்தக் கண்ணீர் பொழியும் கண்களும் உடையவராகி ஆசிரியரை அன்புடனே பார்த்து நிற்பார். அழுவார், வணங்குவார், எழுந்திருப்பார், கைகூப்பித் தொழுவார், நடந்து போவார், திரும்பி வருவார், இரவென்றும் பகலென்றும் அறியாராயினார். இவ்விதமாகப் பித்தம் பிடித்தவர்போல ஆயினார்.

அப்போது அவருடன் கூட வந்த படைத்தலைவர் முதலியோர் அவர் செய்கையை அறிந்து அவர் எதிரில் போய் நின்று வணங்கி, "நாம் இங்கேயே இருந்தால் பாண்டியன் சினத்திற்கு ஆளாவோம், குதிரை வாங்கச் செல்வோம், வாரும் அய்யரே," என்று மாணிக்கவாசகரை அழைக்க, அதற்கு மாணிக்கவாசகர் படைத்த தலைவரைப் பார்த்து, "அஞ்ஞானம் மிகுந்த நீங்கள் யார்? மாயா பேதமாகிய பொய் வசனங்களையெல்லாம் நம்முடன் பேசவேண்டாம், அப்புறம் போய்விடுங்கள்," என்று சொன்னார்.

**பாண்டியனிடம் சென்றனர்**

அவர்கள் அதைக்கேட்டு இவர் இப்படிச் சொல்வது என்ன வென்று மனமிரங்கி துன்பமடைந்து இதைப் பாண்டியனுக்குத் தெரிவிக்கும்படி நினைத்து திருப் பெருந்துறையை விட்டு நீங்கி மதுரை மாநகரத்தை அடைந்து பாண்டியனைத் தொழுது "சுவாமி சரணம்! சரணம்!

தென்னவன் பிரமராயனென்று தேவரீர் பேரைத் தரித்துத் தங்களுக்கு முதல் அமைச்சராகிய திருவாதவூரருடைய செய்தியை எப்படி நாங்கள் சொல்வோம்! அஃதாவது நாங்கள் தங்களிடத்திலே செலவு பெற்றுக்கொண்டு போய்த் திருப்பெருந்துறையைச் சேர்ந்த பின்பு அந்த நகரத்தின் பக்கத்தில் ஒரு சோலையின் மத்தியில் குருந்த மரத்தின் நிழலில் சிவனடியார்கள் பலரோடு தவவேடம் தரித்து ஒருவர் வீற்றிருந்தார்.

அவரைத் திருவாதவூரர் கண்டு அளவற்ற மகிழ்ச்சி அடைந்து சங்கரா! சிவனே! என்று அவருடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி அவருடன் சில வார்த்தைகள் பேசி, இவர் தரித்திருந்த இரத்தினாபரணங்களையும் பட்டாடைகளையும் குதிரை கொள்ளும்படித் தாங்கள் கொடுத்த திரவியங்களையும் அவருக்குக் கொடுத்துவிட்டுத் தான் கட்டியிருந்த ஆடைகள் அனைத்தையும் அவருக்குக் கொடுத்துவிட்டு ஒரு கோவணம் மட்டும் கட்டிக்கொண்டு தலைமயிரை விரித்துத் தேகம் முழுதும் திருநீறு பூசி, 'இப்படிச் செய்வது முறையல்ல,' என்று சொன்ன எங்கள் முகத்தையும் பார்க்காமல் பைத்தியம் கொண்டவர் போல் இருக்கின்றார்," என்று சொன்னார்கள்.

பாண்டிய மன்னனானவன் அதைக் கேட்டு அதிக கோபம் கொண்டு தேகம் முழுவதும் வியர்வையுண்டாக கண்கள் சிவக்க ஏவலரைக் கொண்டு ஓலை எழுதித் தூதர் கையில் கொடுத்து தூதர்களைப் பார்த்து, "நீங்கள் இந்த ஓலையை எடுத்துக் கொண்டு வாயு வேகமாக ஓடிப்போய் திருப்பெருந்துறையை அடைந்து பிரமராயனான திருவாதவூரனுக்கு இதைக் காண்பித்து அவனைக் கைப்பிடித்துக் கொண்டு அதிசீக்கிரமாக இன்றைய தினத்துக்குள் வந்து சேர வேண்டும்," என்று சொல்லித் தூதரை அனுப்பினான்.

அவர்கள் விரைவாகப் போய் திருப்பெருந்துறையை அடைந்து திருவாதவூரரைக் கண்டு வணங்கித் திருமுகத்தைக் காண்பித்தார்கள். அவர் அதைப் பார்த்துக் கொஞ்சமும் அஞ்சாமல் "இதை நீங்களே வாசியுங்கள்!" என்று சொல்ல அவர்கள் வாசித்தார்கள்.

**மன்னவன் ஓலை**

"இது பாண்டிய மன்னனால் எழுதப்பட்ட ஓலை, தென்னவன் பிரமராயன் என்கிற மந்திரி காண்க. நீர் தன்னைப் பாதுகாத்த அரசருக்குப் பிழை செய்து வேறொரு கருமம் செய்வது தவறு என்று நீர் சாத்திரங்களில் ஆராய்ந்திருந்தும் குதிரை கொள்ளும்படி நம்மிடத்தில் அளவற்ற செல்வங்களை வாங்கிக்கொண்டு போய்க் குதிரை கொள்ளாமல் கோவணம் கொண்டீர்!

அரசாண்டு பிழைப்பதைக் காட்டிலும் இரந்துண்டு வாழ்வது நன்மை. அரசரைச் சேர்ந்து வாழ்வது நஞ்சையுடைய பாம்புடன் கூடி வாழ்வதற்கு ஒப்பாகும்.

ஆகவே இவைகளையெல்லாம் நீர் நன்றாக எண்ணிப் பார்த்து இந்தத் திருமுகம் கண்டவுடன் கால தாமதம் செய்யாமல் நம்முடைய தூதர்களுடன் அதிசீக்கிரமாக நம்முடைய மதுரை மாநகரம் வந்து சேர்வீராக. இது பாண்டிய மன்னன் கையெழுத்து" என வாசித்துச் சொன்னார்கள்.

திருவாதவூரர் அதைக்கேட்டுக் கவலை அடைந்து ஞான ஆசிரியரைத் தொழுது பலவாறாகப் போற்றுதல் செய்து திருமுகத்தில் எழுதிய செய்திகளைச் சொல்லி நின்றார். அப்போது ஞானாசிரியரானவர், திருவாதவூரரைப் பார்த்து, "பாண்டியன் வருத்தப் படுத்துவான், என்று கவலைப் படாதே! நாம் ஆவணி மாதத்தில் மூல நாளில் நல்ல குதிரைகள்

கொண்டுவந்து தருகின்றோம்." என்று சொல்லி, நீர் அரசனிடத்தில் போய் சொல்ல வேண்டியது யாதென்றால், "ஆவணி மாதம் மூல நாளில் குதிரைகள் வரும், நீர் ஓலை அனுப்பியதால் நாம் முன்னதாக வந்துவிட்டோம்," என்று சொல்லும் என்று சொல்லிக் கொடுத்து, பாண்டியன் கோபம் கொள்ளாதிருக்கும் பொருட்டு அவனுக்குக் கொடுக்க ஒரு மாணிக்கம் கொடுத்து, "நீ இந்த தவவேடத்துடன் சென்றால் மன்னன் கோபிப்பான்" என்று மந்திரிவேடம் தரிப்பித்துத் தூதருடன் அனுப்பினார்.

**மதுரையை நோக்கிச் செல்லல்**

அப்போது திருவாதவூரர் கன்றை நீங்கின தலையீற்றுப் பசுவைப்போல் மனம் தளர்ந்து இரண்டு கண்களிலிருந்தும் கண்ணீர் தாரை தாரையாக ஒழுக, "ஐயனே! என்னை நீங்கினையோ?" என்று மனம் நொந்து ஞானாசிரியரிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு திருப்பெருந்துறை நீங்கி அநேக வழிகளைக் கடந்து மதுரையைச் சேர்ந்து பாண்டியன் அவையில் போய் அவனை விருப்பமில்லாமல் புறத்தால் வணங்கி ஞானாசிரியன் கொடுத்த மாணிக்கத்தைக் கையுறையாக எதிரே வைத்து நின்றார்.

**பாண்டியன் வினா**

பாண்டிய மன்னன் வாதவூரரை உட்காரச் செய்து விலை மதிப்பற்ற அந்த மாணிக்கக் கல்லைப் பலதரம் உற்றுப்பார்த்து, மகிழ்ந்து அவர் முகத்தைப் பார்த்து, "நீர் செய்த காரியம் என்ன? சொல்லும்," என்று கேட்டான்.

**வாதவூரர் விடை**

அதற்கு வாதவூரர் பாண்டிய மன்னனைப் பார்த்து, "மன்னர் மன்னவா! தாங்கள் கொடுத்த செல்வத்தை நான் கொண்டு போய் இலட்சணமும் நடையும் சாதியும் பொருந்திய குதிரைக் கூட்டங்களை எல்லாம் விலைக்கு வாங்கி பின்பு அவற்றை இவ்விடத்திற்குக் கொண்டு வருவதற்குக் கணியரை அழைத்து நல்ல நாள், நல்ல நேரம் என்றைக்கு என்று கேட்டேன்.

அவர்கள் நாளும் கோளும் பார்த்து ஆவணி மாதம் மூல நாள், நன்னாள் என்று சொன்னார்கள். ஆகையால் அது வரையுள்ள நாட்கள் கழிவதற்காகத் திருப்பெருந்துறை என்கிற ஊரிலே தங்கியிருந்தேன்.

அப்படியிருக்கும்போது உம்முடைய சேனைகளும் சுற்றத்தாரும் அங்கு வந்து விரைவாக மதுரைக்கு வரவேண்டுமென்று அழைத்தார்கள். அவர்கள் என்மீது அபவாதம் சொல்ல, நீர் அதைக் கேட்டுச் சினம் கொண்டு ஓலை எழுதி அனுப்பி வைத்தீர்! அதனாலே முன்னதாய் வந்து விட்டேன். குதிரைக் கூட்டங்களெல்லாம் ஆவணி மாதம் மூல நாளிலே வந்து சேரும்" என்றார்.

**அரசர்தம் ஆறுதல் மொழி**

அதைக் கேட்ட பாண்டியன் சொல்வான், "உமக்கும் நமக்கும் உண்டாகிய நட்பு நீங்கும்படியாய் நீர் நினைத்ததாகச் சிலர் சொல்லக் கேட்டு அதனாலே அப்படி ஓலை எழுதினோம். இனி அதைப் பற்றி எண்ணாதீர், மனக் கவலையை விட்டு விடும் "என்று கூறிப் பழைய நட்பு முறைப் படிக்குப் பேசித் தன்னுடைய அரண்மனைக்கு இட்டுக்கொண்டு போய் தன் பக்கத்தில் ஆசனத்தில் உட்காரும்படி இருத்தி உயர்ந்த பொன்னினாற் செய்த ஆடை

ஆபரணங்கள் கொடுத்து அரசியல் சம்பந்தமான ஆலோசனைகளையெல்லாம் கேட்டறிந்து அவரை வீட்டுக்குப் போகும்படி உத்தரவு கொடுக்க, திருவாதவூரரானவர் தன்னுடைய இல்லத்தைச் சென்றடைந்தார்.

**உண்மை விளக்கம்**

திருவாதவூரர் சென்ற பின்பு, மற்றொரு அமைச்சர் பாண்டியன் தனித்திருக்கும்போது வந்து பாண்டியனை வணங்கி, "சுவாமி! நான் ஒரு விண்ணப்பம் சொல்லுகின்றேன், கேட்டருள்க! அஃது என்னவென்றால் பிரமராயர் என்ற பெயருடைய நம்முடைய முதல் அமைச்சர், குதிரை வாங்குவதற்காகக் கொண்டு போன தங்களுடைய செல்வங்களை யெல்லாம் சிவனடியார்களுக்குக் கொடுத்து விட்டார்.

அதை அறிந்து வந்து நம்முடைய தூதர்கள் உமக்குச் சொல்ல, அதைத் தாங்கள் கேட்டு ஓலை எழுதி அனுப்பியதைப் பார்த்து அவர் வந்து உம்முடைய கோபத்தை நீக்கி தன்னுடைய உயிர் பிழைத்து வாழும் பொருட்டு எண்ணித் தங்கள் மேல் மிக்க அன்புள்ளவர்போல் உம்முடைய திருவடியை அடைந்து, ஆவணி மாதம் மூலநாளில் குதிரைகள் வரும் என்று சொன்னாரே, அந்த வார்த்தைகள் எல்லாம் பொய்யே தவிர, மெய்யல்ல," என்று சொன்னார்.

அரசரானவர் அதைக் கேட்டு, நிரம்பவும் கோபம் கொண்டு தூதர்களைப் பார்த்து, "நீங்கள் திருப்பெருந் துறைக்குப் போய் அங்கே குதிரைக் கூட்டங்கள் இருக்கின்றதா? இல்லையா? என்று பார்த்து வாருங்கள்," என்றார். உடனே தூதர்கள் அதிசீக்கிரத்தில் போய்ப் பார்த்து வந்து, "மன்னர்மன்னவரே! திருப்பெருந்துறையிலும் அதன் பக்கத்திலுள்ள ஊர்களிலும் போய்த் தேடிப் பார்த்தோம்.

குதிரைகள் இல்லவே இல்லை என்று சொல்ல பாண்டிய மன்னன் மிகவும் கோபம் கொண்டு தண்டல்காரர்களைப் பார்த்து, "பிரம்மராயன் கையில் தாம் கொடுத்த செல்வங்களையெல்லாம் வாங்கி வாருங்கள்," என்று கட்டளையிட்டான்.

தண்டல்காரர்கள் சினமிக்கவர்களாகத் திருவாதவூரர் முன்னே போய் நின்று, "குதிரைகள் வாங்கும்படி உம்முடைய கையில் கொடுத்த திரவியங்களை எல்லாம் வாங்கி வரும்படிக்குப் பாண்டியமன்னர் எங்களுக்குக் கட்டளையிட்டார். அஃது என்னவென்றால் தூதர்கள் அரசர் தம் ஆணைப்படி திருப்பெருந்துறைக்குப் போய்ப் பார்த்து வந்து அங்கே குதிரைகள் இல்லையென்று சொல்லி விட்டார்கள். அதைக் கேட்டு மன்னரும் உம்மிடம் வைத்த நம்பிக்கையை இழந்து விட்டார். இனி உம்மைப் பூமியாள வொட்டார். நீர் இந்தக் கணமே திரவியங்களையெல்லாம் கொடும்," என்று சொல்ல திருவாதவூரர் ஒன்றும் பேசாமலிருந்தார்.

அதைத் தண்டல்காரர்கள் பார்த்து மிக்க கோபம் கொண்டு அவரைக் கொண்டு போய் சிறைச் சாலையில் வைத்தார்கள். அப்போது கதிரவனானவன் அவருடைய துயரத்தைக் காண மனம் தாளாமல் மறைந்து கொண்டவன் போல் மேற்றிசையில் மறைந்தான்.

அன்றைய இரவுப்போதில் மதுரை மாநகரத்தில் உள்ளவர்கள் எல்லோரும் இந்தத் திருவாதவூரருக்கு நன்மையுண்டாகுமோ? ஐயோ! இதற்கு நாம் என்ன செய்வோம்? என்று மனவருத்தம் கொண்டு உறங்காமல் இருந்தார்கள். கதிரவன் உதயமாயினான்.

**திருவாதவூரர் துயரம்**

பாண்டிய மன்னன் உறக்கம் நீங்கி நீராடி சிவபூசை முதலியன முடித்து அடை ஆபரணங்களால் தன்னை அலங்காரம் பண்ணிக்கொண்டு படைவீரர்களுடன் கொலு மண்டபத்தில் வீற்றிருந்தான்.

அப்போது தண்டல்காரர்கள் திருவாதவூரரைப் பார்த்து, "நீர் கொண்டு சென்ற திரவியங்களைத் தரமாட்டீரானால் இன்றைக்கு உம்மை அதிக வருத்தப் படுத்துவோம்" என்று சொல்லி அரசரின் எதிரே அதிகமாய்க் கொளுத்துகின்ற வெய்யிலிலே நிறுத்தினார்கள்.

அப்போது திருவாதவூரரானவர் வருத்தம் அடைந்து தன்னையாட்கொண்ட ஞானாசிரியரை நினைத்துச் "சுவாமி இங்கே எனக்கு நேரிட்ட வருத்தத்தை நீ அறியவில்லையோ? நீ குதிரை கொண்டு வந்து பாண்டியனுக்குக் கொடுக்கிறேன் என்று சொன்னது பொய்யோ? உம்மிடத்தில் நான் அன்புடையவன் அல்லன் என்று வெறுத்து விட்டாயோ? அடியேனை வெயிலிலே நிறுத்தினார்களென்றால் உம்முடைய கீர்த்தி பெருகுமோ? அடியேனுக்கு இங்கே ஒரு துணையுமில்லையே! ஈனனான என் சொல்லும் காதில் ஏறுமோ?" என்று இன்னமும் அநேக விதமாகக் கடவுளை வாழ்த்தியபோது இந்த வார்த்தைகளெல்லாம் ஞானாசிரியனுடைய செவியினுள் நுழைந்தன.

**நரிகள் பரிகள் ஆயின**

பின்பு ஞானாசிரியரானவர் அவர் வருத்தத்தை நீக்க நினைத்து காட்டிலிருக்கின்ற நரிகளெல்லாம் வந்து நல்ல குதிரைகளாகவும், தேவர்களெல்லாரும் வந்து அந்தக் குதிரைகளைச் செலுத்துகின்ற இராவுத்தர்களாகவும் ஆகவேண்டுமென்று தன் மனத்திலே நினைக்க அந்தப்படியே அவை வந்து சேர்ந்தன.

அப்போது கடவுளானவர் ஆரிய தேசத்துக் குதிரை வணிகர் போல் வடிவம் கொண்டு நந்திகேசுவரரைக் குதிரையாகச் செய்து அதன் மேல் தான் ஏறிக்கொண்டு கையில் சவுக்கு வைத்துக்கொண்டு குதிரைச் சேவகர் இரண்டு பக்கங்களிலும் குதிரை மேலேறிக்கொண்டு சூழ்ந்து வர எழும்புகின்ற தூளியானது பூமியாகாசமெங்கும் பறக்க, ஊதுகொம்பு உடுக்கை முதலான வாத்தியத்தோடு குதிரைகளை ஓட்டிக்கொண்டு மதுரை மாநகரத்தின் மதில் சமீபத்தில் அடைந்தார்.

அப்போது அங்கே நின்றவர்கள் போய் பாண்டியனை வணங்கி, "சுவாமி! இப்போது அநேகமான குதிரைக் கூட்டங்கள் நம்முடைய பக்கத்தில் வந்தன" என்று சொல்ல, உடனடியாக திருவாதவூரர் மேல் விருப்பமுள்ளவராகி அவரை வரவழைத்து ஆடையாபரணங்கள், வெகுமதிகள் கொடுத்து, "குதிரைகள் வந்திருக்கிறதாம், போய்ப் பார்ப்போம் வாரும்," என்று சொல்லி அழைத்துக்கொண்டு அரண்மனையை விட்டு நீங்கி இரத்தின பல்லக்கின் மேலேறிக் கொண்டு குதிரை நடத்தும் இடத்தில் பூமாலை கட்டிய முத்துப் பந்தலின் கீழ் புலவர்கள் பாடிச் சூழ அந்தணர் வாழ்த்த மங்கையர் இரண்டு பக்கத்திலும் வெண்சாமரம் வீச நாடகப் பெண்கள் பாடி நாட்டியம் செய்ய சங்கு, பேரிகை, சின்னம் முதலான சகல வாத்தியங்களும் ஒலிக்க பூமியிலிருந்து எழும்புகின்ற தூளியானது ஆகாயத்தில் பரவ ஆகிய இந்த வைபோகத்துடன் அந்த முத்துப் பந்தலின் கீழ் போடுவித்த சிம்மாசனத்தில் வீற்றிருந்து கடல் பொங்கி வருதலைப் போல் குதிரைக் கூட்டங்கள் வருவதைப் பார்த்து "நாம் கொடுத்த பொன்கள் இதில் ஒரு குதிரை பெறாது," என்று நினைத்துக் கொண்டிருந்தான்.

**இராவுத்தர் சூழ இறைவன்**

அரையில் கட்டிய உடைவாளையுடையவரும் கத்தியை உடையவரும் சந்தனப் பொட்டை உடையவரும்

பொன் போன்ற தேகத்தை உடையவரும் பவழமாலையை அணிந்தவரும் மயில் பீலியை உடையவரும் புலித்தோலை உடையவரும் மலரும் பச்சிலையும் கட்டிய மாலையைக் குடுமியில் தரித்தவரும் உரத்த சொல்லையுடையவரும் அம்பறாத் தூணியை உடையவரும் கையில் வில் பிடித்தவரும் வெளித்த பார்வையை உடையவரும் பொன் குண்டலம் அணிந்தவரும் பொன்னரி மாலையை யுடையவரும் பல நிறமுள்ள தலைப்பாகையை அணிந்தவரும் பருத்த புயத்தை உடையவரும் பின்னிய குடுமியை உடையவரும் ஆகிய இவைகளை உடைய இராவுத்தர்கள், உடைவாள், வேலாயுதம், வில், அம்பு, கத்தி இவைகளைத் தரித்துக்கொண்டு சூழ்ந்துவர அவர்கள் மத்தியிலே கடவுளானவர் இரத்தின கச்சைப் பட்டாடையை இடுப்பிலே கட்டிக்கொண்டு அதில் உடைவாளைச் செருகித் தோள்களில் நவமணிமாலைகள் அணிந்து அங்கியுடுத்திக் கொண்டு மேலே பட்டாடை சாத்தித் தலைப் பாகையை தரிந்து முக மலர்ச்சியுடன் குதிரைச் சவுக்கைக் கையிலே பிடித்துக்கொண்டு தனக்குப் பக்கத்தில் சாமரங்கள்வீச முத்துக் குடைகள் பிடிக்க ஆரிய தேசத்து அரசனைப் போல வந்தார்.

அந்த இராவுத்தரானவர்கள் வேலாயுதங்களைச் சுழற்றிக் கொண்டு எதிரே போவார்கள். வாயினால் இரைச்சலிடு வார்கள். கோபத்தோடு கத்திகளை அசைப்பார்கள். வரிசை தீர்ந்து நின்று போர் செய்வார்கள்.

இத்தகைய அதிசயங்களை யெல்லாம் பாண்டிய மன்னன் கண் இமை கொட்டாமல் பார்த்து இப்பேர்ப்பட்ட குதிரைகளை அயன், அரி தவிர மற்றபேர் யாவர் பெற்றுள்ளார் என்று அதிசயப்பட்டு திருவாதவூரரை அழைத்து, "இந்த வீதியிலே இந்தக் குதிரைகளை நடத்தி நடையைக் காட்டும்படிக்கு இந்தக் குதிரைகளுக்குத் தலைவனுக்குச் சொல்லும்" என்று சொன்னான்.

திருவாதவூரரானவர் அதைக் கேட்டு முகமலர்ச்சியோடு பரமசிவனை நெருங்கிப் போய் நின்று கண்களில் நீர் பெருக, சுவாமி! குதிரையின் மேல் இன்றைக்கு உம்மைக் காண நான் என்ன தவம் செய்தேன்? என்று பலவிதமாக மனத்தினால் வணங்கி பாண்டியன் சொன்ன வசனத்தை விண்ணப்பம் செய்தார்.

**பாண்டியன் சினம் கொண்டான்!**

அவர்கள் நாகபந்தம், விருத்தம், நெடுவோட்டம் முதலான நடைகளுடன் குதிரைகளை நடத்திக்கொண்டு எதிரே வர, பாண்டிய மன்னனானவன் குதிரைத் தலைவனைப் பார்த்து அதிசயப் பட்டுத் தலையசைத்து விலைமதிப்பற்ற ஒரு பட்டாடையை வெகுமானமாகக் கொடுக்க, கடவுளானவர் அந்தப் பட்டாடையைக் குதிரைச் சவுக்கின் மேல் ஏற்றிக்கொண்டு நகைத்தார்.

அதைப் பாண்டிய மன்னன் கண்டு, நாம் கொடுத்த பட்டாடையை வாங்கித் தலையிலே தரித்துக்கொள்ளாமல் விருப்பமில்லாதவனாய்க் குதிரைச் சவுக்கிலே வாங்கிக் கொண்டான் என்று கோபிக்க, அதைத் திருவாதவூரர் அறிந்து பாண்டியன் முன்னே போய் நின்று இவன் கொண்ட கோபம் தணியும்படிக்கு "ஆடையாதி வெகுமானங்களைக் குதிரைச் சவுக்கிலே வாங்கிக் கொள்வது அவர்களுடைய தேச வழக்க"மென்றார்.

பின்பு பாண்டிய மன்னன் கோபம் நீங்கி அன்பு கொண்டு, அசுவ இலக்கணம் பார்த்து நீங்கள் இந்தக் குதிரைகளை அசுவ சாத்திரப்படி சோதித்து இழிவும் உயர்வும் நம்மிடம் சொல்லும் என்றான்.

அப்போது அவர்கள் அசுவ லட்சண சாத்திரப்படி சோதித்துப் பாண்டியன் முன் நின்று, "சுவாமி! இந்த சாத்திரப் படிக்கு உத்தமமாயிருக்கிறது," என்று சொல்லபாண்டிய

மன்னனானவன் பரமசிவன் திருமுகத்தைப் பார்த்து, "குதிரைகளையெல்லாம் கயிறு மாறித்தாரும்" என்று சொன்னான். அப்போது இராவுத்தர்கள் குதிரைகளைக் கயிறு மாறிக் கொடுக்க ஏவலர்கள் அந்தக் குதிரைகளையெல்லாம் வாங்கிக்கொண்டு போய்க் குதிரைக் கொட்டிலிலே கட்டினார்கள்.

பின்பு கடவுளும் குதிரைக் காரர்களும் தாங்கள் வந்த வழியே போய்க் கோயிலை அடைந்தார்கள். பாண்டிய மன்னன் திருவாதவூரரைப் பார்த்து, "இப்பேர்ப்பட்ட குதிரைகள் உம்மால் அல்லவோ எனக்குக் கிடைத்தன" என்று சொல்லி மகிழ்ந்து அவரை அவர் அரண்மனைக்குப் போக உத்தரவு கொடுத்துவிட்டு எழுந்து தன் அரண்மனையைச் சேர்ந்தான். சூரியனும் மறையத் தொடங்கினான்.

**பரிகள் நரிகளாயின**

அன்றைய இரவில் கடவுள் கொடுத்த குதிரைகளெல்லாம் நரிகள் ஆகி ஒன்றுடன் ஒன்று சண்டையிட்டுச் செருக்கடைந்து அவ்விடத்திலிருந்து குதிரைக்காரர்களையும் பழைய குதிரைகளையும் கொன்று சொக்கநாயகரைக் கூப்பிடுவதைப் போல சொக்கேச! சொக்கேச! என்று பெரிய கூச்சல் போட்டுத்தங்களைக் கட்டிய கயிறுகளை எல்லாம் அறுத்துக்கொண்டு மதுரையெங்கும் பரவி ஒன்றுடனொன்று சண்டையிட்டுக்கொண்டிருந்தன.

அப்போது அந்த மதுரை மாநகரத்திலுள்ளவர்கள் எல்லாம் பயந்து தெருக்களில் கும்பலாக கூடுவார்கள். கூச்சலிடுவார்கள், மயங்குவார்கள், ஒளிக்க இடம் தேட ஓடுவார்கள். ஓடி ஒளிந்து கொள்வார்கள். "இப்போது எங்களைக் காக்க வேண்டும் சுவாமி!" என்று சொக்கநாதரைத் தொழுவார்கள். தெருக்கதவுகளைச் சாத்திக் கொள்வார்கள். சிலர் மதில் மேல் ஏறிக்கொள்வார்கள். சிலர் கோபுரங்கள் மேல் ஏறிக்கொள்வார்கள். சிலர் அவரவர்களுடைய மெத்தையின் மேல் ஏறிக் கொள்வார்கள்.

நம்முடைய அரசன் செங்கோல் கொடிதானதோ? என்பார்கள். இவ்வாறு துன்புற்றுக் கொண்டிருக்குமளவில் சூரியன் உதயமாயினான்.

பின்பு இறந்துபடாமல் தப்பின சில குதிரைக் காரர்கள் சீக்கிரமாக ஓடிப் போய் பாண்டிய மன்னன் முன்னே நின்று "சுவாமி! குதிரைகள் எல்லாம் நரியாய் விட்டது," என்று கூச்சல் போட்டுச் சொன்னார்கள். பாண்டியன் அதைக் கேட்டு இரண்டு கண்களும் தீப்பொறி பறக்க தேகத்தில் வியர்வை உண்டாக அதிகக் கோபம் கொள்ள, இதையறிந்த பரமசிவனானவர் அந்த நரிக்கூட்டங்களை எல்லாம் பழையபடி காட்டில் சேரும் படியாய்ச் செய்வித்தார்.

பின்பு பாண்டிய மன்னன், முன்கொண்ட கோபத்துடனே சேனையோடு கொலுமண்டபத்திலே வந்து வீற்றிருந்து தண்டல்காரனால் திருவாதவூரரை அழைப்பித்து மற்ற அமைச்சர்களைப் பார்த்து, "இவர் நாம் கொடுத்த திரவியங்களை எல்லாம் யாசகர்களுக்குக் கொடுத்துவிட்டு நரிகளையெல்லாம் பரிகளாக்கி நம் முன்னே கொண்டு வந்து நமக்குக் காட்டிய வித்தையைப் பார்த்தீர்களா? தன்னுடைய தொழிலிலே தப்பினவர்களுக்கு மிகுந்த துன்பத்தைச் செய்து தண்டிப்பது அரசநீதி என்றாலும் அந்தணர், தவத்தோர், பெண்டிர், விருத்தர், பாலகர் இவர்களுக்குத் துன்பந்தருவது நம்மை ஒத்தவர்களுக்கு முறையல்ல" என்று சொல்லித் தண்டல் காரர்களைப் பார்த்து, "நீ இவரை நம்முடைய கண்பார்க்க நம்மின் எதிரே இல்லாமல் அப்புறம் கொண்டு போய்த் தீயை ஒத்த வெயிலிலே விருத்தமாய் ஒரு கோடு கிழித்து அதற்குள் நிறுத்தி நம்மிடத்திலே வாங்கிய செல்வங்களை எல்லாம் கொஞ்சமாவது பாக்கியில்லாமல் வாங்குங்கள்," என்றான்.

**இறைவா என்ன வேதனை?**

அந்தப்படியே தண்டல்காரர்கள் வாதவூரரை இட்டுக்கொண்டுபோய் நல்ல வெய்யிலிலே கோடு கிழித்து

நிறுத்தினார்கள். அப்போது திருவாதவூரரானவர் தமக்குக் குதிரைகளைக் கொண்டு வந்து கொடுத்த கடவுளை நினைத்து, "முற்காலத்திலே அயனும் அரியும் தேடியும் காணாத சோதிப் பொருளே! நான் என்ன செய்வேன்? தில்லை மூவாயிரவர் வணங்கும்படி நின்ற கடவுளே! நான் என்ன செய்வேன்? உன்னிடத்தில் கருணை இல்லையோ? என்னை அடிமை கொண்டவன் நீயல்லவோ? என்னுடைய துன்பத்தை நீ அறியவில்லையோ? தேவரீர் கொடுத்த குதிரைக் கூட்டங்கள் நரிகள் ஆனதைக் கண்டு அடியேனை வருத்துகிறார்கள். இத்துன்பத்தை நீ போக்காவிடின் நீ நஞ்சினைக் கண்டத்தில் நிறுத்தியதும் திரிபுரங்களை எரித்ததும் பொய்யாகும்," என்று சொல்லி வணங்கினார்.

**மன்னன் கங்கையை வேண்டல்**

அப்போது பரமசிவனார், திருவாதவூரர் படும் துன்பத்தை அறிந்து கங்கையை ஏவ, அது பெருக்கெடுத்து வையை நதியிலே சேர்ந்து வெள்ளப் பெருக்கெடுத்துக் கடலைப் போல எங்கும் பரவி கழனிகள் மேல் விழுந்து புரண்டு அலைகளை வீசி மதுரை கோயில் மதிலையும் அரசர் தம் அரண்மனை மதிலையும் இடித்துத் தள்ளி மதுரையை அழிப்பதைப் போல் பக்கமெங்கும் வையையின் வெள்ளமானது பரவி வந்தது. அப்போது மதுரையிலுள்ள மக்களெல்லாம் அதைக் கண்டு பயங்கொண்டு, நாம் இனி என்ன செய்வோம்? என்று கவலைகொள்ள, பாண்டிய மன்னன் விரைந்து ஏவலரோடு புறப்பட்டுப் போய், தாலி, தாம்பூலம் இவற்றை யெல்லாம் மங்கல வாத்தியத்துடன் அந்த வையை நதியிலே விட்டு, "வையகத்தாருக்கு உயிராகிய தாயே! உன்னுடைய மிகுந்த கோபத்தைக் குறைத்துக் கொண்டு அருள் புரிய வேண்டும்," என்று கங்காதேவியைப் போற்றி வணங்கி நின்றான்.

**வையையாற்று வெள்ளம்**

அப்போது கங்காதேவி கோபம் நீங்காமல் அதிகக் கோபம் கொண்டு மலையைப் போல் அலைகள் மேலும் மேலும் வீசி இரைச்சலிட்டு பரவிற்று. பாண்டிய மன்னன் அதைக் கண்டு மிகவும் பயந்து அமைச்சர்களைப் பார்த்து, "இந்த மதுரை மாநகரத்திலிருக்கின்ற சொக்கநாயகருக்கு நான் செய்யும் பூசையில் குறைவு பட்டதுண்டோ? தவத்தில் மிகுந்த பெரியோர்களுடைய மனம் புழுங்கும்படி நான் தீமை செய்ததுண்டோ? இது எவ்விதத்தினாலே வந்தது? தெரிந்து ஆலோசித்துச் சொல்லுங்கள்," என்று சொல்ல, அமைச்சர்கள் இது திருவாதவூரரால் வந்ததென்று அறிந்து பாண்டியனைத் தொழுது, "சுவாமி! பிரம்ம ராயரை நிறுத்தின கோட்டை விட்டு நீக்கி அவருடைய மனம் மகிழும்படி செய்வித்தால் வெள்ளமானது இந்த ஊரை அடித்துக் கொண்டு போகாது," என்றார்கள்.

**திருவாதவூரருக்கு வீடுதலை**

அதைக் கேட்டுப் பயம் நீங்கிய பாண்டிய மன்னன், அந்தத் திருவாதவூரரைத் தன் முன்னே அழைப்பித்து, மனங்கனிந்து முகமகிழ்ந்து திருவாதவூரரை அன்புடனே பார்த்து, "அய்யா! திருவாதவூரரே! நீர் பரமசிவன் அடியார் கையில் கொடுத்த பொருள் நம்முடையது. ஆகையால் தருமம் பிறருக்கும் போகாது, நமக்கே வரும். இதற்காக உம்மைத் தண்டித்தது என் அறிவின்மையே, இதை முன்னதாக அறிந்து கொள்ளாத குற்றத்தை நம்மதாகக் கொள்வோம். குறைவில்லாமல் இனி வையை ஆறானது நம்முடைய மதுரைப் பட்டினத்தை அழிக்காமல் தடை செய்து ஆள வேண்டும்" என்றான்.

விருப்பும் வெறுப்பும் இல்லாத திருவாதவூரர் அப்போது மதுராபுரியை அடித்துக்கொண்டு போகாமலிருக்கும் பொருட்டுக் குதிரைமேல் வந்த கடவுளின் காட்சியை மனத்தில் நினைத்து வானத்தைப் பார்த்து வணங்க, வெள்ளமானது உள்ளடங்கிற்று.

பின்பு திருவாதவூரர் வையை நதிக் கரையில் வந்து தன்னை வணங்கிய தூதர்களுடைய முகத்தைப் பார்த்து, "தூதர்களே! வையை நதியை அதிசீக்கிரத்திலே அணை செய்ய வேண்டும். நீங்கள் இந்த மதுரை மாநகரத்தில் உள்ளவர்களையெல்லாம் விரைந்து வரும்படிக்குப் பேரிகை கொட்டித் தெரிவியுங்கள்," என்றார்.

**கரையை அடைத்தனர்**

அவ்வாறே தூதர்கள் தெருக்கள் தோறும் சென்று பேரிகையை அடித்துத் தெரிவிக்க, மதுரை மாநகரிலுள்ளவர்கள் எல்லோரும் மண்வெட்டியும், கூடையும் எடுத்துக்கொண்டு, வையையாற்றங்கரையிலே வந்து நின்றார்கள். அப்போது திருவாதவூரர் ஆணைப்படிக்குத் தூதர்கள் போய் அவரவர்களுக்கு அளவுகோலால் அளந்து பங்கிட்டுக் கொடுத்துக் கையிலே ஒரு சிமிறு வைத்துக்கொண்டு வையை நதிக்கரையை அடைக்கும்படிச் சொல்ல, அவர்களெல்லோரும் அலைகள் ஒதுக்கிய முத்துக்களை நீரிலே பதியத் தள்ளி உயரும்படிக்கு கரையைச் செய்வார்கள். மரங்களைக் குதிரைப் பாய்ச்சலாக நிறுத்து என்பார்கள், வைக்கோலால் செய்த பாம்புத் திரைகளை உருட்டித் தள்ளுங்கள் என்பார்கள். வெள்ளம் பெருகுகிறது என்பார்கள். தேவர்களே! எங்களைக் காப்பாற்றுங்கள் என்பார்கள். அகில் கட்டைகளும் சந்தனக் கட்டைகளும் அடித்துக்கொண்டு வருதலைக் குவித்து வைப்பார்கள்.

**வந்தியொருத்தி**

இவ்விதமாக மதுரையிலுள்ளவர்கள் எல்லாரும் வையை நதி வெள்ளத்தை அடைக்கும்போது, பரமசிவனிடத்தில் அன்பு மிகுந்தவளும் மிகுந்த தவத்தையுடையவளும் , பக்தி உடையவளும், முதுமையும் நரைத்த தலையும் ஆகிய நிலையிலுள்ளவளுமாய்ப் பிட்டு

விற்று வாழ்வு நடத்துகின்ற ஒருத்திக்கு ஒரு பங்கு வந்தது. அதை அடைக்க அவளுக்குக் கூலி ஆள் கிடைக்காமையால் ஏவலர்கள் அவளை வருத்தப்படுத்த, அப்போது அந்தப் பிட்டுவிற்கும் வந்தியானவள் பயந்து இந்தப் பிட்டைக் கூலிக்கு வாங்கிக் கொண்டு என் பங்கை அடைப்பவர்கள் ஒருவரும் இல்லையே என்று மனம் வருந்தி சொக்கநாதர் கோயிலுக்குப் போய் இறைவனை வணங்கி நின்று கண்களில் கண்ணீர் வடிய, "சுவாமி! நீண்ட கச்சையுடையவனே! செஞ்சடையனே! பிட்டு விற்று உயிர்வாழும் எனக்கு இப்படிப்பட்ட துன்பம் வருவதுண்டோ? என்னை அடிமையாகக் கொண்டவனே! இனி இதை யாரிடம் சொல்லுவேன்? நீ இன்றைக்கு என்னுடைய துன்பம் தீரும்படிக்கு அருள் செய்யாவிட்டால் நான் உயிரை நீக்கிக் கொள்ளுகிறேன்," என்று சொல்ல அப்போது பரமசிவனானவர் அவள் மேல் அன்பு வைத்து அவளுக்குத் தான் ஆளாகும்படி எண்ணிக்கொண்டு ஒரு கூலிக்காரனைப் போல் வடிவம் கொண்டு தலையில் மண் எடுக்கும் கூடையைக் கவிழ்த்து மண்வெட்டியைத் தோளின் மேல் மாட்டி அதிக பசி உள்ளவர் போல் வேடம் கொண்டு பிட்டு விற்கும் வந்தியானவள் காணும்படிக்குக் கோபுர வாயிலில் நின்று மகிழ்ச்சி கொண்டு, "இங்கே என்னை வேலை செய்ய வைத்துக்கொள்ள யாராவது உண்டோ?" என்று சொன்னார்.

அப்போது அந்த வார்த்தையைக் கேட்டு பிட்டு வாணியச்சி அம்மையானவள் தன்னுடைய மனக் கவலை தீர கடவுளாகிய கூலியாளைக் கண்டு, "மகனே! நீ எனக்கு ஆளாக இருக்க வேண்டியது," என்று சொல்ல, "நீ கூலி கொடுத்தாயானால் அப்படியே வருவேன்," என்று சொன்னார். அதற்கு அந்த அம்மையானவள் "நீ உண்பதற்குச் சுவையான இந்தப் பிட்டைத் தருவேன், எஞ்சிய பிட்டை விற்றுச் சாயுங்காலம் உனக்குக் கூலியைத் தருவேன்" என்றாள்.

அதற்குச் சுவாமியானவர், "தாயே! நான் மிகுந்த பசியாய் இருக்கின்றேன். இப்போது கொஞ்சம் பிட்டு கொடுப்பாயானால் அதைத் தின்று இளைப்பாறி உனக்கு ஒதுக்கப்பட்டுள்ள பங்கு முழுவதும் நானே அடைக் கின்றேன்," என்று சொல்ல, பிட்டு வாணியச்சியம்மை யானவள் அவரைத் துணியை விரிக்கச் சொல்லி பிட்டை அள்ளிப்போட்டாள். அதை அவர் திருவமுது செய்து "தாயே! யாவராலும் நீக்குதற்கரிய பசியைப் போக்கினாய், இனி உன் பங்கை அடைப்பேன், நல்லது தாயே! இன்னமும் கொஞ்சம் பிட்டு கொடுக்க வேண்டும்," என்று நயப்புடனே சொல்லிக் கந்தையை ஏற்று அது நிறைய வாங்கித் தின்று வையைக் கரையிலே போய் நின்று, "அம்மே! உன் பங்கு எவ்விடத்திலே காட்டு," என்றார்.

**மண் சுமந்தார்**

அப்போது அந்த அம்மையானவள் சீக்கிரமாய்க் கரைப்பக்கமாகச் சென்று தன் பங்கைக் காட்டி, "தம்பீ! நீ இதைச் சீக்கிரத்தில் அடை," என்று சொல்ல, கூலியாளாகிய சொக்க நாயகர், மண்ணை வெட்டுவார், கூடையிலே இடுவார், தலைமேல் சும்மாடு கோலி வைப்பார். கூடையைத் தலைமேல் எடுத்து வைப்பார். அதை வையை நதிக்கரையிலே கொட்டித் திரும்புவார். வேர்வையை அடைவார். திருமேனி இளைப்பாறுவார் போல பிட்டினை மென்று நாவிலே சுவை பார்ப்பார். அந்தப் பிட்டு வாணியச்சியை அன்புடனே பார்ப்பார், "பிட்டு நன்றாயிருக்கிறது," என்று சொல்லித் தலையை அசைப்பார்.

கண்ணப்ப நாயனார் படைத்த மாமிசத்தைக் காட்டிலும் இந்தப் பிட்டு மிகவும் நன்றாயிருக்கிறது, என்பார். தலைமேல் கவிழ்த்த கூடையுடன் கூத்தாடுவார், மீண்டும் மண்ணை வெட்டிக் குவிப்பார். சீக்கிரத்திலே காலினாலே தாண்டித் திரும்புவார்.

இந்தப் படியாகச் செய்த கடவுளுடைய செயல்களையெல்லாம் பிட்டு வாணியச்சி பார்த்து இதற்கு

விரோதம் சொன்னால் போய் விடுவானோ என்று நினைத்து ஒன்றும் சொல்ல மனம் வாராமல், இது அடைபடா திருப்பதைப் பாண்டிய மன்னன் தூதர்கள் கண்டால் துன்பம் செய்வார்களே என்று நினைக்க, கூலியாளானவர் அதை யறிந்து ஒரு கூடை மண்ணைக் கொண்டு கரையில் கொட்டிவிட்டு, "நான் இதோ சீக்கிரம் அடைத்து விடுகிறேன், நீ ஏன் காத்துக் கொண்டிருக்கின்றாய்? வீட்டுக்குப் போ," என்றார், பிட்டு வாணியச்சியம்மை அதைக் கேட்டு வீட்டுக்குப் போனாள்.

பின்பு கூலியாளானவர் பக்கத்திலிருந்த கொன்றை மரத்தின் நிழலிலே போய்க் கூடையைத் தலையணையாகக் கொண்டு கவிழ்த்து, மணலை மெத்தையாக நிரவி அதன் மேல் படுத்துக் கொண்டு உறங்கலானார்.

திருவாசகரானவர், கையில் பிரம்பு எடுத்துக்கொண்டு தூதர் களைப் பார்த்து, "அவரவர்க்கு அளந்து விடப்பட்ட பங்கு அடைத்தாயிற்றா? இல்லையா? பார்த்து வாருங்கள்," என்று சொல்ல, அவர்கள் பங்கு முழுவதும் சோதித்துப் பார்க்குமளவில் ஒரு பங்கு அடைக்காமல் இருப்பதைப் பார்த்து, "இது யார் பங்கு?" என்று அருகிலிருந்தவர்களைக் கேட்டார்கள். அதற்கு அவர்கள் "இஃது இவ்வூரில் பிட்டு விற்கின்ற கிழவியின் பங்கு, அவளுக்கு ஆளாக ஒருவன் இங்கே வந்து மண்ணை வெட்டிக் கூடையிலே இட்டு இரங்கி நிற்பான், தலைமேல் எடுப்பான், திரும்புவான், கொட்டுவான், சிரிப்பான், பாடுவான், கூத்தாடுவான், மெல்ல ஒரு கூடை மண்ணைக் கரையிலே கொட்டுவான். வெகுநேரம் நிற்பான். ஓடுவான், திரும்பி வருவான், ஒரு கை மண்ணைக் கரையில் விசிறிப் போடுவான், போவென்றால் வருவான், வாவென்றால் போவான், பிட்டைச் சாப்பிடுவான், "ஐயா! பிட்டு மிகவும் நன்றாக இருக்கிறது" என்று கையைத் தட்டுவான். அவனைப் பார்த்தால் இளமையுள்ள அரசகுமாரனைப் போல இருக்கின்றான். இப்போது அவன் வெகுநேரமாய் அதோ கொன்றை மரநிழலிலே உறங்குகின்றான்.

அவன் எங்களுடையசொல்லைக் கொஞ்சமும் கேளான், அதோ அவனைப் பாருங்கள், என்றார்கள். அவர் சொன்ன மாத்திரத்தில் ஏவலருள் வலிமையுள்ள ஒருவன் இன்னொரு ஏவலனைப் பார்த்து, நீ போய் அவனை இங்கே அழைத்துக்கொண்டு வா, என்று சொல்ல, அந்த ஏவலன் விரைந்து செல்லும்போது ஞானயோக நித்திரை செய்த கடவுளானவர் திடுக்கென்று விழித்துக்கொண்டார்.

அப்போது அங்கு சென்ற ஏவலன் அவரைப் பயப்படும் படியாகப் பார்த்து நெருப்பைச் சொரிவது போல் கடூரமாய்ப் பேசி, "எங்கள் தலைவரிடத்துக்கு வா," என்று சொல்ல, அவர் பயந்து நிற்க, அதை அவன் கண்டு கையைப் பிடித்து இழுத்துத் தள்ளிக் கொண்டு போய் காவலர் தலைவனிடம் விட்டான்.

அவன் அவரைக் கண்டு கோபம் கொண்டு தன்பக்கத்தில் இருந்தவரில் ஒருவனைப் பார்த்து, "நீ இவனை இங்கே இரத்தம் ஒழுகும்படி அடி," என்று சொல்லிக் கொடுத்த சொல்லோடு பிரம்பைக் கையிலெடுத்து அவர் முதுகில் அடித்தான். அப்போது அவர் அங்கிருந்தவர் எல்லாம் திடுக்கிடும்படியாக மறைந்து விட்டார். அவர் பட்ட அடியானது பாண்டியமன்னன் மேலும் அவன் மாதேவியார் மேலும் அமைச்சர்கள் மேலும் மற்றுமுள்ள அரச ஏவலர்களின் மேலும் அரி, அயன், இந்திரன், முனிவர், தேவர்கள் முதலானோர் மேலும் சூரியன் முதலான கிரகங்கள் மேலும் உலகத்து எல்லா உயிர்கள் மேலும் பட்டுத்தழும்பாயிற்று. அப்படி எண்பத்து நான்கு சீவராசிகள் மீதும் பட்ட அடியைப் போல திருவாதவூராருடைய தேகத்திலும் அடிபட்டமாத்திரத்தில் திருவாதவூரர் வியப்புற்று, "என்னை அடிமை கொண்ட சொக்கநாயகர் ஒருவருக்கு கூலியாளாகி எழுந்தருளினாரோ?" என்று வருத்தமடைந்து இரக்கமுற்று நடுக்கமும் கவலையும் கண்ணீருமாயினார்.

அவர் முன்னே அங்கிருந்த காவலரும் ஏவலரும் சீக்கிரத்தில் ஓடிவந்து நின்று கடவுள் செய்த திருவிளையாட்டையெல்லாம் சொன்னார்கள்.

அவர் அதைக் கேள்விப்பட்டு மிகவும் மனம் தளர்ந்து கண்களிலிருந்து தண்ணீர் பெருக, "கடவுள் மண் சுமந்த இடத்தைக் காட்டுங்கள்," என்று சொல்லி அவர்களை அழைத்துக்கொண்டு துரிதமாய்ப்போய் அவ்விடத்தில் சேர்ந்து, "அடியேனை நரகத்தில் வீழாமல் செய்ய எழுந்தருளிய கடவுளே! நீ எவ்விடத்தில் இருக்கின்றாய்? கங்கையைத் தரித்த சடையையுடைய சிவனே! அடியவர்க்கெளியவனே! திரிபுரத்தை எரித்தவனே! உன்னை மீனாட்சி மண் சுமக்கும்படி நினைத்தாளோ? பிட்டு விற்பவளுக்குக் கூலியாளாகினையோ? உன்னுடைய கூலியாளான வடிவையும் நீ செய்த திருக்கோலத்தையும் நான் பார்க்கவில்லையே? நீ தரித்த கூலியாள் வடிவத்தைக் கண்டவர்கள் முற்பிறவியில் என்ன தவத்தைச் செய்தார்களோ?" இவ்வாறு பலவாறாக முறையிட்டு மனவிரக்கத்துடன் இருந்தார். வையையாற்று வெள்ளமும் வடிந்தது.

பின்னர் பாண்டிய மன்னனானவர் இவையெல்லாம் சிவன் செயல் என்று தெளிந்து அரண்மனையை விட்டு நீங்கி திருவாதவூரர் முன் வந்து வணங்கி நின்று, "சுவாமி! தெய்வலோகத்தை விட்டு பூலோகத்தில் வந்து திரு அவதாரம் செய்தவரே! எனக்கு அமைச்சராகிச் சொக்கநாதரைக் குதிரை மேலேற்றி எனக்குக் காட்டி என்னுடைய பாசத் தளையை அறுத்தவரே! அரி, அயன் முதலான தேவர்களாலும் அறிவதற்கரிய கடவுளானவர் குதிரையின் மேலே வந்தபோது இழிவான ஆடையைக் கொடுத்த நான் என்ன பிழை செய்தேனோ? நீர் சிவனடியாருக்குத் திரவியத்தைக் கொடுத்து இம்மை மறுமை செம்மை என்கிற மூன்று பிறப்புக்கும் நன்மையென்று நான் தெரிந்து கொள்ளாமல் அதை வாங்கும்படி உம்மை வருத்தம்செய்த அறிவில்லாதவனான

நான் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்தருள வேண்டும்" என்று இன்னும் பலவிதங்களில் போற்றுதல் செய்து வணங்கி பின்பு திருவாதவூரரைப் பார்த்து, "நான் உம்முடைய பணிவிடையைச் செய்கின்றேன், நீர் இந்த உலகத்தை அரசாளும்," என்று மிகவும் வேண்டிக் கொண்டான்.

அப்போது திருவாதவூரரானவர் அரசனைப் பார்த்து, "கடவுள் இருக்கின்ற திருப்பெருந்துறைக்கு என்னைப் போகும் படியாய் நீர் உத்தரவு கொடுத்து அனுப்பினால் அதுவே எனக்கு இந்த உலகத்தை ஆளும்படிக் கொடுத்ததற்குச் சமமாகும்," என்றார்.

பாண்டியன் அதைக்கேட்டு மனம் நொந்து "சிவனடியார்களுக்கு அரச போகத்திலே இன்பம் உண்டாகுமோ? உண்டாகாது," என்று சொல்லி அவருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கி, "ஐயரே! உம்முடைய மனம் விரும்பியவாறு செய்யக் கடவீர்!" என்று சொல்லி செலவு கொடுத்துவிட்டு சேனைகள் சூழ மதுராபுரிப் பட்டணத்தில் தன் அரண்மனையைச் சேர்ந்தான்.

பின்னர்த் திருவாதவூரரானவர் அரசருக்காகத் தான் ஏற்றிருந்த அமைச்சர் ஆடைகளைக் களைந்து தவவேடங்கொண்டு கோயிலினுள் புகுந்து சொக்கநாயகரை வணங்கி, தம்மை ஆட்கொண்ட திருமேனியைக் கண்டு வணங்க வேண்டுமென்று திருப்பெருந்துறைக்குப் போக நினைத்து பித்தம் கொண்டவர் போல சீக்கிரமாய் நடந்து போய் திருப்பெருந்துறையை அடைந்து முன்னே இருந்தபடி இருந்த அடியார் கூட்டத்தின் மத்தியிலுள்ள பரமசிவத்தின் திருவடியின் கீழ் விழுந்து சிரசின் மேல் கையைக் கூப்பி வாழ்த்தி, காமாட்சியின் முலைத்தழும்பை உடையவனே போற்றி! அடியேனுக்காகக் குதிரையின் மேலேறிவந்து என் ஆபத்தை நீக்கியவனே போற்றி!

அடியவர்களுக்கு எளியவனே போற்றி!

பாண்டிய தேசம் வாழும்படி படிமண் சுமந்தவனே போற்றி!

என் கண்ணுக்கு இனிய உருவைக் காட்டி என் சிரசின்மேல் திருவடியை வைத்தவனே போற்றி என அநேகமாகப் புகழ்ந்து வணக்கம் செய்ய ஞானாசிரியரானவர் அவரை எழுந்திருக்கச் சொல்லி அவர் எழுந்த பின்பு அவருக்குத் திருநீறு பூசி அருள் நோக்குக் காட்டி அடியார்களைப் பார்த்து, "நாம் எண்ணிவந்த காரியங்களெல்லாம் முடித்தோம், இப்போது கயிலாய மலையில் இருப்பவர்கள் நம்மைக் காணவேண்டுமென்று நினைவுகொண்டார்கள். ஆகையால் நாம் கைலாசத்துக்குப் போகின்றோம், நீங்கள் இவ்விடத்திலே நலமுடனே வாழ்ந்திருங்கள்," என்றார்.

அம்மொழியைச் சிவனடியார்களெல்லாம் கேட்டு அநேக துதிசெய்து, "சுவாமி! தங்களை நாங்கள் கண்டு வணங்குவது அருமையிலும் அருமை," என்று ஆயாசம் கொண்டு பூமியில் விழுந்து, "எங்களை விட்டுப் போகின்றீரோ?" என்று அழ, அப்போது பரமசிவன் அவர்கள் மேல் அன்பு வைத்து "நீங்கள் வருத்தத்தை நீக்குங்கள், இந்தக் குருந்த மரத்தின் நிழலிலே தெய்வ பீடமொன்று செய்து அதன்மேல் நம்முடைய திருவடியைப் போல் செய்து அதை நாள் தோறும் வணங்கிக் கொண்டு இருங்கள், அப்படி இருக்கிற நாளிலே ஒரு நாளில் இந்தக் குளத்திலே நெருப்பு எழுந்து தீ எழும்பும், அதில் நீங்களெல்லாரும் விழுந்து நம்மிடத்திலே வந்து சேர்ந்து கவலையை விடுங்கள்," என்று சொல்லி எழுந்திருந்து, அந்தச் சிவனடியார்களெல்லாம் பின்னே சூழ்ந்துவர கைலாயத்தை நாடி எழுந்தருளி, "அன்பர்களே! நில்லுங்கள்!" என்று சிவனடியார்களுக்கு உத்தரவு கொடுத்து நிறுத்திவிட்டுப்போக திருவாதவூரர் மட்டும் பின்னே தொடர்ந்தார்.

அதைப் பரமசிவன் பார்த்து வழியிலிருந்த கொன்றை மரத்தின் நிழலை அடைந்திருக்க, மாணிக்க வாசகர் அவர் சமீபத்தில் போய் கண்ணீர் பெருக அன்பு பெருக, வணக்கம் செய்து நின்றார், அவரைக் கடவுளானவர் பார்த்துத் தன்பக்கத்திலே உட்காரச் சொல்லி, "முன்னே நாம் கட்டளை இட்டபடி குளத்தில் தீயைக் கண்ட மாத்திரத்தில் நம் அடியார்கள் எல்லோரும் அதில் போய் விழுவார்கள். நீ மட்டும் விழாமலிருந்து திருஉத்திரகோசமங்கை, திருக்கழுக்குன்றம் முதலிய திருத்தலங்களை அடைந்து நம்மைக் கண்டு வணங்கி, பின்பு சிதம்பரத்திற்குப் போய் புத்தரை வாதில் வென்று, பின்பு நம்மை வந்து அடைவாய்," என்று சொல்லியருளினார்.

**சிதம்பர இரகசியம்**

அப்போது மாணிக்கவாசகர் ஞானாசிரயரை வணங்கி, "பரமசிவனே! திருப்பெருந்துறையல்லாமல் சிதம்பரத்தை அடைந்தால் முத்தி என்று அருளிச் செய்தது என்ன?" என்று விண்ணப்பம் செய்ய, அப்போது கடவுளானவர், "அன்பனே! மேன்மை பொருந்திய சிதம்பரத்தில் மோட்சம் உண்டு, அது நாம் நாள்தோறும் திருநடம் செய்கின்ற இடம், மேலும் பதஞ்சலி, வியாக்கிர பாதரும் தில்லை மூவாயிரவரும் முப்பத்து முக்கோடி தேவரும் நானூற்று எண்பது முனிவர்களும் எட்டு வசுக்களும், கின்னர, கிம்புருட காந்தருவ, யட்ச, ராட்சக, சித்ய, வித்தியாதரரும் வந்து வணங்குகின்ற இடமாகையால் அதுவே வீடுபேற்றுக்கு இடம். இதை நீ நன்றாய்த் தெரிந்து கொள்," என்று சொல்லி, மாணிக்க வாசகருக்கு நெற்றியிலே திருநீறு பூசி நில்லென்று ஆணையிட்டு மறைந்து கைலாயத்தை அடைந்தார்.

**மாணிக்கவாசகம்**

அப்போது, மாணிக்கவாசகர் பயங்கொண்டு இரக்கமுற்று வணங்கித் தலைமேல் கைகூப்பிக் கொண்டு

அந்த அடியார் கூட்டத்தை அடைந்து யாவரும் கடவுளிட்ட கட்டளைப்படிக்கு அந்தக் குருந்தமரத்தின் நீழலில் ஒரு பீடம் அமைத்து அதன் மேல் இரண்டு திருவடி செய்து வணங்கி இருந்தார்கள்.

அப்படியிருக்கும் நாளிலே மாணிக்கவாசகர் கடவுளானவர் தன்மேல் அன்பில்லாதவர்களாயிருந்தாலும் தன்னைப் பாடினால் அவர் மேல் இரக்கம் காட்டுவார் என்று நினைத்து கடவுளுடைய திருவடியைப் புகழ்ந்து ஞானவாசகமாகிய திருவாசகம் சொல்லத் தொடங்கி, கடவுளானவர் வந்து கருணை காட்டும் அற்புதம் அறியேன் என்றும் அதிசயம் கண்டோம் என்றும் கடவுளே என்னை மனங்குழைந்தாய் என்றும் சிவன் பாதம் சென்னியில் மன்னும் என்றும் அய்யனே நின்னைக் காண ஆசைப்பட்டேன் என்றும் பிழையேன் வாழ்கிலேன் என்றும் பொய்யர்க்குப் பொய்யனேன் நின்பாதம் புணரும் நாள் எந்நாளோ என்றும் இத்தகைய வசனங்கள் நிறைந்த அற்புதப்பத்து, அதிசயப் பத்து, குழைத்த பத்து, சென்னிப் பத்து, ஆசைப்பத்து, வாழாப் பத்து, அடைக்கலப்பத்து, செத்திலாப் பத்து, புணர்ச்சிப் பத்து, அருட் பத்து, திருவார்த்தை எண்ணப் பதிகம், திருவெண்பா, திருப்பள்ளி எழுச்சி, திருவேசறவு, ஆனந்த மாலை, உயிருண்ணிப் பத்து, பிரார்த்தனைப் பத்து, திருப்பாண்டிப் பதிகம் என்னும் திருப்பாடல்களைப்பாடி அடியார்களுடனே வாதம் செய்து கொண்டிருந்தார்.

அப்படியிருக்கும் நாளில் ஒருநாள் கடவுள் அருளியபடியே அந்தத் தடாகத்தில் அக்கினி தோன்ற அதில் அடியவர்களெல்லாரும் போய் வீழ்ந்து மூழ்கினார்கள். அப்போது காளைவாகனத்திலே கடவுளானவர் வந்து நிற்க, அக்கினியில் மூழ்கினவர்களெல்லாரும் துக்கம் நீங்கி சிவகணநாதர்களாய் வடிவு கொண்டு பரமசிவன் எதிரில் போய் வணங்க அவர்களுடன் கடவுளானவர் மறைந்தருளினார்.

அதைக் கண்ட மாணிக்கவாசகரானவர் அங்குள்ள ஒரு கொன்றை மர நிழலிலே சிவயோகத்திலிருந்து அடியார்கள் அக்கினியில் புகுந்த விதமும், கடவுள் காளை வாகனத்தின் மீது வந்த விதமும் அவரை அந்த அடியார்கள் போய் வணங்கின விதமும் கடவுளானவர் அடியார்களோடு கனகசபையை அடைந்த விதமும் ஆகிய இவைகளையெல்லாம் அறிந்துகொண்டு வணங்கி கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் சொரிய, அந்தக் குளத்தின் கரையின் மேல் வந்து விழுந்து, "ஒளி மயமான வடிவை உடையவரே! எனக்கு தீவினையாகிய துன்பத்தைக் கொடுத்து எங்கே ஒளித்தீரோ?" என்று சொல்லி அழுது அந்தக் குருந்த மரத்தினுடைய நிழலை அடைந்து கடவுள் திருவடியைப் போற்றிச் திருச்சதகம் பாடி, பின்பு அந்தத் திருத்தலத்தை வணங்கிக் கடவுளுடைய விடையைப் பெற்றுக்கொண்டு, திருவுத்தரகோச மங்கை என்னும் திருத்தலத்தை அடைந்து கோயிலுள் போன அளவில் சுவாமி மறைந்தருள, அப்போது மாணிக்கவாசகரானவர் தன்னை அடிமை கொண்ட திருவுருவைக் காணாமல் மயக்கமடைந்து பெருமூச்சு விட்டு கீழே விழுந்து நீத்தல் விண்ணப்பம் பாடினார். அப்போது சுவாமி தன் திருவுருவைக் காண்பிக்க அவ்வுருவை மாணிக்கவாசகர் கண்டு வணங்கிச் சில நாள் அந்தத் திருத்தலத்திலே இருந்து பின்பு அதைவிட்டு நீங்கி அநேகம் திருத்தலங்களை அடைந்து வணங்கி சோழ நாட்டை அடைந்து திருவிடைமருதூரில் சென்று கடவுளை வணங்கிப் பின்பு திருவாதவூரை அடைந்து தியாகேசரைக் கண்டு வணங்கி திருப்புலம்பல் என்கிற பிரபந்தத்தைப் பாடி பின்பு அதைவிட்டு நீங்கிப் பரமசிவன் வீற்றிருக்கின்ற தலங்களையெல்லாம் வணங்கிச் சீர்காழியை அடைந்து ஆலயத்தில் சென்று சுவாமியை வணங்கும்போது தோணியப்பர் பாதமானது தன்மனத்துக்கு ஆசையைக் கொடுத்துப் பிடித்துக்கொள்ள அப்போது பிடித்த பத்து என்பதைப் பாடி சில நாள் அந்தத் திருத்தலத்தில் சுவாமியைக் கண்டு களித்து வணங்கிக் கொண்டிருந்து பின்பு திருக்கழுக்குன்றத்தைத் தரிசிக்க விரும்பிப் பிரயாணப்பட்டுச்

சீர்காழியை விட்டு நீங்கிச் சிதம்பரத்தின் திக்கைப் பார்த்து வணங்கி, வழிகொண்டு விருத்தாசலம் திருவருட்டுறை, திருவெண்ணெய்நல்லூர் ஆகியவற்றை அடைந்து கடவுளைத் தொழுது பின்பு நடுவிலுள்ள நடுநாட்டையும் காட்டையும் கடந்து பின்பு யானை, கரடி, புலி முதலியன வசிக்கின்ற மலைகளைக் கடந்து திருவண்ணாமலையின் சமீபத்தை அடைந்து வணங்கி அந்தத் திருவண்ணாமலை என்கிற திருவருணை மாநகரத்தை அடைந்து ஆலயத்துள் பிரவேசித்துப் பலமுறை வலம் வந்து சுவாமியின் திருவாயிலினுள் புகுந்து தரையில் வீழ்ந்து வணங்கி இறைவனைப் புகழ்ந்து பாடிக் கொண்டிருக்கும் போது அந்த மார்கழி மாதத்திலே விடியற்காலையிலே மகளிரெல்லாரும் திருக்குளத்தில் நீராடுதல் செய்வதைக் கண்டு அந்த மகளிர் ஒருவருக்கொருவர் சொன்னதாகப் பாவித்துத் திருவெம்பாவை என்கிற பிரபந்தத்தைப் பாடி அவர்தம் மனையைக் கண்ட மாணிக்கவாசகர் அவர்கள் சொன்னதாக திருவம்மானை பாடி பின்பு அந்தத் திருத்தலத்தை விட்டு நீங்கி திருக்காஞ்சி மாநகரத்தை அடைந்து சுவாமியைத் தொழுது பின்பு திருக்கழுக்குன்றத்தை அடைந்து வேதாசலேச்சு வரரை வணங்கி திருக்கழுக்குன்றப் பதிகம் பாடி சிலநாள் அங்கே சுவாமியை வணங்கியிருந்து பின்பு அதைவிட்டு நீங்கி மத்திய பிரதேசத்திலுள்ள திருத்தலங்களை எல்லாம் வணங்கி வழிக்கொண்டு போய் சிதம்பரத்தைக் கண்டு சிரசின் மேல் கைகளைக் கூப்பிப் பெரிய இலிங்கமாகிய கோபுரத்தையும் வணங்கி அந்தத் தில்லை மாநகரத்தை அடைந்து ஆலயத்துள் சென்று வலம் வந்து திருவாயிலினுள் புகுந்து நின்று, "பிறவிகளுக்கெல்லாம் அரசனே! உயிருக்குயிரானவனே! சபாநாயகனே!" என்று அநேகவிதங்களாகப் போற்றிப் புகழ்ந்து, நான் உன் அடைக்கலமே! என்று அடைக்கலப் பத்துப் பாடி அழுது வணக்கம் செய்து விழுந்து எழுந்து இப்போதே உன்னைக் கண்டேன், என்று கண்டப் பத்துப் பாடி மனம் உருகி அசைவு அற்றுச் சித்திரம் போல நின்றார்.

அப்போது, அங்குள்ள கோயில் காவல்காரர்கள் அவரைப் பார்த்து, "நீர் இந்தக் கனகசபையை விட்டுப்போம்!"

என்று சொல்ல அவர் போகாமல் பரத்தினுடைய பேரொளிப் பிழம்பிலே மூழ்கி பரவசப்பட்டு கம்பம் போல நின்றார். அதையவர்கள் பார்த்து, "இவர் பித்தம்பிடித்தவர்," என்று சொல்ல, மாணிக்கவாசகர், "சிவ சிவ போற்றி," என்று சொல்லி பின்பு அந்தப் பொன்னம்பலத்தை வலம் வந்து சுவாமியை வணங்கி அதன் மேல் பக்கத்திலுள்ள திருப்புலீச்சுவரத்தை அடைந்து சுவாமியை வணங்கிக் கொண்டு அதன் அருகிலுள்ள திருநாகேஸ்வரத்திலுள்ள கடவுளுடைய திருவடிகளை வணங்கி திருவீதியில் போகும்போது குலாப்பத்து, கோயில் மூத்த திருப்பதிகம், கீர்த்தித் திருஅகவல் முதல் மூன்றகவல் இவைகளைப் பாடிக் கொண்டு போகும்போது பெண்களெல்லாரும் சுண்ணம் இடிப்பதைப் பார்த்து திருப்பொற்சுண்ணம் பாடி தெருவில் விளையாடுகின்ற பிள்ளைகளைப் பார்த்து திருத் தெள்ளேணம், திருவுந்தியார், திருத்தோணோக்கம், பண்கள், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல் இவைகளைப் பாடி அங்கே ஒரு பெண், தாயைப் பார்த்துச் சொன்னதாக அன்னைப்பத்துப் பாடி அங்கே இருக்கின்ற வண்டுகளைப் பார்த்து கடவுளுடைய திருவடிகளைத் துதி செய்யுங்கள் என்று திருக்கோத்தும்பி பாடி தோப்பின் நடுவிலிருக்கின்ற குயில்களைப் பார்த்து, "நீங்கள் ஏன் விருதாவாய்க் கூவுகின்றீர்கள், என்று குயில் பத்துப் பாடி அங்கிருக்கின்ற கிளிகளைப் பார்த்து,"நீங்கள் ஏன் விருதாவாய்ப் பேசுகிறீர்கள்? நம்முடைய கடவுளைப் பேசுங்கள்," என்று திருத்தசாங்கம் பாடி, பூமியிலே வேறொருவரைக் கடவுள் என்று கூறுவதற்கு அஞ்சுகிறேன் என்று ஒரு குடிசை அமைத்துச் சிலநாள் அங்கே ஞானதவம் செய்து கொண்டிருந்தார்.

**புத்தரை வாதில் வென்றார்**

திருவாதவூரர் அப்படிக் குடிசையில் தவஞானியாய் வாழ்ந்து கொண்டிருந்தபோது ஈழதேசத்தைப் பார்க்க விருப்பம் கொண்டு சிதம்பரத்தை விட்டு நீங்கி வழிக்கொண்டு ஈழ தேசத்தை அடைந்து, அந்த நாட்டுத்

தலைநகரை அடைந்து அன்பினால் சிதம்பரமானது வெகுகாலம் வாழக்கடவது என்றும் பொன்னம்பலம் என்றும் தாம் சொல்லிக்கொண்டிருப்பதைப் போல் அங்கும் சொன்னார்.

அப்போது மூடராகிய பௌத்தர்கள் அதைக் கேட்டுக்கோபம் கொண்டு தங்கள் அரசன் முன்னிலையிற் சென்று வணங்கி நின்று, "எங்கள் பேரரசே! இந்த நகரத்தில் ஒருவன் வந்து உருத்திராக்கம் தரித்துச் சாம்பலைப் பூசிக்கொண்டு பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக் கொண்டு எந்நேரமும் பொன்னம்பலம்! பொன்னம்பலம்! என்று இடைவிடாமல் சொல்லிக்கொண்டிருக்கிறான்," என்று சொல்லி வணங்கினார்கள்.

அரசன் அதைக்கேட்டு, "அவனை இங்கே கொண்டு வாருங்கள்!" என்று சொல்ல அவர்கள் போய் மாணிக்க வாசகரைக் கண்டு, "அய்யா! உம்மை அரசர் அழைக்கிறார், வாரும்!" என்று சொன்னார்கள்.

அதற்கு அவர் "எப்போதும் நன்மையும் தீமையும் இல்லாமல் பிச்சையெடுத்து உண்பது தவிர மற்றொன்றையும் நினைக்காதவர்களிடத்தில் அரசனுக்கு என்ன காரியம் உண்டு," என்று சொன்னார். அதற்கு அவர்கள், "ஊரிலே பிச்சை எடுத்து உண்டாலும் மற்ற காரியம் ஒன்றும் இல்லாவிட்டாலும் எங்கள் ஈழ நாட்டில் வாழ்கின்ற உயிர்களைக் காக்கவேண்டியது எங்கள் அரசருக்குக் கடமையாகையால் எங்கள் அரசனிடத்திலே அகத்தியம் நீர் வரவேண்டியதுதான்," என்று சொல்ல, தவஞானியைப் போல் ஒரு வெள்ளைக் கோவணமும் கபாலமும் கையில் சதங்கை கட்டிய நீண்ட பிரம்பும் திருநீறணிந்த நெற்றியும் அசைகின்ற சடையும் ஆகிய இவைகளையுடைய மாணிக்கவாசகர் அதற்கு நல்லதென்று சம்மதிப்பட்டு புனிசிரிப்புடனே அவர்களுடன்கூடப்போய், "ஆதியாய்ப் பாடகநூல் மூன்றும் அறிந்து நான்கு குற்றமும் நீங்கி சீலம் ஐந்தும் தரித்து காமாதி ஆறையும் ஐம்புலன்களையும் அடக்கிப் பஞ்சகந்தமும்

கெடுவதே வீடுபேறு," என்று சொல்லுகின்ற பௌத்த ஆசிரியரும் நால்வகைச் சேனைகளும் சூழ கொலுவீற்றிருக்கின்ற புத்த மன்னன் பக்கத்திலே போய் "திருவம்பலம்" என்று சொல்லி நின்றார்.

அப்போது அரசனானவன் மாணிக்க வாசகரைப் பார்த்து, "இப்போது நீர் திருவம்பலம் என்று சொல்லியது, என்ன" என்று கேட்டான்.

**திருவம்பலம்**

அதற்கு மாணிக்கவாசகரானவர் "அரசனே! சோழ நாட்டிலே சிதம்பரம் என்று ஒரு திருத்தலம் உண்டு, அது முன்னாளிலே தில்லைவனம், அது திரிபுவனத்துக்கும் முன்னே உண்டான திருத்தலம், அதில் யாவரும் காண சபாநாயகர் ஆனந்தத் திருத்தாண்டவம் செய்தார். அந்தத் திருத்தலத்திலே சிவகங்கை என்று ஒரு தடாகம் உண்டு. பூமியிலே தவம் செய்யாதவர்களாயிருந்தாலும் அவர்கள் அந்தச் சிவகங்கையில் மூழ்கி அந்தச் சபாநாயகரைக் கண்டு வணங்கினால் பிறவிக் கடலைக் கடந்து வீடுபேற்றை அடைவார்கள்.

சிவனை வணங்காத கொடியவர்களாயிருந்தாலும் பொன்னம்பலம் என்று ஒரு முறை சொன்னால் திருஐந்தெழுத்தை இருபத்தோராயிரத்து அறுநூறு முறை சொன்னதற்குச் சமமாகும். இதுவே நான் பொன்னம்பலம் என்று சொன்னதற்குப் பொருளாகும்" என்றார்.

அதற்கு அரசன், "பீடகாமம் மூன்றும் சொன்ன தலைவனல்லாமல் வேறேயொரு தெய்வமுண்டோ?" என்று கோபித்துக்கொள்ள, பௌத்த குருவானவன் மிகவும் கோபித்து, அப்படியானால் தில்லை மாநகரத்துக்குப் போய் வாதம் செய்து வென்று சபாநாயகரின் பாதத்தில் கட்டியிருக்கின்ற வீரக்கழலையும் அவர் பிடித்திருக்கின்ற கொடியையும் அறுத்துவிட்டு, புத்தன் தவிர வேறே தெய்வம் இல்லை என்றும் அந்தக் கோயில் புத்தன் கோயில் என்றும் யாவரும் சொல்லும்படியாக இன்னும் மூன்று

தினத்திற்குள்ளே செய்து முடிப்பேன் என்று சொல்லி எழுந்திருந்து தன் பல்லக்கின் மேலேறி பௌத்த கூட்டம் சூழ ஈழ தேசத்தை நீங்கி வழிக்கொண்டு நடுவிலுள்ள நாட்டையும் காட்டையும் கடலையும் கடந்து விசனம் கொண்டு சிதம்பரத்தைச் சேர்ந்து பல்லக்கை விட்டிறங்கிக் கோயில் போய் மண்டபத்தில் இருந்தான்.

உடனே மாணிக்கவாசகரும் ஈழ தேசத்தை விட்டு நீங்கிச் சிதம்பரத்தை அடைந்து தான் முன்னிருந்த இலைக்குடிலில் போய்ப் பத்மாசனமாய் வீற்றுச் சிவயோகத்தில் இருந்தார்.

உடனே புத்த மன்னனும் பெரிய பல்லக்கில் ஏறிக்கொண்டு சேனைகளுடன் ஈழநாட்டைக் கடந்து சோழ நாட்டை அடைந்து சிதம்பரத்தில் சேர்ந்து கோயிலில் போய் மண்டபத்தில் போயிருந்த புத்தகுருவை வணங்கித் துதி செய்து மிகுந்த மகிழ்ச்சி அடைந்து வீற்றிருந்தான்.

இவர்கள் இப்படியிருக்கும்போது சபாநாயகர் கோயிலில் பணிவிடை செய்கிறவர்கள், இவர்கள் வந்திருப்பதைக் கண்டு ஒன்றாய்ச் சேர்ந்து மனம் நொந்து கண்களில் நெருப்புப் பொறி பறக்க, கோபம் கொண்டு அவர்கள் வருந்தும்படி சில வார்த்தைகள் சொல்லி, "இந்தக் கோயிலுக்குள் நீங்கள் வரலாகுமா? நீங்கள் இப்போதே இந்தத் தில்லை நகரத்தை விட்டு ஓடிப் போங்கள்," என்று சொன்னார்.

அதற்குப் புத்த குருவானவன், "நீங்களும் நாங்களும் வாதம் செய்து நீங்களடைந்த சைவ மார்க்கத்தைப் பொய் என்று தள்ளிப் புத்த சமயமே உயர்ந்த சமயம் என்று புத்த தெய்வமே உயர்ந்த தெய்வமென்றும் ஏற்படுத்திவிட்டுப் போகிறதல்லாமல் சும்மாய்ப் போக மாட்டோம்," என்றான்.

**பொன்னம்பலத்தில் பௌத்தர்கள்**

கோயில் பணிவிடைக்காரர்கள் அதைக் கேட்டு உடனே இதை நம்மூரிலுள்ள அனைவர்க்கும் தெரிவிப்போம் என்று

சொல்லி அதி சீக்கிரமாய்க் கோயிலை விட்டு நீங்கி தவஞானிகளுக்கும் தில்லை மூவாயிரவர்க்கும் பரிகலத் தார்க்கும் தெரியும்படி அவரவர் வீடுதோறும் போய்ச் சொன்னார்கள்.

அதை அவர்கள் கேட்டு அதி சீக்கிரமாய் எல்லாரும் சபாநாயகர் கோயிலை அடைந்தார்கள். அங்கே இரத்தினப்பேரொளி விளங்கும் மண்டபத்திலிருக்கின்ற புத்தனைப் பார்த்துக் கோபித்து விரோதமான பல பேச்சுக்கள் பேசி "உண்மை ஞானமில்லாத மூடனாகிய புத்தனே! நீ பயப்படாமல் இங்கே வந்திருந்தது என்ன காரியம்," என்றார்கள்.

அதற்குப் புத்தனானவன் "நான்கு வேதம், ஆறு சாத்திரம், பதினெட்டுப் புராணம், இருபத்தெட்டு ஆகமம், அறுபத்து நான்கு கலைஞானம், தொண்ணூற்றாறு தத்துவம் இவைகளைக் கொண்டு உங்களுடைய தெய்வமே தெய்வம் என்று சொல்லுவீர்களேயானால், எங்கள் தெய்வமே தெய்வம் என்று நாங்கள் சொல்லுவோம்" என்று சொல்ல, தில்லை மூவாயிரவர் புத்த குருவைப் பார்த்து நிரம்பவும் கோபித்து, "புலவர்கள் உன்னைத் தோற்றாய்," என்று சொல்லும்படி நாங்கள் வெற்றி பெறுவோம்.

இனி நாங்கள் உம்முடனே பேசுவது சேற்றிலே கல்லெறிவதைப் போல அல்லாமல் வேறொன்றுமில்லை. நாயானது நன்மையைச் செய்த பெரியோர்களுக்கு எதிரே குலைத்தால் அவர்கள் அதன் கோபத்தைப் பொறுத்துக் கொள்வார்கள். அதைப் போல இழிவினையுடைய உம்மோடு நாம் பேசுவது நமக்குத் தகாத காரியமானாலும் உன்னை ஒரே சொல்லிலே வெற்றிக் கொள்வோம், என்று சொல்லி பின்பு, "பலமுள்ள மன்னர்களும் மெய்யறிந்த பெரியோர்களும் கூடியிருக்கின்ற சபையிலும் நம்முடைய வாதத்தைச் சொன்னால் அவர்கள் இது தக்கது என்றும் தகாதது என்றும், அறிந்து சொல்லுவார்கள். அப்போது ஒரு கலகமும் நேராது. அதுவே நல்ல காரியம் அல்லது உங்களை நாங்கள் சங்கடம்

செய்தால் சிதம்பரத்தில் தில்லை மூவாயிரவர் உத்தரம் சொல்லத் தெரியாமல் புத்த குருவைக் கோபித்து அடித்தார்கள் என்று இந்த உலகத்தார் சொல்லுவார்கள்'' என்று ஆலோசனை செய்து தில்லை மூவாயிரவரும் தவஞானிகளும் பெரிய கலைஞானத்தில் வல்லவர்களும் மற்றுமுள்ளவர்களும் கூடி எங்களுடன் வாது செய்வதற்காக ஈழதேசத்து மன்னரும் புத்த குருவும் நால்வகைச் சேனை பலத்துடன் பௌத்தர்களுடன் சிதம்பரத்தில் கோவில் மண்டபத்தில் இருக்கின்றார்கள். நீர் இந்த ஓலை கண்டவுடன் அவசியம் பிரயாணப்பட்டு நாளை தினத்துக்குள் சிதம்பத்திற்கு வந்து சேர வேண்டுமென்று சோழமன்னருக்கு ஓலை எழுதி அனுப்பிவிட்டுப் பின்பு புத்த குருவைப் பார்த்து "புத்தனே! நீ நாளைய ஒரு பொழுது மாத்திரம் இவ்விடத்தில் இருந்தாயானால் நாங்கள் உன்னுடைய தாழ்வை உலகத்துக்குக் காட்டுவோம்,'' என்று சொல்லி அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். கதிரவனும் மேற்கே மறைந்தான், மதியவன் உதயமானான்.

அப்போது முன்னே வீட்டுக்குப் போனவர்கள் எல்லாரும் உணவருந்திப் படுத்து நித்திரை செய்யும்போது பொன்னம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் செய்கின்ற சபாநாயகரானவர் கையில் பிரம்பும் தாழ்ந்த சடையும் திருநீறு தரித்த திருமேனியும் எல்லாரும் விரும்புகின்ற திருவடியும் ஆகிய இவைகளையுடையவராகி அவரவர்களுக்குக் கனவிலே தோன்றி, "நீங்கள் வருத்தப்படுவதை நீக்குங்கள், நம்முடைய தில்லை மாநகரத்தில் திருவாதவூரனாகிய மாணிக்கவாசகன் இருக்கின்றான். இந்தச் செய்தியை அவன் கேட்டால் தருக்க சாத்திரத்தைக் கொண்டு அவரை வாதம் செய்து வெல்லுவான். ஆகவே, நீங்கள் தில்லை மூவாயிரவர் அனைவரும் கூடி இப்போதே போய் அவனை அழையுங்கள்,'' என்று சொல்லி மறைந்தருளினார். சூரியனும் உதயமாயினான்.

**நடுவே திரை**

அப்போது கனவு கண்ட தில்லை மூவாயிரவர்களும் விழித்து எழுந்திருந்து சபாநாயகர் சொன்னதை நினைத்துக்

கும்பல் சேர்ந்து, மகிழ்ச்சி கொண்டு சிரசின் மேல் கைகளைக் குவித்துக் கோயில் மண்டபத்திலே வந்து சேர்ந்து புத்தர் சொன்னப் பேச்சுக்கு இரக்கமுற்று சபாநாயகர் கனவிலே தங்களுக்கு வந்து சொன்ன வசனத்தை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு தங்களுக்குள் அன்பு மிகுந்து மனவருத்தம் நீங்கி மாணிக்கவாசகர் இருக்கின்ற இலைக்குடிசையை அடைந்து மாணிக்க வாசகரைக் கண்டு தங்களுக்குச் சபாநாயகர் கனவில் வந்து சொல்லியதை யெல்லாம் அவருக்குச் சொன்னார்கள். அவர் அவற்றைக் கேட்டு எழுந்திருந்து தில்லை மூவாயிரவருடன் சீக்கிரமாகக் கோயிலில் போய்ச் சபாநாயகரை வணங்கி கருணை பெற்று பௌத்தர்களிருக்கின்ற மண்டபத்தில் போய் அவர்கள் முகத்தைப் பார்க்கக் கூடாதென்று சொல்லி நடுவே திரை போட்டுக்கொண்டு ஆசனத்தில் வீற்றிருந்தார்.

அப்போது, சோழமன்னரானவர், வேதங்களைக் கற்ற அந்தணர், புராணிகர், கலைஞான வல்லவர்கள் இன்னும் மற்ற பெரியோர்கள், படைவீரர்கள், ஏவலர்கள் இவர்களுடன் கூடி அதி சீக்கிரமாகச் சிதம்பரத்தை அடைந்து ஆலயத்திற்குச் சென்று வலம் வந்து சுவாமி சன்னதியை அடைந்து சபாநாயகரை வணக்கம் செய்து திரும்பி பிரகாரத்தி லிருக்கின்ற மண்டபத்தைச் சேர்ந்து மாணிக்கவாசகர் திருவடியில் வீழ்ந்து வணங்கி அவர் பக்கத்தில் ஆசனம் போடச் சொல்லி அதில் நிறைமதியென வீற்றிருந்தார்.

அப்போது ஈழ தேசத்து மன்னன் எழுந்திருந்து சோழ மன்னரைப் பணிந்து, தான் கொடுக்க வேண்டிய திரையையும் கொடுத்து, 'நீர் வாழ்க!' என்று வாழ்த்தி வணங்க, அதற்கு அரசர்க்கு அரசனாகிய சோழ மன்னனும் மகிழ்ந்து, "நீ கொடுத்த யானையும் மெத்தவும் நல்லது, நீ கொடுத்த இரத்தினத்துக்கு விலை இல்லை," என்று சொல்லிப் பாராட்டி எல்லோரும் சூழ்ந்திருக்கின்ற சபையினிடத்தே தன் பக்கத்தே வீற்றிருக்கும்படிச் சொல்லிய பின்பு எழுந்து நின்று தில்லை

மூவாயிரவர்கள், மடாதிபதிகள், அடியார்கள், முனிவர்கள் இவர்கள் முதலான அனைவரும் சூழவிருக்கின்ற மாணிக்கவாசகருடைய திருவடிகளை வணங்கி நின்று, "சுவாமி! சிவஞான நிலைமையை உலகத்திலே நிறுத்துவது உம்முடைய கடமை, புத்தரின் உயிரைப் போக்குவது என்னுடைய கடமை," என்று சொன்னார்.

இந்தச் சொல்லை அபத்தம் பேசும்படியாய் வந்திருக்கின்ற புத்தரெல்லாம் கேட்டு மனம் வருத்தமடைய, அப்போது மாணிக்கவாசகரானவர், மனம் மகிழ்ச்சியடைந்து புத்த குருவைப் பார்த்து, "திருட்டு வார்த்தை சொல்லப் பட்டவனே! நீ வந்த காரணத்தைச் சொல்," என்று கேட்டார்.

அதற்குப் புத்தனானவன்,"எங்கள் தெய்வம் அல்லாமல் வேறே தெய்வமே இல்லை. ஆகையால் எல்லோரும் அறிய பொன்னம்பலத்திலே புத்தரை வைக்கும்படி நேற்றைக்கே வந்து விட்டேன்," என்று சொன்னான்.

அப்போது மாணிக்க வாசகர் புன்னகை கொண்டு "முற்பிறப்பில் தவம் செய்யாதவனே! நீ நடத்தும்படியான காரியம் ஒன்றுண்டோ? நல்லது, உன்னுடைய தெய்வமும் நீங்கள் அவன் திருவடியில் சேரும் செய்தியும் சொல்," என்று கேட்டார்.

அதற்குப் புத்த குருவானவன் கோபம் அடைந்து "கண்ணில்லாதவனுக்குச் சூரிய கிரகணத்தைக் காட்டினால் தெரியுமோ? அதைப்போல போற்றுதற்கரிய எங்கள் புத்த தேவனுடைய மகிமையைச் சொல்ல நம்முடைய ஒரு நா போதுமோ? ஆயிரம் நா வேண்டும்," என்று சொல்லிப் பின்பு தர்மத்தைச் சொல்லுகின்ற பிடகாகமத்தைச் சொல்லி, பின்பு சொல்லுவான்.

“ஒரு மனிதனானவன் அநேக யோனிகளில் பிறந்து ஆத்ம கோடிகளுக்கு நன்மையைச் செய்து பொல்லாங்கைத் தருகின்ற கொலை, களவு, பொய், கள்ளுண்ணல் என்கிற நான்கு குற்றங்களை நீக்கி மேன்மையையுடைய அரசமர நீழலிலிருக்கின்ற எங்கள் கடவுளைத் தொழுது கர்ப்பத்தில் சேர்ந்த உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்னும் பஞ்ச கந்தங்களோடும் கூடி உயிர் நீங்குவது பிறவித் துன்பமாகும். இவை கெட்டு உயிர் நீங்குவதே வீடுபேறாம்,” என்றான்.

அப்போது மாணிக்க மூர்த்தி சுவாமிகளானவர், பொய் மதமான புத்த குருவின் முகத்தைப் பார்க்கக் கூடாதென்று நினைத்துச் சோழ மன்னனின் முகத்தைப் பார்த்து “அறியாமையினாலே மயக்கம் கொண்டு பித்தனைப் போல் பேசுகின்ற புத்தனுக்கு நாம் என்ன செய்வது? புத்தனானவன் தர்மம் உண்டென்று பிடகநூல் சொன்னான். அறிவு தோன்றிக் கணநேரத்தில் மறைந்து போம் என்றாய், நீ தேடிச் செல்லுமுன்னே அறிவு கெட்டால் அஞ்ஞானத்தைத் தருகின்ற உன் நூல் சொல்வதெப்படி? ஆகையினாலே தரும சாத்திரங்கள் உனக்கு இல்லை. உன் கடவுளானவன் உயிர்களுக்காக அநேக யோனிகள் தோறும் போய்ப் பிறந்தான் என்றாய், குற்றமுள்ள ஒருவர் மயக்கத்தைத் தீர்ப்பது எப்படி?” என்று இது முதலான அநேக வாதங்கள் செய்து, “உங்களுக்குத் தெய்வமும் இல்லை, வீடுபேறும் இல்லை,” என்றார்.

அப்போது புத்த குருவானவன், “எங்களுக்குத் தெய்வமும் இல்லை, வீடுபேறும் இல்லை என்று சொன்னீர், உங்கள் தெய்வம் எது? நீங்கள் அடையும் வீடுபேறு எது?” என்று கேட்க, மாணிக்க வாசகர், “எங்களின் தெய்வமானவர் கல்லால நீழலில் வீற்றிருந்து சகர், சனந்தனர், சனத்குமாரர், நாரதர் என்கிற நால்வருக்கு உபதேசம் செய்தவராயும் கனகசபையில் கூத்தாடுபவராகவும் திருநீறு பூசிய திரு மேனியை உடையவராயும் உமாதேவியை ஒரு பாகத்தில் உள்ளவராயும், அளவில்லாதவராயும், கருணை உடையவ

ராயும் ஆகிய இப்பேர்ப்பட்ட செய்கையை உடையவர் எங்களுடைய கடவுள்," என்று சொல்லிப் பின்னையும் சொல்ல ஆரம்பிக்குமளவில் புத்த குருவானவன் கோபித்து, "நீர் பல பேச்சுக்கள் பேசவேண்டியதில்லை, நான் கேட்ட அளவில் சொல்லும்," என்று சொல்லி பின்னும், "உங்கள் கடவுள் கல்லால நீழலிலிருந்து தருமம் சொன்னான் என்று சொன்னீர்! கையிலே செபமாலையை வைத்திருப்பது நல்ல தெய்வமோ? சிதம்பரத்திலே கூத்தாடுகின்றான் உங்கள் தெய்வமென்றீர்! கடவுளானவன் ஆடுவதும் உண்டோ?

உங்கள் கடவுள் திருமேனியில் திருநீறு பூசியிருக்கின்றான் என்றீர், அந்தத் திருநீறானது தூய்மையான பொருளோ?

உங்கள் கடவுள் உமாதேவியை ஒரு பாகத்திலே உடையான் என்று பெருமையாகச் சொன்னீர், எவனுக்காவது பாதி உடல் பெண் வடிவமாக இருப்பதுண்டோ? உம்முடைய கடவுள் பாதி உடல் பெண் வடிவமாயிருந்தால் நீர் துறவியாயிருக்க வேண்டிய காரியம் என்ன?" என்றான்.

அதற்கு மாணிக்கவாசகர், "எங்கள் கடவுள் செபமாலையைக் கையிலே தரித்துக் கொண்டிருப்பது உலகத்தார் இவ்விதமாக தவம் செய்ய வேண்டியதென்று காண்பித்தார் என்று நினை.

எங்கள் கடவுள் கூத்தாடுவது சகலமானவர்களின் தேகத்திலே கலந்து உயிரையெல்லாம் ஆட்டி வைப்பதற்கு என்று நினை.

எங்கள் கடவுள் திருமேனியில் திருநீற்றைப் பூசியிருப்பது பிள்ளைகள் நோயை நீக்கும் பொருட்டு தாய் உண்கின்ற மருந்தைப் போல சகல உயிர்களும் அடைந்த துன்பங்களை நீக்குவதற்காக திருநீறு பூசியுள்ளார் என்று நினை.

எங்கள் கடவுள் பார்வதியை ஒரு பாகத்தில் வைத்திருப்பது உலகத்திலுள்ள சகல உயிர்களும் இன்பத்தை அடையும் பொருட்டு வைத்தார் என்று நினை.

மேலும் அனைத்தும் உயிர்களுக்கும் யோக ஞானத்தைக் கொடுக்கும் பொருட்டுத் தான் தியாக நிலையை ஏற்றார் என்று நினை.

குருடர் தன் கையிலிருக்கின்ற தடியை அல்லாமல் வேறொன்றையும் அறியார் போல இந்தப் பேச்சினைப் பேச மட்டும் கற்றாயல்லாமல் வேறொன்றையும் நீ அறிய மாட்டாய். எங்கள் பரமசிவனானவர் மலரிலிருக்கின்ற மணத்தைப் போல, சகல உயிர்களிடத்திலும் கலந்து நின்ற வியத்தகு நிலையை நீ பார்க்கவில்லை. கண்ணில்லாத குருடனாகிய புத்தனே!" என்று அநேக விதமான வாதங்கள் பேசி பின்பு கலைமகளை உள்ளத்தே நினைத்து, "கலைமகளே! இந்தப் புத்த குருவின் வாக்கிலிருந்து பொய் பேச வேண்டியதென்ன? என்று கோபித்து, மூடனான இவன் வாக்கை விட்டு அப்புறம் போய்விடு என்று சொல்ல கலைமகளானவள் அந்தப் புத்தர்கள் நாக்கை விட்டு அப்புறம் போயினாள்.

பின்பு புத்தர்களெல்லாம் நஞ்சினை உண்டவர்கள் போல மயக்கமடைந்து பேசுவதற்கு நாவசையாமல் ஊமையானார்கள்.

### மனம் திரும்பிய புத்த மன்னன்

அப்போது ஈழ நாட்டு மன்னனான புத்த அரசன், அவற்றைக் கண்டு பயந்து எழுந்து மாணிக்க வாசகர் திருவடிகளில் விழுந்து வணங்கி, பேசிக்கொண்டிருந்தவர்கள் எல்லோரும் ஊமையானார்கள், பேசமுடியாமல் ஊமையாய்ப் பிறந்த என் மகள், ஊமை நீங்கி நன்றாய்ப் பேசும்படியாக நீர் செய்தால் நான் உமக்கு அடிமையாவேன், என்று சொன்னான்.

அதைக் கேட்ட மாணிக்கவாசகர், அவளை இங்கே அழைப்பியும், என்று சொல்ல, ஈழ மன்னன் தன் அருகில் இருந்த ஏவலரை அனுப்பி அவளை அழைப்பித்து மாணிக்க வாசகர் முன்னே நிறுத்தினான். அப்போது மாணிக்கவாசகர் அந்தப் பெண்ணை நோக்கி, அருட்பார்வை செலுத்தி, "நான் முன் புத்த குருவுடன் சொல்லிய வாதத்திற்கெல்லாம் நீ பதில் சொல்," என்றார்.

அப்போது அந்தப் பெண்ணானவள் நன்றாகக் கற்றறிந்தவர்கள் போல எதிர் உத்தரம் சொன்னாள். அது மங்கையர் செய்கின்ற விளையாட்டாம் 'திருச்சாழல்' என்று பெயர் வைத்து அவளும் தானும் சொன்ன சொற்களை வைத்துப் பாடினார்.

பின்பு ஈழ மன்னன் பயங்கொண்டு சைவ சமயமே மெய்யென்று துணிந்து மாணிக்க வாசகரை வணங்க அவர் திருவைந்தெழுத்தை ஓதி அவனுக்கு திருநீற்றைப் பூசினார். பின்பு அவன் மிகுந்த பக்தியையுடைய சிவனடியான் ஆயினான்.

பின்னர் சோழமன்னனும் தில்லை மூவாயிரவரும் "அம்பலம் வாழ்க!," என வாழ்த்தி மாணிக்கவாசகரை வணங்கினார்கள்.

பின்னர் ஈழத்து அரசன் உருத்திராக்க மாலையும் திருநீறும் தரித்து அதிக சிவபக்தன் ஆனதை புத்தர்களெல்லோரும் பார்த்து எங்களுக்குச் சம்பவித்த ஊமைத்தன்மையை நீங்கியருள வேண்டும், என்று மனதில் நினைத்துக் கொண்டு எழுந்திருந்து மாணிக்கவாசக சுவாமிகள் திருவடியில் விழுந்து வணங்கினார்கள்.

அப்போது மாணிக்கவாசக சுவாமிகள் மனம் மகிழ்ந்து அவர்கள் மேல் அருட்பார்வை செலுத்த அவர்களெல்லாரும் ஊமைத்தன்மை நீங்கி எழுந்திருந்து மாணிக்கவாசகரைப் பார்த்து, "மாசற்ற மனமுள்ள பெரியவரே! முன்பிறப்பிலே

நாங்கள் தீவினையைச் செய்தபடியால் திருநீறு பூசி திருஐந்தெழுத்தை உச்சரிக்காமலிருந்தோம். இனி எங்களுக்குத் திருநீறும் உருத்திராக்கமும் காவியாடையும் தேவரீர் கொடுத்தருள வேண்டும்," என்று சொல்லி வணங்கினார்கள்.

அப்போது மாணிக்கவாசகர் புன்னகை கொண்டு இவர்கள் முற்பிறவியில் தவம் செய்தவர்கள், என்று நினைத்து அவர்கள் அணிந்திருக்கின்ற செவ்வாடைகளை வாங்கி நெருப்பிலிட்டுக் கொளுத்திப் பின்பு அவர்களுக்கெல்லாம் திருநீறு உருத்திராக்கம் தரிப்பித்து சிவவேடமாக்கினார்.

பின்பு அங்குள்ள மாணிக்கவாசகர் தில்லை மூவாயிரவர், சிவவேடம் தரித்த புத்தர்கள், சோழ மன்னன், ஈழ நாட்டு மன்னன் ஆகியவர்களும் மற்றும் கூடியிருந்தவர் யாவரும் எழுந்திருந்து கனகசபையின் முன்னே நின்று சுவாமியை வணங்கிப் பொன்னம்பலத்தைப் பார்த்து வியந்து மனம் மகிழ்ந்து கோயிலை விட்டு நீங்கி அவரவர்கள் தாங்கள் இருக்கின்ற இடத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

மாணிக்கவாசக சுவாமிகளானவர் போய் திருப்புலீச்சரத்திலிருக்கின்ற கடவுளை வணங்கி அங்கே இருந்தார். பின்பு தில்லை மாநகரத்திலுள்ளவரெல்லாரும் மாணிக்கவாசகரைப் பார்த்து, "ஐயரே! நீவீர் இங்கேயே இருந்தருளும்", என்று வேண்டிக்கொண்டு அவரவர் வீட்டிலே சென்று சேர்ந்தார்கள். பின்பு ஈழதேசத்து மன்னனும் புத்தர்களும் கோயிலை விட்டுப் பிரிய மனம் வாராமல் திருச்சிற்றம்பலத்தையும் மாணிக்கவாசகரையும் நாள்தோறும் வணங்கிக்கொண்டு சிதம்பரத்திலே தங்கிவிட்டார்கள்.

**வீடுபேறு பெற்றார்**

அருளாளரான மாணிக்கவாசக சுவாமிகள், திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோபத்து ..........யாத்திரை, ........................களைப்பாடி

சபாநாயகர் திருநடனம் செய்கின்ற சிதம்பரமே மேலான சிவபதம் என்று அறிந்து அச்சிதம்பரத்தில் திருக்கூத்தாடுகின்ற சபாநாயகரானவர் ஓர் அந்தணர் வடிவம் கொண்டு மாணிக்கவாசகர் எதிரே வந்து நிற்க, அவரை மாணிக்க வாசகர் பார்த்து உட்காரச் சொல்லி பின்பு, "நீர் எந்த ஊர்? சொல்லும்," என்று கேட்டார்.

அதற்கு அந்தணர், "நாம் இருப்பது பாண்டிய நாடு," என்று சொல்ல பின்பு மாணிக்கவாசகர், "நீர் இங்கே வந்தது என்ன காரணம் சொல்லும்?" என்று கேட்டார். அதற்குக் கடவுளாகிய அந்தணர், "நீர் அயன், அரிமுதலான தேவர்களாலும் அறியப்படாத தூய அறிவுப் பேரொளியுடையராகிய சிவனைக் குதிரை ஏறச் செய்ததையும் பின்பு நீர் திருப்பெருந்துறையை அடைந்து கடவுளுடைய திருவடியை அடைந்து துன்பங்களை நீக்கியதையும், பின்பு நீர் திருக்கழுக்குன்றம் போய் தரிசித்ததையும், பின்பு நீர் புத்தரை வாதில் வென்றதையும் ஆகிய இவற்றையெல்லாம் நாம் கேள்விப்பட்டு உம்மைப் பார்க்கும் பொருட்டும் மேலும் நீர் பரமசிவன் மேல் பக்தியாய் பாடிப் பரவிய தமிழ்ப் பாடல் முழுவதும் நாம் ஓதுவதற்கு நினைத்தும் நாம் இங்கே வந்தோம். நீர் அதைச் சொல்ல வேண்டும்," என்றார்.

அதற்கு மாணிக்கவாசக சுவாமிகள் மனம் மகிழ்ந்து திருவாசகத்தைச் சொல்ல, கடவுளான அந்தணர் தம்முடைய திருக்கரத்தில் ஓர் ஏட்டைப் பிடித்து எழுதிப் பின்பு மாணிக்கவாசகரைப் பார்த்து சபாநாயகரைப் பாட்டுடைத் தலைவனாகவுடைய ஒரு கோவை பாட வேண்டுமென்று சொல்ல, மாணிக்கவாசகர் அதற்கு இசைந்து திருக்கோவையார் சொல்ல கடவுளான அந்தணர் அதையும் எழுதி கடைசியில் இந்தப் புத்தகம் மாணிக்க வாசகர் சொல்ல திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்து என்று கையெழுத்து வைத்து மைக்காப்பிட்டு புத்தகத்துடன் மின்னலைப் போல மறைந்தருளினார்.

அப்போது மாணிக்க வாசகர் அதைக்கண்டு திடுக்கிட்டு நடுநடுங்கினார். மனவருத்தம் கொண்டார், எழுந்திருந்தார், எங்கும் தேடிப் பார்த்தார். இஃது என்ன வியப்பு? என்று மனம் மகிழ்ந்தார்.

பின்பு, இவர் சபாநாயகரேயல்லாமல் வேறொருவர் அல்லர் என்று நினைத்து கண்களில் ஆனந்தக் கண்ணீர் விட்டு, "எங்கே போய் ஒளிந்தாய்!" என்று நிலத்திலே விழுந்தார், பேரின்பக் கடலில் மூழ்கினார்.

**ஓலைச்சுவடி வாயிற்படியில்**

இவ்விதமாக மாணிக்கவாசகர் நிலை தடுமாறி மனம் மகிழ்ந்திருக்க முன்னே ஓலைச்சுவடியோடு மறைந்தருளிய கடவுளானவர் தம்முடைய சபைக்கு எழுந்தருளி வந்த அயன், அரி முதலான தேவர்களையும் பார்த்து, "இந்த ஓலைச்சுவடி நமக்கு அடிமை செய்து மேன்மை பெற்ற மாணிக்கவாசகன் சொன்னது," என்று சொல்லி அதை அவர்களுக்குப் படித்துக் காட்டி அருள் புரிந்து பின்பு மாணிக்க வாசக சுவாமிகளுடைய பெரும் புகழை உலகத்தாருக்குத் தெரிவிக்க வேண்டி கனகசபையின் வாயிற்படிமேலே இந்த ஓலைச் சுவடியை வைத்தருளினார்.

கோயில் பூசை செய்யப்போன அந்தணர்கள் அதைப் பார்த்து, "இந்த ஏடு இங்கே இருக்க வேண்டிய காரியம் என்ன?" என்று வியப்படைந்து மனம் உருகி இதைத் தில்லை மாநகரத்தாருக்குச் சொல்ல வேண்டுமென்று நினைத்துக் கோயிலை விட்டு நீங்கிச் சிதம்பரத்தில் இருக்கப் பட்டவர்களுடன் ஒரு ஏடு கனகசபையின் படியிலே இருக்கின்றது என்று சொன்னார்கள்.

அதை யாவரும் கேட்டு ஆச்சரியமடைந்து, "இஃது என்ன சாத்திரம்? அவிழ்த்துப் பாருங்கள்!" என்று சொல்ல, அப்போது தில்லை மூவாயிரவரில் அறிவுத்திறம் பெற்ற

ஒருவர் அந்த ஏட்டினை எடுத்து மணையின்மேல் வைத்து மலர்மாரி பொழிந்து தூப, தீப, நைவேத்தியம் கொடுத்து கயிற்றை அவிழ்த்து, திருஏட்டைக் கையில் எடுத்து நான்கு அகவல்களையும் திருச்சதகம் முதலிய அறுநூறு திருப்பாடல்களையும் அகப்பொருட்கோவை நானூறு திருப்பாடல்களையும் வாசித்துக் கடைசியில் இந்தப் புத்தகம் மாணிக்கவாசகர் சொல்ல திருச்சிற்றம்பல முடையார் கையெழுத்து என்று படித்தார்.

அதைக் கேட்டவர்களெல்லோரும் மெய் மயிர்ச் சிலிர்ப்பும் குறுவியர்வையும் கொண்டு மனமுருகி ஆனந்தக் கண்ணீர் கசிந்து "வீடுபேற்று வழிக்கு இதைவிட வேறு சாத்திரம் ஒன்று உண்டோ?" என்று சொன்னார்கள்.

பின்பு தில்லை மூவாயிரவரும் மற்ற சிவனடியார்களும் மாணிக்கவாசகரிடத்தில் போய், இதன் பொருளைக் கேட்போம், என்று ஆலோசனை செய்து ஏட்டினைக் கையிலெடுத்துக்கொண்டு எழுந்திருந்து கோயிலை விட்டு நீங்கிப்போய் மாணிக்கவாசகர் முன்னே நின்று திருமுறையை வைத்துத் தேவர் பிரானாகிய கடவுள் செய்ததைச் சொல்ல அவற்றை மாணிக்கவாசகர் கேட்டு, அவர்களைப் பார்த்து, "எல்லாரும் அற்பமாகிய என் பாடலை மனம் மகிழ்ந்து கொண்டருள பூமியிலே நான் என்ன தவம் செய்தேனோ? அறியமாட்டேன்," என்று புலம்பி அழுதார்.

பின்பு அவர்கள் மாணிக்கவாசகரை வணங்கி, "சுவாமி! உம்மிடத்தில் கடவுள் வந்து செய்த காரியம் என்ன சொல்லும்?" என்று கேட்க மாணிக்கவாசகர் தன் எதிரே சபாநாயகர் வந்து செய்த செய்கைகளையெல்லாம் சொன்னார்.

**பொருள் இவர்தாம்!**

பின்பு தில்லை மூவாயிரவர் மாணிக்கவாசகரை வணங்கி மகிழ்ந்து, "சுவாமி! இந்தப் பிரபந்தத்திற்குத் தாங்கள்

பொருள் சொல்ல வேண்டும்,'' என்று கேட்க மாணிக்கவாசகர் மனம் மகிழ்ந்து, "இதற்குப் பொருள் சொல்லுகின்றேன் வாருங்கள்!'' என்று சொல்லி அவர்களை அழைத்துக்கொண்டு கனகசபையின் முன்னே போய் நின்று, "இந்தப் பிரபந்தத்திற்குப் பொருள் இவர்தாம்,'' என்று சபாநாயகரைக் காண்பித்துக் கருவறையினுள் புகுந்து பேரொளியுள் கலந்து மறைந்தருளினார்.

அக்காட்சியை எல்லாரும் பார்த்து அதிக பயபக்தியும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள்.

**திருச்சிற்றம்பலம்**

**பெயர் விளக்கமும், காரணமும்**

**திருப்பெருந்துறை**

வீடுபேற்றை அடைதற்குப் பெரிய துறை(வழி) யாயிருப்பதால் அதற்குத் திருப்பெருந்துறை என்று பெயர்

**திருவாதவூரர்**

ஊர்ப்பெயரை இவர் தந்தையார் இவருக்கு வைத்தார்

**பிரமராயர்**

அரிமர்த்தன பாண்டியன் வைத்த பெயர்

**மாணிக்கவாசகர்**

இவரால் பாடப்பெற்ற கவிகள் மாணிக்கம் போல் விலை மதிப்பற்றதாயிருப்பதால் பரமசிவன் மாணிக்கவாசகர் என்று பெயர் வைத்தார்

**சிதம்பரம்**

தில்லை மாநகரம்

**வேறு பெயர்கள்**

புண்டரீகபுரம், கனகசபை, சித்சபை, புலியூர், பொன்னம்பலம், திருவம்பலம், திருச்சிற்றம்பலம், பேரம்பலம், தில்லைவனம், இவை சிதம்பரத்தின் வேறு பெயர்கள்.

# நாயன்மார் சிறந்த நாள்

| வரிசை எண் | நாயன்மார் பெயர் | திங்கள் | நாண்மீன் |
|---|---|---|---|
| 1 | திருநீலகண்ட நாயனார் | தை | விசாகம் |
| 2 | இயற்பகை நாயனார் | மார்கழி | உத்திரம் |
| 3 | இளையான்குடி மாற நாயனார் | ஆவணி | மகம் |
| 4 | மெய்ப்பொருள் நாயனார் | கார்த்திகை | உத்திரம் |
| 5 | விறன்மிண்ட நாயனார் | சித்திரை | திருவாதிரை |
| 6 | அமர்நீதி நாயனார் | ஆனி | பூசம் |
| 7 | எறிபத்த நாயனார் | மாசி | அத்தம் |
| 8 | ஏனாதி நாயனார் | புரட்டாசி | உத்திராடம் |
| 9 | கண்ணப்ப நாயனார் | தை | மிருகசீரிடம் |
| 10 | குங்கிலியக்கலய நாயனார் | ஆவணி | மூலம் |
| 11 | மானக்கஞ்சாற நாயனார் | மார்கழி | சுவாதி |
| 12 | அரிவாட்டாய நாயனார் | தை | திருவாதிரை |
| 13 | ஆனாய நாயனார் | கார்த்திகை | அத்தம் |
| 14 | மூர்த்தி நாயனார் | ஆடி | கார்த்திகை |
| 15 | முருக நாயனார் | வைகாசி | மூலம் |
| 16 | உருத்திரபசுபதி நாயனார் | புரட்டாசி | அசுவனி |
| 17 | திருநாளைப்போவார் நாயனார் | புரட்டாசி | உரோகிணி |
| 18 | திருக்குறிப்பத் தொண்ட நாயனார் | சித்திரை | சுவாதி |
| 19 | சண்டேசுவர நாயனார் | தை | உத்திரம் |
| 20 | திருநாவுக்கரசு சுவாமிகள் | சித்திரை | சதயம் |

| | | | |
|---|---|---|---|
| 21 | குலச்சிறை | ஆவணி | அநுடம் |
| 22 | பெருமிழலைக்குறும்ப நாயனார் | ஆடி | சித்திரை |
| 23 | காரைக்காலம்மையார் | பங்குனி | சுவாதி |
| 24 | அப்பூதி நாயனார் | தை | சதயம் |
| 25 | திருநீலநக்க நாயனார் | வைகாசி | மூலம் |
| 26 | நமிநந்தியடிகள் நாயனார் | வைகாசி | பூசம் |
| 27 | திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் | வைகாசி | மூலம் |
| 28 | ஏயர்கோன் கலிக்காம நாயனார் | ஆனி | இரேவதி |
| 29 | திருமூல நாயனார் | ஐப்பசி | அச்சுவினி |
| 30 | தண்டியடிகள் நாயனார் | பங்குனி | சதயம் |
| 31 | மூர்க்க நாயனார் | கார்த்திகை | மூலம் |
| 32 | சோமாசி மாற நாயனார் | வைகாசி | ஆயில்யம் |
| 33 | சாக்கிய நாயனார் | மார்கழி | பூராடம் |
| 34 | சிறப்புலி நாயனார் | கார்த்திகை | பூராடம் |
| 35 | சிறுத்தொண்ட நாயனார் | சித்திரை | பரணி |
| 36 | கழறிற்றறிவார் (சேரமான் பெருமாள் நாயனார்) | ஆடி | சுவாதி |
| 37 | கணநாத நாயனார் | பங்குனி | திருவாதிரை |
| 38 | கூற்றுவ நாயனார் | ஆடி | திருவாதிரை |
| 39 | புகழ்ச்சோழ நாயனார் | ஆடி | கார்த்திகை |
| 40 | நரசிங்கமுனையரைய நாயனார் | புரட்டாசி | சதயம் |
| 41 | அதிபத்த நாயனார் | ஆவணி | ஆயில்யம் |
| 42 | கலிக்கம்ப நாயனார் | தை | இரேவதி |
| 43 | கலிய நாயனார் | ஆடி | கேட்டை |
| 44 | சத்தி நாயனார் | ஐப்பசி | மூலம் |

| | | | |
|---|---|---|---|
| 45 | ஐயடிகள் காடவர்கோன் நாயனார் | ஐப்பசி | மூலம் |
| 46 | கணம்புல்ல நாயனார் | மாசி | பூராடம் |
| 47 | காரி நாயனார் | மாசி | பூராடம் |
| 48 | நெடுமாற நாயனார் | மார்கழி | இரேவதி |
| 49 | வாயிலார் நாயனார் | மார்கழி | இரேவதி |
| 50 | முனையடுவார் நாயனார் | பங்குனி | பூசம் |
| 51 | கழற்சிங்க நாயனார் | வைகாசி | பரணி |
| 52 | இடங்கழி நாயனார் | ஐப்பசி | கார்த்திகை |
| 53 | செருத்துணை நாயனார் | ஆவணி | பூசம் |
| 54 | புகழ்த்துணை நாயனார் | ஆவணி | ஆயில்யம் |
| 55 | கோட்புலி நாயனார | ஆடி | கேட்டை |
| 56 | பூசலார் நாயனார் | ஐப்பசி | அனுடம் |
| 57 | மங்கையர்க்கரசியார் | சித்திரை | உரோகிணி |
| 58 | நேச நாயனார் | பங்குனி | உரோகிணி |
| 59 | கோச்செங்கட்சோழ நாயனார் | மாசி | சதயம் |
| 60 | திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் | வைகாசி | மூலம் |
| 61 | சடைய நாயனார் | மார்கழி | திருவாதிரை |
| 62 | இசைஞானியார் | சித்திரை | சித்திரை |
| 63 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | ஆடி | சுவாதி |
| 64 | மாணிக்கவாசக சுவாமிகள் | ஆனி | மகம் |



## பெரியபுராணம் எழுதி முடித்த நாள்

### கவி

ஏரிலகு சாலிவா கனவருட மாயிரத்
தெண்ணூ றிரண்டு மாகும்
இனியகலி யுகவருட நாலா யிரத்துத்
தொளாயிரத் தெண்ப தொன்றே
பேரிலகு பிரபவாதி யீராறி னுக்கு மேல்
பிரமாதி கார்த்தி கையினில்
பேசுமிரு பத்தெட்டு தேதியபரப் பட்சம்
பிசககிலா சுக்கிர வாரம்

பாரிக்குஞ் சதுர்த்தசி யநுடநட் சத்திரம்
பகர்திருதி நாம யோகம்
பத்திரவா கரணமிவை கூடிய தினத்திற்
பகற்கடிகை ஈராறு மேல்
பாரிலுரை கள்ளப்புலி யூரிலுறை பர்வதச்
சஞ்சீவி யைய ரவர்கள்
பாணியால் பெரியபு ராணமிவை யெழுதியே
பண்போடு முற்றிற்றிஃதே.

### கவியின் கருத்துரை

சாலிவாகன ஆண்டு 1802 கலியுகம் 4981

பிரபவாதி ஆண்டு பன்னிரண்டுக்கு மேல் செல்லா நின்ற பிரமாதி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 28. அமரபட்சம் சுக்கிர வாரம், சதுர்த்தசி திதி அனுட நாள்மீன், திருதி நாமயோகம் பத்திரவாகரணம், இவை கூடிய நன்னாளில் உதயசூரியன் தோன்றி 12 நாழிகைக்கு மேல் கும்ப இலக்கினத்தில் கள்ளப் புலியூர் பர்வத சஞ்சீவி அய்யர் கையினால் பெரிய புராணம் எழுதி முற்றிற்று.

ஓலைச் சுவடியிலிருந்து எடுத்து எழுதியவர்

**சா. மோகனா 5 - 8 - 76**

## சமய குரவர் வழிபாட்டுமுறை

அந்தந்த சமய குரவருக்கு அவரவர் வீடுபேறு பெற்ற திருநாள்மீனிலே திருக்கோயிலிலே சிறப்பொடு பூசனையும் செய்து மறையோதி தேவாரப்பாடல்களைப் பாடி விழா நடத்துதல் வேண்டும்.

திருமடத்திலாயினும் தத்தம் இல்லத்திலாயினும் சமய வேள்வியர், சிறப்பு வேள்வியர், பற்றறுத்த வேள்வியர், ஆசிரியர் என்னும் நால்வகைப் பொருளாளர்களையும் தூரத்தில் கண்டவுடனே தலைமேல் கை குவித்து வணங்கி விரைந்து எதிர்கொண்டு அழைத்து வந்து அவர்களுடைய திருவடிகளை புனித நீரால் கழுவி புனித நீரை தம் தலையின் மேல் தெளித்து அவர்களை வரிசையாக இருத்தி ஓதுவார்கள். தேவாரம் இசைக்க அன்னம், கனி முதலியவற்றைப் படைத்து அவ்வடியார்களை அத்திரு நாண்மீனிலே வீடுபேறுபெற்ற நாயனாராகப் பாவித்து இலைகளையும் மலர்களையும் தூவி வழிபாடு செய்து மணப்புகையும் ஒளிவிளக்கும் காட்டி கர்ப்பூர வழிபாடியற்றி மூன்று முறையேனும் ஐந்து முறையேனும் வணங்கி திருவமுது செய்வித்தல் வேண்டும்.

சமய குரவர் வழிபாடு செய்பவர்களும் செய்விப்பவர்களும் அந்தப் பூசையை செய்துகொண்டு அமுது செய்யப்புகும் வேள்வியாளர்களும் அந்நாளிலே சமயகுரவர் வழிபாட்டுக்கு முன்னே யாதொன்றையும் உண்ணலாகாது.

அன்றிரவு பசித்த தாயின் அன்னம் உண்ணாமல் பால், பழம் இவற்றுள் ஏற்றதை உட்கொண்டு தூய்மையை உடையவர்களாகி சிவபெருமானையே சிந்தித்துக் கொண்டு உறங்குதல் வேண்டும்.



| வடமொழி | தமிழ்மொழி |
|---|---|
| அக்கினி | தீ |
| அக்கணம் | அப்பொழுது |
| அக்கினிசுவாலை | அனல்பிழம்பு |
| அகண்டம் | எல்லாம் |
| அகோசரம் | அறியவொணாதது |
| அகோரம் | சினம் |
| அகோராத்திரம் | அல்லும் பகலும் |
| அட்சரம் | எழுத்து |
| அகிலம் | உலகம் |
| அகிலாண்டம் | உலகெல்லாம் |
| அங்கப்பிரதட்சணம் | நிலத்தில் உடலால்வலம்வருதல் |
| அங்கி | தீ |
| அங்குரார்ப்பணம் | தொடக்கம் |
| அங்குலிகம் | விரலணி |
| அட்சராப்பியாசம் | எழுத்துப் பயிற்சி |
| அண்டர் | வானோர் |
| அந்தரியாமி | உள்ளிருந்து ஆள்வோன் |
| அந்தியக்கிரியை | இறுதிச் சடங்கு |
| அநவரதம் | எப்பொழுதும் |
| அநித்தியம் | நிலையற்றது |
| அநுக்ரகம் | அருள் |
| அநுசிதம் | தகாதது |
| அநுதினம் | நாள்தோறும் |

| | |
|---|---|
| அநுபந்தம் | பிற்சேர்க்கை |
| அநுபூதி | மெய்யறிவு |
| அனுஷ்டானம் | நடைமுறை |
| அபிஷேகம் | முழுக்காட்டு |
| அபிமான புத்திரன் | வளர்ப்பு மகன் |
| அமிர்தம் | சாவாமருந்து |
| அர்ச்சனை | மலர்தூவி வழிபாடு |
| அர்த்தசாமம் | நள்ளிரவு |
| அர்ப்பணம் | படையல் |
| அருச்சகன் | வழிபாடு ஆற்றுவோன் |
| அஸ்தம் | கை |
| அஸ்தமனம் | பொழுது மறைவு |
| அத்தியட்சன் | தலைவன் |
| ஆக்கினை | கட்டளை |
| ஆக்ஞாபித்தல் | கட்டளையிடுதல் |
| ஆக்ஞை | ஆணை |
| ஆசனம் | இருக்கை |
| ஆசாரியன் | ஆசிரியன் |
| ஆசிவகர் | சமண முனிவர் |
| ஆத்மா | உயிர் |
| ஆபரணம் | அணிகலன் |
| ஆர்ச்சிதம் | கைப்பற்றல் |
| ஆராதனை | வழிபாடு |
| ஆருகதம் | சமணக் கோட்பாடு |
| ஆனந்த பாஷ்யம் | உவகைக் கோட்பாடு |
| அனவரதம் | எப்போதும் |
| ஆஸ்தான மண்டபம் | கொலுமண்டபம் |

| | |
|---|---|
| இடபத்துவசன் | விடைக்கொடியோன் |
| இடபவாகனம் | விடையூர்தி |
| இமாலயம் | பனிமலை |
| இரஹிதம் | நீக்கம் |
| இரத்தினம் | செம்மணி |
| இரதி | காமன் மனைவி |
| இராச்சியபரிபாலனம் | அரசாட்சி |
| இராஜா | அரசன் |
| இரிஷபம் | விடை |
| இலட்சம் | நூறாயிரம் |
| இலட்சணம் | அழகு |
| இலௌகீகம் | உலகியல் |
| ஈசுவரன் | இறைவன் |
| இலௌகீக தர்மம் | உலகியல் நெறி |
| இஷ்டம் | விருப்பம் |
| உத்திரப் பிரதேசம் | வடநாடு |
| உத்பாதம் | தீக்குறி |
| உதரம் | வயிறு |
| உபநயனம் | பூணூல் சடங்கு |
| உபவாசம் | பட்டினி |
| உபாக்கியானம் | வரலாறு கூறல் |
| உமாதேவி | உமையம்மை |
| உருத்திராக்கம் | சிவமணி |
| உலோகார்த்தம் | உலகியல் |
| உஷ்ணம் | வெப்பம் |
| எஜமான் | தலைவன், முதல்வன் |
| ஏகபரிபூரணம் | எங்கும் நிறைந்தது |
| ஐஸ்வரியம் | செல்வம் |

| | |
|---|---|
| ஓமம் | வேள்வி |
| கங்கைவேணியன் | நீர்வார்சடையன் |
| கஜம் | யானை |
| கட்டாரி | குத்துவாள் |
| கண்டி | கழுத்தணி |
| கமண்டலம் | நீர்க்குடுவை |
| கர்ப்பம் | கரு |
| கரக்கம்பம் | கையசைத்தல் |
| கலியாணம் | திருமணம் |
| காரணிகன் | ஆராய்ச்சியாளன் |
| காராக்கிருகம் | சிறைச்சாலை |
| கிரகம் | வீடு |
| கிரியை | செயல் |
| கிருபை | அருள் |
| குஞ்சரம் | யானை |
| கும்பாபிஷேகம் | குடமுழுக்கு |
| குரு பூசை | குரவர் வழிபாடு |
| கைவல்யம் | வீடுபேறு |
| கோத்திரம் | குடி, மரபு |
| கோபம் | வெகுளி |
| கோஷம் | முழக்கம் |
| கௌபீனம் | கோவணம் |
| சக்ரவர்த்தி | மாவேந்தன் |
| சககமனம் | உடன்கட்டை ஏறல் |
| சகல வாத்தியம் | அனைத்து இசைக்கருவிகள் |
| சகி | தோழி |
| சகிதம் | உடன், கூட |
| சதம் | நூறு |

| | |
|---|---|
| சதி | கற்புடையாள் |
| சதுர் | நான்கு |
| சந்தோஷம் | மகிழ்ச்சி |
| சபரி | அவை, அம்பலம் |
| சமஸ்தம் | எல்லாம் |
| சமஸ்காரம் | வேள்விவினை |
| சமுத்திரம் | மாக்கடல் |
| சர்வக்ஞன் | முற்றும் உணர்ந்தவன் |
| சரீரம் | உடம்பு |
| சாரூபம் | சிவன் உருவம் |
| ஜலம் | நீர் |
| சவிஸ்தாரம் | விரிவு |
| ஜன்மம் | பிறப்பு |
| சஷ்டி | ஆறு |
| சாக்கியம் | கூட்டம் |
| சாங்கியம் | பகுத்தறிதல் |
| சாலோகம் | சிவனுலகம் |
| சிஷ்யன் | மாணாக்கன் |
| சிதாகாயம் | அருள்வெளி |
| சிரக்கம்பம் | தலையசைவு |
| சிரேஷ்டம் | சிறப்பு |
| சிவபோதம் | மெய்யுணர்வு |
| சின்மயம் | அறிவுரு |
| சீக்கிரம் | விரைவு |
| சீமுகம் | திருமுகம் |
| சீலம் | நல்லொழுக்கம் |
| சீவராசி | உயிர்த்தொகுதி |
| சீவனோபாயம் | பிழைக்கும்வழி |

| | |
|---|---|
| சுயம்பிரகாசம் | பேரொளி |
| சொரூபி | அழகன் |
| சுவர்க்கம் | துறக்கம் |
| சுவர்க்கலோகம் | விண்ணுலகம் |
| சூரியாஸ்தமனம் | கதிரவன் மறைவு |
| சென்மம் | பிறப்பு |
| சேனாதிபதி | படைத்தலைவன் |
| சைனியம் | படை |
| சொக்கன் | சிவன் |
| சொர்ணம் | பொன் |
| சொர்ப்பனம் | கனவு |
| ஜோதிரூபம் | ஒளிவடிவம் |
| ஞானமூர்த்தி | அறிவுவடிவினன் |
| ஞாதி | சுற்றம் |
| தட்சனை | காணிக்கை |
| தண்டம் | வணக்கம் |
| தத்ரூபம் | மெய்யுரு |
| தபசு | தவம் |
| தரிசனம் | காட்சி |
| தரிசித்தல் | தொழுதல் |
| ஜீலம் | தலம், இடம் |
| ஸ்திரீ | பெண் |
| திரி | மூன்று |
| திரிபுரம் | முப்புரம் |
| திவ்வியம் | மேன்மை |
| தீட்சிதர் | வேள்வியர் |
| தீர்த்தம் | புனிதநீர் |
| துந்துபி | பேரிகை |

| | |
|---|---|
| தூபம் | நறும்புகை |
| நட்சத்திரம் | நாண்மீன் |
| நடனம் | கூத்து |
| நமஸ்காரம் | வணக்கம் |
| நாரி | பெண் |
| நிகேதம் | வீடு |
| நித்தியகருமம் | நாட்கடன் |
| நிதரிசனம் | கண்கூடு |
| நியமம் | நெறியொழுங்கு |
| நியாயஸ்தலம் | முறைமன்றம் |
| நிவேதித்தல் | படைத்தல் |
| பஞ்சகிருத்தியம் | ஐந்தொழில் |
| பத்திரம் | ஓலை |
| பதி, பசு, பாசம் | இறை, உயிர், தளை |
| பந்து | சுற்றம் |
| பரஞ்சோதி | பேரொளி |
| பரஸ்பரம் | ஒருவருக்கொருவர் |
| பாதபங்கயம் | அடித்தாமரை |
| பாலனம் | பாதுகாத்தல் |
| பாஷை | மொழி |
| பிரதட்சணம் | வலம்வருகை |
| பிரதானி | முதல்வர் |
| பிரதிஷ்டை | கடவுள் மங்கலம் செய்தல் |
| பிரபந்தம் | பனுவல் |
| பிராணநாயகி | மனைவி |
| பிராமணியம் | ஆரியத்தன்மை |
| புத்தன் | அறிவன் |
| புருஷன் | கணவன் |

| | |
|---|---|
| பரிவாரம் | அரசியல் சுற்றம் |
| புளகிதம் | மயிர் சிலிர்த்தல் |
| புஷ்பம் | பூ, மலர் |
| பூசை, பூஜை | வழிபாடு |
| பூர்வஜென்மம் | முற்பிறப்பு |
| பூரணகும்பம் | நிறைகுடம் |
| பூஷணம் | அணிகலன் |
| போஜனம் | ஊண் |
| மந்திரி | அமைச்சன் |
| மரணபரியந்தம் | இறப்புவரை |
| மாங்கல்யம் | மங்கலநாண் |
| மாவுத்தன் | யானைப்பாகன் |
| யாசகம் | ஏற்றல் |
| யோகாப்பியாசம் | தவமுயற்சி |
| ராத்திரி | இரவு |
| ரோமம் | மயிர் |
| வாதம் | சொற்போர் |
| வாகீசன் | நாவரசன் |
| வாசனை | மணம் |
| வாத்தியம் | இசைக்கருவி |
| விக்ஞாபனம் | முறையீடு |
| விவாகம் | வரைவு, மன்றல் |
| வேஷ்டி | வேட்டி |

